# கதைக் கோவை

## (40-சிறந்த சிறு கதைகள்)

### தொகுதி I



40-பிரபல எழுத்தாளர்கள்

எழுதியவை

'ஹிந்து' உதவி ஆசிரியர்

ஸ்ரீ நா. ரகுநாதன், எம்.ஏ., பி.எல்.

முன்னுரை கொண்டது

அல்லயன்ஸ் கம்பெனி

மயிலாப்பூர் :: சென்னை



கிளேஸ் பதிப்பு 5—0—0
பெதர்வெயிட்

## தமிழ்நாட்டுச் சிறுகதைகள்

1. மங்கையர்க்கரசியின் காத
2. ராஜாஜி குட்டிக் கதைகள்
3. கன்யா குமாரி
4. சந்தனக் காவடி
5. சக்ரவாகம்
6. கனகாம்பரம்



# முன்னுரை

உலகம் ஏற்பட்டது முதல், 'ஒரு கதை சொல்லு' என்று கேட்காத குழந்தை இல்லை. அதற்கு இணங்கி 'ஒரே ஒரு ஊரிலே' என்று ஆரம்பிக்காத பாட்டியும் இல்லை. ஊன்றிப் பார்த்தால் எல்லாம் பழங்கதைகள் தாம். ஆனால் சொல்லுகிறவன் சொன்னால் ஒவ்வொன்றிலும் புதுமையே தொனிக்கிறது. அதுதான் கலைத்திறம். அநேகமாகக் கேட்ட கதைகளையே கேட்பதில்தான் குழந்தைகளுக்குத் திருப்தி. அவர்கள் ரஸிகர்கள். 'கதைக்குக் காலில்லை' என்பது சொல்லாமலே அவர்களுக்குத் தெரியும். புதிய சமாசாரங்களைப் பற்றிப் பத்திரிகைகளில் நாம் படிக்கும் ஆவலல்ல, அவர்களுக்குக் கதை கேட்பதில். முதல் முதல் அந்தக் கதைகளைக் கேட்டபோது தங்கள் மனத்தில் பயமோ, உற்சாகமோ, சந்தோஷமோ, சோகமோ, எந்த ரஸம் உதித்ததோ அதையே நினைத்து அதையே திரும்பி அனுபவிக்கவேண்டுமென்னும் ஆவல்தான் அவர்களுக்கு. அதனாலேயே, ஒரே கதையைத் திருப்பித் திருப்பி, வாசகத்தில்கூடச் சிறிதளவு மாறுதலும் இல்லாமல் கேட்பதில் அவர்களுக்கு அலுப்பதில்லை. வயசானவர்களிலோ பெரும்பாலோர் பொழுது போக்குக்கு 'நாவல்' படிக்கிறவர்களாதலால் கதையையே கவனிக்கிறார்களென்றாலும், கலைஞான முள்ளோர் மட்டும், அக் குழந்தைகள் போலவே, தம் மனத்தில்

எழும் நுகர்ச்சிகளையே குறிப்பாய் வைத்துக்கொள்ளுவது மன்றி, அவ்வித நுகர்ச்சிகளின் நுட்பங்களைப் பகுத்தறியும் கூர்மையைக் குழந்தைகளைவிட அதிகம் பெற்றுள்ளார்கள். அப்பகுத்தறிவே கதைக் கலையின் பயன்.

கதை சொல்லுவதும், வேறு அநேக சிறந்த விஷயங்கள் போலவே, நம் தேசத்திலிருந்து வெளியேறின சரக்குத்தான். பல நூற்றுண்டுகளுக்குமுன் பஞ்ச தந்திரக் கதைகளும், விக்கிரமாதித்தியன் கதைகளும் அரேபியா, பெர்ஸியா, துருக்கி தேசங்கள் வழியாய் ஐரோப்பாவில் வியாபித்து '**ஈஸாப் கட்டுக் கதைகள்**' முதலிய கிரந்தங்களுக்கு ஆஸ்பதமாயிருந்தன. ஆயினும் பிற்காலங்களில் மேல் நாடுகளில் கதையைக் கலையாய் வளர்த்ததுபோல் நாம் வளர்க்கவில்லை. இங்கிலாந்தில் தற்காலம் 'நாவல்' என்று வழங்கும் நவீனம் சுமார் 300 வருஷங்களுக்குமுன் நாடோடியாய் ஆரம்பித்து இப்போது ஆயிரக் கணக்கான கால்விட்ட ஆலமரம்போல் தழைத்து ஓங்கி நிற்கிறது. ஆனால் அந்தத் தேசத்திலும் பிரான்ஸ் முதலிய தேசங்களிலும் சிறு கதை (Short Story) என்ற கதையினம் மட்டும் சமீப காலத்திலே - அதாவது 19-ஆம் நூற்றுண்டில்தான் - பிரபலமானது.

பொதுவாக, நாவல் எழுதுவதைக் காட்டிலும் சிறு கதை எழுதுவதிலேயே சிரமம் ஜாஸ்தி என்பது இரு விதங்களிலும் ஆற்றலுள்ளவர்களின் அபிப்பிராயம். அப்படியுள்ளவர்களும் சிலரே. நாவலுக்கும் சிறு கதைக்கும் முக்கியமான அங்கங்கள் வெவ்வேறு என்றே சொல்லலாம். இந்த வித்தியாசம்

கதையின் நீளத்தைப் பொறுத்ததுமட்டும் அல்ல; நீளம் ஒரு முக்கியமான விஷயமும் அல்ல. ஓர் அழகிய சிறு கதை என்றால் அதைப் படிப்பவனுக்கு உள்ளம் நிரம்பவேண்டும். உருட்டித் திரட்டிவிட்ட மணி விக்கிரகம்போல் மனக் கண்ணில் நின்று அது ஒளி வீசவேண்டும். சிறு கதை எழுதுபவனுக்கு, சொல்லு வதைவிடச் சொல்லாமல் விடுவது என்னும் மந்திரம் அதிகம் தெரிந்திருக்க வேண்டும். படம் சிறிதாயும், அதில் சித்திரம் வீரியமாயும் வர்ணங்கள் கண்ணைக் கவரும்படியானவையாயும் இருக்கவேண்டும். இந்தச் சிற்பத்தில் நகாசு வேலையில்தான் சுவாரசியம் முழுவதும். ஒரு சம்பவத்தையோ, ஓர் இடத்தையோ, ஒரு கணப் பொழுதையோ, ஓர் ஆத்மாவையோ, அல்லது ஏதோ ஒரு நிகழ்ச்சியால் நினைவூட்டப்பட்ட ஞாபகங்களையோ, மனத்தில் எழும் எண்ணங்களையோ ஸ்பஷ்டமாகவும், உள்ளது உள்ளபடியேயும், மறக்க முடியாத அழுத்தத்துடனும் படிப்பவர் காணச் செய்வதுதான் இக் கலையின் நோக்கம்.

இப்புத்தகத்தில் பல பெரிய எழுத்தாளர்கள் பல விதத் திறமையைக் காட்டியிருக்கிறார்கள். அவைகளை இங்கே விஸ்தரிப்பது சாத்தியமல்ல. கதை சொல்லு வதில் கலை என்ற அம்சம் எது என்பதை மட்டும் சற்று உற்று நோக்குவோம். மனித வர்க்கத்தில் சேர்ந்த கோடிக் கணக்கான பேர்களுக்குக் கை, கால், கண் முதலிய அவயவங்கள் ஒன்றாயிருந்தும், ஒருவனைப்போல் மற்றொருவன் இல்லை யென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். யோசிக்குங்கால், இதைவிட வேறு அதிசயமுண்டோ? ஒவ்வொரு

மனிதனையும் அவன் முகஜாடையால் அறிந்துகொள்கிறோமல்லவா? அவனுடைய ஸ்தூல சரீரத்துக்கு ஒரு முகஜாடை இருப்பதுபோலவே, அவனுடைய ஆத்மாவுக்கும் ஒரு பிரத்தியேகமான முகச்சாயல் இருக்கிறது. மனிதனுடைய ஆத்மாவுக்கு மட்டுமல்ல; பிரகிருதியில் உள்ள எல்லா ரூபங்களுக்கும் ரஸங்களுக்கும் இவ்வித அந்தரங்கமான அடையாளம் உண்டு. அந்த அடையாளத்தைக் கையாளுவது தான் கலை. அந்த ஆத்மார்த்தமான அடையாளத்திற்கும் வெளிச் சின்னங்களுக்கும் தகர்க்க முடியாத சம்பந்தம் ஒன்றும் இல்லை. 'நான்' என்று சொல்லப் பட்ட வஸ்து, நான் அணிந்திருக்கும் ஆடையல்ல; என்னுடைய தனிப்பட்ட சைகைகளுமல்ல; என் குறை குணங்கள்கூட அல்ல. என்னில் உலகத்தாரால் அறியப்படும் பாகங்கள் சிலவே. நானே என்னை முழுதும் அறிந்துகொண்டேனென்று சொல்லுவதற்கில்லை. 'நான்' என்பதன் பூரண கலையையும் காட்டிக் கொடுக்கும் பூதக் கண்ணாடிதான் கவிதை யென்றும், கலை யென்றும் பலவிதமாய் வழங்கி வருகிறது. 'சிறு கதை' என்ற வகுப்பு, மேற்கூறிய முகச்சாயல் போன்ற அகச் சாயலைப் படம் பிடிக்கும் வித்தை யென்றே கூறலாம். பழக்கமுள்ள ஒரு மனிதனின் ஞாபகம் நமக்கு வந்தால், அவனுக்கு வழக்கமாயுள்ள நடையுடை பாவனைகள் நம் கண்முன் தோன்றினும், அவன் முகக் குறியே எல்லாவற்றிற்கும் முன் நிற்கின்றது; அதுபோல், இடம், பொருள், ஏவல் என்ற அங்கங்கள் 'சிறு கதை'க்குச் சில அளவு தேவையே என்றாலும், மேற்சொன்ன ஜீவ களையை வெளிப்படுத்துவதுதான் அதற்கேற்பட்ட விதி.

இந்தக் கதைக் கோவையில் அடங்கிய கதைகளில் அத்தகைய ஜீவ களை நிரம்பியிருக்கிறதை அறிஞர் நன்குணர்வார்கள். இந்த 40 கதைகளும் தமிழ்நாட்டின் அன்பையும் மதிப்பையும் பெற்ற எழுத்தாளர்களாலே எழுதப்பட்டவை. ஒவ்வொன்றும் அதனதன் ஆசிரியரால் தம்மால் இயற்றப்பட்ட பல கதைகளிலிருந்து மேலானது என்று பொறுக்கி எடுக்கப்பட்டு, இக் கோவையில் தொகுக்கப்பட்டது. இவற்றுள் சிலவற்றைப்பற்றி, அவைகளைவிட இன்னும் திறமான கதைகளை அவ்வவ் வாசிரியர்கள் இயற்றியிருக்கிறார்கள் என்ற அபிப்பிராயத்திற்கும் ஒரு கால் இடமிருக்கலாம். என்றாலும், அவ் வபிப்பிராய பேதங்களை நாம் ஆராயவேண்டியதில்லை.

இப்புத்தகத்தில் அடங்கிய கதைகள் தமிழின்கண் உண்டான புதுக் கிளர்ச்சிக்கு ஓர் அரிய பெரிய சான்றாகும். இக்கிளர்ச்சி இற்றைக்குச் சுமார் 20-வருஷங்களுக்கிப்பாலே விருத்தியாயிற்று என்பதையும், அதிலும் 'சிறு கதை'கள் எழுதும் ஆற்றல் ஏற்பட்டு எல்லாமாய்ப் பத்து வருஷங்களுக் குட்பட்டுத்தான் ஆகிறது என்பதையும் நினைக்கும்பொழுது, இந்த 40-கதைகளில் காணப்படும் பாவ புஷ்டியும், விஷய வைசித்திரியமும், உலகப்போக்கின் சூக்ஷ்மங்களும், இயற்கை அழகும், கருத்தொத்த நடைச் செல்வமும் வியப்பை அளிக்கின்றன. குற்றங் குறைகள் இருக்கலாம். எதில் இல்லை? ஐரோப்பிய எழுத்தாளர்களின் நிழல் சில கதைகளில் கொஞ்சம் அதிகப்படியாகவே விழுந்திருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. இருந்தாலும் என்ன? வளரும்

கலை அல்லவா? சிறு கதைகள் எழுதுவதில் தமிழ் நாட்டில் அபாரமான ஊக்கமும் லாகவமும் ஏற்பட்டிருப்பது இக் கதைகளைப் படிப்பவர்களுக்கு நன்கு விளங்கும். இந்த ஊக்கத்தை விருத்திசெய்து, இக் **கதைக் கோவை** எழுத்தாளர்கள் மேல்மேலும் கற்பனு சக்தியைக் காட்டவும், புதுப் புது எழுத்தாளர்கள் வெளிவரவும், இப் புத்தகம் பேருதவி செய்யக்கூடும் என்பதைத் தமிழ் அபிமானிகள் உணர்ந்து இப் புத்தகத்தை ஆதரித்தலே இதன் பிரசுரதாரர்கள் தமிழ்த் தாய்க்குப் புரிந்துவரும் அரிய தொண்டுக்குத் தகுந்த கைம்மாருகும்.

நா. ர.






# பொருளடக்கம்



# கதைக் கோவை

## 'தருமம் தலை காக்கும்'

[மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்]

### 1

கொள்ளிடத்தின் வடகரையில் ஆங்கரை என்பதோர் ஊர் உண்டு. அது திருச்சிராப்பள்ளி ஜில்லா லாலுகுடி தாலூகாவில், லாலுகுடிக்கு வடமேற்கே இரண்டுமைல் தூரத்தில் பல ஊர்களுக்குச் செல்லும் சாலைக்கிடையே அமைந்துள்ளது. அங்கே உள்ள அக்கிரகாரம் இருநூறுக்கு மேற்பட்ட அந்தணர்களின் வீடுகள் உடையது. அவர்களிற் பெரும்பாலோர் ஸ்மார்த்தப் பிராம்மணர்களுள் மழநாட்டுப் பிரகசரணமென்னும் வகுப்பைச் சார்ந்தவர்கள். அவர்கள் யாவரும் சிவபக்தி யுடையவர்கள். தங்கள் தங்களால் இயன்ற அளவு விருந்தினர்களை உபசரித்து உண்பிக்கும் வழக்கம் உடையவர்களாக இருந்தனர். பழைய காலத்தில் இவ்வழக்கம் எல்லாச் சாதியினரிடத்துமே இருந்துவந்தது.

ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்குமுன் மேற் கூறிய ஆங்கரையில் சுப்பையரென்ற செல்வர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு இரண்டாயிரம் ஏகரா நன் செய்கள் இருந்தன. அவை ஏழு கிராமங்களில் இருந்தன வென்பர். அவருடைய குடும்பம் பரம்பரையாகச் செல்வ முள்ளதாக விளங்கிய குடும்பம். அவர் தெய்வபக்தி யும், ஏழைகளிடத்தில் அன்பும், தர்ம சிந்தனையும் வாய்ந் தவர்.

நாள்தோறும் காலையில் ஸ்நானம் செய்துவிட்டு அவர் பூஜை முதலியவற்றை முடித்துக் கொள்வார்; பிறகு போஜனம் செய்வதற்குமுன் தம் வீட்டுத் திண்ணையில் யாரேனும் அதிதிகள் வந்துள்ளார்களா வென்று பார்ப்பார். திரிசிரபுரம், ஸ்ரீரங்கம், திருவானைக்கா முதலிய இடங்களுக் குப் பாதசாரிகளாகச் செல்பவர்களும் அவ்வூர்களிலிருந்து தங்கள் தங்கள் கிராமங்களுக்குச் செல்பவர்களுமாகிய வழிப் போக்கர்கள் அவருடைய வீட்டுக்குவந்து திண்ணையில் தங்கி யிருப்பார்கள். அவர்களைச் சுப்பையர் உள்ளே அழைத்துப் பசியாற அன்னமிட்டு உபசரிப்பது வழக்கம். அவர் அன்ன மிடுவதை அறிந்து பல பிரயாணிகள் அவர் வீட்டுக்கு வரு வார்கள். அவருடைய வீடானது ஒரே சமயத்திற் பலர் இருந்து சாப்பிடும்படி விசாலமாக அமைந்திருந்தது. எல்லா வகையினருக்கும் அவரவர்களுக்கேற்ற முறையில் அவர் உணவளிப்பார். பசியென்று எந்த நேரத்தில் யார் வரினும் அவர்கள் பசியை நீக்கும் வரையில் அவரது ஞாபகம் வேறொன்றிலும் செல்லாது.

தம்முடைய வீட்டிற்கு இரவும் பகலும் இங்ஙனம் வந்து போவோரை உபசரித்து அன்னமிடுவதையே தம்முடைய வாழ்க்கையின் பயனாக அவர் எண்ணினார். பசிப்பிணி மருத் துவராகி வாழ்ந்துவந்த அவருடைய புகழ் எங்கும் பரவியது.

அவரை யாவரும் *அன்னதானமையர் என்றும், அன்ன தானம் சுப்பையரென்றும் வழங்கலாயினர்.

சுப்பையர் குடும்பம் மிகவும் பெரியது; அவருடைய சகோதரர்கள், அவர்களுடைய மனைவிமார், பிள்ளைகள், பெண்கள், மருமக்கள், பேரர்கள், பேத்திகள் முதலியோர் ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்தனர். அன்னதானம் செய்யும்பொருட்டு அவர் தனியே சமையற்காரர்களை வைத்துக் கொள்ளவில்லை. அவர் வீட்டிலுள்ள பெண்பாலாரே சமையல் செய்வதும் வந்தோரை உபசரித்து அன்னமிடுவதுமாகிய வேலைகளைச் செய்துவந்தனர். சிறு பிள்ளைகள் முதற் பெரியவர்கள் வரையில் யாவரும் இலைகளைப் போட்டும், பரிமாறியும், பிற வேலைகளைப் புரிந்தும் தம்முடைய ஆற்றலுக்கு ஏற்றபடி உரிய காரியங்களைக் கவனிப்பார்கள். அதிதிகளுக்கு உபயோகப்படும் பொருட்டு, அப்பளம், வடகம், வற்றல், ஊறுகாய்கள் முதலியவற்றை அவ்வப்போது செய்து வைக்கும் வேலையில் அவ்வீட்டுப் பெண்பாலார் ஈடுபட்டிருப்பார்கள். அவருடைய வீடு ஒரு சிறந்த அன்ன சத்திரமாகவே இருந்தது; குடும்பத்தினர் யாவரும் தர்மத்திற்காக அன்புடன் உழைக்கும் பணியாளர்களாக இருந்தனர்.

"இப்படி இருந்தால் எப்படிப் பணம் சேரும்? எப்பொழுதும் இந்த மாதிரியே நடந்து வருவது சாத்தியமா?" என்று யாரேனும் சிலர் சுப்பையரைக் கேட்பார்கள். அவர், "பரம்பரையாக நடந்துவரும் இந்தத் தருமத்தைக்காட்டிலும் மேற்பட்ட லாபம் வேறொன்று எனக்கு இல்லை. பசித்து வந்தவர்களுக்கு அன்னமிடுவதே சிவாராதனமென்று எண்ணுகிறேன். தெய்வம் எவ்வளவு காலம் இதை நடத்தும்படி

* இவருடைய பரம்பரையினருள்ளும், இவருறவினர் பரம்பரையினருள்ளும் அன்னதானமென்ற பெயரையுடையவர்கள் சிலர் உண்டு.

கிருபை பண்ணுகிறதோ அவ்வளவு காலம் நடத்தியே வருவேன். நான் செய்வது கெட்ட காரியமன்று என்ற திருப்தியே எனக்குப் போதும்" என்பார்.

இங்ஙனம் அவர் இருந்துவரும் காலத்தில் ஒருசமயம் மழையின்மையாலும் ஆறுகளில் ஜலம் போதியவளவு வாராமையாலும் நிலங்களில் விளைச்சல் குறைந்தது. ஆயினும் அவர் அன்னதானத்தைக் குறைக்கவில்லை. இப்படி ஒருவர் அன்ன மிடுகிறாரென்ற செய்தியை அறிந்த பல ஏழை ஜனங்கள் அங்கங்கே உண்டான விளைச்சற் குறைவினால் ஆதரவு பெறாமல், சுப்பையர் வீட்டிற்கு வந்து உண்டு அவரை வாழ்த்திச் சென்றார்கள். இதனால் அக்காலத்தில் வழக்கத்திற்கு மேல் அவர் அன்னதானம் செய்ய நேர்ந்தது. ஆயினும் அவர் மனங் கலங்கவில்லை. நாயன்மார்களுடைய வரலாற்றை உணர்ந்திருந்த பரமசிவ பக்தராகிய அவர், இறைவன் சோதனைக்கு உட்பட்டு அந்நாயன்மார்கள் பின்பு நன்மை பெற்றதை அறிந்தவராதலின், தம்முடைய நிலங்கள் விளைவு குன்றியது முதலியனவும் அத்தகைய சோதனையே என்றெண்ணினார். தருமம் தலைகாக்குமென்ற துணிவினால், எப்பொழுதும் செய்துவரும் சிறப்புக்குக் குறைவில்லாமல் அன்னதானத்தை நடத்திவந்தார். பொருள் முட்டுப்பாடு உண்டானமையால் தம் குடும்பத்துப் பெண்பாலாரின் ஆபரணங்களை விற்றும், அடகுவைத்தும் பொருள்பெற்று அன்னதானத்திற்குப் பயன்படுத்திவந்தார். அதனாற் குடும்பத்தினருக்குச் சிறிதேனும் வருத்தம் உண்டாகவில்லை; அப்பெண்களோ அந்த நகைகள் ஒரு நல்ல காரியத்துக்குப் பயன்பட்டது கருதி மகிழ்ந்தார்கள். அந்தக் குடும்பத்திலுள்ள யாவரும் ஆடம்பரமின்றி இருந்தார்கள்.

பொருள் முட்டுப்பாடு அவ்வருஷத்தில் நேர்ந்தமையால் அரசாங்கத்துக்குச் செலுத்தவேண்டிய 'கிஸ்தி'யை அவராற்

செலுத்த முடியவில்லை. பெருந்தொகை யொன்றை வரிப் பணமாக அவர் செலுத்த வேண்டியிருந்தது. அவ்வூர்க் கணக்குப்பிள்ளை மணியகாரர் ஆகிய கிராமாதிகாரிகள் இருவரும் வரி வசூல்செய்ய முயன்றார்கள். சுப்பையர் தம் முடைய நிலைமையை விளக்கினார். அவர்கள் சுப்பையருடைய உண்மை நிலையையும் பரோபகார சிந்தையையும் நன்கு அறிந் தவர்களாதலால் அவர் கூறுவது மெய்யென்றே எண்ணினர். ஆயினும் மேலதிகாரிகளுக்கு எவ்விதம் பதில் சொல்லுவது? அதனால் சுப்பையரை நோக்கி, "நாங்கள் என்ன செய்வோம்! உடனே வரியை வசூல் செய்ய வேண்டுமென்று எங்களுக்கு உத்தரவு வந்திருக்கிறதே!" என்றார்கள். சுப்பையர், "என் னால் வஞ்சனையில்லை யென்பது உங்களுக்கே தெரியும். நான் வரியை இப்போது செலுத்தமுடியாத நிலையில் இருப்ப தாக மேலதிகாரிகளுக்கே தெரிவியுங்கள். அவர்கள் இஷ் டம்போலச் செய்துகொள்ளட்டும். அவர்கள் நிலத்தை ஏலம் போடக்கூடும். தெய்வம் எப்படி வழி விடுகிறதோ அப்படியே நடக்கும்; அதுவே எனக்குத் திருப்தி" என்றார்.

சிலர் அவரிடம் வந்து, "இந்தக் கஷ்டகாலத்திற்கூட அன்னதானத்தை ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்? சில காலம் நிறுத்திவைத்தால் வரியையும் கொடுத்துவிடலாம்; உங்களுக்கும் பணம் சேருமே" என்றார்கள். அவர், "இந்தக் காலத்தில் அன்னம் போடாவிட்டால் இவ்வளவு நாள் போட் டும் பயன் இல்லை; இப்போதுதான் அவசியம் இந்தத் தருமத் தைச் செய்துவரவேண்டும். கஷ்டமென்பது எல்லோருக்கும் இருப்பதுதானே? பல ஏழைகள் பசியோடு வரும்போது நாம் சும்மா இருப்பதைவிட இறந்துவிடலாம். இப்பொழுது கடன்பட்டாவது இந்தத் தருமத்தைச் செய்துவந்தால் நன்றாக விளையும் காலத்தில் உண்டாகும் லாபத்தில் ஈடு செய்து

கொள்ளலாம். இப்பொழுது செய்யாமல் நிறுத்திவிட்டால் அந்த நஷ்டத்திற்கு ஈடு செய்யவே முடியாது" என்றார்.

கணக்குப் பிள்ளையும் மணியகாரரும் நடந்ததைப் பேஷ்காரிடம்* தெரிவித்தனர். அவர் வந்து பார்த்தார்; அவருக்கும் ஒன்றும் தோன்றவில்லை; தாசில்தாருக்குத் தெரிவித்தார். அவர் மிக்க முடுக்கோடு வந்து பயமுறுத்தினார். சில கடுமையான தொந்தரவுகளையும் செய்து பார்த்தார். சுப்பையர் தம்முடைய நிலைமையை எடுத்துச் சொன்னார்; தாசில்தார், "இந்த அன்னதானத்தை நிறுத்திவிட்டுப் பணத்தைக் கட்டும்" என்று சொல்லவே சுப்பையர், "தாங்கள் அதை மட்டும் சொல்லக்கூடாது. எங்கள் பரம்பரைத் தருமம் இது. இதை நிறுத்தி விடுவதென்பது முடியாத காரியம். என்னுடைய மூச்சு உள்ள வரையில் இதை நிறுத்த மாட்டேன்; எனக்கு என்ன துன்பம் வந்தாலும் வரட்டும்" என்றார்.

தாசில்தார், "இதெல்லாம் வேஷம்! அன்னம் போடுகிறேனென்று ஊரை ஏமாற்றுகிற வழி" என்றார். சுப்பையர்பால் சில காரணங்களால் பொறாமை கொண்ட குமாஸ்தாக்கள் சிலர் தாசில்தாரிடம் அவரைப்பற்றி முன்னமே கோள் கூறியிருந்தனர். தாசில்தாரும் கோபியாதலின் சுப்பையருடைய குணத்தை அறிந்துகொள்ளவில்லை.

"உம்மால் பணம் கொடுக்க முடியாவிட்டால் உம்முடைய நிலத்தை ஏலம் போடுவேன்" என்றார் தாசில்தார்.

"அவ்விதம் செய்வது அவசியமென்று உங்களுக்குத்தோன்றினால், தெய்வத்தினுடைய சித்தமும் அதுவாக இருக்குமானால், நான் எப்படி மறுக்கமுடியும்?" என்று சுப்பையர் பணிவாகக் கூறினார்.

---

* பேஷ்கார் - ரெவினியூ இன்ஸ்பெக்டர்.

தாசில்தார் நிலத்தை ஏலம் போட்டார்; 'இந்தத் தரும தேவதையின் நிலத்தை ஏலம் எடுத்தால் நம் குடும்பமே நாசமாகி விடும்' என்ற பயத்தால் அவ்வூரிலுள்ளோரேனும் அயலூரினரேனும் வந்து ஏலம் எடுக்கத் துணியவில்லை. தம் அதிகாரமொன்றையே பெரிதாக நினைத்த தாசில்தாருக்கோ கோபம் பொங்கியது; மீசை துடித்தது; கண்கள் சிவந்தன. "இந்த மனுஷன் பொல்லாதவனென்று தெரிகிறது. இவனுக்குப் பயந்தே ஒருவரும் ஏலம் எடுக்க முன்வரவில்லை. இருக்கட்டும். இவனுக்குத் தக்கபடி ஏற்பாடு செய்கிறேன்" என்று சொல்லித் தாசில்தார் போய்விட்டார். சுப்பையரைப் போலவே வேறு பலர் வரி செலுத்தவில்லை. ஆயினும் அவர்கள் செலுத்தவேண்டிய தொகை சிறிதாதலின் எவ்வாறேனும் வசூல் செய்துவிடலாமென்ற தைரியம் தாசில்தாருக்கு இருந்தது. சுப்பையர் பெருந்தொகை செலுத்த வேண்டியவராக இருந்தமையால் அவர்மீது தாசில்தாருக்கு இருந்த கோபத்துக்கு அளவில்லை. உடனே, தாசில்தார் பலரிடமிருந்து வரிவசூல் செய்யப்படவில்லை யென்பதையும், அவர்களுள் பெருந்தொகை செலுத்தவேண்டிய சுப்பையர் முயற்சியொன்றும் செய்யாமல் இருப்பதையும், அவருடைய நிலத்தை ஏலம் எடுக்க ஒருவரும் துணியாததையும் ஜில்லா கலெக்டருக்கு எழுதித் தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று தெரிவித்தார்.

'எல்லாம் பரமசிவத்தின் திருவுள்ளப்படி நடக்கும்' என்ற மனச்சாந்தியோடு சுப்பையர் அன்னதானத்தை வழக்கம்போல் குறைவின்றி நடத்திவந்தார்.

தாசில்தாருடைய கடிதத்தைக் கண்ட கலெக்டர் லாலுகுடிக்கு வந்து 'முகாம்' போட்டார். அவர் ஒரு வெள்ளைக்காரர்; மதியூகி; எதையும் ஆலோசித்துச் செய்பவர்; தருமவான்; நியாயத்துக்கு அஞ்சி ஒழுகுபவர்; தமிழ்ப் பயிற்சி

உள்ளவர். பிறர் தமிழ் பேசுவதைத் தெளிவாக அறிவதோடு தாமே தமிழிற் பேசவும் தெரிந்தவர். அவர் லாலுகுடிக்கு வந்து தாசில்தாரையும் வரச்செய்து அவரிடம் சுப்பையரைப் பற்றி விசாரித்தார்.

தாசில்தார் தம்முடைய அதிகாரமொன்றும் சுப்பைய ரிடத்திற் பலிக்கவில்லை யென்ற கோபத்தினால் அவரைப் பற்றி மிகவும் கடுமையாகக் குறை கூறினார். "அவன் பெரிய ஆஷாடபூதி. இவ்வளவு நிலம் வைத்திருக்கிறவனுக்குப் பணம் இல்லாமலா போகும்? ஏதோ சிலருக்குச் சோற்றைப் போட்டுவிட்டு அன்னதானமென்று பேர் வைத்துக் கொண்டு பணத்தை மறைவாகச் சேகரித்து வைத்திருக்கிறா னென்றே நான் எண்ணுகிறேன். தன் வீட்டிலுள்ள நகை களைக்கூட ஒளித்துவைத்திருப்பான். துரையவர்கள் சிறி தேனும் இரக்கம் காட்டாமல் அந்த மனுஷனைத் தக்கபடி சிக்ஷிக்கவேண்டும்; அப்போதுதான் மற்றவர்களும் பயப் படுவார்கள்" என்றார்.

தாசில்தாருடைய பேச்சில் கோபம் தலைதூக்கி நிற்ப தைக் கலெக்டர் உணர்ந்தார். அவருடைய வார்த்தைகளை அப்படியே நம்புவது அபாயமென்றெண்ணினார். ஆதலின், அந்தப் பக்கங்களில் இருந்த வேறு சிலரிடம் சுப்பையரைப் பற்றி அந்தரங்கமாக விசாரித்தார். அவ்வந்தண உபகாரி யிடம் பொறாமை கொண்ட சிலரன்றி மற்றவர்களெல்லாம் அவரைப்பற்றி மிக உயர்வாகவே சொன்னார்கள்; அவர் செய்யும் அன்னதானத்தைப்பற்றி உள்ளங்குளிர்ந்து பாராட் டினார்கள். கலெக்டர் துரை எல்லாவற்றையும் கேட்டார்.

## 2

ஒருநாள் இரவு சுப்பையர் வழக்கம்போலத் தம்முடைய வீட்டுத் திண்ணையிலே படுத்திருந்தார். பகலிலும் இரவிலும் யாவருக்கும் அன்னமிட்டபின்பு, அகாலத்தில் யாரேனும்

பசியோடு வந்தால் அவர்களுக்கு உதவும்பொருட்டு உணவு வகைகளைத் தனியே வைத்திருக்கச் செய்வது அவருடைய வழக்கம். சில சமயங்களில் மழை முதலியவற்றால் துன்புற்று வழிநடைப் பிரயாணிகள் நள்ளிரவில் வருவார்கள். அவர்களுடைய பசியைப் போக்குவதற்கு அவ்வுணவு உதவும்.

சுப்பையர் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது நெடுந்தூரத்திலிருந்து, "சாமீ! சாமீ!" என்று ஒரு சத்தம் கேட்டது. அதனால் சுப்பையருடைய தூக்கம் கலைந்தது. அவர் விழித்தெழுந்து சத்தம் கேட்கும் வழியே சென்றார். அக்கிரகாரத்தின் கோடியிலிருந்து யாரோ ஒருவன், "சாமீ! சாமீ!" என்று கத்திக்கொண்டிருந்தான்.

"யாரப்பா அது?" என்று கேட்டார் சுப்பையர்.

"சாமீ! நான் பக்கத்திலுள்ள கிராமத்துப் பறையன். வேறு ஊருக்குப் போய்த் திரும்பி வருகிறேன். பசி தாங்க முடியவில்லை. இவ்வளவு தூரம் நடந்து வந்தேன்; மேலே அடியெடுத்து வைக்க முடியவில்லை" என்றான்.

"அப்படியானால், சற்றுநேரம் இங்கே இரு; இதோ வருகிறேன்" என்று சொல்லிச் சுப்பையர் தம் வீட்டுக்கு வந்தார். வந்து வெளிக் கதவைத் திறக்கச் செய்து சமையலறையிற் புகுந்தார். அங்கிருந்த கறி, குழம்பு, ரஸம், மோர் முதலியவற்றைத் தனித்தனியே தொன்னைகளிலும், கொட்டங்கச்சிகளிலும் எடுத்து, அன்னத்தை ஒரு பெரிய மரக்காலில் போட்டு அதன்மேல் கறி முதலியவற்றை வைத்து மேலே இலையொன்றால் மூடினார். அப்படியே அதை எடுத்துக்கொண்டு தெருவின் கோடிக்கு வந்து, "இந்தா அப்பா, இந்த மரக்காலில் சாதம், குழம்பு, கறி, ரஸம் எல்லாம் வைத்திருக்கிறேன். அதோ இருக்கிறதே, அந்த வாய்க்காலுக்குப்* போய்ச் சாப்பிட்டுவிட்டு உன் ஊருக்குப் போ.

* இது மலட்டாறென்று வழங்கும்.

முடியுமானால் மரக்காலை நாளைக்குக் கொண்டுவந்து கொடு; இல்லாவிட்டால் நீயே வைத்துக்கொள்" என்று சொல்லி அந்த மரக்காலைக் கீழே வைத்தார்.

பறையன் அதை எடுத்துக்கொண்டு, "சாமீ! உங்களைத் தெய்வம் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலை காக்கும்" என்று வாழ்த்திவிட்டுச் சென்றான். அவனுடைய பேச்சில் ஒருவிதமான நாக்குழறல் இருந்தது; 'பாவம்! பசியினால் பேசக்கூட முடியவில்லை! நாக்குக் குழறுகிறது!' என்று சுப்பையர் எண்ணி இரங்கினார். அவனது பசியைத் தீர்க்க நேர்ந்தது குறித்து மகிழ்ந்து வீடு வந்துசேர்ந்தார்.

லாலுகுடியில் 'முகாம்' செய்திருந்த கலெக்டர் மேற் சொன்ன நிகழ்ச்சி நடைபெற்றதற்கு மறுநாள் தம்மிடம் வர வேண்டுமென்றும், தாம் விசாரணை செய்ய வேண்டுமென்றும் சுப்பையருக்கு உத்தரவு ஒன்றை முன்னமே அனுப்பியிருந் தார். விசாரணை நாளன்று சுப்பையர் உரிய காலத்தில் செல்லாமல் நேரம் கழித்துச் சென்றார்.

கலெக்டர்துரையின்முன் சேவகர்கள் அவரை நிறுத்தி னர். நீர்க்காவி ஏறிப் பழுப்பு நிறமாயிருந்த அவருடைய வஸ்திரம் இடையிடையே தையலையுடையதாயும், சில இடங்களில் முடியப்பட்டதாயும் இருந்தது; அவருடைய உடம்பில் விபூதி விளங்கியது; மார்பில் ருத்திராட்ச மாலை இருந்தது. அவர் நேரம் கழித்து வந்ததனால் அவரிடம் கோபம் கொண் டிருப்பவரைப்போலக் கலெக்டர் இருந்தார்; முகத்திற் கோபக்குறிப்பு வெளிப்பட்டது; "இவரா சுப்பையர்?" என்று கேட்டார் துரை.

அருகிலிருந்த தாசில்தார், "ஆமாம்!" என்றார்.

கலெக்டர், "இவ்வளவு ஏழையாக இருப்பவரையா நீர் பெரிய பணக்காரரென்றும், வரிப்பணம் அதிகமாகத் தர வேண்டுமென்றும் எழுதியிருக்கிறீர்?" என்று கேட்டார்.

தாசில்தார்: இதெல்லாம் வேஷம். இப்படி வந்தால் துரையவர்கள் மனமிரங்கி வரியை வஜா செய்யக்கூடுமென்ற வஞ்சக எண்ணத்தோடு வந்திருக்கிறார்.

கலெக்டர் அவரைக் கையமர்த்திவிட்டுச் சுப்பையரைப் பார்த்து, "நீரா ஆங்கரைச் சுப்பையர்?" என்று கேட்டார்.

சுப்பையர்: ஆம்.

கலெக்டர்: நீர் ஏன் சரியான காலத்தில் வரவில்லை? சர்க்கார் உத்தரவை அலக்ஷியம் செய்யலாமா?

சுப்பையர்: துரையவர்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. காலையில் எழுந்து ஸ்நானம் செய்து பூஜையை முடித்துக்கொண்டு வருகிறவர்களுக்கு ஆகாரம் செய்விப்பது என் வழக்கம். இன்று பலர் வந்திருந்தார்கள். வழக்கப்படியே அவர்கள் யாவருக்கும் போஜனம் செய்வித்து நானும் ஆகாரம் செய்தபிறகு வந்தேன்.

கலெக்டர்: உம்முடைய வரிப்பணம் அதிகமாகப் பாக்கி இருக்கிறதே, தெரியுமா?

சுப்பையர்: தெரியும். என்மேல் வஞ்சகம் இல்லை; நிலம் சரியானபடி விளையாமையால் வரிப் பணத்தை என்னால் இப்பொழுது செலுத்த முடியவில்லை.

கலெக்டர்: அன்னதானத்தைமட்டும் எப்படிச் செய்கிறீர்?

சுப்பையர்: கிடைக்கும் நெல்லையெல்லாம் வைத்துக் கொண்டு செய்கிறேன். முன்பு, அன்னதானம் செய்தது போக மிஞ்சுவதில் வரியைச் செலுத்தி வந்தேன். இப்பொழுது அது முடியவில்லை. அன்னதானத்திற்கே போதாமையால் என் வீட்டு நகைகளை அடகு வைத்துக் கடன் வாங்கியிருக்கிறேன்; சிலவற்றை விற்கவும் செய்தேன்.

கலெக்டர்: இவ்வளவு கஷ்டப்பட்டு நீர் அந்த அன்ன தானத்தை ஏன் செய்யவேண்டும்?

சுப்பையர்: அது பரம்பரையாக எங்கள் குடும்பத்தில் நடந்துவருகிறது.

கலெக்டர்: அன்னம் போடுவது பகலிலா? இரவிலா?

சுப்பையர்: இரண்டு வேளையும் போடுவதுண்டு; பாத சாரிகளாக வருகிறவர்கள் பசியோடு எப்போது வந்தாலும் போடுவது வழக்கம்.

கலெக்டர்: எந்தச் சாதியாருக்குப் போடுவீர்?

சுப்பையர்: பிராம்மணருக்கும் மற்றச் சாதியாருக்கும் அவரவர்களுக்கு ஏற்ற முறையில் போடுவதுண்டு. பசித்து வந்தவர்கள் யாரானாலும் அன்னமிடுவேன்.

கலெக்டர்: பறையருக்கும் போடுவதுண்டா?

சுப்பையர்: ஆகா, போடுவதுண்டு; எல்லோரும் சாப்பிட்ட பிறகு போடுவோம்.

கலெக்டர்: இதுவரையில் அப்படி எத்தனை தடவை பறையர்களுக்குப் போட்டிருக்கிறீர்?

சுப்பையர்: எனக்கு நினைவில்லை; பலமுறை போட்டிருப்பதுண்டு.

கலெக்டர்: சமீபத்தில் எப்போது போட்டீர்?

சுப்பையர்: நேற்றுக்கூட ஒரு பறையன் பாதிராத்திரியில் பசிக்கிறதென்று வந்தான்; சாதம் கொடுத்தேன்.

கலெக்டர்: அப்படியா! என்ன என்ன கொடுத்தீர்? எல்லோரும் சாப்பிட்டு மிச்சமான சோற்றையா கொடுத்தீர்?

சுப்பையர்: அகாலத்தில் யாராவது வந்தால் உபயோகப்படுமென்று ரஸம், குழம்பு, மோர் முதலியவற்றிற் கொஞ்சம் கொஞ்சம் தனியே எடுத்து வைத்திருப்பது வழக்கம். ஆதலால் நேற்று வந்தவனுக்கு அன்னம், கறி, குழம்பு, ரஸம், மோர் எல்லாம் கொடுத்தேன்.

கலெக்டர்: இலை போட்டா சாப்பாடு போட்டீர்?

சுப்பையர்: இல்லை; அது வழக்கமில்லை. ஒரு மரக்காலில் அன்னத்தை வைத்து, அதன்மேல் தனித்தனியே தொன்னையிலும் கொட்டங்கச்சிகளிலும் கறி முதலியவற்றை வைத்துக் கொடுத்தேன்.

கலெக்டரோடு வந்திருந்த உத்தியோகஸ்தர்கள் யாவரும் இவ்வளவு விரிவாகக் கலெக்டர் விசாரணை செய்வதை நோக்கி வியப்புற்றார்கள். அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டேயிருந்த துரை தாசில்தாரைப் பார்த்தார். அவர், "எல்லாம் பொய்" என்று சொல்லி முணுமுணுத்துக் கொண்டேயிருந்தார்.

கலெக்டர்: உமக்கு அந்தப் பறையனைத் தெரியுமா?

சுப்பையர்: இருட்டில் இன்னானென்று தெரியவில்லை.

கலெக்டர்: அவனிடம் கொடுத்த மரக்காலைக் கொண்டு வந்து காட்டுவீரா?

சுப்பையர்: அதை அவன் இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை.

கலெக்டர்: அப்படியானால் நீர் அவனுக்கு அன்னங் கொடுத்ததற்குச் சாக்ஷி வேறு என்ன இருக்கிறது?

சுப்பையர்: சாக்ஷி எதற்கு? தெய்வத்துக்குத் தெரியும். அப்படி நான் செய்ததை வேறு யாரிடம் சொல்லிக்கொள்ள வேண்டும்?

கலெக்டர்: அந்த மரக்காலை அவன் திருப்பிக் கொடாவிட்டால் என்ன செய்வீர்?

சுப்பையர்: 'முடியுமானால் கொடு; இல்லாவிட்டால் நீயே வைத்துக்கொள்' என்று நானே சொல்லிக் கொடுத்தேன்; அவன் கொடுக்காவிட்டால் எனக்கு ஒன்றும் நஷ்டமில்லை.

கலெக்டர், "அப்படியா!" என்று சொல்லிக்கொண்டே மேஜை முழுவதையும் தரைவரையில் மறைத்து மூடப்பட்

டிருந்த துணியை மெல்லத் தூக்கினார். என்ன ஆச்சரியம்! அதன்கீழே ஒரு மரக்கால் காணப்பட்டது.

"நீர் கொடுத்த மரக்கால் இதுதானா? பாரும்" என்று சொல்லித் துரை அதை எடுத்து மேஜையின்மேல் வைத்தார்.

சுப்பையர் திடுக்கிட்டார்; தாம் கண்டதை அவர் நம்ப முடியவில்லை. கண்ணைத் துடைத்துத் துடைத்துப் பார்த்தார். முதல்நாள் பாதிராத்திரியில் தாம் ஒரு பறையனிடம்கொடுத்த மரக்கால் அங்கே எப்படி வந்திருக்கலாமென்று யோசித்தார். ஒன்றும் தெரியவில்லை. அங்கே இருந்த யாவரும் ஒரு நாடகத்தில் மிகவும் ரஸமான காட்சியொன்றில் ஈடுபட்டு மெய்ம்மறந்தவர்போல் ஆனார்கள்.

"என்ன, பேசாமல் இருக்கிறீர்! ராத்திரி நீர் செய்த அன்னதானத்துக்குச் சாக்ஷியில்லை யென்று எண்ணவேண்டாம். பாதிராத்திரியில் வந்த பறையன் நான்தான்! நீர் கொடுத்த மரக்கால் இதுதான்! இந்த இரண்டு சாக்ஷியும் போதா விட்டால், என்னுடன் அங்கே வந்த குதிரைக்காரன் வேறு இருக்கிறான். நீர் சொன்னதெல்லாம் உண்மையே. உம்முடைய வீட்டு அன்னத்தையும் கறி முதலியவற்றையும் நான் ருசி பார்த்தேன். உம்முடைய ஜன்மமே ஜன்மம்" என்றார் கலெக்டர்; அவருடைய கண்களில் நீர் ததும்பியது; உள்ளத்தில் உண்டான உருக்கம் அவர் தொண்டையை அடைத்தது. சிறிதுநேரம் அவரால் பேச முடியவில்லை. பிறகு, "உமக்கு எந்தக்காலத்திலும் குறைவே வராது. தெய்வம் உம்மைக் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலை காக்கும். உமக்காகத்தான் மழை பெய்கிறது" என்றார்.

அந்த வார்த்தைகளின் தொனியில் முதல் நாள் இரவு பறையன், 'தெய்வம் உங்களைக் குறைவில்லாமல் காப்பாற்றும்; தருமம் தலை காக்கும்' என்று சொன்ன வார்த்தைகளின் தொனி ஒலிப்பதை அப்போதுதான் சுப்பையர் உணர்ந்தார்;

தமிழைப் புதிதாகக் கற்றுக்கொண்ட வேற்று நாட்டாராகிய துரையின் பேச்சானது, பசியினால் நாக்குழறிப் பேசுபவனது பேச்சைப்போல ராத்திரியில் தமக்குத் தோன்றியதென்பதை அறிந்தார். அவருக்கு இன்னது சொல்வதென்று தோன்றவில்லை.

"அப்படியே அந்த நாற்காலியில் உட்காரும்! நீர் வரிப்பணத்தை மோசம் செய்யமாட்டீரென்பது எனக்கு நன்றாகத் தெரியும். நானும் உம்முடைய மரக்காலை மோசம் செய்யாமல் இதோ கொடுத்துவிட்டேன்; எடுத்துக்கொள்ளும். உம்முடைய தருமம் குறைவின்றி நடைபெற இந்த வரிப்பணம் உதவுமானால், அதைவிட இந்த ராஜாங்கத்துக்குச் சிறந்த லாபம் வேறு இல்லை. உம்மால் எப்போது முடியுமோ, அப்போது வரியைக்கட்டலாம்! உம்மை ஒருவரும் நிர்ப்பந்தம் செய்யமாட்டார். நான் இந்த ஜில்லாவில் இருக்கும் வரையில் உமக்கு ஒருவிதமான துன்பமும் நேராது" என்றார் கலெக்டர். பிறகு தாசில்தாரை நோக்கி, "உம்முடைய வார்த்தையை நான் நம்பியிருந்தால் பெரிய பாவம் செய்திருப்பேன். இனிமேல் இந்த மாதிரி ஒருவரைப்பற்றியும் தீரவிசாரியாமல் நீர் எழுதக்கூடாது" என்று கண்டித்துக் கூறினார்.

மேஜைத் துணியாகிய திரையைத் துரை தூக்கியதும், அம்மேஜைக்கடியில் அவ்வந்தண வள்ளலது அன்னதானத்தை அளந்த மரக்கால் இருந்ததும், அதனைத் துரை எடுத்து மேஜையின்மேல் வைத்து மனமுருகிப் பேசிக் கண்களில் நீர் ததும்ப வீற்றிருந்ததுமாகிய அக்காட்சிகளை நம்முடைய அகக்கண்ணால் நோக்கும்போது நமக்கே மயிர் சிலிர்க்குமாயின், அங்கே இருந்து கண்ணால் பார்த்தவர்களுடைய உள்ளமும் உடலும் எப்படி இருந்திருக்குமென்பதைச் சொல்லவும் வேண்டுமா?

# தேவானை

[சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்]

## 1

இராமநாதையரும் அவர் மனைவி சீதாலக்ஷ்மியும் தங்கள் மோட்டார் வண்டியில் சைனாபஜாருக்குப் போய்ச் சில சாமான்களை வாங்கிக்கொண்டு பக்கத்தில் சிற்றுண்டிச் சாலைக்குள் புகுந்து பலகாரம் சாப்பிட்டுவிட்டு வந்து வண்டி ஏறினார்கள்.

"கடலோரம் போகலாமா?" என்றார் இராமநாதையர்.

"பீச்சுக்கா? ஜனக் கூட்டமில்லாத இடத்தில்போய் வண்டியை நிறுத்தச் சொல்லுங்கள். கூட்டத்தைக் கண்டால் எனக்குப் பிடிப்பதே இல்லை. அதோ, 'டாய்ஸ்' விற்கிறான். ஏதாவது இரண்டு வாங்குங்கள்; குழந்தைக்குக் கொண்டு போகலாம்."

சீதாலக்ஷ்மி இதைச் சொல்லி முடிப்பதற்குள் அவள் எண்ணத்தை அந்தப் பொம்மை வியாபாரி எப்படியோ அறிந்துகொண்டு வண்டியண்டை வந்தான். வண்டியில் இருந்துகொண்டே விலை கேட்டுச் சாமான்கள் பொறுக்கிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது மற்றொரு கத வண்டை ஓர் இளம்பெண், பிச்சைக்காரி, ஒரு சிறு குழந்தை

யைக் கையில் எடுத்துக் காட்டிக்கொண்டு, "ஐயா, தருமம் கொடுங்கள். பச்சைக் குழந்தையைப் பார், அம்மா!" என்றாள்.

"எல்லாம் ஜப்பான் 'டாய்ஸ்'தானே?" என்று கேட்டார் இராமநாதையர்.

"ஜப்பான்தான்; வேறு ஏது? நம் ஊரில் இதெல்லாம் செய்வார்களா?" என்றான் வியாபாரி.

பிச்சைக்காரி மறுபடியும் கெஞ்சினாள்.

"வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது இதென்ன சனியன்! இந்தப் பட்டினத்தில் பிச்சைக்காரர்கள் தொல்லை ஜாஸ்தியாய்ப் போய்விட்டது" என்றாள் சீதாலக்ஷ்மி.

"பசிக்கிறதம்மா, கண்ணெடுத்துப் பாரம்மா; நீ மகராஜியா யிருக்கவேண்டும்!" என்றாள் பிச்சைக்காரி.

"போகிறாயா? போலீஸ்காரனைக் கூப்பிடச் சொல்லட்டுமா?" என்று அதட்டினாள் சீதாலக்ஷ்மி.

"பாலில்லாமல் தவிக்கிறது, அம்மா! ஓர் அணு பிச்சை போடுங்கள், அம்மா! எவ்வளவோ செலவழிக்கிறீர்கள் ராஜா!"

விலை தீர்த்து வாங்கிய சாமான்களை வண்டியில் எடுத்து வைத்துக்கொண்டு, "ஓட்டு வண்டியை; பீச்சுக்குப் போ" என்றார் இராமநாதையர்.

மோட்டாரோட்டி பிச்சைக்காரியை விலகச் சொல்லி வண்டியை நடத்தினான்.

"ஐயா! ஐயா!" என்று பிச்சைக்காரி கொஞ்சதூரம் வண்டியைப் பிடித்துக்கொண்டு ஓடினாள்.

"ஓடாதே; செத்துப் போவாய்!" என்றார் இராமநாதையர். அப்போது பிச்சைக்காரியின் முகத்தைப் பார்த்தார். எங்கேயோ முன்னே பார்த்த மாதிரி தோன்றிற்று.

வண்டி வேகமாய்ச் சென்றதும், "ஐயோ பாவம்! சிறு பெண். முகம் நம் ஊர்க்காரிபோல் தோன்றுகிறது" என்றார்.

சீதாலக்ஷ்மி, "எந்த ஊரோ, சனியனோ? அவளைப் பற்றி நமக்கு என்ன? கொடுங்கள் பார்ப்போம்; அதென்ன, புதிதாக இருக்கிறது? ஏரோப்ளேனோ? சாவி கொடுப்பதா? அல்லது வெறும் பொம்மையா?" என்று விளையாட்டுச் சாமான்களை யெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்துக்கொண்டே கடலோரம் போனார்கள்.

## 2

சேலத்தில் பொன்னம்மாப் பேட்டை, பெரியண்ண முதலித் தெருவில் ஓர் ஏழைத் தறிகாரர் குடும்பம்; வையா புரிக்கு முப்பது வயது; அவன் தங்கை தேவானைக்கு இருபது வயது; விவாகம் ஆகவில்லை. தாய் பழனி அம்மாள். மூவ ரும் தங்கள் பரம்பரைத் தொழில், கைத் தறியைக் கொண்டு கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தார்கள். நாள் முழுவதும் உழைத்து வாரம் ஒன்றுக்கு நான்கு ரூபாய் சம்பாதித்து வந் தார்கள். வரவரக் கைத்தறி வியாபாரம் குன்றிப்போய்க் கூலி குறைந்துகொண்டே வந்தது. பிறகு குறைந்த கூலியுங்கூட இல்லாமல் பலர் தவித்தார்கள். சேலத்தில் பல தறிகளுடன் வையாபுரியின் தறியும் சும்மா கிடந்தது. தேவானை இரண்டு பிராம்மண உத்தியோகஸ்தர்கள் வீட்டில் வாசல் பெருக்கி, சாணி தெளித்துச் சில்லறைக் காரியம் செய்ய அமர்ந்தாள். அதில் மாதம் மூன்று ரூபாய் கூலி வந்தது. தாய் பழனி யம்மாளும் இன்னும் ஒரு வீட்டில் காலையில் கூட்டிச் சாணி தெளித்து ஒரு ரூபாய் சம்பாதித்தாள். வையாபுரி, நெசவு முதலாளிகளிடம் வேலைக்காக அலைந்து அலைந்து திரிந்தான். ஓரிடத்திலும் வேலை கிடைக்காமல் சில நாட்கள் சென்றபின், அவன் தன் தாயிடம் சொல்லிவிட்டுப் பெங்களூருக்குப் போய்விட்டான். அவ்விடம் ஏதாவது ஆலையில் வேலை பார்ப்

போம் என்று சேலத்திலிருந்து அவனும் இன்னும் சில முதலிமார்களும் போனார்கள்.

போய்ச் சில நாட்கள் அலைந்து, வையாபுரி ஒரு மில்லில் சேர்ந்ததாகக் கடிதம் எழுதினான். வையாபுரிக்குக் கொஞ்சம் எழுதப் படிக்கத் தெரியும். சிறு வயதில் அவன் தகப்பனார் அவனைப் பொன்னம்மாபேட்டை முனிஸிபல் பள்ளிக்கூடத்தில் போட்டிருந்தார். அந்தக் காலத்தில் நெசவுக்காரர்கள் வாழ்வு அவ்வளவு கஷ்டமாக இருக்கவில்லை.

"மிகவும் கஷ்டப்பட்டு யார் யாருக்கோ லஞ்சம் கொடுத்து ஒரு மில்லில் சேர்ந்தேன். தினம் எட்டணா கூலி; மாதத்தில் இருபத்தாறு நாள் வேலை; ஆகையால் பதின்மூன்று ரூபாய் வரும். இந்த மாதச் சம்பளம், சாப்பாட்டுச் செலவுக்கும் கடன்பட்டதற்கும் செலவாகி விடும். பிறகு உங்களுக்கு மாதம் இரண்டு ரூபாய் அனுப்ப முடியும். ஆண்டவன் இருக்கிறான்" என்று வையாபுரி எழுதியதைப் பக்கத்து வீட்டு மாரியப்ப முதலி மகன் படித்துச் சொன்னான். கிழவிக்கும் தேவானைக்கும் உண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. பத்து நாளுக்குப் பிறகு மற்றொரு கடிதம் வந்தது.

"அம்மாவுக்குத் திக்கு நோக்கிச் சாஷ்டாங்க நமஸ்காரம். நான் இங்கே ஆண்டவன் அருளால் க்ஷேமம். நீயும் தேவானையும் சுகம் என்று நம்புகிறேன். எனக்கு இந்த ஆலையில் வேலைசெய்வது பிடிக்கவேயில்லை. வீட்டில் தறியண்டை உட்கார்ந்து வேலைசெய்த நாட்களை நினைத்துக் கண்ணில் தண்ணீர் வருகிறது. இங்கே எனக்குப் பைத்தியம் பிடித்தாற் போலிருக்கிறது. தலை கிறுகிறு என்கிறது. என் மனவருத்தமும் பல தொல்லைகளும் சொல்லி முடியா. ஊரைவிட்டு ஏன் வந்தேனோ என்று தோன்றுகிறது. பக்கத்து வீட்டுப் பையனைக்கொண்டு கடிதம் எழுத முடியுமானால் எழுது.

மல்லேசுவரம், கூலி லைனில், சேலம் பொன்னம்மாப்பேட்டை வையாபுரி முதலி என்று எழுது."

# 3

தேவானை சாணி தெளித்துப் பெருக்கிவந்த வீடுகளில் ஒன்று, பென்ஷன் உத்தியோகஸ்தர் ஒருவர் வீடு. அவர் மனைவி நல்லவள். வேலைவாங்குவதில் கொஞ்சம் கடுமையான போதிலும், மற்ற விஷயங்களில் அன்பாகத்தான் நடத்திவந்தாள். பழைய புடைவை ஒன்று கொடுத்தாள். சமையல் செய்வதில் மிச்சமானால் அவ்வப்போது கொஞ்சம் சாதமும் குழம்பும் கிடைக்கும். இப்படிச் சில நாட்கள் கழிந்தன.

இதைத் தெய்வம் பொறுக்கவில்லை போலும்! அந்த வீட்டில் வேலைசெய்து வந்த சமையற்காரன், தேவானைக்கு மிச்சமான உணவு பதார்த்தங்கள் கொடுத்துவந்தவன், அவளிடம் விளையாட்டாகப் பேசுவான். பிறகு ஒருநாள் அவன் அக்கிரமமாக நடந்துகொண்டான்.

தேவானைக்கு அடங்காக் கோபம் வந்தது. ஆனால் யாரிடத்திலும் சொல்ல வெட்கப்பட்டாள். "எங்கேயும் சொல்லாதே; உனக்கு மாதம் இரண்டு ரூபாய் தருவேன்" என்று அந்த அயோக்கியன் வற்புறுத்தினான்.

வருத்தத்தை அடக்கிக்கொண்டு தேவானை வீட்டுக்குப் போய்த் தாயிடம், "நான் அந்த வேப்பமரத்து வீட்டில் வேலைசெய்ய முடியாது அம்மா" என்றாள்.

"ஏன்" என்று விசாரிக்கவே, தேவானை வெட்கப்பட்டு மிகவும் வருத்தத்துடன் நடந்ததைச் சொன்னாள். கிழவி, "நான் அந்த வீட்டு எஜமானியிடம் சொல்லுகிறேன்" என்று கிளம்பினாள்.

"வேண்டாம், அம்மா. அவர்களிடம் சொல்லி என்ன பயன்? நான் மறுபடி அங்கே வேலை செய்ய முடியாது" என்றாள்.

வேறு இடத்தில் வேலைக்காகப் பார்த்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் யாராவது ஒருத்தி வேலைக்கு இருந்தே வந்தாள். இரண்டு மாதம் அலைந்த பிறகு ஒரு வீட்டில் வைத்துக்கொண்டார்கள்.

* * *

ஆறு மாதங்கள் கழிந்தன. பெங்களூரில் வையாபுரி இருந்த ஆலையில் ஒரு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. ஒரு மேஸ்திரியைத் துரை அடித்துவிட்டார். அதன்மேல் அவனையும் வேறு சில கூலிகளையும் வேலையிலிருந்து நீக்கி விட்டார்கள். இந்தக் காரணமாகத் தொழிலாளர்கள் யூனியன் கூட்டம் கூட்டி அந்த மாதக் கூலி வாங்கினதும் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள். வையாபுரியும் இதில் சேர வேண்டியதாயிற்று.

ஒருமாத காலம் இது நடந்தது. தொழிலாளர் பல கூட்டங்கள் கூட்டிக் கிளர்ச்சி செய்தார்கள், முதலில் உற்சாகம் அதிகமா யிருந்தது. பிறகு கையில் இருந்த காசு செலவாய்ப் போனதும் உற்சாகம் குறைந்தது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சிலர் சமாதானம் செய்தார்கள். எல்லோரும் மறுபடியும் ஆலைக்குப் போனார்கள். ஒரு வாரத்திற்குப்பின் இருபத்தைந்து பேர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டதாகவும், ஆலைக்குள் வரக்கூடாதென்றும் கேட்டில் விளம்பரம் போட்டுத் தடுத்துவிட்டார்கள். அந்த இருபத்தைந்து பேர்களில் வையாபுரியும் ஒருவன்.

"நான் ஒரு பாவமும் அறியேன்; நான் புதிதாக வந்தவன். நான் எதிலும் சேரவில்லையே!" என்று வையாபுரி தன்னுடைய மேஸ்திரியிடம் சொல்லிக்கொண்டான்.

"பெரிய துரை உத்தரவு; அந்தப் படுபாவி 'டயம் கீப்பர்' ரங்கசாமி நாயக்கன் செய்த வேலை; உன் பெயரையும் சேர்த்துத் துரைக்குக் கொடுத்துவிட்டான். நான் ஒன்றும் செய்யமுடியாது" என்று மேஸ்திரி சொல்லிவிட்டான்.

ரங்கசாமி நாயக்கனிடம் போய்க் கெஞ்சினான். அவன், "எனக்கு ஒன்றும் தெரியாது. சம்பள பட்டுவாடா குமாஸ்தா ஐயர் செய்தது" என்றான். யாரிடம் அலைந்து கெஞ்சினாலும் பயனில்லாமல் போய்விட்டது. "நீ எழுதப் படிக்கத் தெரிந்தவன். மற்றவர்களுக்குத் தூண்டுதல் செய்தவன். உன்னை எடுத்துக்கொள்ள முடியாது" என்று மானேஜர் சொல்லிவிட்டார்.

* * *

பல நாட்கள் அலைந்து கையில் இருந்த காசு முழுவதும் செலவாகி மிகவும் கஷ்டப்பட்டு வையாபுரி சென்னை போய்ச் சேர்ந்தான். அவனைப்போலவே நீக்கப்பட்டவர்கள், இன்னும் பத்து ஆலைத் தொழிலாளர்கள் அவன் கூடவே சென்னையில் வேலை தேடப் போனார்கள். சோற்றுக்குத் தங்களில் சிலரிடமிருந்த பணத்தை எல்லோரும் கடனாகப் பங்கு போட்டுக் கொண்டு எட்டுநாள் ஆலை ஆலையாகச் சுற்றித் திரிந்தார்கள். வையாபுரிக்கு ஒரு மில்லில் வேலை கிடைத்தது.

கேட்டில் நிற்கும் ஆளுக்கும், சில்லறை உத்தியோகஸ்தர்களுக்கும் கொடுக்கவேண்டிய மாமூல்களுக்கு ஐந்து ரூபாய் வேண்டியிருந்தது. இதற்காகவும், சாப்பாட்டுச் செலவு முதலிய கடன் தீர்க்கவும் தன் காதிலணிந்திருந்த பொன் திருகுகளை ஒருவனிடம் அடகு வைத்துப் பணம் வாங்கினான். வையாபுரி சென்னை மில்லில் அமர்ந்த சில நாட்களுக்கெல்லாம் கஷ்டத்தை மறக்கக் கள் குடிக்க ஆரம்பித்து விட்டான். சேலத்தில் அவனுக்கு இந்த வழக்கமில்லை. பிறகு சூதாட்டத்தில் சம்பாதிக்கலாம் என்று சில தோழர்கள்

அவனுக்கு வழிகாட்ட, அந்தப் பழக்கமும் ஏற்பட்டது. சம்பாதிக்கும் கூலியில் சாப்பாட்டுச் செலவு, குடிசை வாடகை முதலியவை போக மிச்சமானது ஊருக்கு அனுப்பவேண்டியதற்குப் பதில், இம்மாதிரிப் பலவிதத்தில் செலவாயிற்று. பட்டாணியனிடம் கடனும் ஏறிற்று. இந்தக் கஷ்டங்களையெல்லாம் பொறுக்க முடியாமல் இன்னும் அதிகமாகக் குடிக்கலானான்.

முதலில் ஏதோ சாக்குப் போக்குகள் சொல்லி, பிறகு தன்னால் ஏதும் அனுப்பமுடியாது, வேண்டுமானால் தேவானையும் சென்னைக்கு வந்து ஓர் ஆலையில் வேலையில் சேரலாம் என்று எழுதிவிட்டான். அந்தக் கடிதத்தைப் பார்த்துத் தேவானைக்கும பழனியம்மாளுக்கும் உள்ளம் துடித்தது.

பல நாட்கள் பொறுத்துப் பிறகு ஒருநாள், "ஏனம்மா நானும் பட்டணம் போகலாகாது? வையாபுரியுடன் நானும் உழைத்து ஏதாவது சம்பாதித்து உனக்கு அனுப்புகிறேன். பட்டணத்தில் அநேகம் பேர் பெண் பிள்ளைகள் ஆலையில் வேலை செய்கிறார்களாமே?" என்றாள் தேவானை.

தாய் முதலில் ஒப்பவில்லை. "அது எங்கேயாவது உண்டா? அறியாப் பிள்ளை அங்கெல்லாம் போகவா?" என்றாள். சிலநாள் இப்படியே வாதாடிய பிறகு, கிழவியும் சம்மதித்தாள். பக்கத்து வீட்டு மாரப்பனிடம் தன் காதிலிருந்த பொன் ஓலைகளை அடகுவைத்து, ரூபாய் பன்னிரண்டு கடன் வாங்கி, தேவானை சென்னைக்குப் புறப்பட்டாள்.

## 4

சென்னையில் வையாபுரி, தேவானையை ஒரு மில்லில் நூல் நூற்கும் 'டிபார்ட்மெண்'டில் சேர்த்து வைத்தான். வையாபுரி இருந்த ஆலை வேறு; இது வேறு. அவளைப்போல் இன்னும் சுமார் நூற்றைம்பது பெண்கள், சிறியவர்களும்,

பெரியவர்களும், அந்த ஆலையில் வேலைசெய்து வந்தார்கள். தேவானைக்கும் அவளுடன் பத்துப் பேர்களுக்கும்மேல் ஒரு 'ஜாபர்'. அவன் தேவானையை முதலில் மிகப் பிரியமாக நடத்தினான், பிறகு வேலையில் அதட்ட ஆரம்பித்தான். திட்டுவதும் உண்டு. தனியாகக் கண்ட காலத்தில் காரண மில்லாமல் மிகுந்த சல்லாபமாகப் பேசுவான்.

"இதென்ன, இவர் இம்மாதிரி செய்கிறார்?" என்று தன் கூட வேலைசெய்து வந்த ஒருத்தியைக் கேட்டாள் தேவானை. அவள் சிரித்து, "உனக்கு இது தெரியாதா? நீ பாவம்! நாட்டுப்புறம். அவரிடம் சரியாக நடந்துகொள் ளாமற்போனால், சம்பளத்தில் பாதிக்குமேல் அபராதமாகவே பிடித்தம் ஏற்படும். அவர் சந்தோஷமா யிருந்தால் பல சௌகரியங்கள் உண்டு" என்றாள்.

ஏழைகளுடைய கஷ்டத்தை யார் அறிவார்கள்? அதி லும் ஏழைப் பெண்பிள்ளையாகப் பிறந்து ஆலையில் கூலி வேலையில் அமர்பவர்கள், முன் ஜன்மத்தில் பாவம் செய்தவர் களே என்று சொல்லலாம்.

தேவானை சிலநாள் எல்லாவற்றையும் பொறுத்து வந் தாள். பிறகு தெய்வமேது, ஒன்றேது என்று மேஸ்திரியின் செயல்களை எதிர்ப்பதைவிட்டாள்; மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு அவனுடன் சிரித்துப் பேச ஆரம்பித்தாள். வரவர அதில் சந்தோஷமும் அடையலானாள். கூலியும் உயர்ந்தது.

சில மாதங்கள் கழிந்தன. தேவானைக்குத் தேகத்தில் தொந்தரவுகள் கண்டன. குழந்தை உண்டாயிருப்பதாக அறிந்துகொண்டாள்.. தனக்குத் தெரிந்த தெய்வங்களையெல் லாம் வேண்டினாள். 'யாரிடம் சொல்லுவேன்!' என்று காட்டில் வேட்டைக்குத் தப்பியோடும் மானைப்போல் மிரண்டு திகைத்தாள். தமையன் வையாபுரியிடம் சொல்ல அஞ்சி னாள். அவளுடன் வேலை செய்துவந்த சிலர், அவள் நிலையை

அறிந்து சிரித்து வேடிக்கை செய்தார்கள். 'ஊருக்குப் போய் விடலாமா?' என்று யோசித்தாள். பிறகு ஜாதியிலிருந்து தள்ளிவிடுவார்களே யென்று பயந்தாள். தாய் இதை அறிந்தால் எப்படிப் பொறுப்பாள் என்று ஊருக்குப்போகும் எண்ணத்தை விட்டுவிட்டாள். தெய்வமே கதியென்று தைரியம் செய்துகொண்டு அந்த நிலையிலேயே ஆலையில் வேலைசெய்து கொண்டிருந்தாள்.

ஒருநாள் மறுபடியும் மனம் திடுக்கிட்டது. "ஐயோ நான் என்ன செய்வேன்! என் குலத்தைக் கெடுத்தேனே!" என்று ஒருத்தியிடம் அழுதாள்.

"பயப்படாதே, தேவானை. இதென்ன, எல்லோருக்கும் உண்டாவதுதானே? இதற்கு மருந்து உண்டு. உடனே கழிந்துவிடும்" என்றாள்.

"ஆமாம்; நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பயமாயிருக்கிறது. உயிர் போய்விடுமோ என்னவோ? கடவுளே! நான் எங்கேபோய் ஒளிந்து கொள்ளுவேன்!" என்று அலறினாள்.

"இரண்டு ரூபாய் கொடுத்தால், முனிசாமி ஆசாரி தெருவில் ஓர் அம்மாள் இருக்கிறாள்; அவள் எல்லாம் செய்து விடுவாள்" என்றாள் தோழி.

"போலீசாருக்குத் தெரிந்துவிட்டால் பிடித்துப் போவார்களாமே?" என்றாள் தேவானை.

"அதெல்லாம் பயப்படாதே. அந்த அம்மாளுக்கும் போலீஸாருக்கும் ரொம்ப சிநேகம். ரூபாய்தான் எல்லாம் செய்யுமே; உனக்குத் தெரியாதா?" என்றாள் அவள்.

"ஐயோ, நான் ரூபாய்க்கு எங்கே போவேன்? தெய்வமே! என்னை இப்படி மறந்தாயே! நான் இந்தப் பாழாய்ப் போன ஊருக்கு ஏன் வந்தேன்? சேலத்தில் சோறில்லாமல் செத்திருந்தாலும் நன்றாயிருந்திருக்குமே!" என்று கதறினாள்.

சில நாட்களுக்குப்பின் மற்றொருத்தி வேறு யோசனை சொன்னாள்; "குழந்தையைக் கொல்லக்கூடாது, அம்மே! அது மூன்று ஜன்மத்திற்கும் தீராத பாவமாகும் என்று சொல்லுகிறார்கள். பிள்ளையார் கோயில் தெருவில் ஒரு பாட்டியம்மா இருக்கிறாள். அவள் ரொம்ப நல்லவள். அவளிடம் போயிருந்தாயானால் எல்லாம் பார்த்துக் கொள்வாள். உன்னைப்போல் அநேகம் பேர்கள் அவள் வீட்டில் இருந்து குழந்தை பெற்றிருக்கிறார்கள். நீ பயப்படாதே" என்றாள்.

"நீ மகராஜியாய் இருப்பாய்; அக்கா!" என்று தேவானை அவளை வாழ்த்தினாள். பிறகு, தேவானை பிள்ளையார் கோயில் தெருவில் குடியிருந்த அந்தப் பரோபகாரியம்மை வீடு போய்ச் சேர்ந்தாள். கிரமமாகப் பிரசவம் நடந்தது. குழந்தையைத் தொட்டு எடுத்தவுடன் தேவானைக்கு உலகமே வேறு உருக் கொண்டது. எல்லாக் கஷ்டமும் மறந்துவிட்டாள். குழந்தை ஒன்றே உலகம் என்று எண்ணினாள்.

"தெய்வம் கொடுத்த குருந்து; இது என்ன செய்தது? பாவம்! நான்தான் குலபாதகி" என்று குழந்தையை எடுத்துப் பாலூட்டுவாள். இவ்வாறு சில நாட்கள் கவலைகளை மறந்திருந்தாள்.

"நீ வேலைக்கு இப்போது போக முடியாது. தேவானை! இங்கேயே இன்னும் சிலநாள் இரு" என்று பிள்ளையார் கோயில் தெருப் பரோபகாரியம்மை வெகு பரிதாபமாகச் சொன்னாள்.

"இவ்வளவு நல்லவர்கள் உலகத்தில் இருக்க நான் தெய்வத்தை நொந்தேனே!" என்று ஆண்டவனைத் தேவானை வந்தித்தாள்.

ஒரு மாதம் கழிந்ததும் உண்மை தெரிந்தது. அந்தக் கிழவி, மாந்தர்களால் ஏமாற்றப்பட்ட அனாதைப் பெண்களை வைத்து அக்கிரமத் தொழில் நடத்தி வருபவள். தேவானை

யும் இந்த வலையில் சிக்கிவிட்டாள். பிறகு அவள் ஆலைக்குப் போகவே இல்லை.

## 5

"சேலத்தில் நம் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த தேவானை உனக்கு ஞாபகம் இல்லையா? அவளைப் போலவே இருந்தாள் இந்தப் பிச்சைகாரி" என்றார் இராமநாதையர்.

தேவானை சேலத்தில் முதலில் வேலை செய்துவந்த வீட்டு எஜமானர், பென்ஷன் உத்தியோகஸ்தருடைய மூத்த குமாரர் இராமநாதையர். அவருக்குச் சென்னையில் ஒரு பெரிய பாங்கியில் காஷியர் வேலை.

"சேலத்துப் பெண் இங்கே என்னத்துக்கு இருப்பாள்? உங்களுக்குப் பிரமை" என்றாள் சீதாலக்ஷ்மி.

"என்னவோ, எப்படியோ, யாராக இருந்தாலும் குழந்தையை வைத்துக்கொண்டு இம்மாதிரி, பெண்கள் பிச்சை எடுக்கலாயிற்றே; நம் தேசம் என்ன நிலைக்கு வந்தது!" என்றார் இராமநாதையர்.

"உங்களுக்கு எப்போதும் தேசந்தான் யோசனை. நம்முடைய குடும்பத்தை நாம் கவனித்தால் போதாதா?" என்றாள் மனைவி.

மறுநாள் மாலையும் இராமநாதையருக்கு அந்தப் பிச்சைக்காரி ஞாபகம் விடவில்லை. ஆபீஸிலிருந்து சைனுபஜாருக்கு நேராய்ப் போனார். அவளை மறுபடி அவ்விடம் காணலாம், கண்டு விசாரிக்கலாம் என்று எண்ணி அந்த வழியாகச்சென்று அந்தச் சிற்றுண்டிச் சாலையண்டை வண்டியை நிறுத்திக் கொஞ்ச நேரம் இருந்தார். பல பிச்சைக்காரர்கள் வந்து, "ஐயா, ஐயா" என்று சுற்றிக்கொண்டார்கள். ஆனால் அவளைக் காணவில்லை.

அடுத்த சனிக்கிழமை சாயந்திரம் இராமநாதையரும் அவர் மனைவியும் மறுபடி சைனுபஜார் பக்கம் போனார்கள். "அதோ உங்கள் பிச்சைக்காரி" என்றாள் சீதாலக்ஷ்மி.

குழந்தையைக் கையில் ஏந்தி, "அம்மா, ஓர் அணுக் கொடு. இந்தக் குழந்தையைப் பார், அம்மா!" என்று கெஞ்சிக் கொண்டு அங்கே கொஞ்ச தூரத்தில் வந்து நின்ற வேறொரு மோட்டார் வண்டியண்டை ஓட்டம் ஓட்டமாக அந்தப் பிச்சைக்காரி ஓடினாள்.

இராமநாதையருடைய வண்டிச் சாயல் பார்த்ததும் அதில் இருப்பவர்கள் ஒன்றும் கொடுக்க மாட்டார்கள் என்று பிச்சைக்காரி எண்ணி வேறு வண்டியண்டை போனாள். பிச்சைக்காரர்களுக்கு இது அநுபவத்தால் வரும் அறிவு. எதிலும் புத்திக்கூர்மையும் வேலைத்திறமையும் உண்டல்லவா? தூரநிற்கும் பிச்சைக்காரியைக் கூப்பிட இராமநாதையர் வெட்கப்பட்டார். ஆகையால் கொஞ்ச நேரம் சும்மா இருந்தார். அந்த வண்டியண்டை வேலை முடிந்ததும் தம்மிடம் வருவாள் என்று நினைத்தார். ஆனால் அவள் கூட்டத்தில் மறைந்துபோய்ப் பிறகு காணப்படவில்லை.

"சரி, போகலாம்!" என்றாள் சீதாலக்ஷ்மி. எட்டு நாள் கழித்து இராமநாதையரும் சீதாலக்ஷ்மியும் ஸினிமாவுக்குப் போனார்கள்.

கதையோ நளோபாக்கியானம், 'கேட்'டில் பெருங் கூட்டம். புதிய ஸ்டார் டி. கே. தனபாக்யம், 'தமயந்தி பார்ட்.'

"அடுத்த காட்சிதான் போகமுடியும்; இந்த 'ஷோ'வுக்கு டிக்கட்டுகள் முடிந்துவிட்டன" என்றார்கள்.

"வீட்டுக்குப் போய்வரலாமா?" என்றார் இராமநாதையர். சீதாலக்ஷ்மி பதில் சொல்லுவதற்குள்ளாக, "அம்மா! பிச்சை கொடு, அம்மா" என்றாள் ஒருத்தி மோட்டார் கதவண்டை.

சேலத்துப் பெண்ணு என்று பார்க்க இராமநாதையர் திரும்பிப் பார்த்தார். அவருக்கு அதே பைத்தியம். அவள் அல்ல; வேறொருத்தி.

"இங்கே வண்டி நிறுத்தினுல் பிச்சைக்காரர்கள் தொல்லை. வீட்டுக்குச் சீக்கிரமாக ஓட்டு, இராமன் நாயர்!" என்றாள் சீதாலக்ஷ்மி மோட்டாரோட்டிக்கு. அதே சமயம் ஒரு போலீஸ்காரன் தடியை வீசி அந்தப் பிச்சைக்காரியைத் துரத்தினுன்.

* * *

அன்றிரவு இராமநாதையர் கனவில் பிச்சைக்காரியைக் காண்கிறார்.

"நீ தேவானை அல்லவா? எந்த ஊர் நீ?" என்றார்.

மகிழ்ச்சியால் கண்கள் அகன்று, தன் குழந்தையைத் தழுவிக்கொண்டு, "சாமி! சாமி! நீங்கள் சேலமல்லவா?" என்றாள் பிச்சைக்காரி.

"நாயர்! இவளை முன்னுல் ஏற்றிக்கொள்" என்று மோட்டார் ஓட்டிக்குச் சொன்னார்.

வீடு போனதும், "இவள் யார்? இந்தச் சனியனை ஏன் வீட்டுக்கு அழைத்துவந்தீர்கள்?" என்றாள் மனைவி.

"நம் வீட்டில் இவளை நாம் ஏன் வேலைக்கு வைத்துக் கொள்ளக் கூடாது? சாப்பாடு போட்டு நாலு ரூபாய் சம்பளம் தரலாம்" என்றார் ஐயர்.

"நல்ல யோசனை செய்தீர்கள்! கெட்டுப் போனதுகளையெல்லாம் வீட்டில் சேர்த்துக்கொள்ளவா? நல்ல புத்திசாலித்தனந்தான்! போ, வெளியே!" என்றாள் சீதாலக்ஷ்மி.

"நான் திருடமாட்டேன் அம்மா! இட்ட வேலையெல்லாம் செய்வேன், அம்மா!" என்றாள் பிச்சைக்காரி.

"முடியாது, போ வெளியே!" என்றாள் சீதாலக்ஷ்மி.

ஒரு ரூபாய் கொடுத்தனுப்பலாம் என்று இராமநாதையர் பையை எடுக்கப் போனார். பை ஜேபியில் காணவில்லை. தேடித் தேடி அலைந்தார். பிச்சைக்காரியின் குழந்தை பலமாக அழ ஆரம்பித்தது......விழித்துக்கொண்டார்...... கனவு! அவர் குழந்தை ராதா படுக்கையில் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தது.

"நல்ல வேளை, சீதாலக்ஷ்மி உண்மையில் இவ்வளவு குரூரமா யிருக்கமாட்டாள்; கனவுதானே?" என்று இராமநாதையர் சந்தோஷப்பட்டார்.

* * *

பிறகு பல நாள் வரையில் இராமநாதையர், கடை, ரயில்வே ஸ்டேஷன், ஸினிமா எங்கேயும் பார்த்துக் கொண்டே யிருப்பார். ஆனால் அந்தப் பிச்சைக்காரியை மட்டும் அவர் காணவேயில்லை. அவள் என்ன ஆனாளோ, யாருக்குத் தெரியும்!



# விவேகம்

[எஸ். வி. வி.]

**பா**துகா எனப்பட்ட கிராமம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மூன்றரை மைல். அந்தக் கிராமத்துக்கு அரை மைல் தூரத்திலுள்ள ரோட்டு வழியாய் மோட்டார் பஸ்ஸுகள் ஓடுகின்றன. ரோட்டில் பஸ் நிற்கிற இடத்தில் இறங்கிக் கிராமத்துக்கு நடந்து போகவேண்டும்.

சுமார் நான்கு வருஷங்களுக்குமுன் பத்மநாபனும், அவனுடைய மாமா கோபாலாச்சாரியாரும் ஒருநாள் அந்தக் கிராமத்துக்குப் போவதற்காகக் காலையில் ஐந்து மணிக்கு ரயிலை விட்டு இறங்கினார்கள். வெளியில் வந்து பஸ்ஸைப் பார்த்தால் ஒரு பஸ்ஸைக்கூடக் காணோம். பஸ் ஓட்டுகிறவர்களெல்லாம் இரண்டு தினங்களாக அவர்களுடைய யஜமானர்களிடம் சம்பள விஷயமாகத் தகராறு செய்துகொண்டு வேலை நிறுத்தம் செய்து விட்டார்களாம். தகராறு முடிகிறவரையில் பஸ்ஸுகள் ஓடாவென்று தெரியவந்தது. ரயில்வே ஸ்டேஷனில் சத்தத்துக்கு ஓடும் வண்டிகளையும் காணவில்லை.

"கிராமங்களுக்குப் போவதென்றால் இதுதான் பெரிய தொல்லை. சென்னபட்டணம் ஆகாது மாமா. எந்தச் சமயத்தில் எது வேண்டுமானாலும் தயாராய் அகப்படும். எல்லோ

ரும் கிராமத்தை அடையவேண்டும் என்கிருர்களே! கிராமங்கள் அழகு இந்தமாதிரி இருந்தால் எப்படி வந்து இருக்க முடியும்?" என்ருன் பத்மநாபன்.

"பஸ் கிராமத்தைச் சேர்ந்ததல்லடா. அது பட்டணத்தைச் சேர்ந்தது. பஸ் அழகைச் சொல்வதை விட்டுவிட்டுக் கிராமத்தை ஏன் பழிக்கிருய்? பட்டணம் பட்டணம் என்கிருயே; பட்டணத்து அழகைச் சொல்லட்டுமா? அன்றைத் தினம் பதினைந்து நிமிஷங்கள் பட்டணம் பூராவும் இருட்டாய்ப் போய்விட்டதடா. எலக்டிரிக் ஸ்டேஷனில் ஏதோ கோளாறு ஏற்பட்டதாம். ஒரே வினாடியில் பட்டணத்தில் இருக்கிற எல்லா வீடுகளிலும் விளக்குகள் அணைந்து விட்டன. எல்லா ஜனங்களும் தெருவில் வந்து கத்த ஆரம்பித்து விட்டார்கள். டெலிபோன் மூலமாகக் கேட்கலாமென்ருல் டெலிபோனும் வேலை செய்யவில்லை. அதற்கும் அதே விசை தானே? கிராஸனயில் விளக்கு என்பது ஒரு வீட்டிலும் இல்லை. அன்றைத் தினம் என் மச்சினன் வீட்டில் கல்யாண விருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது விளக்கு அணைந்துவிட்டது.

"அப்புறம்?"

"அப்புறந்தான்! யுத்தம் வந்தால் எதிரி எலக்டிரிக் ஸ்டேஷன்மேல் ஒரு குண்டு போட்டு, ஜலத்தில் விஷம் கலந்துவிட்டால் பட்டணம் ஹரோஹராதான். குழாயில் ஏதாவது ஒரு பிசகு ஏற்பட்டு இரண்டு மணிநேரம் குழாய்கள் நின்றுவிட்டால் பட்டணம் படுகிற பாட்டைப் பார். விளக்கு, தண்ணீர் இவைகளைப்போல் எல்லாம் அவனவன் வீட்டில் தனித்தனியாய் இருக்குமாளுல் ஒருநாளும் ஆபத்து இல்லை. ஒருவன் வீட்டில் இல்லாவிட்டால் மற்ருெருவன் வீட்டிலிருந்து கொண்டுவரலாம். ஒரு பட்டணம் பூராவும் ஒன்றையே நம்பியிருந்தால் என்றைக்கும் மோசந்தான்.

பைகாராவிலிருந்து விசை வருகிறதாமே? அப்புறம் பட்டணங்கள் பட்டணங்களாய் இருட்டாக வேண்டியதுதான். குழாய்களும் ஒவ்வோர் ஊருக்கு ஒவ்வோர் இடத்திலிருந்து வருவது என்றில்லாமல், இராஜதானி பூராவுக்கும் மேட்டூர் அணைக்கட்டு மாதிரி கட்டி, அங்கிருந்து குழாய்கள் வைத்தால் பட்டணத்தார்கள் கதி இன்னும் வேடிக்கையாயிருக்கும். இது புது நாகரிகமடா. பஸ் இல்லை என்றாயே, அதுவும் அந்த நாகரிகத்தைச் சேர்ந்தது. பஸ் வந்து ஒரு வண்டியும் இல்லாமல் ஒழித்துவிட்டது. பஸ் நின்றுவிட்டதே, இப்பொழுது என்ன செய்கிறது? நடக்க வேண்டியதுதான். நட" என்றார்.

"உங்களுக்குப் பட்டணங்களைக் கண்டாலே பிடிக்கவில்லை" என்றான் பத்மநாபன்.

"உனக்குக் கிராமத்தைக் கண்டால் பிடிக்கவில்லை. நல்ல காற்று, நல்ல ஊற்றுஜலம், விசாலமாகப் பரந்த பூமி, விருக்ஷங்கள், பக்ஷிகள், கண்ணுக்கு ரம்மியமாய் மரகதம்போல் பச்சைப் பசேலென்று பயிர் நிறைந்த வயல்கள், இவைகளைக் கண்டால் உனக்குப் பிடிக்கவில்லை. சைனா பஜார்த் தெருவு, வால்டாக்ஸ் தெருவு, ஆனைகவுனி, மூலைக்கொத்தளம் இவைகளைக் கண்டால் உனக்கு ஆனந்தமாய் இருக்கிறது. போலீஸ் ராகவாச்சாரியார் தெருவில் குடியிருக்கிறவனுக்கு எதில் ஆனந்தம் வரும்! சரி, இப்பொழுது என்ன பண்ணுகிறது? கிளம்பு, நடக்கலாம்" என்றார் மாமா.

"இந்தப் பூட்ஸ் ஒன்று காலைக் கடிக்கிறது. அதற்காகத்தான் யோசனை செய்கிறேன்" என்றான் பத்மநாபன்.

"பூட்ஸைக் கையில் எடுத்துக்கொள்ளுகிறது; அது நம்மைச் சுமக்கிறதோ இல்லையோ? இப்பொழுது அதை நாம் சுமக்கிறது!"

"அதைக் கையில் எடுத்துக்கொண்டு போகிறதென்றால் வெட்கமாயிருக்கிறது, மாமா" என்றான் பத்மநாபன்.

“ கிராமத்தில் இருப்பவர்கள் செருப்பைக் கையில் எடுத்துக்கொண்டு போக வெட்கப்படுகிறதில்லை. நீ பட்டணத்தானே இல்லையோ! சரி. வெளியில் தெரியவொட்டாமல் அதை ஒரு துணியில் சுற்றி எடுத்துக்கொள். ஹூம், ஆகட்டும். கிளம்பு ” என்றார் மாமா.

இருவரும் கால் நடையாகக் கிளம்பினார்கள். பத்மநாபன் ஷர்ட்டு, கோட்டு, இடுப்பில் துணிக்குமேல் பெல்ட், மூக்கில் கண்ணாடி, கையில் ரிஸ்ட்வாட்ச், தலையில் ஓர் அழகான குல்லாய், காலில் பூட்ஸ் இந்தக் கோலத்துடன் விளங்கினான். அவன் மாமா கோபாலாச்சாரியார் அரையில் ஒரு வேஷ்டி, மேலுக்கு ஓர் அங்கவஸ்திரம், கையில் ஒரு மடிசஞ்சி, காதில் சுற்றிய பூணூல், இந்தக் கோலத்துடன் இருந்தார். பத்மநாபன் தங்கையினுடைய கல்யாண விஷயமாய், பிள்ளையின் தகப்பனார் பானுகா கிராமத்தில் இருப்பதால் அங்கு வந்து அவருடன் பேசி முடிவு செய்வதற்காக அவனும் அவன் மாமாவும் சென்னபட்டணத்திலிருந்து கிளம்பி வந்தார்கள். இருவரும் அந்தக் கிராமத்திற்கு இதற்குமுன் வந்ததில்லை. பத்மநாபன் எந்தக் கிராமத்துக்குமே இதற்குமுன் போனதில்லை.

பட்டணத்தில் அவன் தகப்பனார் கார்ப்பொரேஷனில் வேலையாயிருந்தார். பத்மநாபன் பட்டணத்திலேயே பிறந்து வளர்ந்தவன். அவன் பச்சையப்பன் காலேஜில் சேர்ந்து படித்து பி. ஏ., பாஸ் செய்தான். அவன் தகப்பனார் இறந்துவிட்டார். அவனுடைய தாய், தங்கை, அவன் ஆகிய மூன்று பேர்களுந்தான் வீட்டில் இருந்தார்கள். உத்தியோகத்திலிருக்கும் அநேகர்களைப்போல் அவன் தகப்பனார் இருந்த வரைக்கும் சம்பாதித்தார்; செலவு செய்தார்; கையில் காலணா இல்லாமல் இறந்துவிட்டார். சொத்து ஒன்றும் இல்லை. பிணத்தை எடுப்பதற்கே, தாய் கையில் போட்

டிருந்த இரண்டு வளையல்களை விற்றுக் காரியம் நடத்த வேண்டியிருந்தது. உத்தியோகத்தில் சம்பாதிக்கிறவர்கள் கதியே அநேகமாக இப்படித்தான்.

பத்மநாபன் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய நிலைமை வந்துவிட்டது. போதாததற்குக் கல்யாணம் செய்துகொடுக்கவேண்டிய தங்கை ஒருத்தி இருந்தாள். நான்கு வருஷங்களாக எங்கெங்கேயோ வேலைக்குப் பிரயத்தனப்பட்டுப் பார்த்தான். அங்கே வேலை கொடுக்கிறேன் என்கிறார்கள், இங்கே கொடுக்கிறேன் என்கிறார்கள் என்று மாத்திரம் சொல்லிக்கொண்டு வந்தானேயொழிய ஒரு வேலையும் கிடைக்கவில்லை. என்ன செய்வான் பாவம்! எப்படிக் குடும்பத்தைக் காப்பாற்றுகிறது? பி. ஏ., பாஸ் செய்திருக்கும் ஒருவனால், மாதம் இருபது ரூபாய் கூடவா சம்பாதிக்காமல் இருக்க முடியும் என்று சொல்லுகிறவர்கள் சொல்லலாமே ஒழிய, இருபது ரூபாய்தான் எப்படிச் சம்பாதிக்கிறது? வேலை செய்யப் பத்மநாபன் தயார்தான். வேலை எங்கே கிடைக்கிறது? வேலை அகப்படாமல் சம்பாத்தியம் இல்லாமல் இருப்பவன் படும் கஷ்டத்தைப் பிறத்தியார் சாதாரணமாய்த் தெரிந்துகொள்ள முடியாது. அவரவர்களுக்கு அம்மாதிரியான கஷ்டம் வந்தால்தான் தெரியும்.

கொஞ்சநாள், கால் அரை என்று தெரிந்த சிநேகிதர்களிடத்திலெல்லாம் பத்மநாபன் கடன் வாங்கினான். அவனுக்குக் கடன் கொடுக்கிற சிநேகிதரே இல்லாமற் போய்விட்டார்கள். இனி யாரையும் கடன் கேட்பதற்கில்லை. கடைகளில் சாமான்கள் கடனாய் வாங்கிவந்தான். ஒரு கடையில் கணக்கு அதிகமாய் ஏறிவிட்டால், அதை விட்டு, வேறு கடையில் கடன் வாங்குகிறது. இம்மாதிரி கொஞ்சநாள் காலத்தைக் கழித்தான். கடன் கொடுத்த கடைக்காரர்கள், கடன் கேட்க வீட்டிற்கு வந்தால் என்ன செய்

வான்? வீட்டில் இருந்துகொண்டே இல்லையென்று சொல்லச் சொல்லுவான். அவர்கள் தெருவில் நின்று திட்டிவிட்டுப் போவார்கள். நேருக்கு நேராய் அகப்பட்டுக்கொண்டால், "புதன்கிழமை ஓர் இடத்திலிருந்து பணம் வருகிறது; கட்டாயம் பைசல் செய்துவிடுகிறேன்" என்று புளுகுவான்.

ஆஹா! பி.ஏ. பாஸ் செய்த பிள்ளை! எவ்வளவோ நாணயமாகவும் கௌரவமாகவும் பிழைக்க வேண்டியவன்! படிப்பின் அழகு சம்பாதிக்கிறதற்கு யோக்கியதையில்லாமல் செய்ததுடன், புளுகும் புனைசுருட்டும் தலைப்பாகை மாற்றிப் போடும் செய்யும் நிலைக்குக் கொண்டுவந்து விடுகிறது! அவன் வேண்டுமென்று இந்த அற்ப வழிகளில் இறங்கினான்? இது அவன் செய்த வினையா? படிப்பு என்று எழுதினார்களே அவர்கள் செய்த கொடுமையா? பத்மநாபனுக்கு நிலைமை சகிக்கமுடியாமற் போய்விட்டது. ஆனால் படிப்பு ஒன்று இருக்கிறதோ, இல்லையோ, அதனுடைய குணம், பேச்சு மாத்திரம் மிகவும் அழகாய்க் கிளம்பும். "வேலையில்லாதவர்கள் கிராமத்துக்குப் போய் இருக்கவேண்டும் என்கிறார்களே; அது முடிகிற காரியமா? கிராமத்தில் போய் நான்குநாள் இருந்தால் அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். வாயால் ஆண்மையாய்ச் சொல்லிவிடலாம். கிராமத்தில் நம்மோடு பேசுவதற்குத் தகுதியான ஆள் ஒருவன் இருப்பானா? காந்தி சொல்லுகிறமாதிரி, காந்தி ஒருவர்தான் இருக்கலாம்" என்று இம்மாதிரியாக எந்த விஷயத்திலும் சாதக பாதகங்களைச் சுவாரசியமாய் எடுத்துச் சொல்வான். அவன் பேச்சைக் கேட்டாலே என்ன புத்திசாலி என்று தோன்றும். இம்மாதிரிப் பேசிப் பேசித்தானே நம் தேசம் இந்த நிலைமையில் இருக்கிறது!

சாப்பாட்டிற்குக் கஷ்டம். போதாதற்குத் தங்கைக்குக் கல்யாணம் செய்யவேண்டிய கஷ்டமும் வேறு. அவன் மாமா,

பெண்ணுக்கு வயதாய் விட்டதே என்று கவலைப்பட்டு, தாம் ஐந்நூறு ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி அவருக்குக் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்யச் சொன்னார். மாமா ஒரு கிராம வாசி. சொற்ப நிலங்களை வைத்துக்கொண்டு கஷ்டப்பட்டு ரொக்கத்தில் இரண்டாயிர ரூபாய் வரையில் சம்பாதித்து வைத்திருந்தார். தங்கை பெண்ணாச்சுதே, கல்யாணம் செய்யக் கஷ்டப்படுகிறார்களே என்று மனம் இரங்கி ஐந்நூறு ரூபாய் கொடுப்பதாக முன்வந்தார். அந்தக் கல்யாண விஷயமாய்த்தான் இருவரும் பாதுகா கிராமத்திற்கு வந்தார்கள்.

ரயில், ஸ்டேஷனை விட்டுக் கிளம்பும்போது மணி ஐந்தரை. காலையில் குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. இவர்கள் சென்ற ரோட்டின் இரண்டு பக்கங்களிலும் பெரிய பெரிய ஆலவிருக்ஷங்கள் ஓங்கி வளர்ந்து ஒன்றை ஒன்று கவ்விக்கொண்டிருந்தன. பன்னீர் தெளிப்பது போல் இவர்கள்மேல் பனித்துளிகள் பொழிந்து கொண்டிருந்தன. காலை நேரத்துக்குண்டான அலாதி வாசனை வீசிக்கொண்டிருந்தது. அந்த வாசனையை என்ன வாசனையென்று சொல்லுகிறது? காலைவேளை வாசனைதான் அது. அந்த வேளையில் வெளிக்கிளம்பிப் போகிறவர்களுக்குத்தான் அது தெரியும். ஆலமரங்களில் பக்ஷிகள் கலகலவென்று சப்தம் செய்துகொண்டிருந்தன. வழி நடப்பது உற்சாகமாக இருப்பதாகத் தன்னை அறியாமலே பத்மநாபன் உணர்ந்தான். குளிர்ந்த காற்று மேலே வீசவும், பக்ஷிகளின் தொனி செவிக்கு இனிமையாய் இருக்கவும், சுற்றுப் பக்கங்களில் வயல்கள் பசுமையாய்க் கண்ணுக்கு ஓர் ஆனந்தத்தைத் தரவும், பத்மநாபன் மனத்திற்குச் சொல்ல இயலாத ஒரு குதூகலம் ஏற்பட்டு, "இந்த இடங்களெல்லாம் எவ்வளவு அழகாய் இருக்கின்றன மாமா!" என்றான்.

"உனக்குக் கூடத் தெரிகிறதாடா? பி. ஏ., பாஸ் பண்ணினவர்களுக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாதே" என்றார் மாமா.

வழியில் ரோட்டில் பாலம் கட்டி, பாலத்துக்கு அடியில் ஒரு கால்வாய் போய்க் கொண்டிருந்தது. தண்ணீருக்கடியில் இருந்த மணலும், அதில் விளையாடிக் கொண்டிருந்த மீன்களும் பளபளவென்று தெரியும்படியாய் ஜலம் பரிசுத்தமாய்க் கால்வாயில் ஓடிக்கொண்டிருந்தது.

"இவ்விடத்தில் பல் தேய்த்துவிட்டுப் போகலாம்" என்றார் மாமா.

பத்மநாபன் தண்ணீரில் கைவிட்டதும் ரேகைகளுள்படக் கைமுழுதும் கண்ணாடியில் தெரிவதுபோல் தெரியவே, சிறிய குழந்தைகள் மாதிரித் தண்ணீரில் கையைவிட்டு அளைந்தான். சிறு மீன்களெல்லாம் மிரண்டு ஓடுவதைக் கண்டு அவைகளை இன்னும் விரட்டி அவைகளுடன் விளையாடினான்.

"கால்வாய் ஜலம் எவ்வளவு தாவள்ளியமா யிருக்கிறது, பார்த்தீர்களா மாமா!" என்றான்.

"பாவம்! இந்தமாதிரி ஜலத்தை நீ எங்கே பார்த்திருக்கிறாய்!" என்றார் மாமா.

"இந்த அழகையெல்லாம் பார்த்தால் இங்கேயே இருந்துவிடலாமா என்று இருக்கிறது மாமா" என்றான்.

"இருந்து விடேன். பட்டணத்தில் சம்பாத்தியம் என்ன முழுகிப்போகிறது? ஆனால், உனக்கு வேண்டியவை யெல்லாம் இங்கே எங்கே இருக்கின்றன? காபி ஹோட்டல் இருக்கிறதா? காலையில் ஐந்து மணிக்கெல்லாம் இட்டலி சாம்பார் அகப்படுமா? ஐஸ் போட்ட கிரஷ் அகப்படுமா? நீ போட்டுக்கொள்ளுகிற காலர், நெக்டை இந்த அழகுகளை யெல்லாம் பார்க்கிறதற்கு இங்கே எந்த மனுஷ்யர்கள் இருக்கிறார்கள்?"

"பரிஹாஸம் பண்ணுகிறீர்களோ மாமா?"

"பரிஹாஸம் என்னடா? வாஸ்தவத்தைத்தான் சொல்லுகிறேன்" என்றார் மாமா.

பல் தேய்த்துக்கொண்டு, ரோட்டிலேயே கொஞ்சதூரம் போனதும் பின்னும் அடர்த்தியான ஆலமரச் சாலை ஒன்று இருந்தது. அப்பொழுது இன்னும் சரியாக விடியவில்லை. அந்தச் சாலைக்குக் கொஞ்ச தூரத்தில் போய்க்கொண்டிருக்கும்பொழுதே பெண் பிள்ளைகள் குரல் கேட்டது. அதில் ஒருத்தி ஏதோ ஒரு பாட்டைச் சொல்வதும், மற்றவர்கள் அதைக் கற்றுக்கொள்ளுகிறதும் காதில் விழுந்தன. கிட்ட நெருங்கினதும் சுமங்கிலிகளும், அமங்கிலிகளும், சிறு பெண்களும், வயது வந்தவர்களுமாகச் சுமார் இருபது பேர்கள் ஆலமரங்களின்கீழ் உதிர்ந்துவிழும் பழுத்த இலைகளைப் பொறுக்கிக் கொண்டே கிருஷ்ணனுடைய லீலைகளைப் பாடமாக ஒருத்தி சொல்ல மற்றவர்கள் கற்றுக்கொண் டிருந்தார்கள்.

"பொல்லாத கோபிமா ரம்மா—அவர்கள்
இல்லாத வார்த்தைகளைச் சொல்லுரா ரம்மா—நீ
நம்பாதே நம்பாதே யம்மா......"

என்ற பாட்டுக் காதில் விழுந்தது. இருபது பெண் பிள்ளைகள் சேர்ந்து பாடுவது ஒரே சுரமாய்க் காதில் விழவே, பத்மநாபன் மனத்தில் பெருத்த ஆனந்தம் உண்டாயிற்று. அவனும் அவன் மாமாவும் ரோட்டில் வருவதைக் கண்டு, "யாரோ புருஷர் வருகிறாற்போல் இருக்கிறதடி" என்றாள் ஒருத்தி. உடனே பாட்டு நின்றுவிட்டது. ஒவ்வொருத்தியின் மடியிலும் கோணிப்பை கட்டித் தொங்கவிட்டமாதிரி நிறைய ஆலம் பழுப்புகள் இருந்தன. அவர்களுக்கெல்லாம் பாட்டுக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தவள் பதினைந்து வயது இருக்கும் ஒரு பெண். அவள் குரல் மனத்தை அபகரிக்கும்

படியாக மதுரமாயிருந்தது. அவளுடைய அழகு பத்மநாபன் மனத்தை உடனே கொள்ளைகொண்டது. அவளும் இலை பொறுக்குவதை விட்டு இவர்களை உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றாள். இவர்களையென்றால் பத்மநாபனை; சிறு பெண் பார்வை கிழவர்பேரிலா போகும்!

பத்மநாபனும் மாமாவும் கொஞ்சதூரம் போனபிறகு இலை பொறுக்கிக் கொண்டிருந்தவர்கள் பாட்டை நிறுத்தி விட்டுப் பேசிக்கொண்டே பழுப்புக்களைப் பொறுக்கினார்கள்.

"போகிறவர்கள் யாரோ தெரியவில்லை. நம்மவர்களைப் போல இருக்கிறது. நம் ஊருக்குத்தான் போகிறார்களோ?" என்றாள் ஒருத்தி.

"யாரோ தெரியவில்லை. புதியவர்களா யிருக்கிறார்கள். அந்தப் பிள்ளை லக்ஷணமா யிருக்கிறான். முகத்தில் நல்ல களை. கல்யாணமாகாத பிள்ளையாயிருந்தால் நம் அலமுவைக் கொடுத்துவிடலாம். என்னடி சொல்லுகிறாய் அலமு?"

"போ, அம்மாமி."

"போ என்னடி? யாரையாவது கல்யாணம் பண்ணிக் கொண்டுதானே ஆகணும்? அந்தப் பிள்ளை அழகாய்த்தான் இருக்கிறான். கூடப் போகிற கிழவர் அப்பாபோல் இருக்கிறது."

"அலமுவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு போவதற்குத்தான் வந்திருக்கிறாரோ, என்னவோ!"

"வேறென்ன? இருங்கோ அம்மாமி" என்று சாஹசம் செய்தாள் அந்தப் பெண். அலமு என்றது, முதலில் கிருஷ்ண லீலைப் பாட்டுப் பாடிய பதினைந்து வயதுள்ள பெண்ணைத் தான். அவர்கள் பேசிக்கொண்டது பத்மநாபன் காதில் விழுந்தது. மாமா கேட்டுக்கொண்டிருந்தாரோ இல்லையோ தெரியவில்லை. காலையில் அடங்கிய குரலில் சுப்ரபாதம் சொல்லிக் கொண்டே போய்க்கொண்டிருந்தார்.

"அலமுவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு போவதற்குக் கசக்கிறதா என்ன? அவ்வளவு அழகுள்ளவளும் புத்திசாலியும் யார் இருக்கிறார்கள்? இன்னும் வயசு பதினைந்து ஆகவில்லை. அவள் கையால் ஆயிர ரூபாய் சம்பாதித்து வைத்திருக்கிறாளே!"

"ஆயிர ரூபாய் எங்கே மாமி? ஆயிரம் சேருவதற்கு இன்னும் மூன்று வருஷங்களாவது ஆகும்" என்றாள் அலமு.

"நீ நடுவில் அந்தப் பணத்தில் எடுத்து வளை, சங்கிலி பண்ணிக்கொண்டாய். இல்லாவிட்டால், இப்போது ஆயிர ரூபாய் இராதா?"

"எப்படி இருக்கும் மாமி? இப்போது ஏழு வருஷங்களாய் இலை தைக்கிறேன். மாசம் நாற்பது கட்டுக்களே ஆகின்றன என்று வைத்துக்கொள்ளுங்கள். நாற்பத்துக்கால் பத்து ரூபாய் ஆச்சு. அதில் துணி, ரவிக்கை என்று இருபது ரூபாய்க்கு வாங்கிக்கொண்டு விடுவேன். வருஷத்தில் நூறு ரூபாய்தானே ஆகிறது? ஏழு வருஷத்தில் ஆயிர ரூபாய் என்னமா ஆய்விடும்?"

"அது என்னவோ அம்மா, உன்னைப் பண்ணிக்கொள்கிறவன் அதிர்ஷ்டசாலிதான்."

இதற்குள் மாமா கொஞ்சதூரம் போய் நின்றுகொண்டு, "ஏண்டா பின் தங்கிவிட்டாய். வாயேண்டா" என்று உரக்கக் கத்தினார். பத்மநாபன் எழுந்து போனான்.

"ஏன் மாமா, அங்கே இலை பொறுக்கிக்கொண்டிருந்தவர்கள் எல்லோரும் பிராம்மணப் பொம்மனாட்டிகளாட்டமாயிருக்கே. அவாள்கூட இப்படிக் கண்டபடி, வெளியில் இலைக்கென்றும் மற்றொன்றுக்கென்றும் வருகிறார்களா என்ன?" என்றான் பத்மநாபன்.

"போகாமல் என்ன? கொஞ்சம் நாகரிகம் கொண்டாட ஆரம்பித்தால்தான் பெண்களை உள்ளே போட்டுப் பூட்டி

வைக்கிறார்கள். கிராமங்களிலெல்லாம் சாதாரணமாய்ப் பொம்மனாட்டிகள் இரண்டு மூன்று பேராய்ச் சேர்ந்து குளத்துக்குப் போகிறது, கோயிலுக்குப் போகிறது என்று தனியாய்ப் போய்க்கொண்டுதான் இருக்கிறார்கள். அந்தப் பொம்மனாட்டிகள் இருக்கிறார்களே, அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ரொக்கம் ஆயிர ரூபாய்க்குக் குறையாது. காலையில் இதோ இலை பொறுக்கிக்கொண்டு போகிறார்களே; இதை முதலில் அப்படியே உலர்த்துவார்கள். ராத்திரி பனியில் இருந்த பிறகு, இலைகள் வணங்கி இருக்கும்போது எடுத்து அடுக்கிவிடுவார்கள். இப்பொழுது வீட்டுக்குப் போனவுடன் வீட்டு வேலையை முடித்துக்கொண்டு எல்லோரும் ஓர் இடத்தில் சேர்ந்து இலை தைக்க உட்காருவார்கள். சாயந்திரம் ஐந்துமணி வரைக்கும் தைப்பார்கள். யாராவது ஒரு பெண் இராமாயணமோ வேறு ஏதாவது கதையோ படித்துக்கொண்டிருப்பாள். அதைக் கேட்டுக்கொண்டே இலை தைத்துக்கொண்டிருப்பார்கள். பட்டணத்திலிருந்து கடைக்காரன் வந்து நூறு நூறு கட்டுகளாக இலைக்கு வாங்கிக் கொண்டு போய்விடுவான். எருமுட்டை முதலியவைகளை விற்றே ஒவ்வொரு பொம்மனாட்டியும் மாதம் இருபது ரூபாய் சம்பாதிப்பாள்........"

"பி. ஏ., பாஸ் செய்துவிட்டு நீ காலணா சம்பாதிக்க முடியவில்லையே என்று என்னைக் கேட்கிறீர்களோ மாமா?" என்றான் பத்மநாபன் சிரித்துக்கொண்டே.

"நான் கேட்கவில்லை. நீயேதான் கேட்டுக் கொள்ளுகிறாயே!" என்றார் மாமா.

பத்மநாபன் மனத்தில் என்ன என்னவோ புதிய புதிய யோசனைகளெல்லாம் கிளம்பின. என்ன என்னவோ தீர்மானங்களையெல்லாம் செய்தான். அவன் யோசனைகளின் குறுக்கே அலமு அடிக்கடி ஓடிக்கொண்டிருந்தாள். "அலமு கிராமப்

பெண்ணானதனாலே நம் யோசனைக்கு ஒத்தமாதிரி இருப்பாள் பட்டணவாசப் பெண்ணாயிருந்தால் பிய்த்துக்கொண்டு ஓடிவிடுவாள்" என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

இருவரும் போகிறவழியில் கிராமத்தைச் சேர்ந்தாற் போல் ஒரு தோட்டம் இருந்தது. அதில் நிறையக் கத்திரி, வெண்டை, புடல், பாகல், கல்யாணப் பூசனி இவைகளெல்லாம் போட்டிருந்தன. தோட்டத்தைச் சுற்றி வேலிபோட்டு ரோட்டுப் பக்கம் திறந்த வழி இருந்தது. அங்கே கூடைக்காரிகள் அநேகம் பேர்கள் கறிகாய் வாங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு பிராம்மணர் தூக்குக்கோலால் நிறுத்துக் கூடைகளில் கொட்டிப் பணம் வாங்கிக்கொண்டிருந்தார். கூடைகளையெல்லாம் தூக்கிக்கொண்டு கூடைக்காரிகள் போய்விட்டார்கள். அங்கிருந்த பிராம்மணர் கீழே வைத்திருந்த பணத்தைத் திரட்டி எடுத்துக் கொண்டெழுந்து, "ஸ்வாமிகள் எந்த ஊரோ?" என்று பத்மநாபனையும் மாமாவையும் கேட்டார். கிராமத்தில் யார் வந்தாலும் இப்படித்தான் விசாரிப்பார்கள். இவர்கள் தங்கள் விருத்தாந்தத்தையும், வந்த விஷயத்தையும் சொன்னார்கள். "அந்தப்பிள்ளை நல்ல பிள்ளை; தகப்பனாரும் பரம சாது. பெண்ணை நன்றாக வைத்துக்கொண்டிருப்பார்கள். கட்டாயம் பண்ணலாம்" என்று சொன்னார்.

பத்மநாபன் தோட்டத்துக்குள் போய்ச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து அந்தப் பிராம்மணரது தோட்டம் எத்தனை ஏகரா விஸ்தீரணமென்றும், தோட்டப் பயிர் லாபகரந்தானா, செலவு மாதம் என்ன ஆகிறது என்றும் இம்மாதிரி விசாரித்தான். "இதோ விற்றது பாருங்களேன். இன்றைக்கு இரண்டரை ரூபாய் அகப்பட்டது. ஒவ்வொரு நாளைக்கு மூன்றும் அகப்படும்; நான்கும் அகப்படும். ஒவ்வொரு தினம் ஒன்றுமில்லாமலும் போய்விடும். எல்லாம் நாம் படுகிற பாட்டின்பேரில் இருக்கிறது" என்றார்.

பத்மநாபன் மீண்டும் யோசனையில் ஆழ்ந்தான். சுபாவத்தில் படித்த நல்ல புத்திசாலியானதால் அவன் யோசனைகளெல்லாம் சுவாரஸ்யமான கேள்விகளின் ரூபமாக வெளிக்கிளம்பின.

"என் மாமா, சாப்பாட்டுக்கில்லை என்று எவனெவனையோ நச்சிப்போய் வேலைக்காக வியர்த்தமாய் உருகுகிறேனே; கீழே குனிந்து பூமியைப் பார்த்துச் சாப்பாடு கொடு என்றால் கொடுக்குமா இல்லையா?"

"கொடுக்கும்."

"ஒரு புடல் விதையை நட்டால் இருநூறு புடலங்காய் கொடுக்கிறேனென்று பூமி சொல்லுகிறதா இல்லையா?"

"சொல்லுகிறது. அதேமாதிரி தரவும் தருகிறது."

"பூமி எப்பொழுதாவது 'நோ வேகன்ஸி', வேலை காலியில்லை என்று சொல்லிவிடுமோ?"

"சொல்லாது."

"மகா தயாளுவாய்ப் பூமி தன் பொக்கிஷத்தைத் திறந்து வைத்துக்கொண்டு மக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக் காத்துக்கொண்டிருக்கிறபொழுது, அந்தப் பொக்கிஷத்தை விட்டுவிட்டு, வேலை அகப்படவில்லை, சாப்பாடு அகப்படவில்லை என்று ஒருவன் சொன்னால் அவன் முட்டாளா? இல்லையா?"

"சர்வ முட்டாள்."

"நானும் அந்தச் சர்வமுட்டாளில் சேர்ந்தவன்தானே என்கிறீர்களோ?"

"உனக்குத்தான் விவேகம் உதித்துவிட்டதே. நீ எப்படி முட்டாள் ஆவாய்?" என்று மாமா சிரித்தார். பத்மநாபனும் சிரித்தான்.

# சோதனை

[க. சந்தானம், எம். ஏ., பி. எல்.]

இரவு ஒன்பது மணி, ஜம்புநாதையர் ஸாவகாசமாகத் தினசரிப் பத்திரிகை படித்துக்கொண்டிருந்தார். எட்டு மணிக்கு ஆரம்பித்து மூன்றாம் பக்கத்திற்கு வந்திருந்தார். அவருடைய இரண்டு பிள்ளைகளும் பெண்ணும் பக்கத்தில் ரேடியோவைத் திருப்பி வைத்துக்கொண்டு 'மாஞ்செஸ்டர் கிரிக்கெட் டெஸ்ட்' விளையாட்டைப்பற்றிச் செய்யப்படும் வியாக்கியானத்தை மிகவும் ஸ்வாரஸ்யத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களில் கோபாலன்தான் சிறியவன். அவனுக்கு எட்டு வயது. பேசுவது புரியாவிட்டாலும், ஹாபுட், பில்லார் என்று ஏதாவது ஒரு பெயர் கேட்டவுடன் தன் அண்ணன் பாலசுப்பிரமணியனுடைய சட்டையை இழுத்து, "பாலு என்ன சொன்னான்?" என்று கேட்பான். பாலுவுக்குக் கோபம் பொங்கும். கையை ஓங்குவான். ஆனால் மனோரமா அவனைத் தடுத்து, "சொன்னால் என்ன மோசம் போகும்? குழந்தைதானே அவன்?" என்று பாலுவைச் சொல்லவைப்பாள். தனக்கும் கேட்க வேண்டும் என்ற ஆசை. ஆனால், மூன்றாவது பாரத்தில் படித்துக்கொண்டு, வகுப்பில் முதலில் இருக்கும் தனக்கு

ரேடியோவில் பேசுவது புரியவில்லை என்று சொல்லுவது மனோரமாவுக்கு வெட்கமாயிருந்தது.

அப்பொழுது அவர்களுடைய தாய் வனஜாக்ஷி தன் வீட்டு வேலைகளை முடித்துக்கொண்டு அங்கே வந்தாள். வேலையினால் அலுப்பு. மற்ற எல்லோரும் சொகுசாக வீண் காலம் கழிப்பதைப் பார்த்து அவளுக்கு ஆத்திரம் உண்டாயிற்று. "உங்களுக்கெல்லாம் வேறு வேலையில்லை போலிருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் இந்த இழவு கிரிக்கெட்தானா? காலம் மிகவும் கெட்டுப்போய்விட்டது. பிள்ளைகள் தான் இப்படி இருக்கிறார்களென்றால், பன்னிரண்டு வயதுப் பெண்ணுக்காவது புத்தியிருக்க வேண்டாமா?" என்று முணு முணுத்துக்கொண்டே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள். குழந்தைகளுக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. ஆனால் வாய்விட்டுச் சிரிக்கவும் பயம். முகத்தைத் திருப்பிக் கொண்டு வாயில் துணியை அடைத்துக்கொண்டார்கள்.

ஜம்புநாதையர் பத்திரிகையைக் கீழே வைத்தார். புன் சிரிப்புடன், "என்ன, உன் வேலை இவ்வளவு சீக்கிரம் முடிந்து விட்டதா?" என்றார்.

"நீங்கள் பத்திரிகை படிப்பதுபோல் நான் காரியம் செய்துகொண்டிருந்தால் பொழுது விடிந்துவிடும்!"

ஜம்புநாதையர் சிரிப்பை அடக்கிக்கொண்டு வேறு பல வீட்டு விஷயங்களைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். அப்படிக் கால்மணி நேரம் பேசினால்தான் வனஜாக்ஷி சாந்தமடைவாள் என்று அவருக்குத் தெரியும். வீட்டு வேலை செய்வதற்கு இதுதான் அவர் கொடுக்கும் உண்மையான கூலி.

அப்படிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது வாசற் கதவை இடித்து, "தந்தி" என்று தந்திச் சேவகன் கத்தினான். எல்லோரும் திடுக்கிட்டனர். ரேடியோவை மூடி விட்டு, பாலு ஓடிப்போய்த் தந்தியை வாங்கி வந்து கன்

தகப்பனார் கையில் கொடுத்தான். அதை ஐம்புநாதையர் பிரித்துப் பார்த்துவிட்டுத் தம் மனைவியிடம் கொடுத்தார்.

"சுந்தரி இன்று காலை மரணமடைந்தாள். சாரதாவை எடுத்துப் போங்கள்" என்று அதில் எழுதியிருந்தது.

ஐம்புநாதையரும் வனஜாக்ஷியும் ஒன்றும் பேசாமல் ஒருவரை ஒருவர் பார்த்தவண்ணமாகவே இருந்தனர். பாலு தந்தியை எப்படியோ பார்த்துவிட்டு, தன் தங்கையை யும் தம்பியையும் அழைத்துக் கொண்டுபோய்ப் படுக்க வைத் தான். படுக்கையில் அவர்கள் சிறிதுநேரம் காதோடு காது வைத்து மெள்ளப் பேசிக்கொண்டே தூங்கிவிட்டார்கள்.

## 2

சுந்தரி ஐம்புநாதையரின் ஒரே சகோதரி. இருவரும் பாலியத்தில் வெகு அந்நியோன்யமாக வளர்ந்துவந்தார்கள். ஐம்புநாதையர் காலேஜில் படிக்கும்பொழுதே அவர்களுடைய தகப்பனார் இறந்துவிட்டார். அப்பொழுது சுந்தரிக்குப் பதினைந்து வயதாகியிருந்தது. தம் பிதுரார்ஜித சொத்தில் பெரும் பாகத்தை விற்று அவளை டாக்டர் பரீக்ஷை தேறி யிருந்த ஒரு நல்ல பையனுக்குக் கல்யாணம் செய்துவைத்தார் ஐம்புநாதையர். அவன் சேலத்தில் தொழில் ஆரம்பித்து வெகு விரைவில் நன்றாகச் சம்பாதிக்க ஆரம்பித்தான். ஐம்பு நாதையருக்குப் பரீக்ஷை தேறியதும் மாதம் எண்பது ரூபாய் சம்பளத்தில் சர்க்கார் உத்தியோகம் கிடைத்தது; வனஜாக்ஷி யும் கிடைத்தாள். இரு குடும்பங்களும் செழித்தோங்கின.

தெய்வத்துக்கு இது சகிக்கவில்லை போலும்! ஒரு ரண சிகிச்சை செய்யும்பொழுது சுந்தரியின் கணவன் தன் கையில் வெட்டிக்கொண்டான்; இரண்டு நாட்களில் ஜன்னி கண்டு இறந்துபோனான். அப்பொழுது சாரதாவுக்கு இரண்டு வயது. ஐம்புநாதையரும் அவர் தாயும் போய் அவர்கள் இருவரையும்

அழைத்துக்கொண்டு சென்னைக்கு வந்தார்கள். அடுத்த ஆறு மாத காலம் எப்படிப் போயிற்றென்று சுந்தரிக்குப் பிரக்ஞையில்லை. ஆனால், எந்தத் துக்கத்திற்கும் எல்லையுண்டு. சாரதா தன் தகப்பனாரை அடியோடு மறந்து, மாமாவின் குழந்தைகளோடு சிரித்து விளையாடுவதைப் பார்த்துத் தானும் சிறிது சமாதானத்தை அடைந்தாள். தன் கிழத்தாய்க்குச் சுசுருஷை செய்து தமையனுக்கு உதவிபுரிய விரும்பினாள். ஆனால், அவளுடைய துரதிர்ஷ்டம் தீரவில்லை. கணவன் இறந்த ஒரு வருஷத்திற்குள் தாயும் இறந்துவிட்டாள். அதற்குப் பிறகு தமையனுடன் இருக்க அவளுக்குப் பிடிக்கவில்லை. சாரதாவை அழைத்துக்கொண்டு தன்னுடைய பூர்விகக் கிராமத்திற்குப் போய்விட்டாள். ஜம்புநாதையர் அவளுக்கு மாதம் பத்து ரூபாய் அனுப்பிவந்தார்.

மறுபடியும் மூன்று வருஷத்திற்குள் இந்த விபத்து நேரிட்டதை நினைத்து ஜம்புநாதையர் தம் விதியை நொந்து புலம்பினார். வனஜாக்ஷிக்கும் வருத்தந்தான். சுந்தரியினிடம் அவளுக்கு மனஸ்தாபம் நேரிடுவதற்கு யாதொரு காரணமும் இல்லை. ஆயினும், அவளிடம் சிநேகமும் இருக்கவில்லை. தன் கணவனுக்குச் சுந்தரியின்மேல் இருந்த பிரியத்தினால் சிறிது அசூயை ஏற்பட்டிருக்கலாம். வீட்டுச் செலவுக்குப் பணம் போதாதபொழுது, சுந்தரிக்கு அனுப்பும் பத்து ரூபாய் இருந்தால் எவ்வளவு சௌகரியமாயிருக்குமென்றும் நினைத்திருக்கலாம். காரணம் என்னவாக இருப்பினும், சுந்தரியின் மரணத்தால் அவளுக்குத் துக்கத்தைவிடக் கவலையே அதிகமாக இருந்தது.

தன் கணவரது துக்க வார்த்தைகளை மௌனமாகச் சிறிது நேரம் கேட்டிருந்துவிட்டு, "சாரதாவை என்ன செய்வது?" என்று கேட்டாள்.

"ஏன்? அவள் நம் குழந்தைகளுடன் வளர்வதில் என்ன கஷ்டம்?" என்று கோபத்துடன் கேட்டார் ஜம்பு நாதையர். வனஜாக்ஷி ஒன்றும் பேசவில்லை.

சிறிது நேரம் கழித்து, "உன் மனத்திலுள்ளதைச் சொல். சாரதாவை என்ன செய்ய வேண்டுமென்பது உன் யோசனை?" என்று கேட்டார்.

ஈன சுரத்தில் அவள், "உங்கள் இஷ்டம்போல் செய்யலாம். அந்தக் குழந்தையையும் வித்தியாசம் பாராட்டாமல் நம் குழந்தையைப்போல் நடத்தவேண்டுமே என்ற கவலை தான். கொஞ்சம் ஏமாந்துபோனால், அது நம்மை வெறுக்க ஆரம்பிக்கும். நாம் அதை ஒரு ஹாஸ்டலில் விட்டுப் படிக்க வைக்கக்கூடாதா என்று எண்ணினேன். உங்களுக்கு அது இஷ்டமில்லையானால், எனக்குச் சாரதா இங்கே இருப்பதில் ஆட்சேபம் இல்லை" என்றாள்.

ஜம்புநாதையருக்குத் துக்கம் ஒரு பக்கம், கோபம் ஒரு பக்கம். அன்று இரவே தம் ஊருக்குப் புறப்பட்டார். ஐந்து வயதுள்ள சாரதாவுக்கு அம்மா செத்துப்போனதும், கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டுப் போனதுபோல் தோன் றிற்று. இரண்டுமணி நேரம் அழுதாள். பிறகு அயர்ந்து தூங்கிவிட்டாள். காலையில் எழுந்திருந்ததும் மாமாவைக் கண்டு ஓடிவந்து கட்டிக்கொண்டாள். ஜம்புநாதையர் அழு வதைக் கண்டு தானும் அழுதாள். தம் தங்கையின் கர்மங் களை முடித்துக்கொண்டு ஜம்புநாதையர் சாரதாவுடன் சென்னை திரும்பினார்.

## 3

சாரதா வந்து சில நாட்களுக்குள் ஜம்புநாதையர் வீட்டில் புதியதோர் ஜோதி வந்தது போலாயிற்று. ஜம்புநா தையரை அவள் சில நாள் மாமாவென்று கூப்பிட்டாள்.

ஆனால், பிறர் அப்பாவென்று அழைப்பதைக் கண்டு தானும் அப்படியே சொல்லத் தொடங்கினாள். வனஜாக்ஷியையோ, வந்த நாள்முதல் அம்மாவென்றே கூப்பிட்டாள். ஒரு நாள் அடுத்த வீட்டுக்காரி வந்து, "உன் அம்மாமி எங்கே?" என்று கேட்டது சாரதாவுக்கு வேடிக்கையாகத் தோன்றிற்று. வனஜாக்ஷியிடம் போய், "இந்த வீட்டில் அம்மாமி யார்?" என்று கேட்கவே, இதைப்பற்றி எல்லோரும் சொல்லிச் சொல்லி ஒரு வாரம் சிரித்தனர்.

முதல் முதலில் சாரதா என் குழந்தையல்ல என்று வனஜாக்ஷி தன் மனத்திற்குள்ளே சொல்லிக் கொண்டாள். ஆனால், கண்ணில் அன்பு ததும்ப, சாரதா தன்னை அம்மா வென்று அழைத்து மடிமேல் ஏறி உட்காரும்பொழுது, அவளுக்கு என்றும் இல்லாத ஆனந்தம் உண்டாகும். ஐம்பு நாதையர் ஆபிசிலிருந்து திரும்பும்பொழுது முதலில் சாரதா விடந்தான் ஏதாவது பழமோ, பூவோ கொடுப்பார். சிலவேளை கோபுவுக்கு இது பிடிப்பதில்லை. எல்லோருக்கும் சிறியவ னாக ராஜ்யாதிகாரம் பண்ணின தன்நிலைமை போய்விட்டதைக் கண்டு வருத்தப்பட்டான். ஆனால் சாரதா புஸ்தகத்தை எடுத்துவந்து எனக்குப் பொம்மை காட்டு என்று சொல்லும் பொழுது அவன் ஆனந்த பரவசனாவான். சாரதாவுக்கு ஒரு பட்டுப் பாவாடை தைத்துவந்தபொழுது மனோரமாவுக்குக் கொஞ்சம் அசூயை ஏற்பட்டது. ஆனால், சாரதா அதைக் கட்டிக்கொண்டு மனோரமாவிடம் ஓடிவந்து, "அக்கா, உன் கல்யாணத்தில் இதைக் கட்டிக்கொண்டு நானும் உன்னுடன் மோட்டாரில் உட்காருவேன்" என்று சொன்னபோது, மனோரமாவிடம் பணமிருந்தால் கடையிலிருந்த பட்டையெல் லாம் வாங்கிச் சாரதாவுக்குக் கொடுத்திருப்பாள். பாலுவோ, சாரதாவைத் தனக்குப் பிரத்தியேக சொந்தக் குழந்தையாக எண்ணினான்.

இவ்வாறு மூன்று வருஷ காலம் சாரதா நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தாள். அவ்வீட்டிற்கு வந்த விருந்தாளிகள் எல்லோரும் அவர்களுடைய கடைசிக் குழந்தையின் அழகையும், புத்தியையும் புகழும்பொழுது, ஐம்புநாதையரும் வனஜாக்ஷியும் சாரதாவின் வரலாற்றைக் கூறுவதில்லை; சாரதாவின் மனம் கலங்குமோவென்று மௌனமாயிருப்பார்கள். உண்மையில் சாரதா எவ்விதத்திலும் தங்களுடைய குழந்தையாக ஆகிவிட்டதால், பிறர் அப்படி நினைப்பதில் என்ன நஷ்டம் என்று எண்ணுவார்கள்.

## 4

ஒருநாள் சாரதா பள்ளிக்கூடம் போய்த் திரும்பி வருகையில் அவள் முகம் சோர்ந்திருந்தது. வனஜாக்ஷி கவலையுடன் விசாரிக்க, "தலை வலிக்கிறது" என்றாள். அன்றிரவு கடுமையான ஜுரம் வந்துவிட்டது. உடனே டாக்டரைக் கூப்பிட்டு வந்தார்கள். அவர், அது கொடிய ஜுரம் என்றும், மூன்றுநாள் சமாளித்துவிட்டால் பிறகு கவலையில்லை யென்றும் சொல்லி மருந்து கொடுத்துவிட்டுப் போனார்.

இரண்டாவதுநாள், ஜுரம் விஷம்போல் ஏறிக்கொண்டே போயிற்று. ஐம்புநாதையர் மிக்க கவலையுடன் தம் ஆபீஸுக்குப் போனார். வனஜாக்ஷி சாரதாவுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு பலவாறு சிந்திக்கலானாள். ஏன் இப்படித் திடீரென்று சாரதா தன் வீட்டிற்கு வரவேண்டும்? வந்ததும் தன் மனத்தைக் கொள்ளை கொள்ளவேண்டும்? கடைசியில் இந்தச் சோதனைக்கு ஆளாக்க வேண்டும்? தன் இஷ்ட தேவதையான பரமேசுவரிக்குப் பல பிரார்த்தனைகள் செய்து கொண்டாள்.

அன்றிரவு ஜம்புநாதையரும், வனஜாக்ஷியும் வெகுநேரம் சாரதாவின் கட்டிலுக்குப் பக்கத்தில் சாய்வு நாற்காலிகளில் உட்கார்ந்துகொண்டிருந்தனர். ஒரு மணிக்கு ஒருதரம் தெர்மாமீட்டர் வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். 105 டிகிரியில் ஜுரம் ஒரே நிலையில் இருந்தது. வனஜாக்ஷி களைப்பினால் நாற்காலியிலே சிறிது அயர்ந்துவிட்டாள். ஆனால் அரைமணி நேரத்திற்குள் திடீரென்று, "ஐயோ" என்று அலறிக்கொண்டு எழுந்திருந்தாள். ஜம்புநாதையர் உடனே அவளைப் பிடித்துக்கொண்டு, "என்ன?" என்று கேட்டார். வனஜாக்ஷியின் கண்கள் வெறிபிடித்தவை போல் காணப்பட்டன. தன் கணவர் கையைப் பிடித்து அடுத்த அறைக்கு இழுத்துக் கொண்டு போனாள். கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் ஓட, "நான் என்ன செய்வேன்! இந்தப் பாரத்தை நான் எப்படிப் பொறுப்பேன்!" என்று விம்மி விம்மி அழுதாள்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு தான் கண்ட கனவைக் கூறினாள்; பரமேசுவரி பிரசன்னமாகி, "நீ உன் குழந்தைகளில் ஒன்றைக் கொடுப்பாயானால், சாரதாவுக்கு உயிர்ப் பிச்சை கொடுப்பேன்; பதில் சொல்ல அறுபது நாழிகை நேரம் கொடுக்கிறேன்" என்று சொன்னதைக் கேட்டு விழித்ததாகச் சொன்னாள்.

ஜம்புநாதையர் திகிலடைந்தார். அவருக்குச் சொப்பனங்களில் நம்பிக்கை இல்லை. ஆனால் இப்பொழுது மன நடுக்கத்தைத் தடுக்க முடியவில்லை. "இதென்ன பைத்தியக்காரத்தனம்! சாரதாவை நம் குழந்தைகளைக் காட்டிலும் அன்பாகவே வளர்த்தோம். ஆயினும் ஒரு குழந்தைக்குப் பதிலாக மற்றொன்றைப் பலி கொடுக்க நமக்கு என்ன உரிமை? விதியின் முடிவை நாம் பொறுமையுடன் ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை" என்றார்.

வனஜாக்ஷி யாதொரு பதிலும் கூறவில்லை. ஆனால், அன்று முழுதும் பைத்தியம் பிடித்தவள்போல் இருந்தாள். மாலை நெருங்கிவரவர, அவளுடைய மனக்கலக்கம் அதிகரித்து வந்தது. ஒருவரும் அவளிடம் போய்ப் பேசத் துணியவில்லை. முன்னிரவு அயர்ந்த நேரத்தில் இன்றும் அவள் கண்கள் மூடின. சிறிது நேரத்திற்கெல்லாம் பெருமூச் செடுத்தது. ஐம்புநாதையர் பயந்துவிட்டார். உடனே டாக்டரைக் கூட்டி வரும்படி பாலுவை அனுப்பினார். ஆனால், டாக்டர் வருமுன் வனஜாக்ஷி தூக்கம் தெளிந்து எழுந்து உட்கார்ந்தாள். அவள் முகம் பிரசன்னமாகி விட்டது. தனக்கு உடம்பு ஒன்றும் இல்லையென்று டாக்டரிடம் கையைக் காட்ட மறுத்துவிட்டாள்.

## 5

அடுத்தநாள் சாரதாவின் ஜுரம் வேகமாகக் குறைந்து மூன்று நாட்களில் முன்போல் சிரித்து விளையாட ஆரம்பித்தாள். வீட்டில் மற்ற எல்லோரும் கவலை நீங்கினார்கள். ஆனால், வனஜாக்ஷி மட்டும் வேறோர் உலகத்தில் இருப்பவள்போல் தோன்றினாள். ஒன்றும் பேசுவதே இல்லை. முகத்தில் புன் சிரிப்பும், கண்களில் கண்ணீருமாகவே இருந்தாள். நடுநிசியில், ஒருவருக்கும் தெரியாமல் போய்த் தன் குழந்தைகள் உடம்பைத் தொட்டுப் பார்த்துவந்தாள்.

இப்படி ஒரு மாதம் ஆயிற்று. ஐம்புநாதையர் வனஜாக்ஷியின் மாறுதலைக் கண்டு கவலைகொள்ள ஆரம்பித்தார். ஒரு நாள் இரவு வீட்டு வேலை முடிந்து அவள் தம் அறைக்கு வந்ததும், " இப்படியே சும்மா இருந்தால் ஏதாவது மற்றொரு விபத்து நேரிடும். உனக்கு என்ன என்பதை ஏன் என்னிடம் தாராளமாகச் சொல்லக்கூடாது? உனக்கு இஷ்டமானால்

நான் சாரதாவை ஏதாவது பெண்கள் விடுதிக்கு அனுப்பி விடுகிறேன் " என்றார்.

வனஜாக்ஷி இதைக்கேட்டுத் திடீரென்று வயிறு குலுங்கச் சிரித்தாள். இப்படி அவள் சிரித்துப் பல நாட்களாயின. "சாரதாவை அனுப்பிவிட நான் விரும்புகிறேன் என்று கண்டுகொண்ட உங்கள் புத்திசாலித்தனத்தை எப்படிப் புகழ்வது! இதுவரையில் உங்களிடம் சொல்லத் தைரியம் வரவில்லை. நான் உங்களிடம் சொன்ன கனவு ஞாபகம் இருக்கலாமே. அடுத்த நாள் அதே சமயத்தில் மற்றொரு கனவு கண்டேன். மகேசுவரி மறுபடியும் பிரத்தியக்ஷமானதாகவும், 'தாயே, நீதான் என்னை ரக்ஷிக்க வேண்டும். உனக்கு இஷ்டமானால் எதை வேண்டுமானாலும் எடுத்துக்கொள். என் சாரதாவிற்கு உயிர்ப்பிச்சைக் கொடு!' என்று நான் பிரார்த்தித்ததாகவும் கண்டேன். உடனே விழித்துக்கொண்டேன். மற்றதை நீங்களே அறிந்துகொள்ளலாம். 'பரமேசுவரி என் மனத்தைச் சோதித்தாள்' என்று இப்பொழுது தோன்றுகிறது. பத்து மாசம் சுமந்து பெறுவதைவிட அதிக விலை கொடுத்துச் சாரதாவைப் பெற்றிருக்கிறேன். தாறுமாறாகப் பேசவேண்டாம்" என்றாள்.

குழந்தைகளிடமுள்ள காந்த சக்தியின் சூக்ஷ்மந்தான் என்னே! அதன் மின்சாரத்தை ஏற்பதற்குரிய நரம்பு படைத்தோருக்குச் சுகம் அதிகமா? துக்கம் அதிகமா?




# பழைய ஞாபகங்கள்

[கி. சாவித்திரி அம்மாள்]

ஸ்ரீநிவாசன் பல வருஷங்களாக ரங்கூனிலேயே இருந்து விட்டான். சொந்த ஊராகிய சென்னைக்கு ஒருதரம் வந்து போகவேண்டுமென்ற அவா அவனுக்கு உண்டாயிற்று. 'வய சாகிவிட்டதே! மூச்சு இருக்கும்பொழுதே மனத்தில் இருந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள வேண்டுமே' என்ற அவசரமா? ஒன்றும் இல்லை. அவனுக்கு வயது நாற்பத்தைந்து தான். உடம்பு தளர்ந்துபோகக்கூடிய வியாதி எதுவும் இல்லை. தேகம் நல்ல கட்டாகவும் வலுவாகவுமே இருந்தது. ஆயினும் அவன் மனத்திலும் உணர்ச்சிகளிலும் மட்டும் இளமை மாறிவிட்டதன் அடையாளம் எப்படியோ ஏற்பட்டு விட்டது. எவைகளிலெல்லாம் ஆசையும் உற்சாகமும் இருந் தனவோ அவைகளிலெல்லாம் அவை வரவரக் குறையத் தொடங்கிவிட்டன. கவலையில்லாமல் திரிந்து சந்தோஷப் பட்டதற்குப் பதிலாக இப்பொழுது, "இவைகளிலெல்லாம் என்ன இருக்கிறது?" என்ற சலிப்பு ஏற்பட்டது.

இளமையில் பசியின் வேகத்தில் நாம் ஒன்றையும் கவனிக்காமல் சாப்பிடுகிறோம். ஆனால் வயதான பிறகு ருசி அறியும் திறமை ஏற்பட்டவுடன், பிடிக்கும் பிடிக்காது என்ற வித்தியாசமெல்லாம் உண்டாகின்றனவல்லவா? இந்த நிலை

யில்தான் இருந்தான் ஸ்ரீநிவாசன். நாற்பத்தைந்து வயது தானே என்றாலும் சாவுக்கும் தனக்கும் சம்பந்தமேயில்லை யென்பதுபோல் அலக்ஷ்யமாயிருந்த மனப்பாங்கு மாறி விட்டது. 'என்னவோ, யார் கண்டார்கள்? இன்றைக் கிருந்தாரை நாளைக்கிருப்பரென் றெண்ணவோ திடமில் லையே' என்றெல்லாங்கூட ஒவ்வொரு சமயம் அவன் உள்ளத்தில் கவலை எழுந்தது.

ஸ்ரீநிவாசனுக்குக் குழந்தைகள் இல்லை. மனைவியும் ஐந்தாறு வருஷங்களுக்குமுன் இறந்துபோய் விட்டாள். மறு படியும் விவாகம் செய்துகொள்வதில் அவனுக்கு அதிகச் சிந்தை இல்லை.

கடைசியாக அவன் சென்னைக்கு வந்துவிட்டுப் போய்ப் பதினைந்து வருஷங்கள் இருக்கும். அப்பொழுது இரண்டொரு நாட்களுக்குமேல் தங்கும்படி நேரவில்லை. ஆகவே இப் பொழுது ஆபீசில் ஒருமாத லீவு எடுத்துக்கொண்டு சென்னை வந்துசேர்ந்தான். தினம் ஓர் இடமாய்ச் சுற்றுவதற்குத்தான் சரியாயிருந்தது. தான் சிறு பையனாக இருந்தபொழுது குடியிருந்த வீடு, தெரு இவைகளைக்கூட மறுபடியும் பார்ப்ப தில் அவனுக்குஆசைதான். ஆனால் குச்சுவீடு மச்சுவீடாகவும், பொட்டல் வெளி கடைகண்ணியாகவும் நேற்று இருந்தது போல் இன்று இராமல் மாறிக்கொண்டுவரும் பெரிய பட்டண மாகிய சென்னையில், அவன் இருபத்தேழு வருஷங்களுக்கு முன் இருந்த வீட்டைக் கண்டுபிடிப்பது எப்படி! தான் படித்த கிறிஸ்டியன் காலேஜ் இப்பொழுது தாம்பரத்தில் இருக்கிறது என்று அறிந்து ஒருநாள் அதைப் போய்ப் பார்த்துவிட்டு வந்தான். சிறுவனாயிருக்கும்பொழுது தான் படித்த பள்ளிக் கூடத்தைப் பார்த்ததும் அக்காலத்தில் மாணாக்கர்களாய்த் தாங்கள் செய்த விஷமங்களையும், உபாத்தியாயரைப் படுத்தி வைத்த பாட்டையும் நினைத்து அவனுக்குச் சிரிப்பு வந்தது.

'இனி அந்தக் குதூகலமெல்லாம் மறு ஜன்மத்தில்தான்!' என்று தானே சொல்லிக்கொண்டான். கடைசியாக இரண்டோர் உறவினர்களையும் பார்த்துவிட்டு வந்தாயிற்று. இவ்வாறாக ஒருமாத லீவும் கழிந்தது.

ஒரு வெள்ளிக்கிழமை காலை ஒன்பது மணிக்கு ஸ்ரீநிவாசன் ரங்கூனுக்குத் திரும்பிப்போகக் கப்பலேறினான். அவனை அனுப்புவதற்குக்கூட நண்பர்களாவது உறவினர்களாவது ஒருவரும் இல்லை. ஆனால் இப்படிப் போவதுதான் ஸ்ரீநிவாசனுக்குத் திருப்தியாயிருந்தது. சுற்றிக் கூட்டமாய் நிற்பதும், சௌகரியமாய்ப் போய்ச்சேர்ந்த சமாசாரம் தெரியாவிட்டால் தூக்கம் வாராதவர்கள்போல் உடனே தபால் போடவேண்டுமென்று வற்புறுத்துவதும், அப்படிக் கேட்பவர்களுக்கு மரியாதையாய்ப் போகிறவர்கள் புன்னகையுடன் உறுதிமொழி அளிப்பதுமான காட்சிகளை நினைத்தாலே அவனுக்குப் பிடிப்பதில்லை.

கப்பல் துறைமுகத்தை விட்டுக் கிளம்பிற்று. இரண்டாம் வகுப்பில் பிரயாணம் செய்த ஸ்ரீநிவாசன் தன் அறையில் சென்று உட்கார்ந்துகொண்டான். கடல் அமைதியுடன் இருந்ததால் சற்றும் ஆட்டம் அசைவின்றிக் கப்பல் சுகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. மாலை சுமார் ஆறு மணிக்குக் காற்றுக்காகவும், சூரியன் அஸ்தமிக்கும் அழகைப் பார்ப்பதற்காகவும் முதல் வகுப்பு இரண்டாம் வகுப்புப் பிரயாணிகள் சிலர் கப்பல் மேல்தட்டுக்குச் சென்றனர். ஸ்ரீநிவாசனும் அவ்வாறே சென்றான். சிலர் அங்கேயே நாற்காலிகளைக் கொண்டுவந்து போட்டுக்கொண்டு உட்கார்ந்தனர்.

அஸ்தமிக்கும் சூரியனின் ரத்த மயமான காந்தியால் கடல் ஒரே சிவப்பாய் மாறியது. அக்காட்சியை நோக்கிக் கொண்டிருந்த ஸ்ரீநிவாசனின் கண்கள் திடீரென்று சிறிது தூரத்தில் கம்பியின் அருகில் நின்று கொண்டிருந்த ஒரு

ஸ்திரீயின்மீது சென்றன. அவள் யுவதியுமல்ல; அழகியும் அல்ல. சாதாரணத் தோற்றமுடையவள்தான். ஆனால் நல்ல உயரமும் அதற்குத் தக்க பருமனும் உள்ளவளாயிருந்தாள். அவள் திரும்பி அவனைப் பார்த்தபொழுது அவளை எங்கேயோ பார்த்திருப்பதுபோன்ற உணர்ச்சி ஸ்ரீநிவாசனுக்கு உண்டாயிற்று. ஆனால் யார், எங்கே பார்த்திருக்கக்கூடும், ஒன்றும் அவனுக்கு ஞாபகம் வரவில்லை. அவள் மறுபடியும் திரும்பி ஒருவிதச் சந்தேகப் பார்வையுடன் அவனைக் கவனமாய் நோக்கினாள். அப்போது, அவளை எங்கேயோ பார்த்திருப்பது போன்ற உணர்ச்சி முன்னிலும் உறுதியாயிற்று. அவள் மனத்திலும் அப்படியே சந்தேகம் இருப்பதாகவும் அவள் பார்வையிலிருந்து விளங்கிற்று. ஆனால் எப்படி நினைத்துப் பார்த்தும் ஸ்ரீநிவாசனுக்கு ஞாபகம் மட்டும் வரவில்லை. அவனால் இந்நிலைமை சகிக்க முடியவில்லை. திடீரென்று ஒரு தீர்மானத்துடன் அவள் அருகில் சென்று, "யாரோ முன்பின் தெரியாமல் வந்து பேசுகிறானே என்று நினைப்பீர்கள். உங்களை எங்கோ வெகு நாட்களுக்குமுன் நான் பார்த்திருப்பதாய்த் தோன்றுகிறது. ஆனால் என்ன யோசித்துப் பார்த்தும் எனக்குத் தெளிவாய் ஒன்றும் ஞாபகம் வரவில்லை" என்றான்.

அருகில் சென்று பார்க்கும்பொழுதும் அவளுக்குக் கொஞ்சங்கூட அழகில்லையென்று தெரிந்தது. ஆயினும் முகத்தில் ஒருவிதக் களை இருந்தது. இளமையில் அடர்த்தியாயிருந்த தலைமயிர் இப்பொழுது வெகுவாய்க் கொட்டிப் போயிருந்ததுடன் அங்கே நரை மயிர்களும் தென்பட்டன.

"எனக்குச் சிறிது நாழிகையாய் அதே எண்ணந்தான். என் அகத்துக்காரர் மதுரையில் வக்கீலாயிருக்கிறார். அவர் பெயர் சுந்தரம். இப்பொழுதாவது உங்களுக்கு ஞாபகம் வருகிறதா?" என்று அவள் கேட்டாள்.

தெரியவில்லை என்பதைக் குறிக்க ஸ்ரீநிவாசன் தலையசைத்தான்; "என் பெயர் ஸ்ரீநிவாசன்" என்றான்.

உடனே அவள் முகமலர்ச்சியுடன் சந்தோஷமாய் அவனைப் பார்த்தபொழுது ஸ்ரீநிவாசனுக்கும் அவள் யாரென்பது பளிச்சென்று நினைவு வந்துவிட்டது. இவ்வளவு நாழிகை எப்படி நினைவு வராமல் இருந்தது என்று நினைக்க அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

"யார்? சீனுவா?" என்றாள் அவள் களிப்புடன். "இவ்வளவு நாழிகை எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. ஏன், என்னைத் தெரியவில்லையா உனக்கு? மயிலாப்பூரில் கபாலீசுவரர் கோயிலுக்குப் பக்கத்தில் முத்துப்பிள்ளை தெருவில் இருந்தோமே! உன்னுடன் ஒரே ஸ்கூலில் ராமு படித்துக்கொண்டிருந்தானே!" என்று கேட்டாள்.

"யார்? மீனு-மீனாக்ஷியா? எனக்கு அடையாளமே தெரியவில்லையே!"

"ஆம். மீனுதான். உனக்கு மறந்துபோய்விட்டது அப்பொழுதெல்லாம் ஒரே சங்கோசப்படுவாய். இப்பொழுதும் அப்படியேதான் இருக்கிறாய்! அவ்வளவு வருஷங்களுக்குப் பிறகு நாம் இப்பொழுதுதான் ஒருவரையொருவர் பார்க்கிறோம்."

"ஒரு வருஷமா, இரண்டு வருஷமா? இருபத்தேழு வருஷங்களாகவில்லையா?"

"நீ ஏதாவது வேறு உலகத்திற்குப் போய்விட்டாயா? பழைய காலத்தில் காசிக்குப் போனால்கூட இனிமேல் அவர்களை எங்கே மறுபடியும் பார்க்கப் போகிறோமென்றெல்லாம் கவலைப்படுவார்களாம். இக்காலத்தில்தான் உலகத்தின் மறு கோடியில் இருந்தாலும் பார்ப்பது மிகவும் எளிதாய்விட்டதே! அப்படியிருக்க நாம் இவ்வளவு நாட்கள் பார்க்காதிருந்தது ரொம்ப அதிசயம்!"

"ஆம். எனக்கு ஒரு சமாசாரமும் தெரியாது. காமு, விசாலம் இருவரும் சௌகரியமாயிருக்கிறார்களா? ராமு என்ன செய்கிறான்?" என்று ஸ்ரீநிவாசன் விசாரித்தான்.

"ராமு போய் ஐந்து வருஷகாலமாய் விட்டன. விசாலத்தின் அகத்துக்காரர் சென்னையில்தான் டாக்டராயிருக்கிறார். காமு சென்ற வருஷம் குறைப்பட்டுப் போய்விட்டாள். எல்லாம் சின்னக் குழந்தைகள். அம்மாவுக்கு வயசுகாலத்தில் இப்படிப்பட்ட கஷ்டங்களெல்லாம் படவேண்டுமென்றிருக்கிறது" என்று கொஞ்சம் வருத்தம் தொனிக்கும் குரலில் கூறிவிட்டுப் பிறகு சற்றுப் புன்னகையுடன் அவள் மறுபடியும், "27 வருஷங்களுக்குமுன் நீ பார்த்த மீனுவா நான்? இப்பொழுது கிழவியல்லவா?" என்றாள்.

"அப்பொழுது உன்னைக் கண்டால் எவ்வளவு ஆசை தெரியுமா?" என்று ஸ்ரீநிவாசன் கேட்டதும் மீனாக்ஷிக்கும் ஞாபகம் வரவே, அவள் சிரித்தாள். திடீரென்று அவள் முகம் பத்து வயது சிறியவளானதாகக் காட்டிற்று.

"அப்படி ஒன்றுமில்லை. எதிரகத்துப் பத்மாவைத்தான் உனக்கு ரொம்பப் பிடிக்கும். அவளோடுதான் எப்பொழுதும் போய்ப் பேசுவாய்."

"நான் பத்மாவோடு பேசினால் உனக்குக் கட்டோடு பிடிக்காமற் கோபம் வரும்; இல்லையா?"

"சீ சீ! அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை" என்றாள். மீனாக்ஷி சிரித்துக்கொண்டு; "சின்ன வயசில் நாம் எல்லாம் தெரிந்துதான் நடக்கிறோமா? அது போகட்டும். உன்னைப் பற்றிச் சொல். நீ இப்பொழுது என்ன செய்துகொண்டிருக்கிறாய்?" என்றாள்.

ஸ்ரீநிவாசன் தான் பாங்கில் வேலையாய் ரங்கூனுக்குப் போனது, ஐந்தாறு வருஷங்களுக்குமுன் மனைவி இறந்தது, குழந்தைகள் இல்லாம லிருந்தும் மறு விவாகம் செய்து

கொள்ளாமல் இருப்பது முதலிய சமாசாரங்களைக் கூறினான்.

இதற்குப் பிறகு அவர்கள் பேச்சுக் கொஞ்சம் ஓய்ந்தது. ஸ்ரீநிவாசன் உள்ளத்தில் இருபத்தேழு வருஷங்களுக்குமுன் அவர்கள் சிறியவர்களாய்ச் சேர்ந்து இருந்த நாட்களின் நினைவு எழுந்தது.

*　　*　　*

ஸ்ரீநிவாசனுக்கு மிகச் சிறுவயதிலேயே தகப்பனார் இறந்துவிட்டார். அவன் தன் தாய்க்கு ஒரே பிள்ளை. அவ்விருவரும் மீனாக்ஷியின் பெற்றோருடன் சேர்ந்து ஒரு பெரிய வீட்டில் ஒன்றாய்க் குடியிருந்தனர். குடிவந்த புதிதில் மீனாவுக்கு வயது பதினொன்றுதான் இருக்கும். ஸ்ரீநிவாசனுக்குப் பதினாறு. மீனா மிகவும் ஒல்லியாய் வயதுக்குமேல் உயரமாக இருப்பாள். நல்ல சிவப்பும் இல்லை; அழகும் இல்லை. தலைப்பின்னல் மட்டும் சாட்டைபோல் தொங்கிக்கொண்டிருக்கும். இருவரும் சாதாரணமாய்ப் பேசி விளையாடிக் கொண்டே இருப்பார்கள். திடீரென்று அவர்களுக்கிடையே சண்டை வந்துவிடும். ஏதாவது குற்றம் கற்பித்து மீனாதான் முதலில் சண்டைக்கு ஆரம்பம் செய்வாள். ஆனால் கடைசியில் சீனுவே சண்டையைக் கிளப்பியதாக வந்து முடியும். இருவரும் சேர்ந்து எவ்வளவோ சமயங்களில் மிகவும் உறவாய் விளையாடிக்கொண்டிருப்பார்கள். மீனாவின் தமையன் ராமுவும் சீனுவும் ஒன்றாய்ப் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தார்கள்.

இவ்வாறு மூன்று வருஷங்கள் சென்றன. மீனாவின் மாமா பம்பாயில் வேலையா யிருந்தார். அவர் ஒரு சமயம் சென்னை வந்து போகும்பொழுது மீனாவையும் அழைத்துக் கொண்டு போனார். பிறகு ஆறுமாதம் வரையும் மீனா அங்கேயே இருந்துவிட்டாள். அவள் திரும்பிவந்ததும் அவள்

முன்பிருந்த மீனுதானோவென்று சீனுவுக்குத் திகைப்பாயிருந்தது. அதிக அழகு என்று சொல்ல முடியாவிட்டாலும் உருண்டு திரண்டு வாட்டமாயிருந்த உடம்பும், சிவந்த பளபளப்பான மேனியும், ஒரு தனி அழகை அளித்தன.

இப்பொழுது மீனு முன்போல் கண்டபடி ஓடி ஆடி விளையாடுகிறவளாயில்லை. சீனுவுக்குப் பழையபடி சகஜமாய் அவளிடம் பேசுவதற்குச் சங்கோசமா யிருந்தது. அவளைக் காணும்பொழுதெல்லாம் அவன் மனம் ஒருவிதக் கலவரம் அடையத் தொடங்கிற்று.

ஒருநாள் அவர்கள் எல்லாரும் ஸினிமாவுக்குச் சென்றிருந்தார்கள். படம் பார்த்துக் கொண்டிருந்தபொழுது ஏதோ ஞாபகமாய்ப் பக்கத்திலிருந்த மீனுவின் தோள்மீது சீனு தன் கையைப் போட்டுவிட்டான். உடனே மீனு நகர்ந்து கொண்டு, "சீனு! தள்ளி உட்கார்ந்துகொள். எனக்கு மேலே பட்டால் பிடிக்கவில்லை" என்றாள். பெரிய குற்றம் செய்து விட்டதுபோல் சீனுவுக்கு உடம்பெல்லாம் வியர்த்துப்போய்க் கைகால் நடுங்கின. அதற்குப் பிறகு அவனுக்கு முன்னிலும் சங்கோசம் அதிகரித்துவிட்டது.

பாதி சமயங்களில் ஏதாவது சம்பந்தமில்லாமல் பேசிவிடுவான். அவன் இப்படித் தட்டுத் தடுமாறுவதைப் பார்த்து மீனு கேலி செய்வாள். "பாவம்! அவன் சங்கோசப் படுகிறான்; அவனை விட்டுவிடேன்" என்று தன் அம்மா சொன்னால்கூடப் போனால் போகிறதென்று அவள் விடமாட்டாள். அவள் கண்ணுக்கு அவன் பழைய சீனுதான். ஆனால் சீனுவுக்கோ மீனு பழைய மீனுவாயிராமல் அதிசுந்தரியாய்த் தோற்றமளித்தாள். அவள் ஞாபகத்தில் அவனுக்கு இரவில் சரியாய்த் தூக்கங்கூட வரவில்லை. இப்படிப்பட்ட நிலைமையில் படிப்பில் மனம் செல்லுமா? சீனு அவ்வருஷமும் ஸ்கூல் பைனலிலேயே இருக்கும் படியாயிற்று. காதற் பெருக்கில் அகப்பட்டு அவன் உள்ளம்

தத்தளிப்பதைப் பெண்களுக்கு இயற்கையாயுள்ள அறிவினால் மீனு கண்டுபிடித்துவிட்டாள். ஆனால் ஒரே வீட்டில் எப்பொழுதும் கூடவே இருந்ததனால் அவளுக்குச் சீனு வேறாகவே தோற்றவில்லை.

மற்றொரு நாள் மாலை சீனு, மீனு, ராமு மூவரும் 'பீச்'க்குச் சென்றிருந்தனர். பேசிக்கொண்டே இருக்கும் பொழுது நடுவில் ராமு சிறிது தூரத்தில் உட்கார்ந்திருந்த சிநேகிதனொருவனைப் பார்த்துவிட்டு அவனுடன் பேச வேண்டுமென்று எழுந்து போய்விட்டான். சீனுவும் மீனுவும் மட்டும் தனியாயிருந்தனர். எதிரிலிருந்த கடலைப் போலவே சீனுவின் மனமும் பல எண்ணங்களுடன் அலைபாய்ந்து கொண்டிருந்தது.

திடீரென்று அவன், "மீனு!" என்று கூப்பிட்டான். அப்பொழுது அவன் உள்ளத்தில் அடைபட்டிருந்த காதலின் வேகம் அவன் குரலில் தொனித்தது. "உன்னைக் கண்டால் எனக்கு எவ்வளவு ஆசையாயிருக்கிறது, தெரியுமா!" என்றான். மீனு அதற்கொன்றும் பதில் சொல்லவில்லை.

சீனு மறுபடியும், "உனக்கு என்னைக் கண்டால் அப்படி இல்லையா?" என்று கேட்டான். "அப்படித்தான் இருக்கிறது" என்று சொல்லும் பாவனையாக மீனு தலையை ஆட்டினாள்.

சீனு கிட்ட நகர்ந்து அவள் கைகளைப் பிடித்துக்கொண்டான். உணர்ச்சி வெள்ளத்தில் அடிபட்டு அவன் மெய்ம் மறந்துவிட்டான். "அப்படியானால் நாம் இருவருந்தான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். ஒருவர்மேல் ஒருவர் ஆசையாயிருப்பவர்களே கல்யாணம் செய்துகொள்வது சரியென்று வெள்ளைக்காரர்கள்கூடச் சொல்லுகிறார்கள்."

சீனுவின் வார்த்தைகளைக் கேட்டு ஒரு நிமிஷம் மீனுவின் உள்ளம் மயக்க முற்றது. அவளுக்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை. ஆனால் மறுநிமிஷமே அக்கலக்கம் நீங்கி அவள்

கைகளை இழுத்துக்கொண்டு, "சீ! என்ன இது சீனு! நீ இனிமேல் இப்படியெல்லாம் பேசினால் நான் அம்மாவிடம் கட்டாயம் சொல்லிவிடுவேன்" என்றாள்.

சீனுவுக்குப் பயமும் வெட்கமும் பிடுங்கித் தின்றன. இதற்குள் ராமுவும் வந்துவிட்டான். அதன் பிறகு அவன் மீனுவுடன் தனியாய்ப் பேசுவதே இல்லை. சீக்கிரத்தில் மீனு வின் தகப்பனாருக்கு வெளியூருக்கு மாற்றலாகிவிடவே அவர் குடும்பத்துடன் சென்னையை விட்டுப் போய்விட்டார். அதற்குப் பிறகு சீனு அவளைப் பார்க்கவேயில்லை.

* * *

"ஒரு நாள் பீச்சு மணலில் உட்கார்ந்திருக்கும்பொழுது நான் என்னவோ சொல்லிவிட்டேனென்று கோபித்துக் கொண்டு விட்டாயே! நினைவு இருக்கிறதா?" என்று ஸ்ரீநிவாசன் கேட்டான்.

மீனாக்ஷி சிரித்துக்கொண்டு, "எனக்கொன்றும் நினை வில்லை. நீதான் ஒன்றையும் விடாமல் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாய்" என்றாள்.

அச்சமயம் ஓர் இளம் பெண் அவளைத் தேடிக்கொண்டு அங்கே வந்தாள். "இவள் என் பெண் கமலா. இவளுக் காகத்தான் இப்பொழுது ரங்கூன் புறப்பட்டுப் போகிறேன். இவள் அகமுடையான் அங்கே வேலையாயிருக்கிறான்" என்று ஸ்ரீநிவாசனிடம் கூறிவிட்டுப் பிறகு பெண்ணைப் பார்த்து, "கமலா, 27-வருஷங்களுக்கு முன் நான் உன்னைவிடச் சிறிய வளாயிருக்கும்பொழுது நாங்கள் எல்லோரும் ஒன்றாய் ஒரே வீட்டில் குடியிருந்தோம். அப்பொழுது நானும் இவருந்தான் சேர்ந்து விளையாடிக்கொண்டிருப்போம்" என்றாள்.

"கமலா அல்ல; சின்ன மீனு என்று சொல்" என்றான் ஸ்ரீநிவாசன்; "முற்றும் உன் சாயலாகவே இருக்கிறாள் 27-வரு ஷங்களுக்கு முன்பு உன்னைப் பார்த்த ஞாபகமேவருகிறது."

"இப்பொழுது என்னைப் பார்த்தால் எப்படி இருக்கிறது? நீ முன்பு பார்த்ததுபோல் இருக்கிறதா?" என்று மீனாக்ஷி சிரித்துக்கொண்டே வேடிக்கையாய்க் கேட்பது போல் கேட்டாள். ஆனால் அவள் குரலில் இளமை மாறி விட்டதே என்ற வருத்தம் சற்றும் தொனிக்கவில்லை.

"மனித வாழ்க்கையோ மிகக் குறுகியது! அதில் 27-வருஷங்கள் சொற்பகாலமா? அதற்குள் எவ்வளவு மாறுதல்கள் உண்டாகமாட்டா? நல்ல இளமைப் பருவத்தில் இருப்பவர்களை ஒரு காலத்தில் தொட்டிலில் உறங்கும் சிறு குழந்தைகளாக இருந்தார்களென்று நாம் பாவனை செய்வது சுலபமா? அதுபோன்றதுதான் யௌவனத்தின் வனப்புடன் கூடியவர்களைப் பின்பு தோல் சுருங்கிக் கண் குழி விழுந்த கிழவர்களாகக் கற்பனை செய்வதும். 27-வருஷங்கள் நாம் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளவில்லையே! இப்பொழுதுமட்டும் பார்க்கவேண்டுமென்பதென்ன? நம்மில் யாரேனும் ஒருவர் இன்று புறப்படாமல் தங்கி யிருந்தால், இன்னுமோர் 27-வருஷ காலம் - ஏன், ஆயுள்பரியந்தங்கூடப் - பார்க்க நேராமலே போய்விடலாம். இதுதான் தெய்வச் செயல் என்பது!" என்று ஸ்ரீநிவாசன் மிக்க உணர்ச்சியுடனும் ஆர்வத்துடனும் பேசினான்.

"வாஸ்தவந்தான்; தெய்வச் செயல் இல்லாமற்போனால் நாம் இப்பொழுது மட்டும் பார்த்துக்கொள்ள முடியுமா?" என்று மீனாக்ஷியும் சேர்ந்து கூறினாள்.

அவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்பொழுது மேற்கேயுள்ள வானத்தின் சிவப்புக் கொஞ்சம் கொஞ்சமாய் மங்கி மறைந்துகொண்டிருந்தது. ஆனால் அவ்வழகு ஒன்றையும் பழைய ஞாபகங்களில் ஈடுபட்டிருந்த அவ்விருவரும் சிறிதும் கவனிக்கவில்லை.

# கடைசி வேட்டை

["சங்கர ராம்"]

## 1

ராஜா வேட்டைக்குப் புறப்பட்ட வேளை கொஞ்சங்கூட நல்லதல்ல; இல்லாவிட்டால், அத்தனை இடையூறுகள் ஏற்படுமா? முதலில், அவருடைய மோட்டார் வண்டியே வழுக்கி விழுந்தது; நல்ல காலமாய் அது குட்டிக்கரணம் போடவில்லை. வண்டி ஓட்டினவனுக்கு நல்ல அடி; வண்டியிலிருந்தவர்கள் அனைவருக்கும் - ராஜா உள்பட - ஏதாவது ஒரு காயமில்லாமல் போகவில்லை. பிறகு, எல்லாவற்றையும் ஒருவாறு சரிப்படுத்திக்கொண்டு புறப்படும் சமயத்தில், ஒரு கெட்ட செய்தி வந்தது. ராஜாவின் வேட்டைக் குதிரையும் குதிரைக்காரனும் ஒரு காட்டாற்றைக் கடந்து செல்லும்பொழுது, திடீரென்று காட்டாற்றில் வெள்ளம் வந்து, குதிரையையும் ஆளையும் அடித்துக்கொண்டு போனதாம். அவர்கள் தட்டுத் தடுமாறிக் கரை ஏறிவிட்ட போதிலும், குதிரைக்காரனுக்கு நல்ல ஊமைக்காயம்; குதிரைக்கும் வலது முன்கால் ஒடிந்துவிட்டது.

ராஜாவுக்குக் கோபம் பொறுக்க முடியவில்லை. "மடையன்! இப்பொழுதுதான் முதல்முதலாக அவன் அந்த ஆற்றைத் தாண்டுகிறானா?" என்று சொல்லிக்கொண்டு அவர்

மோட்டார் வண்டியில் உட்கார்ந்து கொண்டார். மேலே செய்யவேண்டிய ஏற்பாடுகளைக் குறித்து ஒன்றும் பேசாமல், அவர் மோட்டாரை வீரம்பட்டிக்கு ஓட்டச்சொன்னார். புலி வேட்டையாடப் போனவரின் மனோநிலைமை இப்படியா யிருப்பது? போதும் போதாததற்கு மழையும் பிடித்துக் கொண்டது. வீரம்பட்டி போய்ச் சேர்ந்தும் மழை நின்ற பாடில்லை; பின்னும் சற்றுப் பலத்தது என்றே சொல்லலாம். கூடாரங்களை அடிப்பது அசாத்தியமா யிருந்ததால், ராஜாவும் அவருடைய பரிவாரங்களும் தங்க இடமில்லாமல் தவித்த னர்.

அவ்வூருக் கெல்லாம் பெரிய இடம் பனையோலையால் மூடப்பட்ட பஜனை மடந்தான். அங்கே, ராஜா தமது சிப்பந் திகளுடன் ஒண்டிக்கொண்டார். ஆனால், ராஜாவின் ஆட் களில் ஒருவன் சொன்னபடி, 'வீரம்பட்டியில் ஆகாயம் பொத்தல் ஆய்விட்டது' போலவே காணப்பட்டது. அப்படிச் சற்றும் ஓயாமல் மழை தாரைதாரையாய்க் கொட்டிக்கொண் டே இருந்தது. எந்தப் பிராணிக்கும் வெளியில் தலையை நீட்ட முடியாமல் இருந்தது.

வீரம்பட்டி நாற்பது, ஐம்பது குடிசைகள் அடங்கிய ஒரு குக்கிராமம். அது ஒரு மலை அடிவாரத்தை ஒட்டி இருந்தது. அதைச் சுற்றி அடர்ந்த காடுகள். அவைகளில் நானுவிதமான மிருகங்களும் சஞ்சரித்தன. அப்பக்கத்தில் பெருமழை பெய்வது மிகவும் சகஜம். ஆனால் தன் ராஜா வுக்கு வேண்டிய சௌகரியங்களைத் தேடும் கஷ்டம் அதற்கு அதுவரையில் ஏற்பட்டதே இல்லை. வேட்டையாட வரும் பொழுதெல்லாம் இந்தப் பட்டியின் மைதானத்தில் கூடாரங் களை அடித்து அவர் சில மணி நேரம் தங்குவது வழக்கம். ஆனால், கிராமத்தாருக்கு அவர் யாதோர் இடைஞ்சலையும் செய்ததில்லை. வாஸ்தவத்தில், அவர் மிகவும் பெருந்தன்மை

உடையவர்; ஜனங்களுக்கும் அவர்மீது அன்பும் கௌரவமும் உண்டு.

ஏழை ஜனங்களது காலக்ஷேபத்திற்கு வேண்டிய சாமான்களே வீரம்பட்டியில் கிடைப்பது அரிது. அப்படியிருக்க, ராஜாவுக்குத் தேவையான வஸ்துக்கள் எப்படிக் கிடைக்கும்? அந்தக் கல்லான தரையில் ஒன்றுமே விளையாது. அந்த ஜனங்களின் முக்கியமான தொழில் என்னவென்றால், காட்டு மிருகங்களின் தோல், தேன், எட்டிக் கொட்டை முதலியவைகளைச் சேகரித்து, சமவெளிகளில் கூடும் சந்தைகளுக்குக் கொண்டுபோய், அரிசி உப்பு எண்ணெய் முதலிய தினசரி வேண்டிய சாமான்களுக்கு அவைகளை மாற்றிக்கொள்வது. எப்பொழுதாவது மலைச் சாரல்களில் கொஞ்சம் பயிரிட்டும் பார்ப்பார்கள். ஆனால் அதைக் கணக்கோடு சேர்ப்பதற்கு இல்லை. இப்படிப்பட்ட ஜனங்கள் ஒரு ராஜாவையும் அவரைச் சேர்ந்தவர்களையும் எப்படி உபசரிக்க முடியும்?

மழை பெய்த மும்முரத்தைப் பார்த்தால், அது இன்னும் ஒரு வாரத்திற்கு நிற்காதுபோல் இருந்தது. அன்பும் தயையும் தின்பண்டங்களுக்கு ஈடாகுமானால், ராஜாவுக்கும் அவர் பரிவாரங்களுக்கும் குறைவே இராது. அந்தப் பேதை ஜனங்கள் மழையில் நனைந்து திண்டாடி, தங்களுடைய சௌகரியத்தை அடியோடு மறந்து, கைக்கு அகப்பட்டவற்றை யெல்லாம் கொணர்ந்து ராஜாவுக்குச் சமர்ப்பித்தனர்.

மழைக் காலத்தில் ஏன் புறப்படவேண்டுமென்று ராஜாவின்மீது தப்புச் சொல்லவே முடியாது; மழைதான் அப்படி அகாலத்தில் பெய்தது.

அவர்கள் வீரம்பட்டியில் அடைபட்டு இரண்டு நாட்களாய்விட்டன. அப்பொழுதும் மழை நிற்கும் வழியைக் காணவில்லை. ராஜாவின் கவலை யெல்லாம், எப்படிச் சீக்கிர

மாய் ஊருக்குத் திரும்புவது என்பதேதான். வேட்டை ஆசையை அவர் அப்பொழுதே மறந்துவிட்டார்.

அவருடைய அரண்மனை இருந்த பட்டணம் நாற்பது மைல்களுக்கு அப்பால் இருந்தது. முதல் முப்பது மைல்கள் வரையில் சரியான ரஸ்தாவே இல்லை. மேடும் பள்ளமுமான ஒரு வண்டிப் பாதைதான் உண்டு. இந்தக் காற்று மழையில், அதில் எவ்வளவு இடங்களில் ஜலம் தேங்கி நின்றதோ, எவ்வளவு இடங்களில் மரங்கள் ஒடிந்து விழுந்து வழியை அடைத்துக்கொண் டிருந்தனவோ, கடவுளுக்குத் தான் தெரியும். இடையிடையே காட்டாறுகள் வேறு உண்டு. இவைகளின் ஓட்டம் இரண்டொரு தினங்களே ஆயினும், அவைகளின் பிரவாகத்தின் வேகம் பாறைகளைக்கூட உருட்டித் தள்ளிவிடும். இப் பிசாசுகளுக்கு மோட்டார் வண்டி எந்த மூலை?

இவ்வளவு கஷ்டங்கள் இருக்குமென்று தெரிந்தும், ராஜா அன்று பிற்பகலில் ஊருக்குப் புறப்பட்டு விடுவதென்று தீர்மானித்துக் கொண்டார். இனி அசௌகரியங்களைச் சகிப்பது அவருக்குச் சாத்தியமாய்த் தோன்றவில்லை.

"வழியெல்லாம் இடிவிழுந்தாலும் சரி, நாம் இன்றைக்கு மத்தியான்னம் புறப்பட்டுப் போகவேண்டும்" என்று அவர் கட்டளையிட்டார். அவருடைய வேலைக்காரர்கள் மௌனமாய், "தீராதே தெய்வமே" என்று ஏற்பாடுகளைச் செய்தார்கள். இத்தருணத்தில் ஓர் அதிசயமான சம்பவம் நிகழ்ந்தது.

## 2

நமது வாழ்க்கையில், நாம் எவ்விஷயங்களின்மீது அதிக ஆசை வைத்து எப்பொழுது அவைகளுக்காகப் படாத பாடு படுகிறோமோ, அப்பொழுது அவைகள் நமக்குக் கைகூடுவ

யில்லை. ஆனால், ஆசைபுளித்து, அவைகளை அடியோடு மறந்து, கனவிலும் நாம் எதிர்பாராத சமயத்தில், அவைகள் முன்னிலும் பன்மடங்கு அதிக மேன்மையுடன் நம்மைத் தேடி வருவனபோல் வந்து சேருகின்றன. இதைவிட வாழ்க்கையின் விசித்திரம் என்ன வேண்டும்? இல்லாவிட்டால், இருந்தாற்போலிருந்து மழை நின்று, வெயிலும் "சுள்" என்று அடிப்பதற்கு என்ன காரணத்தைச் சொல்லுவது? சூரியன் ஒளி விழுந்ததும், பொழுது போனது தெரியாமல் வெகு நேரம் தூங்கிவிட்டதுபோல் இயற்கை அலறி எழுந்தது.

மரங்களில் பக்ஷிகள், 'கீச்சு மூச்' சென்று கூச்சலிட்டன; சேவல்கள் தலை ஓங்கித் தங்கள் முழுப் பலத்தோடு கூவின; காக்கைகள் மூன்று தினங்களாய் அடக்கி வைத்திருந்த ஆத்திரத்தோடு காதடைக்கும்படி கரைந்தன. இனியாவது அவிழ்த்துவிடக் கூடாதாவென்று வருந்துவனபோல ஆடுமாடுகளும் கத்தத் தொடங்கின. ஜனங்கள் குழந்தை குட்டிகளுடன் வெளியே வந்து கலகலவென்று ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டனர். அணில்களும் இக்குதூகலத்தில் கலந்து கொண்டன; வாலைத் தூக்கிக்கொண்டு மூச்சுவிடாமல் அவை கீச்சு கீச்சென்று கத்தின.

ஜீவராசிகளெல்லாம் ஒன்றுகூடிக் கடவுளுக்கு வந்தனம் அளிப்பதுபோல இருந்தது அந்தக் காட்சி. ஆனால், அதிசய சம்பவம் இது அல்ல. அது அரை மணிக்கப்புறம் நடந்தது.

ராஜாவுக்கு இப்பொழுது ஒரு யோசனை பிறந்தது. இவ்வளவு கஷ்டப்பட்டுவிட்டு, கொஞ்சமாவது வேட்டையாடாமல் திரும்ப அவருக்கு இஷ்டமில்லை. இதைப்பற்றி அவர் தம் சிநேகிதர்களோடு பேசிக் கொண்டிருந்தபொழுது, கிராமத் தலைவன் ஊரில் பாதி ஜனங்களோடு அங்கே வந்து ராஜாவை நமஸ்கரித்துப் பயபக்தியுடன் சொன்னான்:

"மஹாராசா! இந்தமாதிரி எங்க ஊருலே எப்பவும் ஆனதில் லீங்க."

"சங்கதியைச் சொல்லேன்" என்று ராஜா குறுக்கிட்டு நிதானத்துடன் கேட்டார்.

அந்த மனிதன் பயத்தையும் பதற்றத்தையும் ஒரு வாறு சமாளித்துக்கொண்டு மேலே சொல்லத் தொடங்கி னன்; "நாலுநாளிக்கு முந்தி ஒரு பெரிய புலி ஊருக்குள்ளே வந்துதுங்க. அதன் நடையைப் பார்த்தா, மேஞ்சிட்டுப் பட் டிக்குத் திரும்பற மாடுபோல இருந்துதுங்க. அதன் நெஞ் சுத் துணிவை என்னுண்ணு சொல்லுவேனுங்க! விளையாட் டுப்போல வந்திச்சு; பக்கத்துலே இருந்த ஒரு பெரிய கன் னுக்குட்டியை வாயிலே கௌவிக்கிட்டு மெள்ள நளுவிடிச்சு! என்ன திருவம் பாருங்க! அப்பவே பூசாரி சுட்டுத் தள்ளிடு றேனின்ணுன்" என்று சொல்லிக் கட்டையான ஓர் ஆளைச் சுட்டிக் காட்டினன்; "எங்க ஊருக்கெல்லாம் பூசாரியைப் போலக் குறியுள்ள ஆளு யாரும் இல்லீங்க. அவன் ஒரே வேட்டுலே தீத்திருப்பான். நான்தான் வாணும் இண் ணேனுங்க. அது மவாராசாக்கு வேட்டைக்கு உதவு மிண்ணு நிப்பாட்டினேனுங்க" என்று முகமலர்ச்சியோடு சொன்னன்.

ராஜாவுக்குப் பரம சந்தோஷம். "நல்ல காரியம் செய்தாய்; இப்பொழுது புறப்பட்டால் அகப்படுமல்லவா?" என்று ஆவலுடன் கேட்டார்.

"ஓ!" என்று நாலைந்துபேர் சேர்ந்தாற்போல் சொன்னார் கள்.

"அது எங்கே போயிடுமிங்க, அந்தப் பெரிய பளுவைத் தூக்கிக்கிட்டு? இந்த ஈரத்திலே காலடி நல்லாத் தெரியும். அதுவும் இல்லாமே, கன்னுக்குட்டியை இளுத்துக்கிட்டுப் போற தரையும் தெரியுமல்லோ?" என்றுன் கிராமத் தலைவன்.

பிறகு வெட்டிப் பேச்சில் நேரம் கழிக்காமல் ஆளுக்கு ஒரு துப்பாக்கியை எடுத்துக்கொண்டு அவர்கள் புறப்பட்டார்கள். வழியெல்லாம் ஒரே சேறும் சகதியுந்தான். வழுக்கிக் கீழே விழாமல் நடப்பது பிரும்மப்பிரயத்தனமா யிருந்தது.

வேடிக்கையும் பரிகாசமும் அதிகரித்தன. கடைசியில் ஒருவன் சறுக்கிச் சாஷ்டாங்கமாய்க் கீழே விழுந்தபொழுது எல்லோரும் "கொல்" என்று சிரித்தார்கள்.

"நாம் இவ்வளவு ஆட்டம் பாட்டத்தோடு போனால், புலி அகப்பட்டாற்போல்தான்" என்றார் ராஜா. ஆனால், உண்மையில் அதிக வேடிக்கை செய்தவர் அவரே!

ஆரம்பத்தில் காடு அவ்வளவு அடர்த்தியாய் இல்லை. இங்கொரு மரமும் அங்கொரு மரமுமாய் இருந்தது. அவர்கள் அரைமணி நேரம் நடந்திருப்பார்கள். யாதொன்றும் தென்படவில்லை. அவர்கள் நினைத்தாற்போல் புலி அவ்வளவு தாமதமாகச் செல்லவில்லை. ஆனால் அதன் சுவடுகள் நன்றாய்ப் புலப்பட்டதால், எப்படியும் அதைத் தேடிப் பிடித்துவிடலாமென்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது.

காடு வரவர நெருக்கமாயிற்று. அது இன்னும் அரை மைலோடு முடிந்து விடுகிறதென்பது கிராமத்தார்களுக்கு நன்றாய்த் தெரியும். எந்த நிமிஷத்திலாவது புலி எதிர்ப்படலாம். ஆகையால், ராஜாவையும் அவருடைய சிநேகிதர்களையும் வெகு ஜாக்கிரதையுடன் ஒருவர்பின் ஒருவராக நடக்கும்படி அவர்கள் எச்சரிக்கை செய்தார்கள்.

போகப்போக, அவ்வட்டாரத்தின் அமைப்பு, தெளிவாகப் புலப்பட்டது. பிறகு பாதையில் ஒரு முடுக்கில் திரும்பினதும், இரண்டு பர்லாங்குக்கு அப்பால் ஒரு புலி அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாகக் காணப்பட்டது. கஷ்டப்பட்டுக் கன்றுக்குட்டியை இழுத்துக்கொண்டு அது ஒரு மேட்டில் ஏறிக்கொண்டிருந்தது. அம்மேட்டில் பூமி சம மட்டமா

யிருந்தபோதிலும், புதர்கள் அடர்ந்து மண்டிக் கிடந்தன. அப்பாழும் புலியின் தோற்றம் சுடப்படுவதற்குத் தயாரிக்கப்பட்டதுபோல இருந்தது. ஓசை செய்யாது வேட்டைப் பிரியர்கள் ஊர்ந்துகொண்டே சென்றார்கள்.

பிறகு, போதுமான சமீபத்திற்கு வந்ததும் ராஜா குறி பார்த்துச் சுட்டார்; குறி தவறிப் போயிற்று. "தூ!" என்று சலித்துக்கொண்டார். அடுத்த க்ஷணத்தில் பத்துத் துப்பாக்கிகள் பத்துத் திசைகளிலிருந்து புலியைத் தாக்கின வாறு நின்றன. அப்புலி எதிர்த்து வந்திருந்தால் அதன் உடம்பெல்லாம் குண்டுகளால் துளைக்கப்பட் டிருக்கும். ஆனால், அது அப்படி ஒன்றும் செய்யவில்லை. கௌவி யிருந்த மிருகத்தைக் கீழே போடாமல் அது தலையைத் திருப்பி அவர்களை ஒரு விநாடி பார்த்துவிட்டு மறுபடியும் மேலே ஏறிற்று.

அதனுடைய நடத்தை அவர்களுக்கு மிகவும் ஆச்சரிய மாக இருந்தது. ஒருவருக்கொருவர் ரகசியமாகப் பேசிக் கொண்டனர். இதற்குள் அது மேட்டை அடைந்து அவ சர அவசரமாய் ஒரு பாறையின்கீழ் இருந்த புதருக்குள் ஓட முயன்றது. தனக்கு நேர்ந்த ஆபத்து அதற்குத் தெரி யாமற் போகவில்லை. சுமந்து செல்லும் பளுவை எறிந்து விட்டால், ஒரு க்ஷணத்தில் அது ஓடித் தப்பித்துக்கொள்ள முடியும். அப்படியிருந்தும், தன் இரையை விட்டுவிட அதற்கு மனமில்லை. உண்மையில் அதன் நடத்தை வெகு விநோதமாகவே இருந்தது.

மறுபடியும் ராஜா சுட்டார். தலைக்குக் குறிவைத்த போதிலும் தோள்பட்டைக்குச் சமீபத்தில் அவர் குண்டு பட்டது. ராஜா சுடத் தெரியாதவரல்ல. ஆனால் இப் பொழுது அவருக்கு உடம்பு சற்றுப் பதற்றமா யிருந்தது. புலி கீழே விழுந்தபோதிலும் அதற்குப் பிராண பயமில்லை

என்பதை அவர் நன்றாய் அறிந்தார். ஒரு நிமிஷத்தில் அது மெள்ள எழுந்து கன்றுக்குட்டியைக் கௌவிக்கொண்டு நொண்டினவாறு புதரை நோக்கிச் சென்றது. ராஜாவின் மனம் கஷ்டப்பட்டது; "அதற்கு என்ன தைரியம்! அதைக் கொல்வதைக் காட்டிலும் கேவலம் ஒன்றும் இல்லை" என்றார் அவர்.

"மகாராசா! அப்படிச் சொல்லக்கூடாதுங்க. அடிபட்ட புலியாலே பெரிய ஆபத்து வருங்க. உங்களுக்குத் தெரியாத விஷயங்களா?" என்று ஒரு கிராமத்தான் எச்சரிக்கை செய்தான்.

அது புதரில் நுழையும் சமயம். அப்பொழுது மனமில்லாமல் ராஜா மூன்றாம்முறை சுட்டார். இத்தடவை குறி தவறவில்லை. குண்டு மண்டையில் பட்டு, அது சுருண்டு கீழே விழுந்தது.

"என்ன, அது எதிர்க்காமலே போய்விட்டதே! அவ்வளவு பயங்காளியா?" என்று ராஜாவுடன் வந்தவர்களில் ஒருவர் சொன்னார்.

"பயங்காளியா! நல்லாச் சொன்னீங்க, யசமான்!" என்றான் பூசாரி. அவன்தான் அந்த வட்டாரத்திற்கெல்லாம் பெயர்போன வேட்டைக்காரன்.

"நானும் எத்தினியோ புலிங்களைக் கொண்ணிருக்கேனுங்க; ஆனால், இதைப்போல நெஞ்சுத் துணிச்சலே நான் கண்டதில்லீங்க. நெசமா, அது செத்தது எனக்கு வருத்தமாயிருக்குதுங்க" என்று அவன் உருக்கத்தோடு சொன்னான். சூதுவாது அறியாதவனாகையால், தன் உண்மையான மனோ நிலைமையை அவனால் ஒளித்துவைக்க முடியவில்லை.

"எனக்கும் அப்படித்தானப்பா இருக்கு. நம்ம வேட்டை, கூட்டிலே அடைத்த மிருகத்தைச் சுட்டதுபோல் அல்லவா ஆகிவிட்டது? சரி, போனது போச்சு! அது ஏன் நம்மை

எதிர்க்கவும் மாட்டேன்னிட்டுது, ஓடி ஒளியவும் மாட்டேன்னிட்டுது? உனக்குக் காரணம் தெரியுமா?" என்று ராஜா கேட்டார்.

"அதுதான் எனக்கும் விளங்கல்லே, மகாராசா, இப்போ கண்டுபிடிச்சிட மாட்டேன்" என்று அவன் தனக்குத் தானே பேசிக்கொள்வதுபோல் சொல்லிக்கொண்டு, எல்லோருக்கும் முந்தி வேகமாய் ஓடினான்.

## 3

இறந்தும் அப்புலியின் தோற்றம் கம்பீரமாகவே இருந்தது. பூசாரி அதை உற்றுப் பார்த்துவிட்டுச் சுற்றுப்பக்கங்களைக் கவனித்தான். அப்புதருக்குப் பின்னால் ஒரு குகை இருப்பதுபோலக் காணப்பட்டது. துப்பாக்கியைத் தயாராகக் கைகளில் பிடித்துக்கொண்டு, ஓசை செய்யாமல் அடிமேல் அடிவைத்துக் குகையின் துவாரத்திற்கு அருகில் சென்று அவன் எட்டிப் பார்த்தான். உடனே அவன் விரல் துப்பாக்கியின் வில்லை இழுக்கச் சித்தமாயிற்று. ஆனால் இப்படிப்பட்ட நெருக்கடிகள் அவனுக்குச் சகஜமாகையால் அவன் மனம் தளராமல் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டான்.

அவனுக்குமுன் பத்தடி தூரத்தில் ஒரு பெண் புலி படுத்துத் தூங்குவதுபோல் இருந்தது. சில நிமிஷங்கள் அதை அவன் கண்கொட்டாமல் பார்த்தான். அப்பொழுது அவனுக்கு அது செத்ததா பிழைத்ததாவென்ற சந்தேகம் பிறந்தது. ஏனெனில், அது அவ்வளவு அசைவற்றுக் கிடந்தது.

இதற்குள் மற்றவர்களும் அங்கே வந்துவிட்டார்கள். சந்தடியும் அதிகமாயிற்று. உடனே பூசாரி வெளியே ஓடி வந்து சப்தம் செய்ய வேண்டாமென்று அவர்களுக்கு ஜாடை காட்டினான். பிறகு, அவர்களிடம் சென்று தான்

கண்ட காட்சியை அவர்களுக்குத் தெரிவித்தான். ஒரு மூங்கில் குச்சியை எடுத்து அதைக் குத்திப் பார்க்கவேண்டுமென்று அவனுக்கு ஒரு யோசனை பிறந்தது.

இதைக் கேட்டதும் கிராமத் தலைவனுக்குக் கெட்ட கோபம் வந்தது. "உனக்குப் பயித்தியம் கியித்தியம் பிடிச்சுப் போச்சாடா? ஒண்ணுமிண்ணு, எல்லாரும் கொகைக்குப் பின்னாலே போயி கூச்சல் போடலாம்; இல்லே, நாலு வேட்டுப் போட்டாலும் போச்சு. எது ஒண்ணுமின்னாலும் செய். ஆனால், அந்தச் சங்கதி மட்டும் வாணாம்" என்றான் அவன்.

ஆனால் பூசாரி பிடிவாதக்காரன். குகையிலிருந்த ஒரு கல்லின் மறைவில் இருந்தாற்போல் யாதோர் அபாயமுமின்றி அதைக் குத்தலாமென்று அவன் வாதித்தான். அவர்களை மட்டும் குகையின் முகத்துவாரத்தை அடைத்துக் கொள்ளாமல், அதன் பின்னே நின்றுகொள்ளும்படி அவன் கேட்டுக் கொண்டான்.

பிறகு ஒரு நீண்ட மூங்கில் கொம்பை எடுத்துக்கொண்டு அவன் குகைக்குள் நுழைந்தான். இரண்டொருவர் அவனைப் பின்தொடர்ந்தார்கள். பூசாரியைவிடத் தாங்கள் தைரியத்தில் இளைத்தவர்களென்று காட்டிக்கொள்ள அவர்களுக்கு இஷ்டம் இல்லை.

கல்லின் மறைவில் பத்திரமாக உட்கார்ந்துகொண்டு பூசாரி அப்பெண் புலியைக் கொம்பால் மெள்ளக் குத்தினான். அது அசையவே இல்லை. பிறகு பலமாக அதைப் பல இடங்களில் குத்திப் பார்த்தான். பேச்சு மூச்சில்லை. சந்தேகமின்றி அது செத்துக் கிடந்தது.

பூசாரியின் பின்வந்தவர்கள் உடனே மற்றவர்களுக்குச் சங்கதியைத் தெரிவித்தார்கள். பிறகு எல்லோரும் அக் குறுகிய குகையில் ஒருவரை ஒருவர் இடித்துக்கொண்டு புகுந்தனர்.

ராஜா அப்புலியின் பக்கம் உட்கார்ந்து அதை மெள்ளத் தொட்டுப் பார்த்தார்.

“என்ன, இன்னும் உடம்பு சூடா யிருக்கிறதே!” என்று அவர் ஆச்சரியத்தோடு சொன்னார்.

“செத்து ஒரு நாளிக்கி மேலே இருக்காதுங்க” என்றான் பூசாரி.

“ககரமாட்டாமே, அவ்வளவு சீக்கா யிருந்திச்சுப்போ யிருக்கு. அதன் வாலண்டை ரத்தத்தைப் பாருங்க. அட சாமி! என்ன நாத்தம் அடிக்கிது!” என்று அவன் முகத்தைச் சுளித்துக் காறித் துப்பினான். இச் சமயத்தில் சர்ப்பம் சீறுவதுபோல ஒரு சப்தம் கேட்டது. அங்கிருந்தவர்கள் திடுக்கிட்டு ஒரு பக்கமாக ஒதுங்கினார்கள்.

“ஆகா! அதோ இருக்குதே ரெண்டு புலிக் குட்டிங்க! அம்மாடி! அதுங்களுக்கு என்ன கோவமுங்க!” என்று அவர்களில் கூர்மையான பார்வையுள்ளவன் ஒருவன் சொன்னான். நல்ல வேளையாய் அங்கு நல்ல பாம்பு இல்லை என்பதால் எல்லாருக்கும் ஒருவாறு நிம்மதி ஏற்பட்டது.

அவ்விரண்டு குட்டிகளையும் பிடிப்பதற்குள் போதும் போதுமென்று ஆகிவிட்டது.

“மகாராசா! இப்போதெல்லாம் விளங்கிடுச்சுங்க” என்றான் பூசாரி.

“அது எதுக்காவ உயிரைக் கூடப் பாக்காமெ இரையைத் தூக்கிக்கிட்டு ஓடி வந்திச்சு தெரியுங்களா! அதன் பொட்டை குட்டி போட்டு, சீக்கோடு பட்டினி உளுந்து சாவறதை அத்தாலே பாக்கமாட்டலீங்க! அதன் காயம் மனிசனுக்குக்கூட வராதுங்களே! பொஞ்சாதி செத்தாளா பொளச்சாளா இன்னு பாக்காத புருசங்க எத்தினி பேரு இருக்காங்க?” என்று அவன் பாத்தியானமாய்ச் சொன்னான்.

"நீ சொல்வது, ரொம்ப சரி, அப்பா. அதுக்கு அந்தக் கதி வந்திருக்க வேண்டாம். என்னமோ, போ! சுகமாய் வாழ்ந்திருந்த ஒரு குடும்பத்தை ஒழிப்பதற்கு, நம்மாலே ஆன உபகாரத்தைச் செய்தோம்!" என்று ராஜா வெகு உருக்கத்தோடு சொன்னார்.

அன்று முதல் அவர் வேட்டையாடுவதை நிறுத்தி விட்டார்.

# விஜய தசமி

[ந. பிச்சமூர்த்தி, பி. ஏ.]

ஏழை எச்சுமு (லக்ஷ்மி) என்ன செய்வாள்? அவள் தாய் சின்னம்மாதான் என்ன செய்வாள்! கணவன் கிளப் வைத்துக் கடனாளியாகி, இருந்த இடம் தெரியாமல் ஓடிப் போனதிலிருந்து அவல் இடித்து விற்பதும், மா அரைப்பதும், கால்க் காரியம் சமையல் முதலியவை செய்வதும் ஜீவனோபாயமாகிவிட்டன. பிரஸ்தாபிக்கும் காலத்தில், வக்கீல் வேதாந்தமையர் வீட்டில் சொல்ப சம்பளத்திற்குச் சின்னம்மா சமையல் செய்துவந்தாள். மாதச் சம்பளம் ஐந்து ரூபாய்; சாப்பாட்டிற்கே போதாது. அதில் வீட்டு வாடகை ஒன்றரை ரூபாய் கொடுத்தாகவேண்டும்.

இப்படிப்பட்ட நிலைமையில் நவ ராத்திரி வராவிட்டால் நல்லது என்று சின்னம்மா எண்ணுவதில் பிசகென்ன? ஆனால் அதற்காக நவராத்திரி வராமல் நின்றுவிடுமா?

நவராத்திரிப் பொம்மைக் கடைகளைப் பார்த்துவிட்டுத் திரும்பிவந்த எச்சுமு தாயைக் கேட்டாள்: "ஏம்மா! இந்த விசை நான் கொலு வெக்கப்போறேனே. வீட்டிலே நெறைய ஆறுதட்டு வெக்கப்போறேன். சுண்டல்பண்ணித் தறயா நேவேத்யத்துக்கு?"

"பொம்மை ஏதுடி உனக்கு? உங்கப்பனுக்கு வீடு வேறே கட்டிவச்சு வாழறதோ? அதிலே வேறெ ஆறுதட்டு வெக்கப் போறாளாம்! பேச்சைப்பாரு டில்லிபாச்சா பொண்ணாட்டமா!" என்று சிறுமியின் தாய் மனமுடைந்து.

பாவம்! எச்சுமுவுக்கு இந்த இழவு வித்தியாசங்களெல்லாம் எப்படித் தெரியும்?

"ஆனால் பொம்மை நேக்கு ஏன் இல்லே? அப்பொன்னு நீ வாங்கிக்குடு" என்று எச்சுமு தாயின் முழங்காலைக் கட்டிக்கொண்டு கெஞ்சினாள்.

சின்னம்மா திரும்பத் தாயாகிவிட்டாள். "அடி அசடு! அதுக்குப் பணம் வேண்டாமா? தாலிதானே இருக்கு? என்ன பண்ணச் சொல்றே?"

"ஒன்கிட்டே ஏன் பணமில்லே? எல்லார்கிட்டேயும் ரொம்ப ரொம்ப இருக்கே. வக்கீல் வீட்டு அம்மாமிகிட்டே நோட்டு நோட்டா, பணம், பணமா இருக்கே. நீ கொஞ்சம் கேட்டு வாங்கேன்."

தாய்க்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. கண்களைக் கசக்கிக் கொண்டாள். "பார்ப்போண்டி" என்று தட்டிக் கழிக்கும் பல்லவியைக் கையாண்டு விட்டு வெளியே போய் விட்டாள்.

தாய் வெளியே போன அடியோடு எச்சுமு வீட்டை விட்டுக் கிளம்பினாள். குதித்துக் குதித்துத் தன் சிநேகிதி வீடு ஒவ்வொன்றிற்குள்ளும் நுழைந்து, மார்பைத் தட்டிக் கொண்டு குதூகலமாய்த் தான் அந்தத் தடவை நவராத்திரிக்கு ஆறுதட்டுப் பொம்மை வைக்கப்போவதாகப் பீத்திக் கொண்டாள்.

நவராத்திரி முதல்நாள் அந்திப் பொழுதாகியும் வீட்டில் கொலு வைத்த பாடில்லை. எச்சுமுவுக்குத் துக்கம் குமுறிக் கொண்டிருந்தது. தாயுடன் சண்டை பிடித்தாள்; அழுதாள்;

பிடிவாதம் செய்தாள். பெண்ணை உடலுடன் சேர்த்து அணைத்துக்கொண்டு தலைமயிரைத் தடவிக் கொடுப்பதைத் தவிரத் தாயால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. அன்றைத் தினம் இரவு சாப்பிடாமல் வெறும் தரையில் அழுதபடியே எச்சுமு தூங்கிவிட்டாள்.

சின்னம்மா வெகுநேரம் வரையில் கிணற்றங்கரையில் சோர்வடைந்து உட்கார்ந்திருந்தாள். 'வக்கீல் வீட்டில் ஏதாவது பணம் கேட்டு வாங்குவோமென்றால், நவராத்திரியும் அதுவுமாய்க் கொடுக்க மறுத்துவிடலாம்; அல்லது 'வேலைக்கு வந்து அரை மாதங்கூட ஆகவில்லை; இப்பொழுது முதல், பணத்திற்குப் பிடுங்கித் தின்கிருள்' என்று அவர்கள் நினைத்துவிடலாம்; ஒருவேளை சொல்லியும் விடலாம். அப்பொழுது இந்த அரை வயிறு கஞ்சிக்குங்கூடத் திண்டாட்டம் வந்துவிட்டால்......?' இப்படிப் பலவாறு எண்ணி எண்ணி முடிவு காணுமல் தூங்கிப்போய்விட்டாள்.

மறுநாள் காலை வழக்கம்போல் வானில் பொற்கோழி கூவவே உலகம் விழித்தெழுந்தது. எச்சுமுவும் சின்னம்மாவும் எழுந்தார்கள். ஆனால் தாயினிடம் பொம்மைகளைப் பற்றிக் குழந்தை மூச்சே விடவில்லை; பகல் முழுதும் முகத்தை 'உம்' மென்று தூக்கி வைத்துக்கொண்டிருந்தாள்.

மாலைப் பொழுதில் பெண்ணும் தாயுமாக வக்கீல் வீட்டுக்கு மஞ்சள் குங்குமத்திற்குச் சென்றார்கள். கண்ணிமை கொட்டாமல் ஒவ்வொரு பொம்மையையும் விழுங்கி விடுபவள் போல் எச்சுமு உற்று உற்று நோக்கினாள். பொம்மைகளைப் பார்க்கப் பார்க்க ஒரு புறம் துக்கம், மற்றொருபுறம் தாயிடம் கொலுவைக்கப் பணமில்லையே என்ற ஏக்கம்.

இரவு, தாயும் பெண்ணும் வேறு சிலரும் கோவிலுக்குக் கிளம்பினார்கள். போகும் வழி எல்லாம் கடை மயம். கடையெல்லாம் பொம்மை மயம். கோவில்! அங்கேயும் அப்படித்

தான். இந்திர சபை, துரோபதை துகிலுரிதல், நரித்தொம் பிச்சி, கல்லடிமங்கன் இன்னும் எவ்வளவோ பொம்மைகள்.

எச்சுமுவின் கண்கள் சுழன்றன. பொம்மைகளை ஆவலுடன் ஒரு நொடி பார்த்தாள். அடுத்த க்ஷணம் சீயென்று அவைகளை முற்றும் வெறுத்துக் கண்களை மூடிக்கொண்டு, கண்ணில்லாக் கபோதி பிறர் கையைப் பிடித்துச் செல்வது போல் தன் தாயின் கையைப் பிடித்துச் சென்றாள்.

கடைசியாகச் சுவாமி சந்நிதிக்கு வந்துசேர்ந்தார்கள். எச்சுமு கண்ணைத் திறந்தாள். யாரோ ஒரு பாட்டி, சுவாமிக்கு அர்ச்சனை செய்துவிட்டுக் குருக்கள் கொடுத்த விபூதி முதலிய பிரஸாதங்களை வாங்கிக்கொண்டிருந்தாள். தட்டிலிருந்த பாதித் தேங்காய்மூடியைமட்டும் சிவன் சொத்தென்று சொல்லி ஒரு பிராம்மணனுக்குக் கொடுத்துவிட்டாள். எச்சுமு இதையெல்லாம் கவனித்துவந்தாள்.

பிறகு எல்லோருமாக அம்மன் சந்நிதிக்குச் சென்றார்கள். சுவாமி சந்நிதியில் அர்ச்சனை நடத்திய கிழவி அம்மன் சந்நிதியிலும் ஒன்று நடத்தினாள். ஆனால் குருக்கள் கொடுத்த பிரஸாதத்தை அப்படியே தேங்காய் மூடி உள்படக் கிழவி எடுத்துக்கொண்டது எச்சுமுவுக்குச் சற்று ஆச்சர்யமாயிருந்தது. தாயைப் பார்த்து, "ஸ்வாமி சந்நிதியிலே வாண்டாம்னுட்டு இங்கே அம்மன் சந்நிதியிலே மாத்திரம் தேங்கா மூடி வாங்கிக்கலாமா அந்தப் பாட்டி?" என்று கேட்டாள்.

"அம்மன்தான் வரப்பிரஸாதி. லோகமெல்லாம் அவளுதுதான். சிவனுக்கு விபூதிதான் சொந்தம். நமக்கு அஷ்ட ஐசுவர்யமும் அவள்தான் குடுக்கணும். அதனாலே தான் பாட்டி இங்கே தேங்கா மூடி வாங்கிக்கிண்டா" என்று ஏதோ சமாதானம் சொன்னாள்.

எச்சுமு தனக்கு விஷயம் விளங்கிவிட்டதுபோல்

தலையை ஆட்டினாள். அப்படியே அம்மன் சந்நிதியில் உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டு பிரார்த்தனைசெய்தாள்.

நவராத்திரி மூன்றாவது நாள் மாலை வக்கீல் வேதாந்தையர் மனைவி ராஜாமணி அம்மாள், வீட்டிற்கு வருவோர்களை யெல்லாம் வரவேற்றுக் கொண்டிருந்தாள். எச்சுமு வந்து ஓர் ஓரமாய் உட்கார்ந்துகொண்டாள்.

சிறிது நேரம் சென்றது. ராஜாமணி அம்மாளைப் பார்த்து, "ஏன் அம்மாமி, என்னத்துக்காகக் கொலு வெக்கறது?" என்றாள் குழந்தை.

ராஜாமணி அம்மாள் ஸ்ரீவித்யோபாசனை செய்வதாக ஊர் முழுதும் பேச்சாய் இருந்தது. "நல்ல கேள்வி கேக்கறயே, எச்சுமு! அந்த நாளிலே ஒரு போக்கிரி அசுரன் இருந்தான். ஜகத்தெல்லாம் அவனைப் பார்த்து நடுங்கித்து. எல்லாருமாய்ப் போய் அம்பாளிடத்திலே குறை சொல்லிக் கொண்டா. அம்பாள் மொதல்லெ தன் ஸைன்யத்தை அனுப்பி அந்த அசுரன், அவன் ஸைன்யம் எல்லாத்தோடேயும் சண்டை செய்யச் சொன்னா. தான் மாத்திரம் ஒன்பது நாளும் அப்படியே உட்கார்ந்திருந்தா. கடைசியாக, தெசமி அன்னிக்கு அம்பாளே நேரே போய் மகிஷாசுரனைக் கொன்னுட்டா. அதுக்காகத்தான் கொலு வெக்கறோம். ஜெயிச்சதுக்காகத்தான் விஜயதசமி அன்னிக்கு ஸ்வாமிகளெல்லாம் அம்புபோடப் போறது; தெரிஞ்சுதா?"

"வீட்டுலே கொலு வெக்காட்டா என்ன, அம்மாமி?"

"கொலு வெக்காட்டா வீட்டிலே தரித்திரம் பிடுங்கித் திங்கும். காரியமெல்லாம் தோத்துப் போகும். அபசகுனமாயிருக்கும்."

"அப்படீன்னு எங்காத்துலே கொலு வெக்கலியே; என்ன பண்றது?"

அதற்கு ராஜாமணி அம்மாளுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை; "உம்" என்றாள். எச்சுமு விட்டபாடில்லை.

"அப்பொன்னுக்கே எனக்குக் கொஞ்சம் பொம்மை குடுங்கோ; நான் கொலு வெக்கறேன்."

"ஆகட்டும்" என்று பட்டுக்கொள்ளாமல் சொன்னாள் வக்கீலின் மனைவி.

அதற்குள் யாரோ பணக்கார ஸ்திரீகள் ஐந்தாறு பேர் வந்தார்கள். ஏதேதோ பேசிக்கொண்டிருந்துவிட்டு ராஜாமணி அம்மாளைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள் - மஞ்சள் குங்குமத்திற்கு.

ராஜாமணி அம்மாள் போனபிறகு எச்சுமு கொலுவுக்கு முன் வெகு நேரம்வரையில் கைகட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் திரும்பிவருவதாகத் தெரியவில்லை. கூடத்தில் ஒருவரையும் காணோம். அம்பாள் பிரஸாதம் கிடைத்தது. எச்சுமு எழுந்திருந்து பொம்மைகளில் ஐந்தாறை எடுத்து மடியில் கட்டிக்கொண்டாள். குனிந்து பொம்மைகளை எடுத்ததில் தலைப் பின்னல் சரிந்து விழுந்து சில பொம்மைகளைத் தள்ளிவிட்டது. அந்தச் சப்தத்தை கேட்டுப் பயந்துபோய் எச்சுமு வீட்டுக்குக் கிளம்பிவிட்டாள்.

நவராத்திரி நான்காம் நாள் காலை. ராஜாமணி அம்மாள் கொலுவைத்திருக்கும் அங்கணத்திற்கு எதிரே வழக்கம் போல் தன் கையால் மெழுகிக் கோலமிட்டுக்கொண்டிருந்தாள். கோலம் முடிந்ததும் மெதுவாக நிமிர்ந்தாள். நடுத் தட்டிலிருந்த துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலிய விக்ரஹங்கள் உருண்டு கிடந்தது கண்ணில்பட்டது. சமீபத்தில் போய்க் கவனித்தாள். சில பீங்கான் பொம்மைகளைக் காணவில்லை. பின்னும் சோதித்தாள். நெஞ்சு 'பக்!' கென்றது. லக்ஷ்மி விக்ரஹத்தின் கழுத்தில் போடப்பட்டிருந்த தங்கச் சங்கிலியும், பதக்கமும் காணப்படவில்லை.

ராஜாமணி அம்மாளின் உள்ளம் பதறிற்று. நவராத்திரியில் நகை கெட்டுப்போவதென்றால், தன் கணவருக்கு - ஏன்? தன் குடும்பத்திற்கே - ஏதாவது ஆபத்து வருவதன் அறிகுறியோ என்ற பீதி உண்டாயிற்று.

சற்று நேரம் சென்றதும் மனக்குழப்பம் தணிந்தது. முதல் நாள் எச்சமு வந்திருந்ததும் அவளுடைய கேள்விகளும் ஞாபகத்திற்கு வந்தன. அவள்மீது இயல்பாய்ச் சந்தேகம் பிறந்தது. அன்று காலைக் காரியம் செய்யச் சின்னம்மா வராததால் சந்தேகம் நிச்சயமாகிவிட்டது.

சின்னம்மா வீட்டிற்கு ராஜாமணி அம்மாள் வந்தபோது சின்னம்மா, உடலெங்கும் போர்த்துக்கொண்டு ஒரு கிழிந்த கித்தான்மீது படுத்துக்கொண் டிருந்தாள். எஜமானி வரப் பார்த்ததும் எழுந்து உட்கார்ந்தாள்.

"என்ன உடம்பு திடீரென்று?"

"அதுதான் எனக்கும் தெரியல்லே; ராத்திரி படுத்துக்கிண்டதே புடிச்சுத் தலே கனத்துக்கிண்டு பொணமாட்டமா யிருக்கு. அதோடு ஜொரம் வேறே ஒடம்பை அனத்தறது. அதான் காலம்பரக் காரியங்கூடச் செய்ய வரலே."

"சரிதான்."

"ஏதாவது விசேஷமுண்டா? காலே வேளையிலே வந்திருக்கேளே?"

"விசேஷம் ஒண்ணுமில்லே. ஒன் பொண் சாயங்காலமா வீட்டுக்கு வந்திருந்தா. நான் அப்புறம் வெளியே போயிட்டேன். காலம்பரப் பாக்கறப்போ பொம்மையிலே கொஞ்சம் கொறையறது."

"ஹும், அப்புறம்?"

"வேறொருத்தரும் வல்லே. லக்ஷ்மி விக்ரகத்தின் கழுத்திலே இருந்த 'செயினும்' பதக்கமும் காணோம். வேணும்னு ஒரு

"அந்தச் சனியனைக் காணுமே இங்கே. மூதேவி எங்கே தொலைஞ்சுதோ......இருந்தாலும் அவளுக்குக் கை நீளம்னு சொல்றத்துக்கில்லெ. என்னமோ!"

சின்னம்மாவின் வார்த்தை எஜமானிக்குச் சமாதானம் அளிக்கவில்லை. பேச்சுப் பராக்கில் அங்குமிங்கும் சலித்துக் கொண்டிருந்த எஜமானி அம்மாளின் கண், துளசி மாடத்திற்குப் பின்னால் போயிற்று. "அதென்னவோ மின்னறதே" என்று இரண்டடி எடுத்துவைத்தாள். துளசி மாடத்துக்குப் பின்னால் ஒரு செங்கலுக்கு ஒரு பொம்மையாக ஆறு அடுக்கு, கொலு வைக்கப்பட்டிருந்தது! "சின்னம்மா! எச்சுமு கொலுவெச்சிருக்கிற அழகைப் பாரேன்!" என்றாள். சின்னம்மாவின் முகம் அவமானத்தால் பட்டுப்போய்விட்டது. ராஜாமணி அம்மாளோ கல்லை எல்லாம் புரட்டி நகையைத் தேடினாள். காணவில்லை.

"சமையலறை மாடத்தில் கீடத்தில் அவள் நகையை வச்சிருக்கப் போறாளே, பாரேன்" என்று சொல்லிவிட்டு எஜமானியும் காரியக்காரியும் அங்கும் இங்கும் தேடினார்கள். பயன்படவில்லை. எஜமானி வீட்டுக்குக் கிளம்பினாள்.

வாசற்படிக்கு வந்த சமயம் எச்சுமு தெருவிலிருந்து வீட்டிற்குள் நுழைந்தாள். அதன்மேல் ராஜாமணி அம்மாள் எச்சுமுவின் பின்னோடு மறுபடி வீட்டிற்குள் சென்றாள். எச்சுமுவைக் கண்டதும் சின்னம்மாவுக்குத் தலைகால் தெரியவில்லை. குழந்தையைப் பிசாசுபோல் அறைந்தாள். குழந்தை அலறிற்று. எஜமானிக்குக்கூட ஏன் சொன்னோமென்று ஆகிவிட்டது. சற்றுநேரம் அப்படியே நின்றுகொண்டிருந்தாள். போகட்டுமென்றால் மனசு கேட்கிறதா? "துளசி மாடத்துக்குப் பின்னாலே இருக்கிற பொம்மையை நீயே எடுத்துக்கோ. செயினையும் பதக்கத்தையும் குடுத்துடு" என்றாள் எஜமானி. எச்சுமு பதில் சொல்லாமல், கதவு இடுக்கில்

போய்த் தேம்பித் தேம்பி அழுதாள். பின்னொரு சமயம் ஆகட்டுமென்று எஜமானி போய்விட்டாள்.

மறுநாள் மத்தியானம் வந்தாள்; "எச்சுமூ! பொம்மையை வச்சுக்கோ; நகையைக் குடுத்துடு" என்றாள்.

"நகையை எடுக்கல்லே, அம்மாமி. கொலு வெக்காட்டா அஷ்ட தரித்திரம் வரும்னேளே. ஒங்களைப் பொம்மை கேட்டேன்; ஆகட்டும் இன்னேள்; அப்புறம் வெளியே போயிட்டேள். நான் உங்களுக்காகக் காத்துண்டிருந்தேன். நீங்க வரல்லே. நானு பொம்மை கொஞ்சம் எடுத்துக்கிண்டேன். நகை எனக்கென்னத்துக்கு? கொலு வெச்சால், தானே அம்பாள் கொடுக்கறாள்" என்று எச்சுமூ சொன்னதோடு, "இந்தாங்கோ பொம்மை" என்று பொம்மைகளைக் காலடியில் கொண்டுவந்து வைத்தாள்.

"ரெண்டுங் கெட்டான்!" என்று சொல்லிக்கொண்டே எஜமானி அம்மாள் திரும்பினாள்.

"அம்மாமி! எனக்கு ஒடம்பு சரியாயிடுத்து. ஆனால் இனிமேல் ஒங்காத்திலே வேலைசெய்ய யோக்யதை கிடையாது. இந்தப் பெண்ணைப் பெத்ததற்கு நாக்கைப் பிடுங்கிக்கிண்டு சாகலாம்" என்றாள் சின்னம்மா.

"அழகாயிருக்கு, உன் பேச்சு!" என்று சொல்லிக்கொண்டே ராஜாமணியம்மாள் வீட்டிற்குக் கிளம்பினாள். அத்துடன் சங்கிலி விஷயத்தை விட்டுவிட்டாள்.

**வி**ஜய தசமி தினம், வக்கீல் வேதாந்தமையர் வீட்டில் 'திமிலோ' கப்பட்டது. விஷயமென்ன வென்றால்: அம்பாளுக்குப் பிரீதியாக ஐந்து ஸ்திரீகளுக்குப் புடைவையும், ஐந்து கன்னிகைகளுக்குப் பாவாடையும் பூஜை செய்து கொடுக்கும் மும்முரம். அன்று முழுதும் ஊரெங்கிலும் ராஜாமணியம்மாளின் பேச்சுத்தான்.

இரவு வந்தது. கொலுவைக் கலைத்துப் பொம்மைகளைப் பெட்டியில் அடுக்கும் நேரம். வக்கீலும் அவர் மனைவியும் பொம்மைகளை எடுத்தும் துணிகளை மடித்தும் சுருட்டியும் பலகைகளை அடுக்கிக்கொண்டும் இருந்தார்கள். கீல்போட்ட இரட்டைப் பலகை இடுக்கில் ஏதோ பளிச்சென்று மின்னிற்று. இருவரும் பார்த்தார்கள் - செயினும் பதக்கமும்!

ராஜாமணி அம்மாளின் தலை சுழன்றது. அவள் செவியில் சிம்மத்தின் வெறிகொண்ட கர்ஜனை கேட்டது; காளியின் வாள்வீச்சு விர்விர்ரென்று விழுந்தது. அகக் கண்முன் மகிஷாசுரனுடைய தலை பனங்காய்போல் உருண்டு விழும் காட்சி எழுந்தது. உள்ளத்தில் பீதி உண்டாயிற்று. மயிர்க்கூச் செறிந்தது. உடல் முழுதும் நனைந்துபோயிற்று. அப்படியே கீழே விழுந்து நமஸ்காரம் செய்தாள். மனசு அமைதியுறவில்லை. நேரே சின்னம்மா வீட்டிற்குச்சென்றாள்.

அந்த நேரத்தில் எஜமானியைப் பார்த்ததும் சின்னம்மாவுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது. எச்சுமு இடுப்பில் கைவைத்துக்கொண்டு, "இன்னும் ஏதாவது அடிவாங்கி வைக்கப் போறேளா என்ன? ஒங்க பொம்மையைத்தான் அன்னிக்கு நீங்க எடுத்துக்கிண்டு போகல்லென்னாட்டு ஒடனே கொண்டுவந்து நானே வெச்சுட்டேனே!" என்றாள்.

ராஜாமணி அம்மாளின் கண்களில் நீர் கரகர வென்று கிளம்பிற்று. "என் அல்பபுத்தியை என்னென்று சொல்றது? சின்னம்மா! படாப் பழியைக் குழந்தைமேலே சுமத்தினேன். பலகை இடுக்கிலே இருந்து அந்த நகை இப்போ ஆப்புட்டுது. என்னை மஹிஷாசுரமர்த்தனிதான் காப்பாத்தணும்" என்று சொல்லிக் கைகுவித்தாள்.

சின்னம்மாவுக்கு நா எழவில்லை. குழந்தை எச்சுமுவைக் கட்டியணைத்துக்கொண்டு மௌனமாய்க் கண்ணீர் விட்டாள்.

# மழை இருட்டு

[ரா. ஸ்ரீ. தேசிகன், எம். ஏ.]

ஆடி மாதம். பதினெட்டாம் பெருக்குக்கு முதல்நாள் சாயந்திரம். மேற்கே தேவாசுர யுத்தத்திற்கு அணிவகுத்தது போல், வரிசை வரிசையாய் நிமிர்ந்தெழும் மேகங்கள்; ஆகாயத்தில் யுத்த ஸன்னாஹம்; பூமியின்மீது ஒரு கபடமான அமைதி.

தாவி வருகின்ற இருட்டில், மறையூர் வீரட்டாறு இருகரையும் புரண்டு சீறிப் பயங்கரமாய் ஓடிற்று. நாணல் படர்ந்த கரையிலே மூங்கில் பாலத்தின் அருகே, இரண்டு பேர் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

"தாத்தா, எப்படி இருண்டுக்கிட்டு வருகுது பாரேன்! போன வருச மாதிரி இந்த வருசமும் யாரையோ பலியில்லே வாங்கக் காத்திருக்கு இந்த ஆறு! என்ன சுழிப்பு, என்ன கொந்தளிப்பு! கிழிச்சுக்கிட்டில்லே ஓடுது" என்றான் மத்திய வயதுள்ள ஒருவன்.

"கறுப்பா, பலிவாங்காமே என்ன பண்ணும்? அதோ இருக்காரே சாமி வீரன், அவருக்குச் செய்ய வேண்டிய திருவிழா, படைப்பு எல்லாம் நின்னுபோயிட்டுது. அவருக்கு விட்ட மானிய நிலங்களிலுள்ள வருமானத்தையெல்லாம் ஊர்ப் பட்டாமணியக்காரரும், கணக்குப்பிள்ளையும் சேர்ந்து

சாப்பிடுகிருக. நாலு வருசத்திற்குமுந்தி இந்த மாதிரியான சாவு இங்கே உண்டா? எனக்கு எழுபது ஆகப்போவுது; இதுவரையில் இதுமாதிரி சேதி காதிலேகூட விழுந்ததில்லே. கலி முத்துது. போன வருசம் பட்டாமணியக்காரர் அருமந்த மகன் தவறிட்டான், தெரியுமா? பண்ணுகிற அக்கிரமத் துக்குக் கைமேலே பலன் கிடைச்சுடுது" என்று தழு தழுத்த குரலில் மறுமொழி கூறினன் மற்றவன்.

"உங்க மகன் போன வருசம் இறந்தானே; நீங்க ஏதா கிலும் தப்புத் தண்டாவுக்குப் போறீங்களா? இந்தத் தள் ளாத வயசில் எங்களோடே களேபிடுங்கிறீங்க, உழுறீங்க; ஏதோ உழைச்சுச் சாப்பிடுறீங்க. அடுத்த ஊர்ப் பட்டாமணி யக்காரர் பண்ணுகிற அக்கிரமங்கள் கணக்கு வழக்கில்லே; ஆனால் வருசத்திலே ஒரு பிள்ளே உண்டாகுது. நிலத்துக்கு நிலம் சேருது. அதுக்கென்ன சொல்றீங்க?" என்று கேட் டான் கறுப்பன்.

இந்த வார்த்தைகள் கிழவனுடைய ஞாபகங்களைத் தட்டி யெழுப்பின. ஒன்றன்பின் ஒன்றாக அவை அவன் மனத்தில் எழுந்தன. உழுத நிலம்போல் பள்ளங் குழிகள் விழுந்த அவன் முகத்தில் கண்ணீர் அருவி பாய்ந்தது.

"இந்த ஜன்மத்திலே நான் ஒரு பாவத்தையும் அறி யேன். முன்னே ஏதானும் செய்திருப்பேன். அதனுடைய பலன் இது. சும்மா நடக்குமா, அப்பா? அவன் இருந்தால் எனக்கு எவ்வளவோ உதவியாயிருக்கும். வீட்டிலே சும்மா குந்திக்கிட்டிருப்பேன். என் வினே, மண்டையைப் போடுகிற நாள் வரையில் உழைச்சு உழைச்சுச் சாப்பிடணும். உன்னைப் பார்க்கிற போதெல்லாம் என்மகன் ஞாபகம் வருது" என்று தொண்டை யடைக்க மொழிந்தான் முதியவன்.

"தாத்தா, மன்னிக்கணும். வாய்தவறி, இறந்துபோன உங்க மகன் பேச்சை எடுத்துவிட்டேன். ஆறிவருகிற

புண்ணைக் கீறி விட்டேனுங்க. வீட்டுக்குப் போவோமா? மழை குமுறிக்கொண்டு வருகுது. நம்ம வீடுகள் ஊத்தற இந்த மழையிலே என்ன ஆகுமோ? பயமாயிருக்குது" என்று இரங்கிப் பேசினான் கறுப்பன்.

"வீரன் காப்பாத்துவான். கவலைப்படாதே, தம்பி. பாலம் ஓரத்தில் முறிஞ்சிருக்குது. வீரப்பனே! நீதான் காப்பாத்தவேணும், இங்கே வருகிற ஏழை ஜனங்களை" என்றான் கிழவன், கோயிலிருந்த திசைநோக்கிக் கைதொழுதபடி.

கறுப்பன் முன் செல்லக் கிழவன் சிந்தையில் ஆழ்ந்தவனாய் மெள்ள வீட்டை நோக்கி நடந்தான்.

*      *      *

அதே சமயத்தில் மறையூர்க் கிராமத்தில் ஒரு வீட்டில் தாயும் பெண்ணும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"அம்மா, என்னை நாளைக்கு ஊருக்கு அனுப்பிவிடு. இங்கே வந்து இரண்டு மாசத்திற்கு மேலாச்சு. என் ஆத்துக்காரருக்குச் சரியான உடம்பில்லை. மாமியார் கோபித்துக் கொள்ளுவார். அவருக்கும் தள்ளாத உடம்பு. அவர் உன்னைக் காட்டிலும் என்னிடத்தில் பிரீதியாயிருக்கிறார். இருந்தாலும் பிறந்தகத்தில் ரொம்ப நாள் உட்கார்ந்தால் யாருக்குத்தான் கோபம் வராது?"

"என்ன சுவர்ணம், நீ வருஷத்திற்கு வருஷம் இங்கே வருகிறாயா? ஒவ்வொரு வருஷமும் டில்லியிலிருந்து வரத்தான் முடியுமா? உன்னைப் பார்த்து வருஷம் மூன்றுக்கு மேல் ஆகிவிட்டன. நாளைக்குப் பதினெட்டாம் பெருக்கு; கிட்டு வந்துடுவான். நீங்கள் மூன்று பேரும் வேடிக்கையாய் ஆற்றங்கரையில் உட்கார்ந்து சாப்பிடலாம். அவன் தான் உனக்குத் தெரியுமே, உன் மாமா ஆத்தில் வாசித்துக் கொண்டிருக்கிறான். நீ பார்ப்பதற்குத்தான் அவனை அழைத்து

வரப் பாலுவை அனுப்பினேன். இன்றைக்குக் கடுதாசி வந்திருக்கிறதே; நீதான் பிரித்துப் பார்த்தாயே."

"ஏனம்மா, பாலுவுக்கு இன்னும் வேலை கிடைக்க வில்லை? எம். ஏ., பாஸ் பண்ணி இரண்டு வருஷத்திற்குமேல் இருக்கும்போல் இருக்கிறதே. என் அகத்துக்காரரிடம் சொல்லி அங்கே ஏதேனும் வேலை பண்ணிவைக்கச் சொல்லு கிறேன். தூரத்தைப் பார்த்தால் முடியுமா? இந்தப் பக்கத் தில்தான் கிடைக்கவில்லையே."

"அவனுந்தான், அத்திம்பேரிடம் போகவேண்டு மென்று சொல்லிக்கொண்டிருக்கிறான். ஏதோ டைப்பாம், அதைக் கற்றுக்கொண்டிருக்கிறான். என்னவோ குறுக் கெழுத்தாமே, அதுவுந்தான் கற்றுக்கொள்கிறான். எல்லாவற் றிற்கும் வேளையும் பொழுதும் வரவேண்டாமா! உன் தம்பி யையும் உன்னோடு அனுப்பிவிட்டால் தனியாய் நான் என்ன பண்ணுகிறது?"

"வீட்டை யாரையாவது பார்த்துக்கொள்ளச் சொல்லு கிறது, நிலத்தைக் குத்தகைக்கு விடுகிறது, நீயும் அங்கே வந்துவிடுகிறது."

"சொல்லுகிறதெல்லாம் சரிதான். இன்னும் ஒரு வருஷம் பார்க்கிறேன். அப்படி ஒன்றும் கிடைக்காது போனால் அங்கேயே வந்துவிட்டால் போச்சு."

"அம்மா! கிட்டு சமத்தா யிருக்கிறானோ? முன்னெல் லாம் ரொம்பக் குறும்பு பண்ணுவானே. மரத்தில் ஏறுகிறது, தூணில் தாவுகிறது, இவை யெல்லாம் விட்டுவிட்டானோ இல்லையோ?"

"இப்பொழுதுதான் நீ கிட்டுவைப் பார்க்கவேணும். குறும்பெல்லாம் இருந்தவிடம் தெரியவில்லை. கிளாஸிலே முதல் மார்க்கு வாங்குகிறான் என்று உன் மாமாகூட எழுதி யிருக்கிறான். பாலுவும் இப்படித்தான் இருந்தான். அவன்

பேசுகிற சோடு உனக்கு இப்பொழுது தெரிகிறதா? எல்லாம் வயசானல் சரியாய்ப் போய்விடும்."

"அம்மா, மழை பெய்யும்போல் இருக்கிறதே. மழையிலே நனையாமல் வரவேணுமே பாலுவும் கிட்டுவும்!"

"அதுகூட எனக்குப் பயமில்லை. மூங்கில் பாலத்திலே வராமல் பெரிய பாலம் சுற்றிவந்தால் பாதகமில்லை. அதுதான் பாலு போயிருக்கிருனே, அவனுக்குத் தெரியாதா? இருந்தாலும் சௌக்கியமாக வந்தால் இந்த ஊர் அனுமாருக்கு வடைமாலை சாத்துவதாக வேண்டிக் கொண்டிருக்கிறேன்."

"இந்த ஊர் அனுமார் ரொம்ப வரப்பிரசாதியாமே? நானும் சந்தனக் காப்புச் சாத்துவதாக வேண்டிக்கொண்டிருக்கிறேன். ஆத்துக்காரருக்குத்தான் ஏதேனும் பிடித்துக் கொண்டே இருக்கிறதே."

"உங்கள் அப்பா இருக்கிறவரையில் அந்த அனுமாரைத்தான் நம்பியிருந்தார். அவருள்ளவரையில் ஒருகுறையும் வரவில்லை. நீங்களெல்லாம் சௌக்கியமா இருக்கிறதை அவர் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை" என்று சொல்லிக் கொண்டே கண்ணீர் உகுத்தாள், அப்பெண்ணின் தாய்.

வீட்டுக் காரியம் சீக்கிரமாக ஆகிவிட்டதால், படுக்கையில் படுத்துக்கொண்டே அவர்கள் அநேக ஆயிரம் விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

மழை வேகமாய்ப் பெய்யத் தொடங்கிற்று. இடியும் மின்னலும் மும்முரமாயிருந்தன. ஏதோ இவர்கள் சம்பாஷித்தார்களே யொழிய இவர்கள் சிந்தையெல்லாம் பாலுவினிடத்திலும் கிட்டுவினிடத்திலுந்தான் இருந்தது.

*　　*　　*

இரவு சுமார் எட்டுமணி யிருக்கும்; மழை சற்று நின்றது. ஆனல் காற்று நின்றபாடில்லை. ஓலமிட்டுக் கொண்டிருந்

தது. வீரட்டான் ஆற்றங்கரைக்கு இக்கரையிலுள்ள வாதவ னூரில் ஒரு வீட்டுத் திண்ணையில் இருவர் உட்கார்ந்திருந் தார்கள்.

"மழை சற்று நின்றிருக்கிறது. இப்பொழுது கிளம்ப லாமா? கிட்டு."

"ஆமாம். கிளம்புவோமே. பாலத்தைச் சுற்றிக்கொண்டு போகவேண்டாம். மூங்கில் பாலத்தின் வழியாகப் போய்விடு வோமே" என்று மொழிந்தான் கிட்டு.

"மழையும் காற்றுமா யிருக்கிறது. மூங்கில் பாலம் என்னவா யிருக்குமோ? இராத்திரி வேண்டுமென்றால் இங்கே தங்கிவிட்டால் போச்சு; மாமா கொடுத்த பக்ஷணத் தைச் சாப்பிடுகிறது. இங்கேயே இருந்துவிடுவோம். பல பலவென்று பொழுது விடிகிற சமயம் ஊருக்குக் கிளம்பு வோம். போகிறதா யிருந்தால் பெரிய பாலத்தைச் சுற்றிக் கொண்டுதான் போகவேண்டும்" என்றான் பாலன்.

"இந்த வாதவனூரில் இராத்திரியிலே தங்கினால் அம்மா அக்கா கவலைப் படுவார்கள். இப்பொழுதே கிளம்பிவிடு வோம். ஆற்றுக்கு அக்கரைதானே நம்ம ஊர்? மூக்கை இப்படித் தொடுவானேன்?" என்று பதில் கூறினான் கிட்டு.

விதியின் வசமோ, அல்லது புத்தியில்லாத்தனமோ கிட்டுவுக்கு இணங்கிவிட்டான் பாலு.

மின்னல் வெளிச்சத்தில் துழாவிக்கொண்டே மூங்கில் பாலத்திற்கு வந்தார்கள். கிட்டு முன்னால் பாலத்தின்மேல் காலை வைத்தான்.

"ஜாக்கிரதையாகப் போ; பதற்றம் வேண்டாம்" என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே கிட்டு வேகமாய் நடந்தான்.

திடீரெனத் தொப்பென்ற சப்தம் கேட்டது. "ஐயோ பாலு, அம்மா! போறேனே" என்ற கூச்சல் எழுந்ததோ

இல்லையோ, பாலு தண்ணீரில் குதித்தான். தம்பியை வெள்ளம் அடித்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தது. அவன் முழுகவில்லை; நீந்துகிறான். பாலு அவனைப் பின்தொடர்கிறான். தம்பி தலை தெரிகிறது. தமையனால் காப்பாற்ற முடியவில்லை.

மறையூர்ப் படித்துறை தென்பட்டதும் பாலுவுக்கு மார்பு பக் பக்கென்று அடித்தது. அவ்வூர்த் துறைக்குப் பக்கத்தில் ஒரு மதகு. அதன் அருகில் ஒரு பெருஞ் சுழல் பகாசுரன் மாதிரி ஆவென்று வாயைத் திறந்துகொண்டிருந்தது. அந்தச் சுழலில் கிட்டு அகப்பட்டுவிட்டான். அது அப்படியே அவனை உள்ளே இழுத்துவிட்டது. பாலுவும் அதில் அகப்பட்டான். ஆனால் அவனை அது மேலே கொணர்ந்து தள்ளிவிட்டது. எந்தத் துறையில் கிட்டுவும் அவனும் தண்ணீரில் துளைவார்களோ அந்தத் துறையில் அவனை ஒதுக்கிவிட்டது.

பாலுவுக்குப் புத்தி நிதானப்படவில்லை. மண்டையில் திடீரென்று ஓர் அடி விழுந்தால் ஒன்றுமே தோன்றாதது போல், அவன் அசைவற்று நின்றான். இதற்குள் நின்ற மழை மும்முரமாய் ஆரம்பித்துவிட்டது. பைத்தியம் பிடித்தவன்போல் அந்தச் சுழலையே பார்த்தவண்ணம் அவன் நின்றான். ஒரு சம்பவமும் நடவாததுபோலவே ஆறு ஓடிக்கொண்டிருந்தது.

பெருங்காற்றிலே மரங்கள் சடசடவென விழுந்தன. வலையில் அகப்பட்ட மிருகம்போல் உறுமிற்று, புயற் காற்று. எங்கே பார்த்தாலும் பஞ்சபூதங்களின் பெரும் பூசல்தான்.

இவைகளை யெல்லாம் பாலு கவனிக்கவில்லை. தோட்டிகள் தொண்டைமான்கள், பண்டிதர்கள் பாமரர்கள், ஞானிகள் மூடர்கள், நல்லவர்கள் கெட்டவர்கள், ஆடவர்கள்

விருத்தர்கள், பெண்கள் சிசுக்கள் என்று பாராது எல்லோ ரையும் ஒருமிக்க வாரியடித்துச் செல்லும் விதியேபோல் விரைந்து செல்லுகின்ற வீரட்டான் ஆற்ளேடு, அவன் கண்களும் ஓடிக்கொண்டிருந்தன.

*　　　　*　　　　*

மணி பதினென்ருயிற்று. சுவர்ணமும் தாயும் வாச லில் எத்தனையோ தரம் வந்து எட்டிப் பார்த்தார்கள். எங்கே யாவது தொழுவிலே கட்டியிருக்கிற மாடு கத்துவது கேட் கும்போதெல்லாம் வண்டி வாசலில் நிற்பதாக எண்ணி வெளி யே வந்து ஏமாந்து போவார்கள். 'ஒருவேளை வாதவனூரில் தங்கியிருப்பார்கள்; பொழுது விடிய அவர்கள் இங்கே வரலாம்' என்று மனத்தை ஒருவாறு தேற்றிக்கொண்டு தூங்கவும் ஆரம்பித்துவிட்டார்கள்.

பாலு தன்னை அறியாமல் வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். ஏதோ மூச்சு ஓடிக்கொண்டிருந்தது. மற்ற உணர்ச்சிகளெல்லாம் இறந்துவிட்டன வென்றே சொல்லி விடலாம். காற்றின்முன் மிதந்து செல்லும் ஒரு பொருளை போல் அடிபெயர்த்தான். ஏதோ ஒன்று அவனைத் தள்ளிக் கொண்டு போயிற்று. வீட்டிற்குப் போனதும் கதவைத் தட்டவில்லை. அங்கே கல்லும் கட்டையும்போல் நின்ருன். இதற்குள் ஒரு பெரிய காற்றுக் கதவை மோதிற்று; யாரோ தட்டுவதுபோல் தாய்க்கும் பெண்ணுக்கும் காதில் பட்டது.

தாயும் சுவர்ணமும், "கிட்டு! கிட்டு!" என்று சொல்லிக் கொண்டே கதவைத் திறந்தார்கள். பாலுதான் நிற்கிருன். கிட்டுவைக் காணவில்லை!

"கிட்டு எங்கே பாலு?" அதற்குப் பதில் இல்லை.

"கிட்டு உன்னேடு வரமாட்டேனென்று சொல்லி விட்டானு?" அதற்கும் பதில் இல்லை.

"குழந்தையை ஆற்றில் பறிகொடுத்து விட்டாயா?"
அதற்கும் பதில் இல்லை.

"ஐயோ! ஐயோ! இதற்குத்தானா இரண்டு மாதம் காத்தேன்? ஐயையோ! பதினெட்டாம் பெருக்குக்குச் சேர்ந்து சாப்பிடலாமென்று சொன்னாயே அம்மா ! இதுதான் பதினெட்டாம் பெருக்கோ, அம்மா!"

"அம்மா, சுவர்ணம் ? நான் என்ன பண்ணுவேன் ! இதற்குத்தானா நான் பாலுவை அனுப்பினேன்? எமன் பாலக் கரையிலே உட்கார்ந்திருந்தான். அனுமாரே! இதற்குத்தானா உனக்கு வடைமாலை சாத்துவதாக வேண்டிக்கொண்டேன் ?"

தாயும் பெண்ணும் கட்டிக்கொண்டு புலம்பினார்கள். பாலு பேச்சற்று நின்றான். அவனுக்கு அழுகைகூட வரவில்லை. கண்ணீர் ஊற்றுக்கள்கூடச் சுடு சோகத்தினால் வறண்டுபோய்விட்டன போலும்!

மழை இரக்கமின்றிப் பெய்தது; இடி ஓயாமல் இடித்தது ; மின்னல் இடைவிடாமல் மின்னிற்று. ஊர் பெரிய உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. பொழுது விடிந்ததும் கூத்தும் கொண்டாட்டமும் ; ஆனால் ஓர் அகத்தில் விழிப்பும், விம்மலும் ! ஏனோ இது ! ஏனோ இது !



# ஒரு ஜோடிக் காளை

[தி. ஜ. ர.]

அந்த நூறு குழிதான் ஏழைக் காத்தானின் ஆஸ்தி. சோமுப் பிள்ளையும் ஐந்து வருஷமாக அதை எப்படியாவது வாங்கிவிட வேண்டுமென்று கஜகர்ணம் போட்டுவருகிறார். சேர்ந்தாற்போல ஒரே தாக்காகப் பத்தொன்பது மாநிலம் அவருக்கு இருக்கிறது. இந்த ஒரு மாநிலத்தையும் அதோடு கூட்டி ஒரு வேலியாகச் செய்துவிட வேண்டும் என்பது தான் அவருடைய ஆசை. அதற்காக, நயத்தாலும் பயத் தாலும் என்ன என்னவோ சொல்லிப் பார்த்தார். காத்தான் இதுவரையில் மசிகிற வழியாகக் காணவில்லை.

கிராமத்தில் சோமுப் பிள்ளை வசிக்கவில்லை. பக்கத்து நகரத்தில்தான் அவர் வீடு. என்றாலும், அவருக்குக் கிரா மத்தில் நல்ல செல்வாக்குண்டு; பலமான கொடுக்கல் வாங் கலும் உண்டு. ஆனாலும், யாரிடமும் அவர் குரூரமாக நடந்து கொண்டதில்லை. ஏழைக் காத்தானை அவர் பலவந்தம் செய் தால், அவன் பணிந்து போகத்தான் வேண்டும். அவருக்கு அது பிடிக்கவில்லை. கசக்கி மோந்து பார்க்கக்கூடாது என் பதே அவருடைய எண்ணம். சோனிக் காத்தானோ மகா பிடிவாதக்காரன். அதோடு என்னவோ அப்பன் பாட்டன்

தேடிவைத்த சொத்தை விற்கக்கூடாது என்று அவன் சொல்லிக்கொண்டிருந்தான்.

பெரியவர் வீட்டு முகப்பில் பேச்சு வார்த்தை. 'பெரியவர்' என்பது, ஊரிலே பழமையான நாட்டாண்மை உடைய ஒருவர் வீட்டுக்கே வழங்கிவரும் பெயர். இப்பொழுது அந்த வீட்டில் யாரும் பெரியவர் இல்லை.

பக்கத்தில் வெற்றிலைப் பெட்டி. வெற்றிலையை அதப்பிக் கொண்டே சிரித்த முகத்துடன் சோமுப் பிள்ளை கேட்கலானார்: "என்னப்பா, காத்தான்! குருவை கண்டுமுதல் எப்படி? நல்ல போடுதான்போல் இருக்கிறது."

காத்தான் முகத்தில் சிரிப்போ, துக்கமோ இல்லை. தூணிலே சாய்ந்துகொண்டு, சில சாமியார்களைப் போலத் தலையைச் சிறிது குனிந்தவண்ணம் பதில் சொல்லுகிறான்: "அதை ஏன் கேட்கிறீர்கள்? அண்ணே! அந்தப் பாழாய்ப் போகிற பயலுகள் மாட்டுக்கு வைத்தியம் செய்யவேண்டியதாய்ப் போய்விட்டது. வண்டிச்சத்த வரும்படியும் கிடையாது. பணமும் போச்சு, பயிரும் பாழாச்சு. இத்தனை இழவில் நெல்லு விலையும் விழுந்துவிட்டது. பிழைப்பே திண்டாட்டத்தில் இருக்கிறது."

பிள்ளைக்கே மனம் சற்று இளகிவிட்டது. என்றாலும் அந்த நூறு குழியை மாத்திரம் அவர் மறக்கவில்லை.

"நீ ஒரு பைத்தியக்காரன். நான் என்னவோ உனக்குக் கெடுதல் நினைப்பதைப்போல் நீ எண்ணுவாய். அந்த நிலத்துக்கும் உனக்கும் ராசியில்லை யென்று சொல்லுகிறார்கள். ஐந்து வருஷமாய் உனக்கு ஏதாவது விருத்தி ஏற்பட்டிருக்கிறதா?" என்று பரிவோடு சொன்னார் பிள்ளை.

பரம்பரைச் சொத்தை விற்க மனம் வரவில்லை. ஆனால் பிழைப்புக்கும் வழியில்லை. இந்த எல்லா எண்ணத்தையும் சேர்த்து ஒரு கதம்பமாக, என்னவோ மென்று முனகிக்

கொண்டு, முன்னுக்குப்பின் சம்பந்தம் இல்லாமல், தனது கஷ்டத்தைச் சில வார்த்தைகளால் வெளிப்படுத்தினான் காத்தான்.

பாம்பின் கால் பாம்புக்குத் தெரியுமல்லவா? இது தான் தருணம் என்று உணர்ந்துகொண்டார் சோமுப் பிள்ளை. "இரும்பு சூடாய் இருக்கும்போதே சுத்தியலைப் போடு" என்று ஆங்கிலத்திலே ஒரு பழமொழியுண்டு. பழைய யோசனையைத் திரும்பவும் சொல்லுவதால் கசப்பு அதிகரிக்கக் கூடும். புதிய யோசனை ஒன்றை விதைக்க வேண்டுமென்ற ஒரு யுக்தி அவருக்குத் திடீரென்று தோன்றிற்று.

"அது கிடக்கிறது, காத்தான்! நீ ஏன் பட்டணத்தில் வந்து வசிக்கப்படாது?" என்று அவர் வினவினார்.

"பட்டணத்திலா?" என்று இரைந்து அசட்டுச் சிரிப்புடன் கேட்ட காத்தான், "என் போன்றவர்களுக்கு அங்கே ஏதாவது பிழைப்பு இருந்தால்தானே வரலாம்?" என்றான்.

"பிழைப்பு இருக்கக்கொண்டுதான் சொல்லுகிறேன்" என்ற சோமுப்பிள்ளை சற்றுத் தாழ்ந்த குரலில், "நம் வீட்டுக்குக்கூட வண்டி, மாடு கன்றுகளைப் பார்த்துக்கொள்ள ஓர் ஆள் தேவையா யிருக்கிறது. உன்போல் யோக்கியமான ஆள் வேண்டும். நீயே வந்தால் இரட்டைச் சந்தோஷம்" என்றார்.

காத்தான் சரியானபடி அகப்பட்டுக்கொண்டான். இது வரையில் நகரவாசத்தைப்பற்றி அவன் நினைத்ததே இல்லை. அதுவும் தனக்குக் கிடைக்கும் என்று அவனுக்குத் தோன்றியதே இல்லை. ஏதோ ஊரை வளைத்துப் பதில் சொன்னான்.

"நிலபுலம் இருக்கின்றன; மாடு கன்றுகள் இருக்கின்றன; வீடு இருக்கிறது. இவற்றை யெல்லாம் என்ன செய்கிறது? பட்டணம் வரவும் ஆசைதான். இந்த வருஷம்

சாப்பாட்டுக்கு வழியில்லை என்பதற்காக, இவற்றையெல்லாம் அவந்தரையாகப் போட்டுவிட்டுப் பட்டணம் சென்றால், அடுத்த வருஷம் சொந்த ஊருக்கு வர ஆசை வந்தால்...?" அவன் ஒன்றையும் மறைக்கவில்லை. வெளிவிட்டுச்சொன்னான்.

இன்றைச் சம்பாஷணையை இதோடு நிறுத்திவிட்டுப் போய்விட்டார் சோமுப்பிள்ளை. இன்னும் இரண்டு மூன்று சம்பாஷணைகள் நடைபெற்றன. அதற்குள் வாய்தா நெருக்கடி, தானியப் பஞ்சம், ஊர்வரி முதலிய நிர்ப்பந்தங்களும் அவன் மனத்தைத் திருப்புவதற்குத் தம்மாலான கைங்கர்யத்தைப் புரிந்தன. பிள்ளை சொன்னது பெரிய யோசனை. அது பலித்துவிட்டது. இந்தக் கிராமந்தான் அவனுக்குச் சாசுவதமா? நிலம் கால்வட்டிக்குக்கூடக் கட்டவில்லை. பணமாய்ச் செய்தால் பிள்ளை ஒரு வட்டி தருவார். நிலம், மாடு, வீடு, வண்டி எல்லாவற்றையும் சேர்த்து வாங்கிக்கொள்வதாகச் சொல்லுகிறார் பிள்ளை. ஊரில் போடுகிற விலையை விட நூறுரூபாய் ஜாஸ்தியாகவே தர அவர் இசைகிறார். எண்ணூறு ரூபாய் ரொக்கப்பணம், மாதம் பதினைந்து ரூபாய் சம்பளம், நகரவாசம் - இவற்றைச் சேர்ந்தாற்போல ஒரே சித்திரமாகக் கற்பனை செய்தான் காத்தான். (அவனுக்குக்கூடக் கற்பனை இருந்திருக்கிறது!) இணங்கிவிட்டான்.

* * *

"காத்தான், நீ தைமாசம் கட்டாயம் வந்துவிடு. மாட்டையும் வண்டியையும் நீ வரும்போது கொண்டுவா என்றால் கேட்கமாட்டேன் என்கிறாயே" என்று சற்றுப் பரிவு, கொஞ்சம் சந்தோஷம், சிறிது விந்தை இந்த மூன்று உணர்ச்சிகளையும் திரித்த சன்னக் கயிறுபோன்ற தொனியுடன் சொன்னார் சோமுப்பிள்ளை.

ஒரு ஜோடிக் காளைகளை இழுத்துக்கொண்டு வந்த காத்தான், "அதுவரையில் இந்தச் சனியன்களை வைத்துக்

கொண்டு காப்பாற்றுவார் யார்?" என்ற சலிப்புடன் வண்டியில் பூட்டலானான்.

வாட்ட சாட்டமான அந்த மாடுகள் அவன் தேகத்தை நக்கிக்கொண்டே நுகத்தடியின்கீழ்த் தலையைத் தாமாகவே மாட்டிக்கொண்டன.

"கடைமுளை கிடையாதா?" என்றார் பிள்ளை.

"சாதுவான மாடுகள் அண்ணே" என்று நகைத்துக் கொண்டே கூறினான் காத்தான்.

"நல்ல குணங்குறியுள்ள மாடுகள்தாம்" என்று தமக்குத் தாமே மெல்லக் கூறிக்கொண்டார் பிள்ளை.

வண்டியைப் பூட்டியாயிற்று.

"ஏ குட்டி! ஏன் சும்மா நிக்கிறே? அந்தப் புல்லுக் கட்டை வண்டியில் பரப்பேன்" என்றான் காத்தான்.

காத்தான் மனைவி உளுந்தாயி, மனத்துக்குள் என்னவோ முணுமுணுத்துக்கொண்டே புல்லை வண்டியில் பரப்பினாள்.

பிள்ளைக்கு வேறே ஆள் வேண்டியதில்லை. தாம் புதிதாய் வாங்கிய வண்டியையும் மாட்டையும் தாமே ஓட்டிச் செல்லப் போவதில் பெரிய குதூகலம்.

தளைகளைக் கையில் பிடித்து ஏறி உட்கார்ந்த பிள்ளை, "நான் மறுபடியும் அடிக்கடி வருவேன். உனக்கு ஏதாவது பணம் வேண்டுமானால் கேள். கூச்சம் வேண்டாம். தை மாசம் கட்டாயம் வந்துவிடு" என்று சொல்லிவிட்டு மாடுகளைத் தட்டிவிட்டார்.

ஊருக்கு நான்கு நாழி தூரத்துக்கு அப்புறம் சென்று பிள்ளையின் வண்டி சாரத்தியத்தை நாம் பார்ப்போம். 'சாது' மாடுகள் பலவிதமாய்ச் சண்டித்தனம் செய்வதைக் கண்டு அவர் ஆத்திரம் கொண்டார். "இந்தக் காத்தான் பொய்யன்" என்று பல்லைக் கடித்தார். "பணந்தான் அவனை

என்னுடைய அடிமை ஆக்கிவிட்டதே" என்று திடீரென்று ஏதோ ஒரு நினைவு குறுக்கே பாய்ந்தது.

நிர்மானுஷ்யமான பெரிய தோப்பு. வண்டி அதனை மூன்று முறை திரும்பத் திரும்பச் சக்கர வளையம் சுற்றி விட்டது. மாடுகளுக்கு அடி மிகப்பலம். "அம்மா! அம்மா!" என்ற அவற்றின் கதறல் ஆகாயத்தை அதிரச் செய்துகொண்டிருந்தது. ஒரேயடியாக மாடுகள் இப்பொழுது படுத்து விட்டன.

அஸ்தமித்துவிட்டது. உலகத்தையே விழுங்கப்போவது போல் மழைக்கால் இறங்கி நாலுபுறமும் கறுத்துக் கவிந்து விட்டது. வண்டி இன்னும் தோப்பை விட்டு நகரவில்லை.

ஒரே இருட்டு. இடையிடையே குமுறி இடிக்கும் மின்னல் ஒளியைத் தவிர வேறு வெளிச்சத்துக்கு வழியே இல்லை. 'ஏழைக் காத்தான் குடும்பத்தையே அடியோடு விலைக்கு வாங்கிவிட்ட கொடுமைதான் ஒருகால் கடவுளுக்குச் சகிக்கவில்லையோ?' என்றுகூட ஒரு சமயம் பிள்ளைக்குத் தோன்றியது. என்ன என்னவோ நினைத்தார்; ஈசுவரனைப் பிரார்த்தித்தார்.

மாடுகளைச் 'சொப்பை' தட்டிக்கொடுத்தார். மெல்ல வண்டியில் தட்டித் தடவிப் பூட்டினார். "சோ!" என்ற மழை. உடம்பெல்லாம் குளிரால் விதிர்க்கிறது. அப்படியே வண்டியில் ஏறி உட்கார்ந்தார்.

மாடுகள் இப்போது சண்டித்தனம் செய்யவில்லை. சாரல் மிகப்பலம். பிள்ளையின் தேகம் விறைத்துப் போயிற்று. வண்டியில் உடம்பை முடக்கிக்கொண்டு படுத்துவிட்டார். கையிலிருந்த தலைக்கயிறு போன இடங்கூட அவருக்குத் தெரியவில்லை. மாடுகள் ஓயாமல் நடந்தன.

எந்த வயலில் சாய்கிறதோ? எந்த வாய்க்காலில் கவிழ்கிறதோ? பாதை தெரியவில்லை. ஆனால், இந்தக் கவலைப்

படக்கூட அவர் மனத்திற்கு இயலவில்லை. மனமும் மரத்து விட்டதுபோலும்!

* * *

ஒரு மணி நேரம் கழிந்த பிறகு நடந்த சம்பவந்தான் இனி நமக்குத் தேவை.

"அப்பா! என்ன மழை! பிள்ளை இந்நேரம் ஊர் போய்ச் சேர்ந்திருப்பாரல்லவா?"

காத்தான் குடிசையில் நடக்கும் சம்பாஷணை இது.

"இன்னுமா போகாதிருக்கிறார்? மாட்டை என்ன பாடு படுத்துகிறாங்களோ!" என்று அங்கலாய்த்தான் காத்தான்.

"அடடா! அந்தப் பிண்ணுக்கு வீணாய்ப் போகுதே. போகச்சே அதைப்போட்டு மாட்டுக்குக் கொஞ்சம் தண்ணி தான் காட்டினீங்களா?" என்று சொன்னாள் உளுந்தாயி.

"சற்று இரு" என்று அதட்டிய காத்தான், காதில் கையை அணைத்து ஏதோ சத்தத்தைக் கவனித்தான்.

ஆம்! "அம்மா! அம்மா!" என்ற சத்தந்தான். சத்தம் வரவரச் சமீபித்தது. இப்பொழுது உளுந்தாயிக்குக்கூட அது நன்றாய்க் காதில் விழுந்தது. வாசலுக்கு வந்துவிட்டது அந்தச் சத்தம்.

கதவைத் திறந்து பார்த்த அந்த ஏழைத் தம்பதிகள், தங்கள் வண்டியையும் மாட்டையும் நேரே கண்டார்கள்; உள்ளே முடங்கிக் கிடந்த சோழப் பிள்ளையையும் கண்டு பிடித்தார்கள்.

ஐயோ! அவர் விறைத்துப்போய் விட்டார்!

"அண்ணே! அண்ணே!" என்று காத்தான் உளுந்தாயி இருவரும் சேர்ந்தாற்போலக் கூப்பிட்டார்கள்.

என்னவோ கனவுகண்டவர்போல, "என்ன! கும்பிடுகிறேன், ஐயனாரே! காத்தவராயனே! வழியை விடு.

என்ன வேண்டுதலை வேணுமானாலும் செய்யறேன்" என்றார் பிள்ளை.

"அண்ணே! உங்க வீடு, அண்ணே! நான்தான் காத்தான். இறங்கி வாருங்கள்" என்றான் காத்தான்.

'காத்தானு! காத்தான், காத்தான்" என்று இரண்டு மூன்று முறை உச்சரித்த பிள்ளையின் துக்கம் மௌனியை அடைத்துக்கொண்டது.

பிள்ளையைக் கைகொடுத்து உள்ளே அழைத்துச் சென்றான் காத்தான்.

கணப்புப் போடப்பட்டது. குளிர்காய்ந்தார் பிள்ளை. நல்ல ஸ்மரணை வருவதற்கு ஒரு மணி நேரம் ஆயிற்று.

பிறகு எல்லோரும் படுத்து உறங்கிவிட்டார்கள். ராத்திரி பேச்சு ஒன்றும் அதிகம் நடக்கவில்லை. பிள்ளை மட்டில் இரவு முழுதும் உறங்கவே இல்லை.

மறுநாள் பொழுது விடிந்ததோ இல்லையோ காத்தான் ஒன்றும் சொல்லாமலே வண்டியைப் பூட்டி அதன் எதிரே நின்றான்.

"வண்டி எதற்கப்பா?" என்றார் சோமுப் பிள்ளை.

"நீங்கள் இப்பொழுது போகவில்லையா? மாலையில் நேற்று மாதிரியே மழை வரக்கூடுமே" என்றான் காத்தான்.

சோமுப் பிள்ளை மிக்க நிதானமாகப் பதில் சொல்லலானார்:

"காத்தான்! உண்மையாகச் சொல்லுகிறேன். உன் நிலத்தை வாங்கினேன். வீட்டை வாங்கினேன். வண்டியை வாங்கினேன். மாடுகளையும் வாங்கினேன். ஆனால், அவற்றின் மனத்தைமட்டும் விலைக்கு வாங்கமுடியவில்லை, நேற்று மாலை முழுதும் அந்த ஒரு ஜோடிக் காளைகளுக்கும் எனக்கும் போராட்டம். சுவாமியும் அவற்றின் பக்கம் சேர்ந்து கொண்டார். நான் தோற்றுப் போனேன். இந்த எல்லாச்

சொத்தும் உன்னுடையவைதான். அதோடு, இனி இந்த ஊரில் நீ என்னுடைய காரியஸ்தன். என்னுடைய பத்து ஏர் மாடுகளையும் உன்னிடந்தான் ஒப்படைக்கப் போகிறேன்."

காத்தானுக்கு ஒன்றும் புரியவில்லை; "என்ன சொல்கிறீர்கள் அண்ணே!" என்று தலையைச் சொறிந்துகொண்டு நின்றான்.

ஒரு ஜோடி மாடுகளும் ஒன்றுடன் ஒன்று போட்டி போட்டு, அவன் உடம்பைத் தங்கள் நாவினால் சுத்தம் செய்துகொண்டிருந்தன.

# விடியுமா?

[கு. ப. ராஜகோபாலன், பி. ஏ.]

தந்தியைக் கண்டு எல்லோரும் இடிந்து உட்கார்ந்து போனோம். அதில் கண்டிருந்த விஷயம் எங்களுக்கு அர்த்தமே ஆகவில்லைபோல் இருந்தது.

"சிவராமையர்-டேஞ்ஜரஸ்" என்ற இரண்டு வார்த்தைகளே இருந்தன. தந்தி சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து வந்திருந்தது.

என் தமக்கை இரண்டு மாதங்களுக்கு முன்புதான் சென்னையிலிருந்து வந்தாள். அப்பொழுது எங்கள் அத்திம்பேர் நன்றாகக் குணமடைந்துவிட்டார். க்ஷயத்தின் சின்னம் கொஞ்சங்கூட இல்லையென்று பிரபல வைத்தியர்கள் நிச்சயமாகச் சொல்லிவிட்டார்கள்.

ஓங்கித் தலையில் அடித்ததுபோலக் குஞ்சம்மாள் பிரமை தட்டிப்போய் உட்கார்ந்திருந்தாள்.

எங்கள் எல்லோருடைய மனத்திலும் ஒரு பெருத்த போர் நடந்துகொண்டிருந்தது. "இருக்காது!", "ஏன் இருக்கக்கூடாது? இருக்கும்!" என்று இரண்டு விதமாக மனத்தில் எண்ணங்கள் உதித்துக்கொண்டிருந்தன. "இருக்கும்!" என்ற கட்சி, தந்தியின் பலத்தில் வேரூன்றி வலுக்க

வலுக்க, "இருக்காது!" என்ற கட்சி மூளை முடுக்குகளி லெல்லாம் ஓடிப் பாய்ந்து தனக்குப் பலம் தேட ஆரம்பித்தது.

தந்தியில் கண்டிருந்ததைத் திரும்பத் திரும்பப் படித் தோம். அதில் ஒன்றும் பிசகு இருக்கவே முடியாது. சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்துதான் வந்திருந்தது; சந்தேகமில்லை. காலையில் அடித்திருக்கிறார்கள்; குஞ்சம் மாள் பேருக்குத்தான். தவறு எப்படியிருக்க முடியும்?

ஆனால், இவ்வளவு சீக்கிரத்தில் என்ன நேர்ந்திருக்க முடியும்? மூன்று நாட்களுக்கு முன்புதானே கடிதம் வந் தது? ஏதாவது உடம்பு சௌகரியமில்லாமல் இருந்தால் அதில் எழுதாமல் இருப்பாரோ?

என் தமக்கையும் நானும் சாயந்திரம் ரயிலில் சென் னைக்குப் புறப்பட்டோம். அதுதான் அன்று கும்பகோணத்தி லிருந்து சென்னைக்குப் போகும் முதல்வண்டி.

புறப்படுவதற்குமுன் நல்ல வேளை பார்த்துப் 'பரஸ்தா னம்' இருந்தோம். சாஸ்திரிகள், "ஒண்ணும் இருக்காது. கிரகம் கொஞ்சம் பீடிக்கும்; அவ்வளவுதான்!" என்றார். அம்மா, தெய்வங்களுக்கெல்லாம், ஞாபகமாக ஒன்றைக்கூட விடாமல், பிரார்த்தனை செய்துகொண்டு மஞ்சள் துணியில் காணிக்கை முடிந்துவைத்தாள். குஞ்சம்மாளுக்கு மஞ்சள் கிழங்கு, குங்குமம், புஷ்பம், வெற்றிலைபாக்கு, க்ஷேமதண்டு லம் எல்லாம் மறந்துபோகாமல் மடிநிறையக் கட்டிக்கொடுத் தாள். பசியுடன் போகக்கூடாது என்று புறப்படும்பொழுது கட்டாயப்படுத்தி இருவரையும் சாப்பிடச் செய்தாள்.

குஞ்சம்மாள் இயந்திரம்போலச் சொன்னதையெல்லாம் செய்தாள்; "ஸ்வாமிக்கு நமஸ்காரம் பண்ணு" என்றதும் போய் நமஸ்காரம் செய்தாள்.

அவள் கதிகலங்கிப் போயிருந்தாள் என்பது அவள் பேச்சற்றுப் போயிருந்ததிலிருந்தே நன்றாகத் தெரிந்தது.

அவளுடைய கலகலப்பு முதல் தடவையாக அன்று எங்கோ அடங்கிவிட்டது.

அம்மா வாசலில் போய்ச் சகுனம் பார்த்தாள். திவ்விய மான சகுனம்: காவேரியிலிருந்து அடுத்தவீட்டுச் சுந்தரி ஜலம் எடுத்துக்கொண்டு எதிரே வந்தாள்.

"ஒண்ணும் இருக்காது! நமக்கேன் அப்படியெல்லாம் வரது? நாம் ஒத்தருக்கு ஒண்ணும் கெடுதல் எண்ணல்லே" என்றெல்லாம் அம்மா அடிக்கடி தன்னையும் பிறரையும் சமாதானம் செய்துகொண்டிருந்தாள்.

ரயில் ஏறுகிறபொழுது மணி சுமார் எட்டு இருக்கும். இரவு பூராவும் போயாகவேண்டுமே என்று துடித்தோம். போய் இறங்குவதற்குமுன் செய்வதற்கு ஒன்றுமில்லை யென்றதால், கொஞ்சங் கொஞ்சமாகத் துடிப்பும் கலக்கமுங் கூட மட்டுப்பட்டன. இரண்டு ஜன்னல்களின் அருகில் நேர் எதிராக இரண்டு பெஞ்சுகளில் உட்கார்ந்தோம்.

"நீ புறப்படுகிறபோது ஒன்றுமே இல்லையே, அக்கா?" என்றேன், ஏதாவது பேச்சுக்கொடுக்க வேண்டுமென்று.

"ஒண்ணும்இல்லையே! இருந்தால்புறப்பட்டுவருவேனா?" என்று அவள் ஏக்கம் நிறைந்த குரலில் பதில் சொன்னாள்.

"அதற்குள் திடீரென்று ஒன்றும் ஏற்படுவதற்குக் காரணமே இல்லையே!"

எது எப்படியானாலும், மனத்தைச் சில மணி நேர மாவது ஏமாற்றித் தத்தளிப்பைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளலாமென்று நினைத்ததுபோலப் பேச்சு வெளிவந்தது.

"நான் இந்த நோன்பிற்காக இங்கே தாமதம் செய் யாமல், போயிருக்காமல் போனேன்!"

"ஒருவேளை, அக்கா, நோன்பிற்காக நீ இங்கே இருந்து விட்டதுதான் அத்திம்பேருக்குக் கோபமோ? அவர் உடனே

வரும்படியாக எழுதியிருந்தார். நாம் ஒரு வாரத்தில் வருவதாகப் பதில் எழுதினோம். அதற்காகத்தான் இப்படித் தந்தி அடித்துவிட்டாரோ ?"

"ஆஸ்பத்திரியிலேயிருந்து வந்திருக்கே ?"

"ஆஸ்பத்திரிப் பேரை வைத்து அத்திம்பேரே அடிக்கக்கூடாதா ?"

"அப்படி அடிக்க முடியுமோ ?" குஞ்சம்மாள் குரலில் ஆவல் இருந்தது.

"ஏன் முடியாது ? தந்தியாபீஸில் - "

"ஒருவேளை அப்படியிருக்குமோ ?" என்று கேட்டபொழுது குஞ்சம்மாளின் முகம் கொஞ்சம் மலர்ந்துவிட்டது.

"அப்படித்தான் இருக்கவேண்டும். இப்படித் திடீரென்று ஒன்றும் ஏற்படக் காரணமே இல்லை. மூந்நாநாள் தானே கடிதாசு வந்தது !"

"ஆமாம் ! அதில் ஒடம்பைப் பத்தி ஒண்ணுமே இல்லையே ?"

"தந்தி யடித்தால் நாம் உடனே புறப்பட்டு வருவோம் என்றுதான் அடித்திருக்கிறார். வீட்டிலிருந்து அடித்தால் கூட அவ்வளவு தாக்காது என்று ஆஸ்பத்திரிப் பேரை வைத்து அடித்திருக்கிறார்."

"அப்படி அடிக்க முடியுமாடா, அம்பி ? அப்படியிருக்குமா ?" என்று மறுபடியும் குஞ்சம்மாள் சந்தேகத்துடன் கேட்டாள்.

அவள் அப்படிக் கேட்டபொழுது, முடியாது என்று எனக்குத் தெரிந்திருந்தால்கூடச் சொல்ல மனம் வந்திருக்குமோ, என்னவோ ?

"நீ வேண்டுமானால் பாரேன் ! எழும்பூர் ஸ்டேஷனில் வந்து இருக்கப்போகிறார் " என்றேன்.

மனத்தில், ஆழத்தில் பீதி அதுபாட்டிற்குப் புழுப் போலத் துளைத்துக்கொண்டே இருந்தது. மேலே மட்டும் சமாதானம். கொஞ்சநேரத்திற்கு ஒருதரம் அந்தத் திகில் மேல்மட்டத்திற்கு வந்து தலையெடுக்கும்; உடம்பு பதறும்; நெஞ்சு உலரும்; அடிவயிறு கலங்கும்; முகம் விகாரம் அடையும். மறுபடியும் மெதுவாகச் சமாதானத்தின் பலம் அதிகமாகும்; பயத்தைத் கீழே அமுக்கிவிடும்.

சுகமோ துக்கமோ, எந்த நிலைமையிலும் நீடிக்க முடியாது என்பதற்கு மனித சுபாவத்தில் இதுவும் ஓர் அத்தாட்சியோ?

ரயில் வண்டி வெறிபிடித்ததுபோல் தலைதெறிக்க ஓடிக்கொண்டிருந்தது; எங்கேயோ சென்னையில் விடியப்போகும் ஒரு காலையை நோக்கிக் கனவேகமாகப் போய்க்கொண்டிருந்ததுபோல் இருந்தது.

துக்கத்தில் தலையெடுக்கும் தைரியம்போலத் தொலை இருளில் அந்த ஒளித்தொடர் விரைந்து சென்றுகொண்டிருந்தது.

சென்னை போய்ச் சேரும்பொழுது, எங்கள் கவலையும் அந்த இருளைப்போலப் பின்தங்கிவிடாதா? நிம்மதி, காலையைப்போல அங்கே எங்களை வந்தடையாதா? இருள், நிச்சயம் கூட வராது! சென்னையில் காலைதான்! - இவ்வாறெல்லாம் பேதைமனம் தன்னைத் தேற்றிக்கொண்டே இருந்தது.

குஞ்சம்மாள் மூட்டையிலிருந்து வெற்றிலை பாக்கை எடுத்து எனக்குக் கொடுத்துத் தானும் போட்டுக்கொண்டாள்.

எங்களவர்களுக்குள்ளேயே குஞ்சம்மாள் அதிக அழகு என்று பெயர். நல்ல சிவப்பு; ஒற்றை நாடித் தேகம்; அவளுக்குத் தெருவிலேயே ஒரு செல்வாக்கு உண்டு.

அன்றென்னவோ, இன்னும் அதிகமாக அவள் ஒளிர்ந்து கொண்டிருந்தாள். அவள் முகத்தில் என்றுமே இல்லாத ஓர் ஏக்கம் அன்று முதல்முதலாகத் தென்பட்டதாலோ என்னவோ, அவள் அழகு மிளிர்ந்து தோன்றினாள்.

குஞ்சம்மாளுக்குப் புஷ்பம் என்றால் பிராணன். யார் கேலிசெய்தாலும் லட்சியம் செய்யமாட்டாள். தலையை மிஞ்சிப் பூ வைத்துக்கொள்ளுவாள்; ஆனால் அன்று அவள் தலையில் வைத்துக்கொண்டிருந்த பூவைப்போல, வேறு என்றும் எதுவும் சோபித்ததில்லை என்று என் கண்களுக்குப் பட்டது. வெற்றிலைக் காவி அவளுடைய உதடுகளில் அன்றுதான் அவ்வளவு சிவப்பாகப் பிடித்திருந்தது போலிருந்தது.

சோர்வில்தான் சௌந்தரியம் பரிமளிக்குமோ? அல்லது - கடைசியாக, அணைவதற்கு முன்னால், விளக்கு...? இல்லை! இல்லை!

குஞ்சம்மாள் அன்றென்னவோ அப்படியிருந்தாள்.

வெற்றிலையைப் பாதி மென்றுகொண்டே, "அம்பி, ஓங்க அத்திம்பேருக்கு வாக்கப்பட்டு நான் என்ன சுகத்தைக் கண்டேன்?" என்றாள் குஞ்சம்மாள்.

அவளுடைய கண்களில் ஜலம் மள மள வென்று பெருகிற்று.

"என்னிக்கும் பிடிவாதம், என்னிக்கும் சண்டை; நான் அழாத நாள் உண்டா? என் வாழ்வே அழுகையாக..." என்று உணர்ச்சி வேகத்தில் ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக்கொண்டாள்.

"எதிலாவது நான் சொன்ன பேச்சைக் கேட்டதுண்டா? எப்படியோ ஆயுசுடன் இருந்தாற் போதுமென்று தோன்றிவிட்டது,போன தடவை உடம்புக்குவந்தபோது...!"

இருவரும் வெகுநேரம் மௌனமாக இருந்தோம். ஆனால் மனசுமட்டும் மௌனமாக இருக்கவில்லை.

நல்ல நிசிவேளை. வண்டியில் ஜனங்கள் உட்கார்ந்து கொண்டும் படுத்துக்கொண்டும் அநேக தினுசாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். வண்டி ஒரு சின்ன ஸ்டேஷனில் நின்றதும், சிலர் எழுந்து இறங்கிப்போவார்கள், மௌன மாகப் பிசாசுகள்போல. அப்பொழுதுதான் தூங்கி எழுந்த சிலர், "இதென்ன ஸ்டேஷன்?" என்று தலையை வெளியே நீட்டிக் கேட்பார்கள். போர்ட்டர் ஒருவன் ஏதாவது ஒரு ஸ்டேஷன் பெயரை அரைகுறையாகத் தூங்கி விழுந்து கொண்டே சொல்லுவான். மறுபடியும் வண்டி பூரான் மாதிரி ஓட ஆரம்பிக்கும்.

சுமார் ஒருமணிக்கு வண்டி விழுப்புரம் ஸ்டேஷனுக் குள் ஆர்ப்பாட்டத்துடன் போய் நின்றது. அதுவரையில் வண்டியில் அமைதியும் நிசப்தமும் இருந்தன. அந்த ஸ்டே ஷனில் கூட்டமும் கூக்குரலும் அதிகமாயின; அதுவரை யில் காலியாகவே வந்த எங்கள் பலகைகளில் சாமான்கள் நிறைந்தன. நகரத்தார் இனத்தைச் சேர்ந்த பெண்மணி ஒருத்தி, பெண்குழந்தையும் புட்டியுமாக என் தமக்கையின் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.

அவள் அணிந்திருந்த முதல்தரமான வைரங்களுடன் அவள் முகமும் ஜொலித்துக்கொண்டு இருந்தது. ஏதோ ஓர் உள்ளப் பூரிப்பில் அவள் தன்னையே மறந்து தன் குழந்தையுடன் கொஞ்சினாள்.

வண்டி புறப்பட்ட சற்று நேரத்திற் கெல்லாம், என் தமக்கையின் பக்கம் தன் புன்னகை பூத்த முகத்தைத் திருப்பி, "எங்கிட்டுப் போறீக அம்மா?" என்று கேட்டாள்.

என் தமக்கை சுருக்கமாக, "பட்டணம்" என்றாள்.

"நானும் அங்கேதாம்மா வாரேன்!" என்று ஆரம்பித்து, அந்தப் பெண் வரிசையாகக் கேள்விகள் கேட்டுக்

கொண்டே இருந்தாள். பிறகு தன் பக்கத்திலிருந்த ஓலைப் பெட்டியிலிருந்து கொஞ்சம் மல்லிகைப்பூ எடுத்துக் குஞ்சம் மாளுக்குக் கொடுத்தாள்.

என் தமக்கை மெய்சிலிர்த்துப் போனாள். வெகு ஆவலுடன் அந்தப் பூவை வாங்கி ஜாக்கிரதையாகத் தலையில் வைத்துக்கொண்டாள். அம்பாளே அந்த உருவத்தில் வந்து தனக்குப் பூவைக் கொடுத்து, "கவலைப்படாதே! உன் பூவிற்கு ஒருநாளும் குறைவில்லை!" என்று சொன்னது போல எண்ணினாள்.

அதுவரையில் அவளுக்கு ஒவ்வொரு வார்த்தை பதில் சொல்லிக்கொண்டு வந்தவள், உடனே இளகி அவளிடம் சங்கதி முழுதும் சொன்னாள்.

"மகாலட்சுமி போலே இருக்கிங்கம்மா! ஒங்களுக்கு ஒண்ணும் கொறவு வராது!" என்று அவள் சொன்னதைத் தெய்வ வாக்காக எடுத்துக்கொண்டுவிட்டாள் குஞ்சம்மாள். அந்த ஆறுதலில் கொஞ்சநேரம் அவளுடன் கவலை மறந்து பேசிக்கொண்டிருந்தாள்.

திடீரென்று ஞாபகம் வந்துவிட்டது. ஏதோ பெருத்த குற்றம் செய்தவள்போலத் திகிலடைந்தாள். 'ஐயையோ! பைத்தியம்போல் இப்படிச் சிரிச்சுண்டு பேசிண்டிருக்கேனே!' என்று எண்ணினவள்போல அவள் கலவரமடைந்தது நன்றாகத் தெரிந்தது. வண்டிபோன வேகத்தில் விர்ரென்று அடித்த காற்றிலும் அவளுடைய முகத்தில் வியர்வை தென் பட்டது.

ஆனால் எவ்வளவு நேரந்தான் கவலைப்பட முடியும்? கவலையால் ஏற்பட்ட அசதியிலேயே எங்களை அறியாமல் கண்ணயர்ந்தோம். தூக்கத்தில் நித்திரையும் நினைவு மறதியும் சேர்ந்துதான் வாழ்க்கைக்கு ஒரு போதையாகித் தாபத்தைத் தணிக்கின்றனவோ?

வண்டி செங்கற்பட்டை நெருங்குகிற சமயம். வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தோம். கிழக்கு வெளுத்துக் கொண்டிருந்தது. வண்டி ஏதோ ஒரு குக்கிராமத்தைக் கடந்து போய்க்கொண்டிருந்த பொழுது கோழி கூவியது கூடக் காதில் வந்து பட்டது.

' அப்பா ! விடியுமா ?' என்கிற நினைப்பு ஒருபக்கம்.

' ஐயோ ! விடிகிறதே! இன்னிக்கி என்ன வச்சிருக்கோ!' என்ற நினைப்பு மற்றொரு பக்கம்.

இரவின் இருட்டு அளித்திருந்த ஆறுதலைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தலைகாட்டிய வெளிச்சம் பறிக்க வருவது போல் இருந்தது.

எங்கேயோ, கண்காணாத தூரத்தில் உருவடைந்த ஒரு காட்சியில் ஈடுபட்டவளாய் நிலைகுத்திய பார்வையுடன் குஞ்சம்மாள் அசையாமல் உட்கார்ந்திருந்தாள்.

"செங்கற்பட்டில் பல் தேய்த்துக்கொண்டு காபி சாப்பிடுவோமா ?" என்று கேட்டேன்.

"எல்லாம் பட்டணத்தில்தான் !" என்று சொல்லி விட்டாள் குஞ்சம்மாள். பக்கத்தில் நகரத்தார் பெண் கவலையற்றுத் தூங்கிக்கொண்டிருந்தாள்.

"இதோ ஆயிற்று, இதோ ஆயிற்று" என்று சொல்வது போல வண்டி தாவிப் பறந்துகொண்டிருந்தது.

ஆனால் எங்களுக்கென்னவோ பட்டணம் நெருங்க நெருங்க, வேண்டுமென்றே வண்டி ஊர்வதுபோல இருந்தது.

எழும்பூர் வந்தது கடைசியாக.

ஸ்டேஷனில் யாரும் இல்லை; அதாவது, எங்கள் அத்திம்பேர் இல்லை - எல்லோரும் இருந்தார்கள். 'ஆனால் அவர் ஸ்டேஷனுக்கு எதற்காக வரவேண்டும் ? அங்கே எதிர்பார்ப்பது சரியில்லைதான்' என்று அப்பொழுது தோன்றிற்று.

வீட்டுக்குப் போனோம். வீடு பூட்டியிருந்தது.

உடம்பு சௌகரியமில்லைதான்! சந்தேகமில்லை, இப் பொழுது!

ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போனோம். அரை மணி நேரம் துடித்த பிறகு குமாஸ்தா வந்தார்.

"நீங்கள் கும்பகோணமா?" என்றார்.

"ஆமாம் -" என்றேன்.

"நோயாளி - நேற்றிரவு - இறந்துபோய்விட்டார்" என்று குமாஸ்தா சாவதானமாகச் சொன்னார்.

"இறந்து - ? அதெப்படி? அதற்குள்ளா?" அப்பொழுதும் சந்தேகமும் அவநம்பிக்கையும் விடவில்லை.

"சிவராமையர் - ?"

"ஆமாம், ஸார்!"

"ஒரு வேளை -"

"சற்று இருங்கள். பிரேதத்தைப் பெற்றுக்கொள்ளலாம்" என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டுக் குமாஸ்தா தம் ஜோலியைக் கவனிக்கப் போனார்.

கொஞ்ச நேரம் கழித்துப் பிரேதத்தைப் பெற்றுக் கொண்டோம்.

அப்பொழுது, அதைப் பார்த்தவுடன், நிச்சயமாயிற்று!

ஒரு வழியாக மனத்திலிருந்த பயம் தீர்ந்தது; திகில் தீர்ந்தது.

பிறகு - ?

விடிந்துவிட்டது!

# தீராத ஏக்கம்

[தி. நா. சுப்பிரமணியன்]

## 1

"ஏண்டா, பையா! இன்னும் எத்தனை நாளைக்கு இப்படி..."

"ஏன் அம்மா, அதே பல்லவியைத் திருப்பித் திருப்பி. ...கொஞ்சம் போகட்டும், பார்க்கலாம்."

தாய்க்கோ மனம் கேட்கவில்லை.

"இத்தனை நாள் ஆடிப் பாடி அலைந்தாகிவிட்டது. இனியாவது குடியும் குடித்தனமுமாக இருக்கவேண்டாமா?"

தன் மகனை இனி எங்கேயும் அனுப்பாமல் பிடித்து வைத்துக்கொள்ள விரும்பினாள் அவள். ஒருதரம் பட்ட பாடு போதாதா?

* * *

அவனை உயிருடன் காண்போமென்று அவள் நினைக்கவேயில்லை. நாலு குதிரைகட்டிய 'கோச்' வண்டியில் வந்து தன் வீட்டு வாயிலில் அவன் இறங்கியபொழுதும் அவளால் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

"அம்மா, உங்கள் மகன் ஒருவன் இந்தியாவில் இருந்தானே, ஞாபகம் இருக்கிறதா" என்று கேட்டான் அவன்.

"ஆமாம்...இருந்தான்; எங்கோ சண்டையிலோ...காய்ச்சலிலோ...இறந்துபோய்விட்டான்" என்று அவள் துக்கம் தொண்டையை அடைக்கப் பதில் சொன்னாள்.

"இறந்துவிட்டான் என்பதை நீங்கள் நிச்சயமாகக் கூற முடியுமா? அவன் எங்கேயாவது உயிருடன் இருந்து தப்பிப் பிழைத்துத் திரும்பி வரக்கூடாதா?"

"அதெல்லாம் இல்லை; உயிருடன் இருந்திருந்தால், இந்தப் பத்து வருஷங்களில் ஒரு கடிதம் கூடவா இல்லாமல் போகும்? எனக்கு எழுதாமற் போனாலும், அவன் சகோதரிக்காவது எழுதியிருக்க மாட்டானா?" என்று கூறிவிட்டாள்.

"அந்தப் பிள்ளை இறந்து போகவில்லை. நான்தான் அவன். உங்கள் எதிரில் நிற்கிறேனே; என்னை அடையாளம் தெரியவில்லையா?" என்று எவ்வளவோ கூறினான்.

தாய் தன் மகனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அவ்வளவு உருமாறிப் போயிருந்தான் அவன்.

குளிர்ந்த பிரதேசமான இங்கிலாந்தில் சுகமான வாழ்க்கை நடத்துவதைவிட்டுப் படைபதைக்கும் வெயிலில் இந்தியாவிற்குச் சென்ற அவனைப் பிறர் எளிதில் கண்டுகொள்ளாதது அவர்கள் குற்றம் அன்று. அம்மட்டிலோ, அவன் வாழ்க்கையே முற்றிலும் மாறிவிட்டது.

முகமே கறுத்துப் பொலிவை இழந்திருந்தது. கஷ்டங்களை அனுபவித்த அவனது உடல் உரம்பெற்று இறுகி முரட்டுத்தனமாகத் தோன்றியது. ஆங்கிலேயர்களைப்போல் நிஜார், சட்டை, பூட்ஸ், தொப்பி முதலியவற்றை அணிந்துசெல்வதே அவனுக்கு வெறுப்பாக இருந்தது. பார்வைக்கு ஆப்பிரிகா தேசத்து நீக்ரோவைப்போலவே இருந்தான்; சொந்த நாட்டிலேயே அன்னியன்போலக் காணப்பட்டான் அவன்.

தாய்நாடு திரும்பிவந்த அவன் தன் தாயைப் பார்ப்பதற்காக லண்டன் நகரத்திலிருந்து நாட்டுப்புறத்திற்குப் புறப்

பட்டான். அக் காலத்தில் ரயில்வண்டி இல்லை. தபால் வண்டியான 'கோச்சி'லேயே ஏறிச் செல்லவேண்டும். வழியில் பல இடங்களில் நின்று நின்று செல்லும் அந்த வண்டி.

இடையில் அவன் மற்றவர்களுடன் சோற்றுக்கடைக்குச் சென்றான். அங்கே மேஜைபடியில் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்காருவதற்குக்கூட மிகவும் சிரமப் பட்டான். மற்றவர்களைப்போலக் கத்தி, முள்கரண்டி, ஸ்பூன் முதலியவற்றைக் கொண்டு சாப்பிடத் தெரியவில்லை. கடவுள் கொடுத்த கையாலே உணவுப்பொருள்களை எடுத்து வாயில் இட்டுச்சாப்பிட்டான். தனக்கு வேண்டாதவற்றை அப்படியே பக்கத்தில் கொட்டிவிட்டான். கீழே விரித்திருந்த கம்பளங்கள் பாழாகிவிடுமே என்று கவனிக்கவில்லை அவன். பார்ப்பவர்களுக்கு அவன் நடத்தை காட்டுமிராண்டித் தனமாகவே பட்டது.

காலில் செருப்பு, இடுப்பில் ஒரு துணி, மேலே ஒரு குடுதா, தலையில் ஒரு முண்டாசு, இந்த அலங்காரத்துடன் அவன் தெருவில் இறங்கிவிட்டால், அவனைச் சுற்றிப் போக்கிரிச் சிறுவர்கள் கூட்டம் ஒன்று கூடிவிடும். போவோர் வருவோர் இந்தக் காட்சியைக் கண்டு பிரமித்து நிற்பர். பைத்தியக்கார ஆஸ்பத்திரியி னின்றும் தப்பி வந்துவிட்டவனோ என்று சந்தேகித்தனர் சிலர்.

ஆள் எப்படி இருந்தால் என்ன? பணம் இருந்தால் போதாதா? இங்கிலாந்துக்குத் திரும்பிவந்தபிறகு, தான் யார் என்பதை நிரூபித்தவுடன் அதிகாரிகள் பத்து வருஷத்துச் சம்பளப் பாக்கியைக் கொடுத்தார்கள்; ஆயுள் பரியந்தம் வருஷவாரி இவ்வளவு என்று பென்ஷனையும் அளித்தார்கள். அப்புறம் கேட்பானேன்?

இப்படிப்பட்டவனுக்கு யார் வாழ்க்கைப் படுவார்கள் என்று கேட்கலாம். ஆனால் காலம் இப்பொழுது இருப்பது

போல இல்லை, நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால். அப்பொழுது இங்கிலாந்திலேயும் கல்யாணங்களுள் பெரும் பாலானவற்றைத் தாய்தந்தையரே முடித்து நடத்திவைத் தனர். அவ்விதமேதான் ஜேம்ஸ் ஸ்கா்ரி என்பவனுக்கும் அவன் தாய் மணம் செய்துவைக்க விரும்பினாள். தன் தாய் கல்யாணப்பேச்சை எடுக்கும் பொழுதெல்லாம் அவன் முகம் வாடிவிடும். என்ன செய்வான்! பழைய நிகழ்ச்சிகளை எல்லாம் அவனால் மறக்க முடியவில்லை.

'உண்மையில் நான் விவாகம் ஆகாதவனா? மனைவி இல்லாதவனா? ஒரு மனைவி உயிருடன் இருக்கும்பொழுது வேறொருத்தியைக் கடவுள் முன்பாக ஆணையிட்டு மனம் பொருந்திக் கல்யாணம் செய்துகொள்ளலாமா? அது அடுக்குமா?' என்றெல்லாம் எண்ணுவான்.

தென்னிந்தியாவிலே கா்நாடக தேசத்தில் ஸ்ரீரங்கப் பட்டணத்து நகா்ப்புறத்தே, தான் விட்டு ஓடிவந்த அந்தப் பெண்ணின் கதி என்னவாயிற்றோ என்று ஏங்குவான். அந்த மண்ணில் இந்தக் கவலை அவனைத் துன்புறுத்தவில்லை. அப்பொழுதெல்லாம் அவனுக்குத் தன் தாய்நாட்டு ஞாபகம். இப்பொழுதோ பழைய ஞாபகங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அவன் மனத்திரையில் ஓடி மறையும்.

## 2

"எப்பொழுது புறப்படப் போகிறது?"

"எது?"

"பட்டாளந்தான், புறப்படப் போகிறதே?"

"யார் சொன்னது?"

"அவள்தான் மக்தூம் பீ. இன்றைக்குப் புறப்பட்டுப் போகிறது என்று சொன்னாளே."

"எந்த மக்தூம் பீ?"

“ அவள்தான் நாலாவது வீட்டுக்காரி. அப்துல் காதர் சம்சாரம்.”

“ என்ன? எவ்வளவு நாள்தான் நான் உனக்குச் சொல்வது, இவ்விதம் என்னிடம் பேசாதே என்று?”

“ இல்லை, இல்லை. கோபித்துக் கொள்ளாதீர்கள். வாய் தவறி வந்துவிட்டது. காப்டன் வில்லியம் டிரேக் மனைவி, மிஸஸ் டிரேக் சொன்னாள்.”

அதற்கு ஒன்றும் பதில் வரவில்லை. சற்று நேரம் அந்த அறையில் நிச்சப்தம் குடிகொண்டிருந்தது.

இரவு பத்து நாழிகைப் பொழுதிருக்கும். ஸ்ரீரங்கப் பட்டணத்து நகர்ப்புறத்தே ஒரு சிறு குடிசை வீட்டின் முன்புறத்து அறையில் அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அமாவாசை சமயம், எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. குடிசைக்கு வெளியில் நடப்பவற்றை உள்ளிருப்பவர்கள் எளிதில் கண்டுகொள்ள முடியாது.

அறையும் விசாலமானது அன்று; குறுகியதுதான். ஓர் அகல் விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. குடித்தனத்துக்கு வேண்டிய சாமான்களும் அதிகம் காணப்படவில்லை. அந்தக் குடிசையையும் அதில் உள்ள சாமான்களையும் பார்த்தால், அவர்கள் எளிய வாழ்க்கையையே நடத்தி வந்தார்கள் என்பது புலப்படும். ஆனாலும், ஒரு சிறு குடும்பத்துக்கு வேண்டிய பொருள் யாவும் அங்கே இருந்தன. அவர்கள் கஷ்டப்படாமல் வாழ்க்கையை நடத்திவந்தார்கள் போலும்.

அறையின் மத்தியில் ஒரு மூங்கில் பாய் விரிக்கப்பட்டிருந்தது. அதன்மீது ஓர் இளம்பெண் தன் குழந்தையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயது இருக்கும். கறுப்புத்தான். ஆயினும் முகம் பார்வைக்கு வெறுப்புத் தட்டக்

கூடியதாக இல்லை. குறு குறுவென்று அழகாகத்தான் இருந்தது. அவள் ஓர் உயர் குடும்பத்தில் பிறந்தவள் என்பதை அவளது தோற்றம் காட்டியது.

அவள் பல வர்ணத் துணிப் பாவாடை ஒன்றை உடுத்து, கறுப்பு ரவிக்கையையும் அணிந்திருந்தாள். அவற்றிற்கு மேலாகத் தோம்புத் துணி மேலாக்கைத் தலையை மூடி முட்டாக்குப் போட்டு உடுத்திருந்தாள். அந்த முட்டாக்கு நழுவிப் பின்புறம் விழுந்திருந்தது. அதனால் அவள் காது களில் வரிசையாக அணிந்திருந்த முருகுவாளி வளையங்கள் நன்கு புலப்பட்டன.

பக்கத்தில் மூங்கில் பாயின்மீது ஒரு கந்தல் துணி கிடந்தது. அவளுடைய குழந்தை அதன்மீது படுத்துத் தூங்கிற்று. அவள் சிறிது நேரத்திற்கு முன்புதான் அந்தக் குழந்தையை எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்சிக் குலாவ ஆரம்பித்தாள்.

அந்தக் குழந்தைக்கு ஒன்றரை வயது இருக்கும். அது பிறந்து பதினாறு மாதங்கள் ஆயின. ஆண் குழந்தை. அது தாயைப்போல் கறுப்பாக இல்லை. சிவப்பு என்றுதான் கூறவேண்டும். அது தன் தாயையும் பக்கத்தில் இருந்த இளைஞனையும் பார்த்துப் பார்த்துச் சிரித்துக்கொண் டிருந்தது.

அவள் எதிரில் மூங்கில்பாயின் ஓரத்தில் ஓர் இளைஞன் நன்றாகப் பூமியில் பதிய உட்காராமல் 'குந்தி' யிருந்தான். அவனுக்கு அப்பொழுது வயது இருபத்தைந்து இருக்கும். அவன் மேலிருந்த உடை அவன் ஒரு முஸ்லீம் என்பதை உணர்த்தியது. அவன் முகம் கவலை தோய்ந்து காணப் பட்டது.

அவன் நல்ல சிவப்பு. பரந்த நெற்றியும், எடுப்பான மூக்கும் உடையவனாகப் பார்வைக்கு அழகாகக் காணப்

பட்டான். வெயிலில் அடிபட்டு அவன் உடல் கொஞ்சம் கொஞ்சமாகக் கறுத்து வந்தது. ஆனால் அவன் முகமோ குங்குமம்போலச் சிவந்து தனியாகத் தெரிந்தது.

இளைஞன் அந்தப் பெண்ணின் புருஷன்தான். அவ்வளவு சிவப்பான இளைஞன் கறுப்பான பெண்ணை எப்படி மணம் செய்துகொண்டிருப்பான் என்று பார்த்தவர்கள் வியக்கக்கூடும். அவர்கள் வாழ்க்கை இனிதே நடந்தேறி வந்தது.

"கண்ணு! இதைப் பார். ராயரு ஒன்றுமே சொல்ல மாட்டேன் என்கிறார்" என்று குழந்தையைப் பார்த்துக் கொஞ்சலாகக் கூறிவிட்டு அதனைத் தூக்கி முத்தமிட்டாள் அந்தப் பெண். ஆயினும் அவள் பார்வை அந்த இளைஞன் முகத்தை விட்டு அகலவேயில்லை.

அவள் கண்களில் ஒரு ஜொலிப்பு, சுழல் இருந்தது. ஆழ்ந்த காதலுடன் அவள் அவனை நோக்கிய பார்வையின் சக்தியை நாம் விவரிக்க முடியாது. தன் புருஷனை அப்படியே அள்ளி விழுங்குபவள்போலப் பார்த்தாள் அவள். ஆயினும் அவன் மனத்துள் ஏதோவொன்று உறுத்தி வந்தது; தன் பார்வையை அவனை விட்டுத் திருப்ப முடியவில்லை. அந்த இளைஞனுக்கோ அது தாங்கவில்லை. அவளை எறிட்டுப் பார்க்கவும் முடியவில்லை. தலையைக் குனிந்துகொண்டே உட்கார்ந்திருந்தான் அவன்.

## 3

அந்த ஒருக்ஷணத்தில் அவன் என்ன என்ன எண்ணினானோ? அவனால் மனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை; ஒரு விதமாகவும் தீர்மானிக்க முடியவில்லை.

'என்மீது இவ்வளவு ஆழ்ந்த காதல் கொண்டவளை, என் மனைவியை, என் அருமைக் குழந்தையின் தாயை விட்டு

விடலாமா? இவளுக்குச் சொல்லாமல் ஓடிப்போவது நியாயமா? இவள் உடன் வருவாளோ? வந்தால் இவளை அழைத்துச் செல்வது கால்கட்டாக முடியாமல் ஸௌகரியமாக இருக்குமா? அல்லாமல், அகப்பட்டுவிட்டால் என் கதி என்ன? ஒருகால் இவள் உடன்வர மறுத்துச் செய்தியை வெளியாக்கி விட்டால் என்ன செய்வது?'' என்றெல்லாம் யோசித்தது அவன் மனம்.

ஆமாம், இப்பொழுது அந்தப் பெண்ணைப் பிரிவதற்கு இவ்வளவு யோசனை செய்கிறானே; அவளைக் கல்யாணம் செய்துகொண்டபொழுதோ, அந்த இளைஞன் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும் விரும்பவில்லை. அவளை மனப்பூர்வமாக வெறுத்துவந்தான். அதனை வெளியில் காட்டுவதற்கும் பின்வாங்கவில்லை.

அப்பொழுது அவன் அந்தப் பெண்ணைத் தன் கழுத்தில் கட்டப்பட்ட பாறாங்கல்லாக, குடித்தனம் நடத்துவதற்கு வேண்டிய தட்டு முட்டுச் சாமான்களுள் ஒன்றாகவே மதித்து வந்தான். அவளை உதறித் தள்ளிவிட்டிருப்பான். ஆனால் வயிற்றை அலம்ப வேண்டுமே! அதற்காகவே சகித்துக்கொண்டு சும்மா இருந்தான்.

இது ஆறு வருஷங்களுக்கு முன்பு நடந்தது. அக்காலத்தில் அந்த இளைஞன் தன்னைப்போன்ற இன்னம் நூறு பேர்களுடன் சத்திரம் போன்ற பெரிய கட்டிடம் ஒன்றில் வசித்து வந்தான். அவர்கள் நாலைந்து பேர்களாகக் கூடி இங்கும் அங்குமாகப் பொங்கித் தின்றுவந்தார்கள். நன்றாகச் சமைக்கத் தெரியாது. அரிசி, பருப்பு, நெய், காய்கறி முதலியவற்றைச் சட்டியில் போட்டு ஏதோ வேகவைத்துப் பசிப்பிணியை ஒழித்துவந்தார்கள்.

அவர்கள் எல்லோரும் படைவீரர்கள். இளைஞர்களான அவர்கள் தப்பியோடிவிடாதபடி காவல் கடுமையாக இருந்

தது. வெளியார் ஒருவருடைய உதவியும் அவர்களுக்குக் கிடையாது. 'தன் கையே தனக்கு உதவி' என்னும் பழமொழிக்கேற்ப நடந்தது அவர்கள் வாழ்க்கை.

ஆட்டு மந்தையைப்போல அடைபட்டிருந்த அவர்களுக்குத் தனியாக ஆளுக்கு ஒன்று வீதம் சிறு குடிசைகள் கட்டப்பட்டன. அவை ஒன்றன்பக்கத்தில் ஒன்றாகப் பெரிய சவுக்கம் ஒன்றில் அமைக்கப்பட்டன. அவர்கள் குடித்தனம் செய்வதற்கு வேண்டிய சாமக்கிரியைகள் யாவும் சேகரித்து வைக்கப்பட்டன. எல்லாம் அரசாங்கத்துச் செலவு தான்.

ஒருநாள் காலையில் அவர்கள் யாவரும் கபாத்து மைதானத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். வழக்கம்போல அவர்கள் அணிவகுத்துச் சென்றனர். மைதானத்தில் அவர்கள் கண்ட காட்சி அவர்கள் மனத்தைக் கலக்கியது.

அங்கே ஒருமூலையில் படுதாப்போட்டு மூடிய கோஷாப் பெண்களின் கும்பல் ஒன்று இருந்தது. படுதாக்களுக்குள் இருப்பவர்கள் பெண்களோ பூதமோ, சிறுபெண்களோ கிழவர்களோ, அழகிகளோ குரூபிகளோ யார் கண்டார்கள்? போர் வீரர்கள் வரிசையாக நின்றனர். உடன் இருந்த அதிகாரி ஹிந்துஸ்தானியில் ஏதோ சொன்னான். வீரர்களில் பலருக்கு அது சரியாகப் புரியவில்லை.

அவ்வளவுதான். அந்தப் படுதா போர்த்திய உருவங்களின் கும்பல் கலைந்தது. அவர்களுள் ஒவ்வொருவராக வந்து ஒவ்வொரு வீரன் பின்னால் ஒவ்வொருவராக வரிசையாக நின்றனர்.

"பின்புறம் திரும்புக" என்று படைவீரர்களை நோக்கி உத்தரவிட்டான் அதிகாரி.

ஏககாலத்தில் திரும்பினர் வீரர் எல்லோரும். ஒவ்வொருவருக்கும் எதிரில் ஒரு பெண் உருவம் நின்றது.

"எதிரில் உள்ளவளை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று மறுபடியும் கர்ஜித்தான் அதிகாரி. அவன் உத்தரவிட்டது என்னவென்பது பலருக்குப் புரியவில்லை. அறிந்துகொண்டவர்களில் சிலரும் அதனைக் கடைப்பிடிக்க விரும்பவில்லை.

சும்மா விடுபவனா அதிகாரி? கையில் உள்ள சவுக்கை ஒரு தரம் சொடுக்கிவிட்டான். கீழ்ப்படிய மறுக்கும் படை வீரர்களில் தலைமை ஸ்தானம் வகிப்பவனுக்குச் சவுக்கினால் இரண்டு கொடுத்தான். எல்லோரும் கலங்கிப்போய் எதிரில் உள்ள உருவங்களின் கைகளைப் பிடித்துக்கொண்டனர்.

ஜோடி ஜோடியாக அவர்களைத் திரும்பித் தங்கள் வாசஸ்தலத்திற்குச் செல்ல அனுமதி அளித்தான் அவன்.

## 4

குடியிருப்பான சவுக்கத்தை அடைந்த பிறகு அங்கே ஒரே சண்டைதான். போர் வீரர்களுக்குள் அல்ல; அவர்களுக்கு வாய்த்த மனைவிகளுக்குள். அவர்கள் பாஷையோ புருஷர்களுக்குத் தெரியாது; சண்டையின் காரணமும் தெரியாமல் எப்படி அவர்களை விலக்கி மத்தியஸ்தம் செய்ய முடியும்? அல்லாமலும் அவர்கள் கோஷா. புருஷர்கள் அவர்களிடையே புகுந்து சமாதானம் பேசவும் முடியாது. அங்ஙனம் செய்தால் தங்கள் மதசம்பிரதாயத்துக்குப் பங்கம் விளைந்துவிட்டது என்று காஜிகள் தொல்லை செய்வரோ என்று பயந்தனர்போலும்.

கொஞ்சம் கொஞ்சமாகத்தான் காரணம் விளங்கியது. கபாத்து மைதானத்திலிருந்து குடியிருப்புக்கு வரும் வழியில் கடைவீதி, சந்தை, குறுக்கிட்டது. அங்கே கும்பல் அதிகம். ஜோடிகள் கைகோத்துக் கொண்டு கூட்டத்தினிடையே வரமுடியுமோ? மனிதத் திரள்களால் இங்கும் அங்கும் மோதுண்ட ஜதைகள் பிரிந்துபோயின.

இருதரத்தாருக்கும் பயம். தங்களை ராணுவ அதிகாரிகள் யாராவது கவனித்து வந்து, "ஏன் கையை உதறினாய்?" என்று கடிந்துகொள்வார்களோ என்ற எண்ணம். அதனால் அவர்கள் கூட்டத்திலிருந்து விலகி இடைவெளி கிடைத்தவுடன் தங்களுக்கு எதிர்ப்பட்ட நபரைப் பிடித்துக் கொண்டார்கள். முன்னம் தங்களுக்குக் கிடைத்த பாத்திரந்தானா என்பதுகூட அவர்களுக்கு நிச்சயமாகத் தெரியாது.

எப்படித் தெரிய முடியும்? ஒருவரை ஒருவர் அதற்கு முன் பார்த்ததே இல்லை. அவர் அவர் மனம் இருந்த நிலையில் அந்த ஒரு க்ஷணத்தில் மற்றவரை எப்படிக் கூர்ந்து கவனித்திருக்க முடியும்? போர்வீரர்களுக்குப் படுதா போர்த்திய உருவங்கள் எல்லாம் ஒன்றுபோலவே தோற்றின. அதேபோலப் பெண்களுக்கும் ஐரோப்பியர்களான போர் வீரர்களின் முகஜாடையை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. குடியிருப்பை அடைந்து கொஞ்சம் நிதானம் கொண்ட பிறகுதான் கவனித்தார்கள் பெண்கள்.

"எனக்குக் கிடைத்த புருஷன் அழகாக இருக்கிறான் என்று நீ இழுத்துக்கொண்டாயோ?" என்றாள் ஒருத்தி, மற்றொருத்தியைப் பார்த்து.

அவள் சும்மா இருக்கவில்லை. "ஆமாம். இதுவும் சொல்லுவாய்; இன்னமும் சொல்லுவாய். நீ செய்ததைச் செய்துவிட்டுப் பிறரைக் குறைகூறமாட்டாயா? இந்தக் குரங்கு மூஞ்சியைப் பார்த்து நானா ஆசைப்பட்டேன்? இருப்பதற்குள் அழகானவனைப் பற்றிக்கொண்டது நீயா, நானா?" என்று சுடச் சுடப் பதில் கொடுத்தாள்.

அதற்குமேல் கேட்கவேண்டுமா சண்டையின் மும்முரத்தை? போர் வீரர்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்கத்தான் வேண்டும்.

இவ்வளவு வைபவங்களுக்கிடையில் ஜேம்ஸ் ஸ்கர்ரிக்கும் ஒரு மனைவி கிடைத்தாள். அவள் ஆர்க்காட்டுப் பிரதேசத்தைச் சேர்ந்தவள். பெண்கள் எல்லோருமே மைசூரைச் சேர்ந்தவர்கள் அல்லர். ஹைதரும் திப்புவும் நாட்டின் பல பாகங்களையும் தாக்கி வெற்றி கொண்டபொழுது பலபேர் சிறைப்பட்டார்கள். அவர்கள் எல்லோரையும் மைசூருக்குக் கொணர்ந்தான் ஹைதர். அப்படி வந்தவர்களில் கல்யாணத்துக்கேற்ற இளம்வயதுப் பெண்களாக இருந்தவர்களே அவர்கள்.

ஸ்கர்ரிக்கு அவளிடம் இரண்டு குழந்தைகள் பிறந்தன. முதற் குழந்தை இறந்துவிட்டது; இரண்டாவது ஆண் குழந்தை மாத்திரம் உயிரோடு இருந்தது.

## 5

ஜேம்ஸ் ஸ்கர்ரி நம் நாட்டவன் அல்லன்; ஆங்கிலேயன். இங்கிலாந்திலே டெவன்ஷையர் எனப்படும் பிரதேசத்தைச் சேர்ந்தவன். திரை கடல் ஓடித் திரவியம் சம்பாதிக்கப் புறப்பட்ட ஐரோப்பியர் பலருள் ஒருவனுடைய மகன். அவன் பிறந்ததே கப்பலில்தான். ஏழாம் வயதிலிருந்தே கப்பலில் வேலைக்கு அமர்ந்து உலகத்தின் பல பாகங்களையும் சுற்றிப் பார்த்திருக்கிறான். விதிவசத்தால் தன்னுடைய பதினைந்தாம் வயதில், கி. பி. 1781-ஆம் ஆண்டில் அவன் தரங்கம்பாடிக்கு அருகில் பிரெஞ்சுக்காரர்களிடம் சிறைப்பட்டான். அவர்கள் அவனைப்போலவே சிறைப்பட்ட வேறு ஐந்நூறு பேர்களுடன் அவனைச் சிதம்பரத்தில் பாடி இறங்கியிருந்த ஹைதர் அலியிடம் விற்றுவிட்டார்கள்.

ஹைதர் அவர்களை ஸ்ரீரங்கப் பட்டணத்துக்கு அழைத்துச் சென்று ஊருக்குப் பக்கத்திலே ஒரு பெரிய சவுக்கத்தில் குடிசைகள் கட்டிக் குடியேற்றினான். அவர்களையும்

அவர்களைப்போன்ற வேறு பலரையும் கொண்டு தனி யாக ஒரு பட்டாளம் அமைத்தான். அவர்களைத் தன்னிடம் சேவகம் புரியும் படைவீரர்களாக மாற்றினான்.

சுயேச்சையாகத் திரிந்த அவர்களால் படைவீட்டு நிர்ப் பந்தங்களைத் தாங்க முடியவில்லை. அவை கடுமையாகவே இருந்தன. அவர்கள் சமயம் வந்தபொழுது தப்பி ஓடி விடு வார்கள் என்றே நினைத்தான் ஹைதர். அதனால் அவர்களுக் குக் காவல் அதிகமாகத்தான் இருந்தது.

'இவர்கள் இந்நாட்டிலேயே நிரந்தரமாகத் தங்கிவிட வேண்டும். நம்முடைய வெற்றிக்கே போர் புரியவேண்டும். தங்கள் தாய்நாடு திரும்பும் எண்ணத்தை அறவே அகற்றி விட வேண்டும். அதற்குத் தக்க உபாயத்தைத் தேடி முடிக்கவேண்டும்' என்றெல்லாம் எண்ணினான் ஹைதர்.

அவர்களோ இதற்கு நேர்மாறான எண்ணத்தைக் கொண்டிருந்தனர். சிறைச்சாலை போன்றுள்ள அந்த வாழ்க்கையினின்றும் எப்பொழுது தப்பி ஓடிவிடலாமென்று காத்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் இளை ஞர்கள், வயதானவர்கள், நடுத்தர வயதினர் ஆகிய பலரும் இருந்தனர். அவர்களில் சிலருக்குத் தேசாந்தரத்தில், இங்கி லாந்தில், மனைவி மக்களும் இருந்தனர். வேறு சிலருக்குத் தாய் தந்தையர் இருந்தனர். அவர்களை எல்லாம் அவர்கள் மறக்க முடியுமோ ?

ஹைதர் அவர்களைத் தன் நாட்டினராக மாற்றிவிட முயன்றான். அவர்கள் எல்லோரையும் முஸ்லீம்களாக மாற்றி ஒவ்வொருவருக்கும் முகம்மதியப் பெயரையும் அளித்தான். அப்பால் அவர்கள் அந்தப் பெயர்களாலேயே வழங்கவேண்டும் என்றும், பழைய பெயர்களை முற்றும் மறந்துவிடவேண்டும் என்றும் உத்தரவிட்டான். அம் மட்டோ? அவர்கள் ஆங்கிலத்தில் பேசக்கூடாது, ஹிந்துஸ்

தானியையோ கன்னடத்தையோதான் கற்றுப் பேசவேண்டும் என்றும் தீர்மானித்தான்.

அவர்களுக்கோ அது பிடிக்கவில்லை. தனியாக இருக்கும்பொழுது அவர்கள் ஒருவருக்கொருவர் பழைய பெயர்களைக் கொண்டே அழைப்பர். ஆங்கிலத்திலேயே பேசுவர். ஆனால் வேறு யாரையாவது கண்டுவிட்டால் திரு திரு வென்று விழித்துக்கொண்டு புதுப் பெயரால் கூப்பிட்டுக் கன்னடத்திலோ ஹிந்துஸ்தானியிலோ உளறிக்கொட்டுவார்கள். பார்ப்பவர்களுக்கு அது மிகவும் வேடிக்கையாக இருக்கும்.

## 6

"ஷம்ஸுதின் கான்!"

இடி முழக்கம்போல் கூப்பிட்டது அந்தக் குரல்.

மனைவியையும் குழந்தையையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்த ஸ்கர்ரியைத் தூக்கிவாரிப் போட்டது அது.

இனித் தாமதிக்க முடியாது; பட்டாளம் புறப்படப் போகிறது. எல்லோரும் வந்துவிட்டார்கள். அவன் மட்டுந்தான் பாக்கி. அதற்காகத்தான் கூப்பிடுகிறான் அதிகாரி. உடனே புறப்பட்டுப் போகவேண்டும் என்பதை அறிவான் அவன்.

பட்டாளம் புறப்பட்டால் என்ன? யமபுரம் போகப் போகிறதா? திரும்பி வரப்போவதில்லையா? அப்பொழுது தான் முதல் முதலாக வெளியில் செல்லுகிறானா அவன்?

பட்டாளம் சண்டைக்குத்தான் போகிறது. மைசூரின் மீது படையெடுத்து வந்திருந்த மஹாராஷ்டிரர்களுடன் போர் புரிய வேண்டும். ஐரோப்பிய வீரர்களான அவர்கள் சண்டையில் முதல் பலிக்குப் போகப் போகிறதில்லை. பின்னால் நின்று நடத்தப் போகிறார்கள்.

ஐரோப்பிய வீரர்களின் அவசியத்தை நன்கு அறிவான் ஹைதர். இல்லாவிட்டால் மிகுந்த பொருட் செலவில் அவர்களை வைத்துக் காத்து வருவானா? மஹாராஷ்டிரர்களுக்கு உதவியாகத் தன்னுடன் போர் தொடுத்துள்ள ஆங்கிலேயர்களுடன் போர் புரிவதற்கு இந்த ஐரோப்பியப் படையே தகுதி வாய்ந்தது என்பது அவனுக்குத் தெரியும்.

ஸ்கர்ரியின் மனம் கலங்கியதற்குக் காரணம் வேறு. வெளியிடங்களில் முகாம் செய்திருக்கையில் தக்க சமயம் பார்த்துத் தப்பிக்கொண்டு போய்விடுவது என்று முடிவு செய்திருந்தார்கள் ஐந்தாறுபேர்கள். அவர்களுள் ஸ்கர்ரியும் ஒருவன். அதுதான் அவன் மனத்தை அலைத்தது.

முதலில் வெறுத்த தன் கறுப்பு மனைவியை விட்டுப் பிரிய இப்பொழுது அவனுக்கு மனம் வரவில்லை. பழகாததற்குமுன் இருவருக்கும் இடையே மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது. மனம் இல்லாமலே வற்புறுத்தலின்மேலேதான் அவளோடு பழகினான். அவள் குணம் அவனை ஆட்கொண்டது. அன்பு முதிர்ந்தது. அதன் பலனாகக் குழந்தைகளும் பிறந்தன. எப்படியாவது அவளை உடன் அழைத்துக்கொண்டு இங்கிலாந்துக்குப் போய்விடவேண்டும் என்று எண்ணினான் அவன். அவள் வருவாளோ என்ற சந்தேகமும் இடையிடையே தோன்றியது.

ஆவலை அடக்க முடியவில்லை அவனால். கடைசிமுறையாக அவளையும் குழந்தையையும் கட்டி முத்தமிட விரும்பினான் அவன்.

அதனை முடிப்பதற்கும் பயம். ஒருகால் உறுதியை இழந்து தளர்ச்சியடைந்தால் எல்லாம் வீணாகிவிடுமே. தான் கெடுவதும் அல்லாமல் மற்றவர்களையும் காட்டிக் கொடுத்து விடுவோமோ என்ற குழப்பம் வேறு.

பதில் பேசாமல் எழுந்து வெளியே சென்றான். அப்பால் அவனைப் பார்க்கவில்லை.

*  *  *

பட்டாளம் புறப்பட்டுச் சென்றது. ஸ்கர்ரியும் வேறு நான்கு பேர்களும் ஏற்பாடு செய்திருந்தபடி மறுநாளே தப்பிக்கொண்டு ஓடிவிட்டனர். இரவுப் பொழுதில் அன்று. அப்பொழுது படையினின்றும் ஒருவரும் வெளிக்கிளம்ப முடியாது. காவல் பலமாக இருக்கும். அவர்கள் தப்பியது, பட்டப் பகலில். வெயிலின் கொடுமை பொறுக்க முடியாமல் அதிகாரிகளும் வீரர்களும் இளைப்பாறும் சமயம். காவற்காரனும் கொஞ்சம் அயர்ந்திருந்தான். அன்றி, பகலில் வெளியில் செல்வோர்களுக்கு அவ்வளவு நிர்ப்பந்தம் இல்லையல்லவா?

மலையிலும் புதரிலும் ஒண்டி மறைந்து கொஞ்சம் கொஞ்சமாக வழி நடந்தனர். இரண்டு நாட்கள் சென்றன. ஸ்கர்ரிக்கு மனைவியையும் குழந்தையையும் பற்றிய ஏக்கம் உண்டாயிற்று. அவர்களுடைய பிரிவை ஆற்றாமல் திரும்பி வந்துவிடுவது என்றே எண்ணினான். அது முடியுமோ? அதிகக் கெடுதலாகவன்றோ முடியும் என்று மற்றவர்களும் வற்புறுத்தினர். சிறிது சிறிதாக நடந்து மஹாராஷ்டிரர்கள் கையில் சிக்கி, கடைசியாகச் சென்னையை அடைந்தான். அங்கிருந்து கப்பலேறி கி. பி. 1793-ஆம் ஆண்டில் லண்டன் நகரத்தை அடைந்தான்.

## 7

இங்கிலாந்துக்கு வந்த பிறகு அவன் சும்மா இருக்கவில்லை. இந்தியாவுக்குப் புறப்படும் ஒவ்வொரு கப்பலிலும் அவளுக்குக் கடிதம் எழுதி அனுப்பினான். தனக்குத் தெரிந்தவர்கள் இந்தியாவுக்குப் போவதாக இருந்தால் அவர்

களிடம் நேரில் சென்று கடிதத்தைக் கொடுத்துச் சமாசாரத்தைச் சொல்லி வருவான். தமிழ் நாட்டுப் பக்கம் செல்பவர்களிடம், அவளை எப்படியாவது தேடிப் பிடித்துக் கப்பலில் ஏற்றித் தன்னிடம் அனுப்பிவிடுமாறு வேண்டிக்கொள்வான்.

அவளை எப்படியாவது அடைந்துவிட வேண்டும் என்று பகீரதப் பிரயத்தனம் செய்தான்; கிட்டவில்லை. அவள் இல்லாவிட்டாலும் அந்தக் குழந்தையையாவது பார்க்கமுடியாதா என்று சிரமப்பட்டான். அவன் எழுதிய கடிதங்களும், அனுப்பிய செய்திகளும் அவர்களிடம் சேர்ந்தனவா என்பதைக்கூட அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை.

தன்னுடைய இருபத்தெட்டாம் வயதில் இங்கிலாந்து திரும்பிச் சென்ற அவன் அதற்குப்பிறகு இருபத்தொன்பது வருஷங்கள் உயிர் வாழ்ந்திருந்தான். ஆம், அவன் தன் வாழ்க்கையின் பிற்பகுதியில் ஒரு பாதியை 'நான் அவளை மறுபடியும் காணமுடியுமா!' என்ற ஏக்கத்துடனேயே கழித்து வந்தான். அவளைப்பற்றிய நினைப்பு உண்டாகும் பொழுதெல்லாம், அவனுக்கு வாழ்க்கையின் வசீகரண சக்தி சிறிதும் தோன்றாது. வெறும் சூனியமாகவே தோற்றும். தன் கண் எதிரில் நடப்பவற்றையும் நன்கு கவனியாது ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக்கொண்டே இருப்பான். அவன் மனம், பல வருஷங்களுக்குமுன் இந்திய நிலத்தில் விளைத்த அன்புப்பயிரை நினைத்து நினைத்து மறுகியது. அவன் ஏங்கினான்; அந்த ஏக்கம் தீரவே இல்லை.

# செம்படவச் சிறுமி

[சங்கு சுப்பிரமணியம்]

முருகனுக்கு வயது முதிர்ந்துவிட்டது. கையிலும் காலிலும் கீல்வாயு குடிகொண்டது. அவனால் குன்றின் உச்சியினின்றும் கடற்கரைக்கு வர முடியவில்லை. வந்தாலும் வலையைத் தூக்கி வீசமுடியாது. ஆனால் இந்தக் காரணங்களை வயிறு கேட்கின்றதா? தன் பேத்தி பூங்காவனத்தை மீன் பிடிக்கப் பழக்கியிருந்தான். அவள்தான் இப்போது கடலுக்குச் சென்றுவருகின்றாள்.

பூங்காவனம் முருகனின் பெண்வயிற்றுப் பெண். அவளுக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை. அவளுக்கு அந்த வருத்தம் தெரியாதிருக்கும்படி கிழவன் நடந்துவந்தான். அவன் தன் பேத்தியிடம் வைத்திருந்த அன்பிற்கு அளவே இல்லை.

பூங்காவனத்திற்கு வயது பன்னிரண்டு. கறுப்பு நிறமுடையவளானலும் அவளுடைய முகம் குறுகுறுப்புடையது; கட்டமைந்த தேகம். தன் சரீரத்தினால் ஆனமட்டும் கிழவனுக்குத் தள்ளாத வயதில் செய்யவேண்டிய கைங்கரியங்களைச் செய்துவந்தாள். அவளுக்குக் கிழவனிடத்தில் என்ன அன்பு! என்ன பக்தி!

குன்றின் உச்சியிலிருந்து கடலுக்குச் செல்ல ஒரே ஓர் ஒற்றையடிப் பாதைதான் உண்டு. அப்பாதையைச் செப்பனிட்டு வைத்துக்கொள்வதில் இருவருக்கும் மிக்க அக்கறை. அவ்வழியினூடே கீழே சென்றால் அங்கே கடல் நீர், குளம் போலத் தேங்கியிருக்கும். ஒவ்வோர் அலையும் அடிக்கும் போது அதில்வரும் மீன்கள் அத்தேக்கத்தில் தங்கியிருக்கும். திரும்பிக் கடலுக்குள் செல்ல அவைகளால் இயலா. இவ்வாறாகக் கட்டுமரமின்றி மீன் பிடிக்க ஒரு வசதி அவன் முதியோர் காலத்திலிருந்து ஏற்பட்டிருந்தது. அக்குட்டைக்கு முருகன்குட்டை என்று பெயரும் உண்டாகிவிட்டது.

பூங்காவிற்கு - அதுதான் அவளுக்கு இடப்பட்டிருந்த செல்வப் பெயர்-பிரதி தினமும் உழைப்பு ஒன்றுதான் குறி. எப்போது கடல் எக்கலடித்தாலும், பகலானாலும் இரவானாலும் வலையோடு குட்டைக்குச் செல்வாள். சோம்பல் என்னும் பேய் அவளை அண்டுவதற்கும் நடுங்கும். அன்றன்று பிடித்த 'சரக்கை'ப் பெரிய வீட்டுக்காரரிடம் விற்றுவிடுவாள். கிராமக் கடையிலிருந்து அன்றன்று கூழுக்கு வேண்டிய பொருள்களை வாங்கி வருவாள். அவள் ஆக்கியவற்றைக் கிழவன் ஆர்வத்தோடு நாவைத் தட்டிக்கொண்டு உண்பான். இப்படியே வெகுநாள் சென்றன.

ஒரு நாள் குப்பு மேஸ்திரியின் பிள்ளை மருதமுத்து அந்தக் குட்டையண்டை வந்தான். அதிலிருந்த மீன் வளப்பம் அவன் மனத்தைக் கவர்ந்தது. இனிமேல் ஒவ்வொரு மாலையிலும் அங்கே வலை போடுவதாகத் தீர்மானித்தான். பூங்கா அன்று வழக்கம்போல் வலையையும் குடலையையும் எடுத்துக்கொண்டு கீழே இறங்கிவந்தாள். அங்கே மருதமுத்து மீன் பிடிப்பதைக் கண்டாள். "என்ன மருத அண்ணே! இங்கே இன்றைக்குச் சும்மா வந்தாயோ? எங்கள் தாத்தா பார்த்தால் கோபிப்பாரே! இது அவர் குட்டை

யல்லவா? இன்றைக்குப் போனால் போகிறது" என்றாள் சிறுமி. மருதன் பதில் கூறவேயில்லை.

ஒரு நாளாயிற்று; ஒரு வாரமாயிற்று; ஒரு மாதமாயிற்று; அதே இடத்தில் ஒவ்வொரு மாலையிலும் மருதமுத்து மீன் பிடிக்க வருவதைக் கண்டாள். அவள் என்ன சொல்லியும் அவன் விலகுவதாகக் காணவில்லை. முருகனே கோபித்துக்கொண்டும் மருதன் கேட்கவில்லை. இவர்கள் கூறுவதற்குப் பதில் அவன் வாயைத் திறப்பதே இல்லை. அவனுக்குக் கருமமே கண்.

மருதன்மேல் பூங்காவிற்கு வெறுப்புத் தட்டலாயிற்று. அவனை எப்படி விரட்டுவது என்ற கேள்வி அவள் மனத்தில் குடிகொண்டது. முருகன் யோசனைப்படி கிராமத் தலைவனிடம் பிராது கொடுத்தாள். ஆனால் பிராதுக் கட்டணம் கொடுத்ததுதான் கிழவனும் சிறுமியும் கண்ட பலன்.

இனிமேல் வேறு என்ன செய்வது என்று இருவரும் ஆலோசித்து வந்தனர். பூங்காவும் மருதமுத்திடம் பேசுவதை விட்டுவிட்டாள். ஆனால் ஒரு நாள் திடீரென்று அவனோடு பேச ஆரம்பித்தாள்.

"நீ ஏன் எங்களைத் தொந்தரவு செய்கிறாய்? கிழவனையும் என்னையும் கஷ்டத்திற்கு ஆளாக்குவதில் உனக்கு என்ன சந்தோஷம்? ஏதாவது கேட்டால் ஊமையாயிருக்கிறாயே" என்றாள்.

"நான் என்ன செய்கிறேன்? ஆண்டவன் படைத்த கடலில் மீன்பிடிப்பதைத் தடுப்பவர் யார்? எல்லோரையும் போல் எனக்கும் கடலில் பாத்தியதை இல்லையோ?"

"கடல் மீன் ஒருவனுக்குத்தான் சொந்தமென்று நான் சொல்லவில்லை. ஆனால் இந்தக் குட்டையும் அதில் உள்ளவைகளும் தாத்தாவுடையவை. அதிலே மீன் பிடிக்க வேறு யாருக்கும் உரிமையில்லை."

"குட்டை உன் தாத்தாவுடையது என்று எழுதிவைத்திருக்கிறதோ? அப்படி இருந்தாலும் நான் பிடிக்கும் மீன் கடலிலிருந்துதானே வருகிறது?"

"ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கிறேனென்று அடுத்த குச்சுக்கூரை மீது ஏறினால் அவர்கள் சும்மாயிருப்பார்களா?"

"நீ என்னோடு பேசவேண்டாம். உன்னால் ஆனதைச் செய்துகொள்."

"என்னால் ஒன்றும் செய்ய முடியாது. ஆனாலும் ஏழையின் கண்ணீர் வீணாய்ப் போகாது. தெய்வத்திற்குக் கண் உண்டு. எங்களுக்குத் துன்பம் தருகிறவர்களைக் 'குறவன் குழி' யிலாவது தள்ளிவிடும்" என்று கூறினாள். அன்று முதல் அவனோடு பேசுவதை அறவே ஒழித்துவிட்டாள்.

முன்பனிக் காலத்திற்கு முன்பு அங்கே மீன் அதிகம் வராது; அதிலும் மருதன் பெரிய வலையை விரித்துவிட்டால் அவளுக்கு எங்கிருந்து மீன் வரும்? வானத்திலிருந்து விழுமா? பாவம்! அச் சிறுபெண் மருதனைத் திட்டிக் கொண்டே இருந்தாள். ஆயிரம் சாபங்கள் கொடுத்தாள். அவனை மிருகத்தினும் கேவலமாக மதித்தாள். அவன் ஈவிரக்கமே இல்லாத ஜந்து என்பது அவள் அபிப்பிராயம். இவ்வளவும் எதற்கு? கிடைக்கும் வரும்படியில் தாத்தாவிற்கு முழு வயிற்றுக் கஞ்சியும் வார்க்க முடியாமைதான்.

* * *

ஒரு நாள் இரவு நீலவானத்தில் சந்திரனின் வெண்மை பொலிந்தது. விண்மீன்கள் நீலக் கல்லிடையே பதிக்கப் பெற்ற வயிரங்களே போன்று மிளிர்ந்தன. வெண்ணிலவின் தண்ணொளியினால் கடல் முழுதும் ஒரே வெள்ளித் தகடுபோல் இருந்தது. இவைகளைக் கண்டு ஆனந்திப்பதே போன்று ஆயிரம் அலைகள் வாய்விட்டு ஒலித்தன.

இன்று இயற்கைத் தேவியின் இன்பம் தெவிட்டாத இன்பம். அது கேவலம் செம்படவச் சிறுவன் மனத்தையும் கொள்ளைகொண்டது. இன்னும் சிறிது கடலின் அருகே சென்று குந்தியிருக்க அவன் மனம் விரும்பிற்று. அவ்வாறே கடலும் குட்டையும் கூடும் இடத்தில் ஒரு பாறையின்மீது உட்கார்ந்தான்.

பூங்காவனம் அவனைப் பார்த்தவண்ணம் மற்றொரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். அவன் உட்கார்ந்த இடத்தின் அருகில்தான் 'குறவன் பள்ளம்' இருந்தது. அதன் அருகேயும் செல்லக் கூடாதென்று முருகன் தன் பேத்திக்குக் கட்டளையிட்டிருந்தான். அதில்தான் சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன் குறவன் ஒருவன் தவறி விழுந்து மாண்டு போனானும். அவன் உடல் அகப்படவே இல்லையாம். அன்று முதல்தான் அப்பள்ளத்திற்குக் குறவன் பள்ளம் என்ற பெயர் ஏற்பட்டதாம். முன் காலத்தில் அதுதான் மாவலி ராசா பாதாளலோகத்திற்குச் செல்லும் வழியாம். இவற்றையெல்லாம் பூங்கா எத்தனையோ தடவை கேட்டிருக்கிறாள்.

மருதன் அதன் அருகே சென்று உட்கார்ந்ததும் அவள் மனத்தில் ஏதோ ஓர் எண்ணம் எழுந்தது. ஏதோ கூற முயன்றாள். அடுத்த நொடியில் வாயை மூடிக்கொண்டாள். இது தான் பெண்மக்கள் சுபாவம். பிடிவாதம் ஏற்பட்டுவிட்டால் அவர்களுக்கு எந்த மருந்தைக் கொடுத்தாலும் பயனே இல்லை.

மருதன் பாட ஆரம்பித்தான். சமுத்திர ராஜாவின்மீது அவனுக்கு நல்ல நல்ல பாட்டுகள் தெரியும். நிலவும் கடலும், மலையும் காற்றும், கேட்பதற்கு ஒரு பெண்ணும் இருக்கும் போது மருதன் பாடமாட்டானா?

பாட்டு முடிந்ததும் வீசி எறிந்த தன் வலையை வலித்தான். மீன்களைப் பொறுக்கிக் குடலையில் இட்டுக்கொண்டான். மறுபடியும் வலையை வீசினான். வலை வீசுவதில் அவனுக்கு

மிக்க சாமர்த்தியம் உண்டு. அதுவும் இன்று அவனுக்குக் குஷி பிறந்திருக்கிறது.

வெறியன்போன்று இன்பக் கள் குடித்த மருதன் தலை கால் தெரியாது மிக்க விசையுடன் வலையை வீசினான். "ஆ! என்ன?" என்று கூச்சலிட்டுக்கொண்டே பூங்கா அவனை நோக்கித் திரும்பினாள். படீர் என்று ஏதோ சத்தம் கேட்டது! அது என்ன?

மருதனைக் கரையில் காணவில்லை. "ஐயோ!" என்று அலறிக்கொண்டு பூங்கா அவன் விழுந்த இடத்தருகே ஓடினாள். கரையினில் உட்கார்ந்து தண்ணீருக்குள் நோக்கினாள். பாவிப்பள்ளம் ஏப்பம் விட்டுவிட்டது. அலையொன்று, பெரிய அலையொன்று, பாய்ந்து வந்தது. மருதனின் முகம் அடியிலிருந்து உயர எழும்பிற்று. நல்ல அலை அல்லவா அது?

முகமெங்கும் செந்நீராயிருக்கும் மருதனை நோக்கினாள். பூங்காவின் முகம் வியர்த்தது. மருதன் தோளைப் பிடிக்கக் கையை நீட்டினாள். ஆ! மற்றோர் அலை உடலை உள்ளே கொண்டுபோய்விட்டது! பாவி அலை, என்ன செய்வாள் பாவம்! "எப்படியாவது மருதன் உடல் வரக்கூடாதா? இல்லை, நான் உள்ளே இறங்கித் தேடட்டுமா? ஐயோ! அவன் சாகவேணுமா?" என்று கூறிப் பெருமூச் செறிந்தாள். சட்டென்று ஒரு யோசனை புலனாயிற்று.

ஓடிச் சென்று தன்வலையை எடுத்துவந்தாள்; வீசினாள்; சுருக்கி வலித்தாள்; மிக்க கனமான பொருள் ஏதோ வலையில் அகப்பட்டது; அதுதான் மருதன் உடல். உடலை வெண்மணல்மீது கொண்டு சென்று கிடத்தினாள்.

அந்தச் சந்திரிகையின் ஒளியில் மரணம் தாண்டவமாடும் மருதன் முகத்தில், இரத்தம் பீறிடும் முகத்தில், ஓர் அழகு கொஞ்சுவதைக் கண்டாள். "ஐயோ மருதா! எத்தனையோ

இரவில் இருவரும் இங்கு மீன்பிடித்தோமே! ஐயோ மருதா! உயிர் விட்டுவிட்டாயே! இனிமேல் யார் எனக்கு இங்கே இரவில் துணை?" என்று அலற ஆரம்பித்தாள். பெண் மனம் பெண் மனந்தான். நடந்த சங்கதியைக் கூறத் தாத்தாவிடம் ஓடினாள்.

முருகன் தள்ளாத கிழவன்; பூங்காவனத்தினால் நடத்தப்பெற்றுக் கடற்கரையை அடைந்தான்; மருதன் மூக்கில் கையை வைத்துப் பார்த்தான்; "பூங்கா! நம்மீது அடாப் பழி கூறுவார்களடி" என்று கிழவன் அழுதான்.

"நான் என்ன செய்தேன்? அவன்தானே விழுந்தான்! அதைச் சொன்னால் நம்பமாட்டார்களோ? இதோ மேஸ்திரியார் வீட்டுக்குப் போய்ச் சொல்லுகிறேன்" என்று குன்றின்மீது ஏறினாள்.

ஊர் முழுதும் கூடிவிட்டது. குப்பு மேஸ்திரி நெஞ்சழுத்தக்காரன். கண்களில் நீர் சிறிதும் சிந்தவில்லை. ஆனால் இத்தகையோருக்குத்தான் துக்கம் அதிகம். மனமே மனத்தைத் தின்றுவிடும். கதறுகின்ற மனைவியுடனும் ஊர்க்கும்பலுடனும் அலறிக்கொண்டு தொடரும் பூங்காவுடனும் குப்பு மேஸ்திரி கடற்கரையை நோக்கிக் கடிதில் சென்றான்.

யாரோ ஒருவன் கூட்டத்தில் என்னவோ சொன்னான். அதைக் கேட்டதும் மேஸ்திரிக்குக் கண்கள் சிவந்தன. பூங்காவனத்தைப் பிடித்துக்கொண்டு பற்களைக் கடித்துக்கொண்டு, "பாவி! கொலைகாரி! உன் தகப்பனோடு சேர்ந்துகொண்டு மருதன் கழுத்தை முறித்தாயே! இதற்கு இரத்தத்திற்கு இரத்தம் வாங்குகிறேன் பார்" என்று உறுமினான்.

பூங்காவின் தலையில் இடிவிழுந்ததுபோலவும், ஹிருதயத்தில் வாள்வெட்டு விழுந்ததுபோலவும் இருந்தது. குற்றமற்ற மனம் எவ்வாறு சகிக்கும்? கோவென அழுதாள். இதற்குள் அனைவரும் மருதன் உடலண்டை வந்துவிட்டனர்.

"தாத்தா! நீயும் நானும் மருதனைக் கொன்றோமாம்" என்று கதறிக்கொண்டு கிழவனைக் கட்டிக்கொண்டாள். கண்ணீரால் நனைந்த கிழவன், "அழாதே பூங்கா! ஏழைகளைத்தான் எல்லோரும் விரட்டுவர்; எளியவர்கள்மீதுதான் பழிகள் சுமத்தப்படும். இது உலக வழக்கம்" என்று கூறி மகளைத் தேற்றினான்.

"ஐயோ மாரியம்மா! வாயுப் பிடித்த தாத்தா கையிலே விலங்கு போடுவார்களே! உனக்குக் கண்ணில்லையோடி!" என்று அவள் அலறலுற்றாள்.

மைந்தனை, ஒரே மைந்தனை, இழந்த மேஸ்திரியின் மனைவி பட்ட துக்கத்தை விளக்க இந்திய இதிஹாஸத்தில் ஒரே உதாரணந்தான் உண்டு; அதுதான் சந்திரமதி சரிதை. குழந்தையின் முகத்தில் இருந்த இரத்தத்தை முன்றானையால் துடைத்தாள்.

குப்பு மேஸ்திரி துக்கத்தை வெளிக்குக் காட்டவில்லை. மருதன் மூக்கில் கைவைத்துப் பார்த்தான்; நாடியைப் பார்த்தான்; கண்ணிமையை நீக்கினான். அவனுடைய ஆசையெல்லாம் ஆயிரம் துளிகளாகச் சிதறிவிட்டன. "பாவி இப்படிச் செய்தாயே!" என்று ஆசை வெறுத்துப்போன குரலுடன் கூறிக்கொண்டு மருதன் வயிற்றில் ஓர் அறை அறைந்தான்.

மருதன் மூக்கினின்றும் நீர் வெளியே பீறிட்டு அடித்தது. என்ன ஆச்சர்யம்! மருதன் கண்ணைத் திறந்து மிரள மிரள விழித்தான்.

யாருக்கு அதிக சந்தோஷம்? பூங்காவனத்திற்குத்தான். ஏன்? அழகுள்ள மருதனை மறுபடி கிராமத்தில் காணலாம்; தனக்கு மீன்பிடிக்கும்போது துணையாக வருவான்; அவன் பாடும்போது கேட்கலாம். இவ்வாறு எவ்வளவோ எண்ணங்கள் சிறு பெண்ணின் உள்ளத்தில் ஓடின.

இது நடந்து நான்கு நாட்கள் ஆகிவிட்டன. வழக்கம் போல் பூங்காவனம் கடற்கரையில் இருந்தாள். ஒரு விளக்கை எடுத்துக்கொண்டு யாரோ குன்றிலிருந்து இறங்கிவருவது போல் இருந்தது. யார் அது? குப்பு மேஸ்திரி.

கீழே வந்ததும், "பூங்கா! அவன் உன்னைப் பார்க்க வேண்டுமாம். என்னோடு தயைசெய்து வருவாயா? நீ திரும்பிவரும்போது துணைவருகிறேன்" என்றான். "எனக்குத் துணை எதற்கு மாமா? மருதனைப் பார்க்கவேண்டுமென்று எனக்கும் ஆசைதான். உடம்பு எப்படி?" என்று கேட்டுக்கொண்டே வலையை அங்கேயே விட்டுவிட்டு மேஸ்திரியைத் தொடர்ந்தாள். போகும்போது மேஸ்திரி தான் 'அன்று இரவு' சொன்ன கடுஞ்சொற்களுக்குச் சிறுமியிடம் மன்னிப்புக் கேட்டான். அவன் கேட்டதற்கு அவளுக்கு அர்த்தமே புரியவில்லை.

இருவரும் மேஸ்திரியின் வீடு வந்துசேர்ந்தனர். ஓர் அறைக்குள் பூங்கா அழைத்துச் செல்லப்பட்டாள். அங்கே மருதன் படுக்கையிற் கிடந்தான்.

"பூங்கா வா! என் உயிரைக் கொடுத்தவளே வா!" என்று மருதன் புலம்பினான். அதற்குமேல் பேசமுடியவில்லை. அவளை வெறிக்க வெறிக்கப் பார்த்தான். அவளையும் அறியாது அவள் கைகள் மருதன் கைகளைத் தடவின.

* * *

நான்கு வருஷங்கள் ஆயின. பூங்காவை மருதனுக்கு மணம் செய்துவைத்தார்கள். கீல்வாயுக் கிழவன் வருவோர் போவோரிடமெல்லாம் இந்தக் கதையைக் கூறி வருகின்றான். அவனுக்கு என்னவோ அதில் ஒரு சந்தோஷம்.

# நக்ஷத்திரக் குழந்தைகள்

[பி. எஸ். ராமையா]

"அப்பா! நக்ஷத்திரங்களுக்குக்கூட அப்பா உண்டோ?"

"உண்டு அம்மா!"

"அவர் யார் அப்பா?"

"ஸ்வாமி."

"ஸ்வாமியா? அப்பா! அவர்கூட உன்னைப்போலத் தானே இருப்பார்? நக்ஷத்திரம் ரொம்ப அழகாயிருக்கே. அவர் அப்பாகூட அழகாகத்தானே இருப்பார்?"

"ஆமாம் அம்மா! ஸ்வாமியினுடைய அழகைப்போல வேறு யாருக்கும் அழகு இல்லை."

"ஸ்வாமிகூட உன்னைப்போல நல்லவர்தானே?"

"ஆமாம்."

"ஆமாம். எனக்குக்கூடத் தெரியறது. ஸ்வாமி ரொம்ப......ரொம்ப நல்லவர். நக்ஷத்திரமே பளிச்சின்னு அவ்வளவு நன்னாயிருக்கே. அவா அப்பா எப்படியிருப்பார்!"

"அவர் ரொம்ப நல்லவர். நம்மையெல்லாம் விடப் பெரியவர்."

"அப்பா! நக்ஷத்திரம் எப்போ பிறக்கும்?"

"ஸாயங்காலத்தில்."

"எப்படியப்பா அது பிறக்கிறது?"

"நாம் சத்தியத்தையே பேசுவதால்; நாம் ஒவ்வொரு தடவையும் ஓர் உண்மையைச் சொல்லும்பொழுது ஒரு நக்ஷத்திரம் பிறக்கிறது."

"நான்கூட நிஜத்தையே சொன்னால் நக்ஷத்திரம் பிறக்குமா அப்பா?"

"ஆமாம் அம்மா! நீ ஒவ்வொரு தடவையும் நிஜம் சொல்லும்பொழுது ஒரு நக்ஷத்திரம் பிறக்கிறது."

"அப்பா!"

"என்ன அம்மா!"

"நம்ப ஊரிலே அவ்வளவுபேரும் - குழந்தைகள் எல்லாம்-நிஜத்தையே பேசினு எவ்வளவு நக்ஷத்திரம் பிறக்கும்? நிறைய (இரண்டு கைகளையும் விரித்துக்காட்டி) இவ்வளவு நக்ஷத்திரம் பிறக்குமோல்லியோ?"

"ஆமாம் அம்மா!"

அதைக் கேட்டவுடன் குழந்தை ரோஹிணி வேறொன்றும் பேசாமல் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவளாய்த் திரும்பி விட்டாள். அவள் தனது முதிரா உள்ளத்தினுள்ளே ஸ்வாமியைப் பற்றியும், அவருடைய நக்ஷத்திரக் குழந்தைகளின் அழகைப்பற்றியும் மனிதர்கள் யாவரும் சத்தியத்தையே பேசுவதைப் பற்றியும் கற்பனை செய்து காண முயன்று கொண்டே வாசலுக்குச் சென்றாள்.

* * *

குழந்தை ரோஹிணிக்கு ஆறு வயசுதான் ஆகிறது. ஆனாலும் அவளுடைய வார்த்தைகள் யாவும் மணி மணியாக இருக்கும். முத்தும் பவளமும் கோத்த ஹாரம்போல இருக்கும் அவளது பேச்சு. அவளுடைய கேள்விகள் எல்லாம்

தெய்வ உலகத்துக் கேள்விகள். அவளுடைய இளம் நெஞ்சில் உதிப்பவை ஸ்வர்க்க உலகத்து எண்ணங்கள்.

ஸ்ரீமான் ஸோமஸுந்தரம், பி. ஏ. வரையில் படித்திருக்கிறார். ஆனாலுங்கூடக் குழந்தை ரோஹிணியின் சில கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தெரியாமல் ஒவ்வொரு சமயம் திணறிப் போய்விடுவார். 'ஐயோ! இந்தக் குழந்தையின் மனத்தைக்கூட என்னால் திருப்தி செய்யக் கூடவில்லையே!' என்று ஏங்கி நிற்பார். ஆனால் ரோஹிணியைக் கண்டவுடன், ரோஹிணியைப்பற்றி நினைத்தவுடன், அவருடைய உள்ளத்திலெழும் கர்வம் ஒரு சக்கரவர்த்திக்குக்கூட இராது.

பட்டணத்தில் இருக்கும்பொழுது குழந்தை இயந்திர தேவதையின் குழந்தைகளைப்பற்றிப் புதிய புதிய கேள்விகளைக் கேட்பாள். கிராமத்திற்கு வந்தவுடன் அவளுடைய கேள்விகள் அதியாச்சரியகரமாக மாறிவிடும். இயற்கைத் தேவியின் சிறு விளையாட்டுகளின் இடையே அவளுடைய உள்ளம் சென்று கலந்துகொள்ளும். அவளுடைய எண்ணங்கள் இயற்கை அன்னையுடன் இறக்கை விரித்துப் பறப்பவையாக இருக்கும்.

ஸோமஸுந்தரம் அப்பொழுது தபால் ஆபீஸுக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தார். தினந்தோறும் தபால்காரன் வருவதற்குள் அங்கேயே நேரில் போய் ஏதாவது கடிதம் உண்டாவென்று பார்த்துவிடவேண்டுமென்ற ஆவலுடன் அவசரம் அவசரமாகப் போவார்; கடிதம் எதுவும் வராவிட்டாலும் தினசரிப் பத்திரிகையாவது வருமே என்று போவார். அவ்வாறு அவர் புறப்பட்டுக் கொண்டிருந்த பொழுதுதான் குழந்தை நக்ஷத்திரங்களைப் பற்றிக் கேட்டாள்.

அதற்குமேல் ரோஹிணிக்கு அப்பொழுது தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் வேறு ஒன்றும் இல்லை.

நக்ஷத்திரங்களினுடைய அப்பாவைப்பற்றிக் கற்பனை செய்து கனவு காண்பதற்குத்தான் அவளுடைய சிறிய மனசில் இடம் இருந்தது.

ஸோமஸுந்தரம் அதைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டே தபால் ஆபீஸுக்குச் சென்றார்.

* * *

**மா**லை நேரம் வந்தது. குழந்தை ரோஹிணி அப்பொழுதுதான் குளித்துவிட்டு அம்மா செய்துவிட்ட அலங்காரங்களுடன் வாசலில் வந்தாள். அவர்கள் வீட்டு வாசலில் இரண்டு பக்கங்களிலும் இரண்டு பாதா மரங்கள் உண்டு. அவற்றின் நடுவில் சென்று நின்றாள். சூர்யன் அஸ்தமிக்கும் சமயம்; வானவீதியில் வெளியும் ஒளியும் மோனத்திலே கலந்து நகைசெய்து கொண்டிருந்தன. குழந்தை ரோஹிணி மேற்றிசைக் கோடியில் நடந்துகொண்டிருந்த இந்திர ஜாலத்தைக் கண்டாள். அவளுடைய நிஷ்களங்க நெஞ்சத்தில் பரவசநிலை பிறந்தது.

ஆஹா! என்ன அழகு! அங்கு, அந்த வானவெளியிலே, 'உமை கவிதை செய்து' கொண்டிருந்தாள். ரோஹிணியின் முகம் மலர்ந்தது. அங்கு ஒரு புதிய ஒளி தோன்றியது. அது வான வெளியில் தோன்றிய திவ்ய ஒளியின் பிரதி அல்ல. குழந்தையின் ஹ்ருதய சந்திரனிலிருந்து வெளிப்பட்டு முகத்தில் வீசும் நிலவு! அவளுடைய கண்கள் சுடர் எறியும் இரண்டு மீன்களெனப் பிரகாசித்தன. காலையிலே, அதிகாலையில், சூர்யோதய காலத்தில், தாமரையொன்று மலர்வதைக் கண்டிருக்கிறீர்களா? கொஞ்சமாகத் திறந்து அது தனது காதலனைக் கண்டு இளநகையாடுவதைப் பார்த்ததுண்டா? அந்தத் தாமரையைப் போல மலர்ந்து வியப்பின், ஸந்தோஷத்தின், இளநகை தவழ்ந்து ஆட

ரோஹிணியின் சிறிய அழகிய வாய் சிறிது திறந்திருந்தது.

'அவள் யார்? வானத்திலே அப்படிப் படம் எழுதி விளையாடும் அந்த வானுலக ரோஹிணி எப்படி இருப்பாள்?'

குழந்தை ரோஹிணி பலகையில் சித்திரம் எழுதி விளையாடுவதுண்டு. முதலில் ஒரு படம் வரைவாள். "சீ! இது நன்றாயில்லை" என்று அதை அழித்துவிட்டு வேறு ஒன்று எழுதுவாள். அது நன்றாக இருக்கும். ஆனாலும் அதைக் கலைத்துவிட்டு வேறு ஒன்று எழுதுவாள். அதையும் துடைத்துவிட்டுப் புதிய தினுசாக மற்றொன்று வரைவாள்.

வானத்து ரோஹிணியும் அவ்வாறே புதிய புதிய படங்களை எழுதுகிறாள். ஆனால் அவள் அழித்து அழித்து வரையவில்லை; மாற்றுகிறாள். எல்லாம் வர்ணப்படங்கள்! புதிய புதிய வர்ணங்கள். ஒன்றைப்போல மற்றொன்று இல்லை. கணந்தோறும் நவநவமாக் களிப்புத் தோன்றுகிறது. அந்த வானுலக ரோஹிணிக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்? குழந்தை ரோஹிணிக்கும் சந்தோஷந்தான், வானுலக ரோஹிணியின் சந்தோஷத்தைப்பற்றி நினைப்பதில். சந்தியா தேவி நாணத்தினால் தலைகுனிந்து கீழ்த்திசை அடிவானத்தினின்றும் மெல்ல அடிவைத்து வானவீதியிலே வந்துகொண்டிருக்கிறாள். அவளுடைய வருகை ஓர் இனிய சங்கீதத்தைப் போன்றிருக்கிறது, கல்யாணி ராகத்தின் அவரோகணம்போல. அவளுடைய சௌந்தர்யம் இனிமையானது; உள்ளம் கவர்வது. அது நாணத்தினால் ஆக்கப்பட்டது; நிமிர்ந்து பார்க்காது; ஆனாலும் மகிழ்ச்சி ஊட்டுவது. அவளுடைய நிறம் ஸப்தவர்ணங்களில் ஒன்றல்ல; அவற்றிற்குப் புறம்பானது; அதன் பெயர் மாலை; ஆதலால் அது மயக்கம் தருவது.

வர்ணப்படங்கள் எழுதுவது நின்றுவிட்டது. இனி, வேறு வகையான சித்திரங்கள், வெள்ளை மேகத்தினால் ஆக்கப்படும் உருவகங்கள். ஒளியையும் நிழலையும் கலந்து எழுதப்படும் ஓவியங்கள், அவற்றின் விளிம்புகளில் சுடர் கலந்த வெள்ளி முலாம் பூசப்பட்டிருக்கிறது. அவைகள் ஏன் இப்படி அங்கும் இங்கும் அலைந்துகொண்டே இருக்கின்றன? ஓரிடத்தில் இருந்தால் என்ன? ஆகாசத்திற்கு இந்த நீல வர்ணம் எப்படிவந்தது? பூமி ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு வர்ணமாக இருக்கிறதே; வானம் மாத்திரம் ஏன் இப்படி ஒரே நீலமாக இருக்கிறது? நேர் மேலே இரண்டு மேக வடிவங்கள் மெதுவாக அசைந்துகொண்டிருக்கின்றன. இரண்டிற்கும் நடுவில் நீலவர்ணம் களங்கமற்றது; ரோஹிணியின் உள்ளத்தைப் போன்றது. அந்த இடத்திலே, அந்த இரண்டு வெண்மையான மேகக் கூட்டங்களின் இடையிலுள்ள நீலப் பட்டாடையிலே, திடீரென்று ஒரு சுடர் தோன்றுகிறது! அடேயப்பா! அது எவ்வளவு துரிதமாகத் தோன்றிவிட்டது! கண் இமைக்கும் நேரத்தைவிடச் சீக்கிரமாக, மின்வெட்டும் நேரத்தில், அதுகூட அதிகம், ஒரு கணத்தின் ஆயிரத்தில் ஒரு பங்கு நேரத்தில் அந்தச் சுடர்ப் பொறி பிறந்துவிட்டது!

"அம்மா! ஸ்வாமிக்கு ஒரு நக்ஷத்திரக்குழந்தை பிறந்துவிட்டது!" என்று கூவினாள் குழந்தை ரோஹிணி. கைகளைக் கொட்டுகிறாள். அவளது கண்கள் சிரிக்கின்றன. உள்ளம் களிவெறி கொள்கிறது.

அவளுடைய தாய் வீட்டு வாசற்படியின் அருகில் நிற்கிறாள். அவளது கவனம் வீதியில் போவோர் வருவோர்மீது சென்று லயித்திருக்கிறது. அதோ போகும் பெண்ணினுடைய ஆடையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறாள். குழந்தை ரோஹிணியின் வார்த்தைகள் அவளுடைய செவி

களில் படவில்லை. ஆனால் குழந்தையின் ஸந்தோஷம் மாத்திரம் அவளுடைய மனத்தில் சென்று தாக்கி அதை ரோஹிணியினிடம் இழுத்துச் செல்லுகிறது. குழந்தையை அப்படியே விழுங்க விரும்புபவளைப் போலக் கரைபுரண்டோடும் ஆசையுடன் அம்மாவின் கண்கள் குழந்தையைப் பார்க்கின்றன.

வானவெளியிலே இருள் பரவுகிறது. இருளும் அழகாகத்தான் இருக்கிறது. அதிலும் இனிமை இருக்கிறது; மாதாவின் ஸ்நேகத்தைப்போன்ற இனிமை. ஒன்றன்பின் ஒன்றாக நக்ஷத்திரங்கள் பிறந்துகொண்டே இருக்கின்றன. அப்பா! எத்தனை நக்ஷத்திரங்கள்! குழந்தை ரோஹிணியால் அவற்றை எண்ண முடியவில்லை. அவை பிறக்கும் வேகந்தான் என்ன! அந்த வேகத்தைக் குழந்தையின் சிறிய மனம் தொடர்ந்து செல்வது ஸாத்யமில்லை.

"வா கண்ணே! உள்ளே போகலாம். இருட்டிப் போய் விட்டது" என்று அம்மா அழைக்கிறாள்.

"இரு அம்மா போகலாம். மானத்தைப் பாரு. எவ்வளவு அழகாயிருக்கு!" என்று நிற்கச் சொல்லுகிறாள் குழந்தை.

"ஆமாம்; அழகாய்த்தான் இருக்கிறது. இருட்டிப் போய் விட்டதே. இனிமேல் இப்படி வாசலில் நிற்கக்கூடாது. வா அம்மா உள்ளே" என்று மறுபடி அழைக்கிறாள் அம்மா.

"அம்மா!"

"உம்."

"மானம் இப்போ எதைப்போலே இருக்கு, சொல்லட்டுமா?"

"சொல்லு."

"உன் முகத்தைப்போலே. நீ என்னை முத்தமிடுகிறயே, அப்போ உன்முகம் இந்த மானத்தைப் போலேயே இருக்கு."

அம்மாவுக்கு அதன் பொருள் விளங்கவில்லை. அது சரியென்று தோன்றவில்லை. ஆனால் அந்த வார்த்தைகளில் இருக்கும் ஏதோ ஒன்று, 'அது வாஸ்தவந்தான்' என்று சொல்லியது அவளுடைய மனத்தில்.

அம்மா சட்டென்று கீழிறங்கிச் சென்று குழந்தையை இழுத்துக் கட்டிலடங்காத காதலுடன் முத்தாடினாள். அம்மாவுக்கு வீட்டில் வேலை இருக்கிறது. மற்றொரு முறை, "உள்ளே வாடா குஞ்சு" என்று சொல்லிவிட்டு வீட்டினுள் சென்றுவிட்டாள்.

குழந்தை ரோஹிணி 'சீரவிருஞ்சுடர் மீனொடு வானத்துத் திங்களையும் சமைத்தே ஓரடியாக விழுங்கிடும் உள்ளச் செல்வம்' படைத்து அப்படியே நின்றிருந்தாள்.

வெளியே சென்றிருந்த ஸோமஸுந்தரம் வீட்டிற்குத் திரும்பிவந்தார். வாசலில் தனியாக வானத்தின் அழகில் லயித்து நின்ற ரோஹிணியைக் கண்டார்.

"ரோஹிணிக் குஞ்சு! என்ன அம்மா பார்க்கிறாய்? உள்ளே போகலாம் வா" என்று அழைத்தார்.

குழந்தை, "இரு அப்பா! அந்த மானம் எவ்வளவு அழகாயிருக்கு! அவ்வளவு குழந்தைகளையுடைய ஸ்வாமிக்கு எவ்வளவு ஸந்தோஷம் இருக்கும்! அப்பா!" என்றாள்.

அதற்குள் ஸோமஸுந்தரத்தின் மனத்தில் வேறு ஏதோ சிந்தனை வந்துவிட்டது. குழந்தை சொல்லியது சரியாகக்கூடக் காதில் விழவில்லை. "உம்" என்று சொல்லிவிட்டு வீட்டிற்குள் சென்றார்.

அடுத்த விநாடி ஒருவிண்மீன் நிலை தவறிச் சுடர் வீசிக் கொண்டு வானத்தினின்றும் கீழே விழுந்து மறைந்தது. அதன் பிரயாணம் சில விநாடிகளே கண்ணுக்குத் தெரிந்தது.

குழந்தையின் கண்களில் கண்ணீர் பெருகியது. இரண்டு கண்களினின்றும் இரண்டு நீர் வடிவமான முத்துக்கள் கீழே

உதிர்ந்தன. அந்தச் சின்னஞ் சிறு ஹிருதயத்தில் விவரிக்க இயலாத, சுருக்கென்று தைக்கும், ஒரு வேதனை காணு கின்றது. குழந்தை விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அழுகையினிடையில், "அப்பா!" என்று இரும்பை உருக் கும் குரலில் கூப்பிட்டுக்கொண்டே வீட்டினுள் சென்றாள்.

ஸோமஸுந்தரம் அப்பொழுதுதான் ஒரு சாய்வு நாற் காலியில் அமர்ந்து அருகிலிருந்த மேஜையின்மீதிருந்து ஒரு புஸ்தகத்தைக் கையில் எடுத்தார். குழந்தையின் குரலைக் கேட்டவுடன் அவருடைய கையினின்றும் புஸ்தகம் 'தொப்' பென்று கீழே விழுந்தது. அவருடைய ஹிருதயம் ஆயிரம் சுக்கல்களாகச் சிதறி விழுந்ததுபோல் இருந்தது. உடல் பதைத்தது.

"என்னடா கண்ணே! என் ராசாத்தி அல்லவா! என் ரோஹிணிக்குஞ்சை யார் என்ன செய்தார்கள்?" என்று படபடப்புடன் கேட்டுக்கொண்டே குழந்தையை வாரித் தூக்கித் தோளின்மேல் சார்த்திக்கொண்டார்.

"அப்பா! எனக்குத் தெரிஞ்சு போச்சு" என்று விக்கல்களுக்கும் விம்மல்களுக்கும் இடையே சொன்னாள் குழந்தை.

"என்னடா கண்ணே, தெரிஞ்சுபோச்சு?"

"அப்பா நம்ப ஊரிலே, யாரோ ஒரு பொய் சொல்லி விட்டார் அப்பா!"

விக்கல்கள், விம்மல்கள், ஹுங்காரத்துடன் அழுகை.

"ஏன் அம்மா அப்படித் தோன்றுகிறது உனக்கு?"

"நீதானே அப்பா சொன்னே, நாம் ஒரு நிஜம் சொன் னால் ஒரு நக்ஷத்திரம் பிறக்கிறதுன்னு. அப்போ......ஒரு நக்ஷத்திரம்......கீழே விழுந்தா......யாரோ ஒரு பொய் ......சொல்லிவிட்டான்னுதானே......அர்த்தம்? ஸ்வாமியி னுடைய..........மனசு......இப்போ.......எப்படி இருக்கும்

வேவுகாரிகளின் கள்ளச் செவிகளில் பதிந்துவிட்டன ஏனோ இந்த ஸ்திரீகளுக்கு இவர்கள்மீது துவேஷம் என்று கேட்கலாம். ஒரு சமயம் இவர்கள் சீலமுடைய ராஜ ஸிம்ஹனைத் தம் வலையில் இழுக்க எவ்வளவோ பிரயத்தனப் பட்டனர். அரசகுமாரனின் நல்ல காலம்: அரண்மனையின் தீய பழக்கங்கள் படியுமுன்னரே அறநெறியில் உபதேசப் பெற்றான். இந்த ஸம்பவம் அவனுடைய மனப்போக்கை, ஏன், வாழ்வையே - எவ்வளவோ மாற்றிவிட்டது. பராந்தக னை, வேள்விகளைப் பாராட்டும் நரஸிம்ம பல்லவனுடைய மகன் ராஜஸிம்ஹன் கொல்லாமையே கொள்கையாகக் கொண்ட ஜைன தர்மத்தைக் கடைப்பற்றினான். புஷ்ப நந்தி என்ற முனிவரின் அருளுடன், அவர் மகள் ஸுதாமதியின் காதலையும் அவன் பெற முயன்றான். இவர்களுக்கு ஏற்பட்ட இந்த நட்பு வெளியுலகிற்குத் தெரியாது. ஆனால் இரண்டு பாழும் பெண்களுக்குமட்டும் இந்தத் தூய்மையான பிரே மையைக் காண ஸஹிக்கவில்லை. வஞ்சந் தீர்த்துக்கொள்ளச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தார்கள் அந்தத் துஷ்டி கள். சமயமும் அன்று வாய்த்துவிட்டது. "அரசனுக்கு இதைத் தெரிவிப்பதே சரி. ஜைன நெறியை வெறுக்கும் அரசன் இவளைத் தண்டிக்காமல் விடான். ஆஹா! அப் புறம் ராஜஸிம்ஹன் எங்கள் கண்ணின் ஏவலுக்கு அடிமை யாக வேண்டியதுதான். ஆ! ஸுதாமதி! உன் அந்திய காலம் கிட்டிவிட்டது. இந்தக் காதற் கொண்டாட்டமெல் லாம் இன்னும் எத்தனை நாழிகை................பார்க்கலாம்" என்ற கொடிய சங்கல்பத்துடன் வெளியேகினர் அவ்வேவு காரிகள். பாவம்! காதலர் இருவரும் தங்கள் பின்னால் நடக்கும் சதியை அறியவில்லை. விதி யாரை விடும்? ராஜ ஸிம்ஹன் ஸுதாமதியை விட்டு மிகவும் துயரத்துடன் பிரிந்து சென்றான்.

## 2

மறுநாள் மாலைநேரம். ஸுதாமதியும், ராஜஸிம்ஹனும் நகரை விட்டு ஓடிவிடச் சங்கல்பம் செய்துகொண்ட வேளை நெருங்கிவிட்டது. இளவரசனுடைய இதயம் 'திக்திக்' என்று அடித்துக்கொண்டது. ஸுதாமதியை உடனே பார்க்க அவன் ஆத்திரம் கொண்டான். ஏதோ கெடுதி நேரிடப் போவதாக அவன் உள்ளத்தில் உணர்ச்சி ஏற்பட்டது. மிகவும் நம்பிக்கையான தேர்ப்பாகன், இளவரசனுடைய ஏவலின் படியே சந்தடியற்று விளங்கும் ஜைனக் கோட்டத்திற்குத் தேரைச் செலுத்தினான்.

ஓர் அழகிய வீட்டின் முன்புறம் தேர் வந்து நின்றது. ஸுதாமதியின் சௌந்தர்யத்தை ஒத்து அவளது வீடும் கவினுடன் விளங்கிற்று. பளிங்குபோன்ற காரைச் சுவர்களில் ஜைனசமய சம்பந்தமான அழகிய சித்திரங்கள் கண்களைப் பறிக்கும்படி இருந்தன. இவை யாவும் ராஜஸிம்ஹனும் ஸுதாமதியும் சேர்ந்து தீட்டியவை. ஸுதாமதி சட்டென்று தன்னைக் காண வராததைக் கண்டு, அரச குமாரன், தன் பாகனை உள்ளே சென்று விசாரித்துவரும்படி சொன்னான். அதே சமயம் மயிற்பீலியினால் தரையிலுள்ள தூசைப் போக்கிக்கொண்டே ஒரு கிழவி தோன்றினாள். அவள், "இளவரசே! ஸுதா வீட்டில் இல்லையே. சற்று முன்புதான் அரசரிடமிருந்து இருவர் வந்து அவளை அழைத்துச் சென்றனர். காரணம் தெரியவில்லை.........எனக்கு என்னவோ பயமாயிருக்கிறது. ஸுதாமதிக்கு ஏதாவது தீங்கு நேரிடுமோ......?" என்றாள்.

இளவரசனும் ஒன்றும் தோன்றாமல் கலவரமே உருவாக விளங்கினான். "ஆனால் ஸுதாமதி இங்கில்லையா.......?" என்று கூறிவிட்டு மனோவியாகுலத்துடன் தன் தேரில் ஏறிக்

கொண்டான். 'ஸுதாமதி எங்குற்றாள் ?.........அவளுடன் அரசனுக்கு என்ன வேலை?.........ஐயோ! அன்று சோலையில் யாராவது எங்களைக் கவனித்து விட்டார்களோ.........?' தேர்ச்சக்கரம் 'கட கட' வென்று சுழல்வதுபோல இம்மாதிரியான பல எண்ணங்கள் அவன் மனத்திலே சுழன்றன. தன்னையே ஆயிரம் தடவை நிந்தித்துக் கொண்டான். "ஸுதாமதி" என்று ஏக்கத்துடன் கூவித் தேரிலேயே சாய்ந்தான். தேர்ப்பாகன் குமணன் தன் யஜமானனை மெல்ல எடுத்துச் சுச்ருஷை செய்து துரிதமாகத் தேரை அரண்மனைக்கு ஓட்டிச் சென்று சயன அறையில் இளவரசனைக் கொண்டு படுக்கவைத்தான். அப்போதும் ராஜஸிம்ஹனுடைய மூர்ச்சை தெளியவில்லை. அரண்மனையிலுள்ளோருக்கு இது தெரியாது. குமணன் இரவு முழுவதும் தன் யஜமானனை விட்டு வரவேயில்லை.

இளவரசனுக்குத் தன் நினைவுவந்தபோது நன்றாக உதயமாகிவிட்டது. அவனுடைய மதிவதனம் சோர்வுற்றுக் கிடந்தது. "ஹே பத்மபாணி! நீதான் எனக்குத் துணை...ஐயோ! அரசன் கையில் சிக்கிய பிறகு நான் அவளை எங்ஙனம் மீட்பேன்.........? ஹே மஹாவீர! எனக்கு அமைதியைத் தருவாய், என் ஸுதா! மீண்டும் உன்னைப் பார்ப்பேனோ.......?" இளவரசன் புலம்பும் காட்சி குமணன் கண்களிலிருந்தும் நீரை வரவழைத்தது.

கொலுவறையில் அரசன் தன் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். கோப அலைகளினால் அவன் மார்பு விம்மிக் கொண்டிருந்தது. வெகுளித் தீ, கண்களில் பறந்தது. அவனைச் சுற்றியிருப்பவர்கள் பெரும்பாலோர் பெண்களே. யார் முகத்திலும் ஈயாடவில்லை. நேற்று விழாவும் வேடிக்கையுமாகவிருந்த கொலு மன்றம் இன்று பிணம் விழுந்த இடம் போல் இருந்தது. யாருக்குமே நாவில் ஈரமில்லை. கலை

குனிந்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்திருந்தனர். வரப் போகும் ஒரு சங்கடத்தின் இருண்ட சாயை அரண்மனையைக் கவிந்திருந்தது.

இளவரசன் தன் இனியாளின் கதி என்னவாயிற்றென்று அறிந்துவரத் துணிந்தவனாய்க் கொலுமண்டபத்தின் வாயிற்படியை அடைந்தான். அவனைக் கண்டதும் சிலைபோல் நிற்கும் உக்ர ரூபிகளான காவலர் இருவரும் கதாயுதத்தைத் தாழ்த்தி வணங்கினர்.

“ஸுதாமதி இங்கு வந்தாளா?” என்று ராஜஸிம்ஹன் அவர்களை விசாரிக்க, அவர்கள், “ஆம்......அரசருடைய ஆஸ்தானத்தில்” என்றனர்.

“அவளுடன் யார் இருக்கிறார்கள்?”

“தெரியாது.”

“அரசர் என்ன செய்கிறார்?”

“விசாரணையில் ஆழ்ந்திருக்கிறார்.”

“யாருடைய விசாரணை?”

“ஸுதாமதியின்.”

இதைக் கேட்டதும் இளவரசனுடைய கண்களின்முன் நூறாயிரம் மின்னல்கள் வெட்டினதுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டது. மேலே நீதிமன்றத்துக்குச் செல்ல முடியாதபடி அவனுடைய கால்கள் வெலவெலத்துப் போயின. அவன் வைக்கும் ஒவ்வொரு காலடியும், “இளவரசே! இதுவே நீ ராஜ்யத்தைவிட்டுப் போகும் தருணம்....” என்று கூறுவது போல் இருந்தது.

அதற்குமேல் செல்ல அவனுடைய கன்மேந்திரியங்களான கால்கள் மறுத்துவிட்டன. மனம் மட்டும் ஸுதாமதியைக் கட்டி அணைத்துக் காப்பாற்ற ஓடிற்று. ஆனால் பாவம்! இளவரசன் சக்தியற்று எதிரே நிகழ்ந்த ஒரு பயங்கரக் காட்சிக்குச் சாக்ஷியாக நின்றான். அவனுடைய

இருதயம் அதைக் கண்டதும் சற்று நேரம் வரை அடித்துக் கொள்ளாமலே நின்றுவிட்டது.

## 3

கோடைக்காலம்; வெப்பம் மிகுந்த மத்தியான்னப் பொழுது. ஆகாயம் தாமிரத் தகடுபோல் காய்ந்து விளங்கிற்று. இளம் வயதினனான ஒரு சமணபிக்ஷு பரந்த பாலை வெளியில் சென்றுகொண்டிருந்தான். அவன் உடல் வேர்த்து, முகம் பசி தாகத்தால் சுண்டி, கண்கள் குழி விழுந்து கிடந்தன. செம்மண் பூமி வழியாக வெகு தூரத்திலிருந்து நடந்துவருவதால், புழுதிக்காவி அவன் கால்களில் படிந்திருந்தது. அவன் கையிலுள்ள கமண்டலத்தில் நீர் ஆகிவிட்டது. முகத்தில் துயரின் குறி. மரமே இல்லாத அந்தப் பாலை வெளியில் வெப்பக் காற்று நடுநடுவே மணலைக் கிளப்பி அவனுக்கு இன்னும் சோர்வை விளைவித்தது. அவனைத் தவிர ஒரு பிராணியும் அங்கே தென்படவில்லை. சமணபிக்ஷு செல்லவேண்டிய இடமோ இன்னும் ஐந்து ஆறு குரோச தூரத்தில் உள்ளது. திகந்தத்தில் தெரியும் அக்குன்றே அவனுடைய லக்ஷ்யம். பிரகாசமான மலையின் நீல உருவம் கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிதாகி வரும்போது இளம் சமணனின் வதனம் மலர்ந்தது. கண்களில் நீர்த்திரை யிட்டது. பசிதாகமே மறந்து சூரியனின் கடுந் தாபத்தையும் பொருட்படுத்தாமல் செல்லும் அவ்வுத்தமன் யாரோ? அவன் அந் நீல பர்வதத்திற்குச் செல்வதன் நோக்கந்தான் என்ன? பொழுது சாயு முன்பே அந்தக் குன்றை அடைய அவன் உறுதிகொண்டுவிட்டான்.

மலையின் சஞ்சீவிக் காற்று, சற்று முன் வாடி வதங்கித் திராணியற்றிருந்த சமணனுக்கும் புதிய உணர்வைக் கொடுத்தது. விஹாரத்திற்கு அருகில் கிறலாக ஓடும் சிற்றருவி

யின் குளிர்ந்த நீரில் கைகால்களை அலம்பிக்கொண்டு படிகளைத் தாண்டிக் குகைக் கோயிலை அடைந்தான். ஒரு பெரிய 'சைத்ய'க் கூடத்தில் பத்மாஸனத்தின்மீது ஜின மூர்த்தியின் மழுமழுப்பான உருவச் சிலையைக் கண்டு சமணன் பக்தியின் ஆர்வத்தினால் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான்; சுவர்களில் சில சமணர்கள் சலாகையும் கையுமாகச் சித்திரங்களுக்கு வர்ணம் பூசிக்கொண்டிருந்தனர். சில இடங்களில் சித்திரங்கள் பூர்ணமாக முடிவடையாமல் வெறும் கோடுகளாகவே இருந்தன. இவைகளைக் காட்டிலும் மஹாவீரரின் சாந்த முகமண்டலம் அந்த இளம் சமணனை மிகுதியாகக் கவர்ந்தது. தீர்த்தங்கரரின் விசால புஜங்களும், யோக நித்திரையில் மூடியிருக்கும் நீண்ட விழிகளும் அவன் மனத்தில் ஒரு தீவிர பக்தியை மூட்டிவிட்டன. அதையே அவன் நிலைத்த நோக்குடன் பருகிக்கொண்டிருந்தான்.

அன்று மஹாவீரருடைய ஆத்மா ஜோதியில் கலந்த தினமாதலால் தீபவைசித்திரியங்களினால் சமணர்கள் அதை வைபவத்துடன் கொண்டாடினார்கள். மஹாவீரருக்குத் தீபாவளி பூஜை விமரிசையாக நடந்தேறியது. சமண சிரேஷ்டரான பவநந்தி, கோயிலுக்கு நூதனமாக வந்த பிக்ஷுவைப் பார்த்து, "அப்பா! நீ யார்? உன்னைப் பார்த்தால் சாமான்யனாகத் தோற்றவில்லை. ராஜகுலத்தின் லக்ஷணங்கள் உன்னிடம் தென்படுகின்றனவே. நீ யாரோ?" என்றார். இளம் சமணன் முகத்தை வணக்கத்துடன் தாழ்த்தித் தன் வரலாற்றைக் கூறினான். தான் பல்லவேந்திரனை நரஸிம்மனுடைய புதல்வன் என்றும், தனக்கு ஜைன தர்மத்தில் ஏற்பட்ட பற்றுதலினால் அரச வாழ்வை வெறுத்துவர நேரிட்டதென்றும் சொல்லி, அறநெறியைத் தனக்குப் போதிக்கும்படி அவரை வேண்டிக்கொண்டான்.

முனிவர் மந்திரோபதேசம் செய்து அவனை உண்மைச் சமணனாக ஆக்கினார். அவனுக்குத் தனிப்பள்ளியும், வெள்ளாடையும், மயிற்பீலியும் கொடுத்தார். பெரிய சமணர் அவனை விட்டுப் போகும்போது, "பிக்ஷு, உனக்கு ஏதாவது வித்தை வருமா? சித்திரமோ சிற்பமோ?" என்று வினவ, கைகட்டிய வண்ணம் இளவரசன், "முனிவரே! எனக்குச் சித்திரம் எழுதுவதில் கொஞ்சம் பழக்கம் உண்டு" என்றான்.

"குழந்தாய்! பகவான் மஹாவீரருடைய வாழ்க்கையை ஓவிய உருவில் பாமரர்களுக்குக் காட்டவேண்டும். இந்தக் குகையை உன் சித்திரங்களைக் கொண்டு அழகுறச் செய்ய வேண்டும். ரூபத்தின் மூலமாக அரூபமான ஒரு லக்ஷ்யத்தை உலகோர் கண்முன் நிறுத்தல்வேண்டும். இதுவே நான் கொண்ட விரதம்" என்றார்.

ஒரு சமணனைக் கூப்பிட்டுப் பவநந்தி முனிவர், "நாளைக்கு இந்தப் பிக்ஷு சுவரில் சித்திரம் வரைவதற்கு ஏற்றபடி ஒரு பெரும் பாகத்தைச் சுத்தம் பண்ணி வை" என்று கட்டளையிட்டுவிட்டு ராஜஸிம்ஹனை நோக்கி, "பிக்ஷு, நாளைக்கு நீ வரையப் போகும் சித்திரத்தின் ரேகாம்சத்தை எனக்கு எழுதிக் காட்ட முடியுமா?" என்று கேட்டபோது, "அப்படியே, தங்கள் ஆக்ஞை!" என்று கூறிக் குருவின் கட்டளையை ராஜஸிம்ஹன் சிரமேற் கொண்டான்.

## 4

பிக்ஷு ராஜஸிம்ஹன் தன் பள்ளிக்குச் சென்றதும் கிழச் சமணன் ஒருவன் அங்கே தோன்றி ஓர் அகல் விளக்கை ஏற்றிவிட்டுச் சென்றான். ராஜஸிம்ஹனுக்கு அன்று தூக்கமே வரவில்லை. பழைய நினைவுகள் அவன் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து வேதனைப்படுத்தின. அவற்றைத் தன் மனத்தை விட்டு விலக்கப் பெரும் பிரயத்தனப்பட்டான்.

ஆனால் அவன் அரண்மனையில் கடைசியாகக் கண்ட ஒரு காட்சிமட்டும் அகலாமல் அவன் கண்முன் அப்படியே வந்து நின்றது. ராஜஸிம்ஹனின் மனத்தில் ஒரு சித்திரம் கொஞ்சம் கொஞ்சமாகத் தோன்றிக்கொண்டிருந்தது. அதுவே அவனுடைய வாழ்க்கையில் தீராத்துயரை இழைத்த ஒரு ஸம்பவம்! - ஒரு வருஷத்துக்கு முன்பு, பல்லவேந்திரனுடைய நீதி மன்றத்தில் அவன் கண்ட திடுக்கிடும் காட்சி-இன்றிரவும் பிரத்யக்ஷமாயிற்று. இவ்வளவு பாரம் அவன் மனத்தில் இருந்தால் அவனுக்கு நித்திரை எப்படி வரும்? பொழுதை வீணாகக் கழிக்காமல், விளக்கைத் தூண்டித் தன் மனத்தில் திரண்டுவரும் அபூர்வ சித்திரத்தைப் பக்கத்தில் இருக்கும் தேவதாருப் பலகையில், சுண்ணக்கல்லைக்கொண்டு ரேகை ரூபமாக வரைந்தான். இரவு கழிந்ததே அவனுக்குத் தெரியவில்லை. வைகறையைக் கண்டு புள்ளினம் இன்சுவைக் குரலில் கூவும்போதுதான் அவன் சித்திரத்தை முடித்து விட்டு எழுந்திருந்தான். அவனுடைய கண்களில் துடித்த இரு நீர்மணிகள் தீபத்தின் ஒளியில் பிரகாசமாகத் தெரிந்தன. சித்திரம் எழுதிமுடிந்ததும் ராஜஸிம்ஹனுக்கு ஒரு பரம திருப்தி உண்டாயிற்று. அவனை வருத்திய கூரான பழைய நினைவுகள் இந்தப் புது உணர்ச்சி பட்டு மழுங்கிவிட்டன.

அந்தச் சித்திரத்தின் விஷயம் இதுவே: நரஸிம்ம பல்லவனின் அழகிய கொலுவறை. அதன் மத்தியில் உயர்ந்த ஸிம்ஹாஸனம். பெண்கள் சூழ அரசன் வீற்றிருக்கிறான். ஒவ்வொரு முகத்திலும் துயரத்தின் இருள். அரசன்மட்டும் உக்ரமூர்த்தியாகத் தோன்றுகிறான். வலது கையில் உருவிய வாள். அவன் காலடியில் சுருண்டவண்ணம் ஒரு யுவதி. யுவதியின் கைகளிலுள்ள வளையல்கள் நழுவி விழுவன போல் இருக்கின்றன. அவள் கண்டத்தில் ரத்தினஹாரம் அதை முடிந்திருக்கும் பட்டுக்குச்சம் அவளுடைய முதுகில்

புரண்டு இருக்கிறது. இடையில் மூன்று வடங்களையுடைய மேகலை. பல வர்ணக் கட்டங்கள் போட்ட பட்டு வஸ்திரம் அணிந்திருக்கிறாள். கால்களில் மெல்லிய பாடகம். அரசன் பாதங்களில் கவிழ்ந்து இருக்கும் அவள் சிரம், தாமரைத் தண்டுபோன்ற அவளுடைய கரங்களின்மேல் ஊன்றுகிறது. கொடிபோன்ற அவளுடைய தேகம் ஒடிந்து விழுவதுபோல் இருக்கிறது. தரையில் இறைந்து கிடக்கின்றன, சில சந்திரமல்லிகை மலர்கள். அவளுடைய நீண்ட விரல்கள் அரசனுடைய பாதங்களைப்பற்றி உயிர்ப்பிச்சைக்கு மன்றாடும் பாவனையைக் காட்டின. ஆனால் அரசன் அவளை மன்னிப்பானா?

அரசனுக்குச் சமீபத்தில் ஒரு கிழவி யுவதிக்காகப் பரிந்து அரசனை அவனுடைய கொடும் செயலிலிருந்து தடுக்க நிஷேத முத்திரையுடன் விரல்களைக் காட்டுகிறாள். ஒரு ஸ்திரீ முகத்தை உள்ளங்கையில் மூடிய வண்ணம் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாள். அரசனுக்குப் பின்னால் இருவர் - ஆலம் வைத்த விழியினர் - தாங்கள் செய்த விஷமத்தின் பயனைக் குரூரச் சிரிப்புடன் பார்த்துக்கொண்டு நிற்கிறார்கள்.

காலை உபாஸனை முடிந்ததும் கிழ முனிவர் ராஜஸிம்ஹன் அறைக்கு வந்து பார்க்கையில், தரையில் ஒரு பலகையின் மீது ஒப்பற்ற சித்திரம் ஒன்றின் கோடுகளைக் கண்டு பிரமித்து நின்றார். "இதற்குள் இதை எப்படி வரைந்தாய்? உண்மையில் நீ சித்திரக் கலையில் கரைகண்டவன். பிக்ஷு! உன்னை மெச்சுகிறேன். இந்த ஒரு சித்திரமே நான் இடும் தொழிலுக்கு உன்னைத் தகுதி உடையவனாக்குகிறது" என்றார். கிருதக்ஞதையினால் இளம் சமணனின் கண்களில் நீர் துளித்தது. "ஆனால் இது மகாவீராருடைய வாழ்க்கையில் எப் பகுதியையும் குறிப்பிடவில்லையே? இந்தச் சித்திரத்தில் தென்படும் விஷயம் உன் வாழ்க்கையில்

ஏற்பட்ட துக்கமா?" என்றார் அந்த உட்பகை வென்ற பெரியார்.

ராஜஸிம்ஹன் தழுதழுத்த குரலில், " ஆமாம்......முனி வரே!" என்றான்.

" அப்பா! சம்சாரம் ஒரு துயரக் கடல். துறவறமே இதை மீறும் வழி. பிக்ஷு! நீ தன்யன். ராஜ சம்பத்தைத் துச்சமாகக் கருதி மலர்மிசை ஏகிய பகவனின் அடி நிழலை அடைந்தது உன் பாக்யம்! உனக்கு ஸர்வ மங்களமும் உண்டாகுக" என்றார்.

குருவின் மனமார்ந்த ஆசீர்வசனம் பிக்ஷுவின் உள்ளத்தைக் குளிரச்செய்தது. அவன் மனத்தில் திரண்டுவரும் துக்க இருளை வெட்டும் மின்னலாக இருந்தது அந்த அம்ருத வாணி. வெகுநேரம்வரை அவனுடைய விழிகளிலிருந்து மாலை மாலையாக நீர் பெருகிக்கொண்டிருந்தது. அந்தக் கண்மாரியில் அவனை வாட்டிய வருத்தம், மாசு யாவும் கரைந்து போயின. ராஜஸிம்ஹன் அகங்காரம் இறந்த பவ்யஜீவனாய் விளங்கினான்.

# குலவதி

[சேது அம்மாள்]

புக்ககம் போன பெண், முதல் முறையாகப் பிறந்தகம் வருவதை, மறு வீடு என்று குறிப்பிட்டு வழங்குவது நம் சம்பிரதாயங்களில் ஒன்று.

அந்தச் சம்பிரதாயப்படி இன்று சுந்தா பிறந்தகம் வந்திருக்கிறாள். கமலா அவளுடைய பிராண சிநேகிதை. அவளுடைய புக்கக அனுபவங்களை அறிய ஆவலுள்ளவளாய் அவளைக் காண்பதற்காக வந்தாள்.

சாயங்காலம் நாலு மணி. முதல் நாள் இரவு தூக்கமின்றி வந்த பிரயாண அலுப்பால் சுந்தா அப்போது அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். ஆவலோடு வந்த கமலா அவள் தூங்குவதைக் கண்டாள். தூக்கத்தைக் கலைத்தா அவளை எழுப்புவது என்று எண்ணிப் பக்கத்திலிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டாள். வியப்போடு அவளையே உற்றுப் பார்த்தாள்.

கமலாவும் சுந்தாவும் பத்தாவது வகுப்பில் சேர்ந்து படித்த மாணவிகள். கமலா இப்போது 'இண்டர்மீடியேட்' வகுப்பு மாணவி. சுந்தா கல்யாணமாகிப் புக்ககம் சென்றாள். இப்போதுதான் வந்தாள். இருவரும் பிரிந்து மூன்றே மாதம்

ஆகியிருந்தும் அந்தக்காலம் ஒரு யுகம்போல் இருந்தது கமலா வுக்கு. சுந்தா வந்ததைக் கேட்டதும் ஓடிவந்தாள். ஆனால் சுந்தா இப்போது பழைய கலாசாலை மாணவிபோல இல்லை; 'பட்டணத்துச் சுந்தா'வுமல்ல. அதாவது, முன்பு இருந்த கோணல்வகிடு இல்லை. 'மாம்பழ'க் கொய்சகம் வைத்த 'வாயில்' புடைவையைக் காணேம். பட்டுப் புடைவை ஒன்றைத் தமிழ்ப் புடைவையாக உடுத்துக்கொண்டிருந்தாள். கைக்கடியாரத்தைக்கூடக் காணவில்லை. தன்னோடு படித்த சுந்தாதானா இவள்! ஐய!

அரை மணி சென்று மெதுவாகக் கண்விழித்தாள் சுந்தா. முக மலர்ச்சியோடு எழுந்து கமலாவிடம் வந்து, "எப்போ வந்தே கமலா? ரொம்ப நாழியாச்சோ?" என்று அவள் கைகளைப் பிடித்துக்கொண்டாள்.

இருவரும் பெஞ்சியில் உட்கார்ந்தார்கள். "என்ன சுந்தா, 'அம்மாமி'யாய் விட்டாயாக்கும்! உன் கல்யாணத்தி லேயே அறிந்துகொண்டேன். இருந்தாலும் மூன்று மாசத் துக்குள் இப்படி மாறிவிட வேண்டாம்!"

சுந்தா பதில் சொல்லவில்லை. கமலாவின் தோளில் கை கொடுத்துக்கொண்டு, "அசட்டுக் கமலாவா நீ? மாறுமல் எப்படி வாழ்க்கையைக் கடப்பதம்மா?" என்று சிரித்தாள்.

ஆச்சரியம்! சுந்தாவின் கண்களிலிருந்து பிரேமையின் அறிகுறியாக இரண்டே துளி நீர் முத்துப்போல உதிர்ந்தன.

"எழுதப் படிக்கவாவது தெரியுமா? அதுவும் மறந்து போச்சோ?" என்று நீட்டி முழக்கிப் பரிகாசம் செய்தாள் கமலா.

"அடி, அதிகப் பிரசங்கி, சத்தம் போடாதே. அடுத்த அறையில் அவர் தூங்குகிறுர்" என்றுள் சுந்தா.

"அடே! ஆத்துக்காரரும் வந்திருக்கிறுரா? - ஆமாம், புதுப் பெண்டாட்டியல்லவா? பிரிய மனம்...! வந்திருக்கிறுர்.

அது கிடக்கு, உன் புக்கக நிலை உன் தன்மைக்கு ஒத்திருக்கிறதா? பொய் சொல்லாமல் சொல்லு."

"ஒவ்வாமல் என்ன? ஆனால் பயந்துகொண்டேதான் போனேன். அங்கே போனதும் ஒன்றும் சிரமமாக இல்லை. நீ கவலைப்பட்டாயோ, கமலா?" என்று சுந்தா அருமையாகக் கேட்டாள்.

"சந்தேகமில்லாமல்; புத்தகப் புழுவாகச் சதா படித்துக் கொண்டு கிடப்பாயே, என்ன செய்கிறாயோ என்று ஓயாத நினைப்பு. உன் வழக்கத்திற்குப் பொழுதும் அனுமதியும் கிடைக்கின்றனவோ?"

"கமலா, சொல்லுகிறேன், கேள்: ஆணோ பெண்ணோ ஒரே ரீதியாக மாறுதலில்லாமல் வாழ நினைப்பது நடக்காத காரியம். மாறுதல்தான் நியதி. என் மாறுதல் இப்போது சத்தியாக எனக்குத் திருப்திதான்."

"போகிறது!"

அவளை நெருங்கித் தணிந்த குரலில், "உன் ஆத்துக்காரர் எப்படி?" என்று கேட்டாள் கமலா.

சுந்தா தலைகுனிந்தாள்; உடனே நிமிர்ந்து, "அவரைப் பார்த்தால் உனக்கு எப்படித் தோன்றுகிறது?" என்று கேட்டாள்.

"வெளிப் பார்வையில் என்ன தெரியும் சுந்தா?"

"அப்படி அன்று. நீ மறைக்கிறாய். வெளிப் பார்வையில் ஒரே தடவையில்தான் நான் அவரைக் கண்டுபிடித்தேன். வாழ்க்கையில் எனக்கு ஒருவிதச் சிரமமும் தோற்றுவிக்காமல் என்னை நடத்துவாரென்பதைக் கண்டுகொண்டேன். அவ்வளவு போதும் எனக்கு; நான் அதிக ஆசைப்படவில்லை; படவும் மாட்டேன்."

"என்னவோ அம்மா, நீ ரொம்ப ஸுலபமாக உன்னைத் திருத்திக்கொண்டு விட்டாய். என்னால் அப்படிச் செய்ய

முடியாதுபோலத் தோன்றுகிறது. அதனாலேயே இந்த வருஷம் கல்யாணம் நின்றுபோய்விட்டது."

"ஏன்?" என்று சுந்தா ஆவலுடன் கேட்டாள்.

"மாயவரத்தருகில் கதிராமங்கலமாமே, அந்தக் கிராமத்தில் வரன்; மிராசுதாராம்; பெரிய குடும்பம். கல்யாணப் பிள்ளைதான் மூத்தது. அவர்களைப் பார்த்தால், இவ்வளவு கஷ்டப்பட்டுப் படித்துவிட்டு, என் மனச்சாட்சிக்கு மாறாக இருக்கும்போல இருந்தது எல்லாம். வேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன். அப்பாவுக்குக்கூட என் மேல் கோபந்தான்."

"மாப்பிள்ளை படித்தவரா?"

"ஆமாம், அதுக்கென்ன, பி. ஏ., இந்த நாளில் ரொம்ப அதிசயம்! அந்தப் பிள்ளையிடம் படிச்ச அறிகுறியே காணோம். 'படித்த முட்டாள்' என்பார்களே - ."

சுந்தா குறுக்கிட்டாள்.

"இதோ பார் கமலா: நான் சொல்லுகிறேனே என்று ஆயாசப்படாதே! உன்னை எனக்குத் தெரியும். உன் கனவு நாவலாக எழுதலாமே தவிர, வாழ்க்கையில் சுலபமாக அமைந்துவிடாது! படித்தவர் ஒருநாளும் நியாயத்திலிருந்து கூடியமட்டும் பிறழமாட்டார். முக்கியமாக நாம் பொறுமை சாலியா என்பதை மட்டும் கவனித்துக்கொண்டால் போதும். முதல் முதலாக என்னைப் பார்க்க வந்தாரே - ."

"ஊம், சொல்லடியம்மா இப்போதாவது! அப்போது தான் மாட்டேனென்று 'பிகு'ப் பண்ணிக்கொண்டாய்."

"சமயம் வரும்போது நானே சொல்லிவிடுகிறேன். திருச்சியிலே என் இளைய சிற்றப்பாவோடு படித்தவராம் இவர். அவர்தான் இந்த வரனை நிச்சயம் செய்தார், பிடிவாதமாக. என்பேரில் சிற்றப்பா வைத்திருக்கும் வாஞ்சை இப்பொழுதுதான் தெரிகிறது. பிள்ளையுடன் 'பெண் பார்க்க'

மாமியாரும் வந்ததுதான் உனக்குத் தெரியுமே; நாங்கள் ஒரே பார்வையில் ஒருவரை யொருவர் - ."

" கண்டதும் காதலாக்கும்!"

"சை! பேத்தாதே! அதெல்லாம் கதையில்தான். நிமிஷ நேரத்தில் நாங்கள் ஒருவரை மற்றவர் கண்டுகொண்டோம். பாவம்! என் மாமியார் பயப்பட்டாளாம்; 'படித்த பெண் வீட்டுவேலை செய்யாது; திமிர்தண்டியாகத் திரியும்' என்றெல்லாம் ஆட்சேபித்து மறுத்தாளாம்! அவள் மறுத்ததையும், இவர் அவளைச் சமாதானப்படுத்தி இசையச் செய்ததையும் ஒரு கதைபோல ஸ்வாரஸ்யமாகச் சொல்லுவார். இரவு நேரங்களில், வாஸ்தவமாக, அவர் பேசத் தொடங்கி விட்டால் தூக்கமும் வராது; நேரம் போவதும் தெரியாது. அவ்வளவு நயமான புத்திபோதனை! மாமியாரின் பயமும் மறைந்தது; என் நிலையும் தாழவில்லையென்றே எனக்குத் தோன்றும்படி நடந்துகொள்ளுகிறார்."

" ஆமாம், வீட்டு வேலை வகையறு?"

இதைச் சொன்னதும் சுந்தா கலகலவென்று சிரித்தாள்.

" என்னடி சிரிக்கிறாய்? சொன்னால் நானும் சேர்ந்து சிரிப்பேனே!"

" இதென்ன கேள்வி கமலா? ஆமாம். வேலை செய்யாமல் முடியுமா? தவிர, மாமியாரும் நாத்தனார்கள் இருவரும் பாய்ந்து பாய்ந்து காரியம் செய்யும்போது நானென்ன ஜடமா? எனக்கு வெட்கமாயிராதா? இல்லை, படித்துக்கொண்டு உட்காருவதா? நாத்தனார்கள் இருவரும் காரியத்திலும், கிராமிய விளையாட்டிலும் கெட்டிக்காரிகள். அவர்களோடு சேர்ந்து நானும் செய்வேன், படிப்பெல்லாம் ராத்திரியில்தான்."

" ஆனால் அவர்களுக்குப் படிப்பே இல்லையா?"

" சாதாரணமாகப் படிக்கத் தெரியும். கிராமத்து மனப்பான்மை ; அடக்கம் ஜாஸ்தி; முக்கியமாக அகம்பாவம் இல்லை! பம்பரமாக எவ்வளவு வேலையானாலும் சளைக்காமல் செய்வார்கள். பார்க்கும்போது எனக்கே வெட்கமாக இருக்கும். என்னதான் படித்தாலும், பெண்களுக்கு வீட்டுவேலை தெரியாவிட்டால் அதைப்போல அவமானம் வேறு இல்லை கமலா !"

" சரி, இனி புஸ்தகமெல்லாம் தூங்கவேண்டியதுதான் " என்றாள் கமலா கேலியாக.

" தூங்குவானேன் ? இரவு இல்லையா ? படிப்பது. கொஞ்ச நாள் போனால் மத்தியானத்திலும் படிக்கலாம். மத்தியானப்பொழுது ரொம்ப ஸ்வாரஸ்யம், கிராம வாழ்க்கையில். கிராமாந்தர விளையாட்டுகளில்தான் நம் புராதனப் பெருமை நமக்கு விளங்குகிறது. நான்கூடக் கற்றுக்கொண்டிருக்கிறேன்."

" எதை ? புளியம் விரை கொந்துவதையா ?"

" ஏன், இளப்பமோ அது ? நம்ம டவுன் நாகரிக மூளைக்கு அது பிடிக்கவில்லை, அவ்வளவுதான். ' தாயக்கட்டான் ' என்பதைப் போன்றதை, நூதனப் பெயராக 'கேரம் போர்ட்' என்றால் ஓசத்தி; மயங்கிப்போய் ஆடுகிறோம், கிளப்பைத் தேடிக்கொண்டுபோய். சர்க்கஸில் மூணு தாம்பாளத்தை மாற்றி மாற்றிப் பிடிப்பதைப் பார்த்து வியப்படைகிறோம் ; ' அம்மானை ' என்ற நம் பண்டை நாளைய விளையாட்டு அது. நம் விளையாட்டை நம்மிடம் காட்ட வருகிறார்கள். எவ்வளவு நன்றாக என் மாமியார் அம்மானை ஆடுகிறாள் ! அதற்குப் பாட்டுக்கூட இருக்கிறது. நானும் என் சிறிய நாத்தனாரும் இப்போது கற்றுக்கொள்ளுகிறோமே !"

" ஊம், அப்புறம் ?"

" காலையில் எழுந்ததும் ஆற்று நீரில் ஸ்நானம் செய்துவிட்டு அடுப்பை மூட்டுவேன். காபி, பலகாரம் செய்து

கொண்டே சுவாமி பூஜைக்குக் கோலம் போட்டு, விளக்கேற்றி வைத்து, சந்தனம் அரைத்து வைத்தால், மாமனார் ஸ்நானம் செய்துவிட்டுப் பூஜைக்கு வருவார். பூஜையான பிறகுதான் ஆகாரம். இதெல்லாம் என் மனசுக்கு ரொம்ப ரம்மியமா யிருக்கிறது. கமலா! அப்புறம் சமையல். மாமியார் கிட்ட இருந்து சொல்லிக் கொடுப்பாள். சாதம் மட்டும் என்னை வடிக்கச் சொல்லமாட்டார்கள்; வழக்கமில்லை யென்று அவர்க ளிலே யாராவதுதான் வடிப்பார்கள். அதிலும் என் சின்ன நாத்தனார் ரொம்ப வேடிக்கை மனுஷி. சதா கேலிதான். சமை யலில் ஏதும் தெரியாவிட்டால் அவளைத்தான் கேட்பேன். எனக்கு ஒத்தாசையாகப் பரிமாறுவாள். பிற்பாடு நாங்கள் இருவரும் சாப்பாடு."

"சாப்பாடு இரண்டு மணிக்கா?"

"இல்லை, இல்லை; பன்னிரண்டு மணிக்கு ஆகிவிடும். வீட்டுக்குப் பின்புறம் கொல்லைத் தாழ்வாரம். அடுத்தாற் போல் நிறைய வாழைமரங்கள். வெக்கையே தெரியாமல் சிலுசிலுவென்று காற்று வரும். அங்கே உட்கார்ந்துதான் மத்தியானப் பொழுதுபோக்கு. நாலுபேருமாகக் கட்டமோ, பல்லாங்குழியோ, பதினைஞ்சாம் புலியோ..."

"பதினைஞ்சாம் புலியா?"

"அதென்ன தெரியுமா? நீளவாட்டத்தில் முக்கோண மாக ஐந்து கோடு. குறுக்கு வாட்டத்தில், நடுவிலே இப்படி மூணுகோடு; ஓரத்தை மூடிவிடவேண்டும். மூணு புலி; பதினைஞ்சோ, பன்னிரண்டோ ஆடு..."

"புலியென்றால்?"

"புலியென்றால் புலியில்லை; மூன்று சோழியோ கழக் கோடியோ புலியென்ற காய்கள். ஆடுகளுக்குப் பதினைந்து புளியம் விதை, அல்லது கோழியவரை விதை வைத்துக் கொள்ளுவது. ஆட்டக்காரர்களின் சாமர்த்தியந்தான் இதில்

சுவாரஸ்யம். மேல்கூர்ப்பில் ஒரு புலி, நடுவில் இரண்டு. ஆடுகள் மேல் புலி பாய இடங்கொடாமல் புலியைக் கட்டுவது. கோடுகள் சேரும் சந்தியில் ஆடுகளும் புலியும் இருக்கவேண்டும். புலி இருக்கும் இடத்திற்கு அடுத்தாற்போல் ஆடு இருந்து, அடுத்த இடம் காலியாயிருந்தால்மட்டுமே புலி பாயும். ஆடு அடிபடும். ஆட்டைப் பலிகொடுக்காமல் நகர்த்துவதே இதில் சாமர்த்தியம். மூன்று ஆடுகள் போச்சோ அவ்வளவுதான். அப்புறம் எல்லாம் போய்விடும். இதெல்லாம் புது விளையாட்டு. புது மனிதர்களின் அன்பும் எனக்குச் சந்தோஷமாய்த்தான் இருக்கிறது! மொத்தத்திலே பார்க்கும்போது கிராம வாசத்தில்தான் முழு அமைதியிருக்கிறது கமலா.”

“எல்லாருக்கும் உன்போலவே புக்ககத்தார்கள் வாய்ப்பார்களா? கிராமவாசம் நரகமாகத் தோன்றக்கூடிய கோட்டான்களாக இருந்தால் என்ன செய்வது? மாற்றக்கூடிய காரியமா இது?”

சுந்தா சற்று யோசித்தாள். சட்டென்று நினைவு வந்தவளைப்போல், “கமலா, உன் பிறந்தகத்துக் கோத்திரமென்ன? தெரியுமா உனக்கு?”

“அதாரு கண்டா; தெரியாதம்மா. ஏன்?”

“எனக்கு ஒரு மைத்துனன் இருக்கிறான், கல்யாணத்திற்கு.”

சுந்தாவின் தாய் அங்கே வந்தாள்.

“யாரது, கமலாவா? வழி தெரிஞ்சுதாம்மா? சுந்தா, மாப்பிள்ளை எழுந்துட்டாப் போலிருக்கு. காப்பி கொடுக்கவேண்டாமா?” என்று சொன்னாள்.

சுந்தா எழுந்துகொண்டே, “ஐந்து நிமிஷம் இருக்கிறாயா கமலா? இதோ வந்துவிடுகிறேன்.”

ரேழி உள்ளில் மேஜையின்புறம் நின்றுகொண்டு தலை வாரிக்கொண்டு இருந்தான் செல்லப்பா. டிபனும் காபியும் எடுத்துக்கொண்டு உள்ளே வந்தாள் சுந்தா.

"யாரது? சுந்தா, ஓர்ப்படியோ?" என்று சிரித்துக் கொண்டே அவள் கையிலிருந்த ஹல்வாத் தட்டை வாங்கிக் கொண்டான்.

"ஆமாம். வாய் கொஞ்சம் 'லொடலொடா'; அது தான் சீக்கிரம் விழித்துக்கொண்டீர்களோ?"

"என்ன கேட்கிறாள் உன்னை?"

"ஒன்றும் இல்லை. என் மாறுதலிலே அவள் பிர மித்துப் போய்விட்டாள். என்ன என்னவோ கேள்விகளைப் போட்டு..."

"திணற அடிக்கிறாளோ?"

"என்னவோ வீணைசைப் படுகிறாள், பாவம்! ஒரு மாசத் துக்கு முன்னாலே கதிராமங்கலத்திலேயிருந்து நல்ல வரன் வந்ததைப் பட்டிக்காடுன்னு வேண்டாம்னு சொல்லிவிட்டா ளாம்."

"அது யார் தெரியுமா? நம்ம விசுவந்தான்!"

"நிஜமாகவா? உங்களுக் கெப்படி...?"

"சிரஸ்தார் சந்தானமையர் பெண்தானே இவள்?"

"ஆமாம்."

"சந்தேகமே இல்லை. பட்டிக்காட்டானுக்கு வாழ்க் கைப்படமாட்டே னென்ற புத்திசாலி இந்தப் பெண்தான்! சரி, அவளை உட்காரவைத்துவிட்டு வந்திருக்கிறாயே, போ" என்றான்.

கமலாவுக்கும் தனக்குமாக இரண்டு டம்ளர் காப்பி எடுத்துக்கொண்டே, "கமலா, அடுத்த மாசத்துக்குள் உனக்குக் கல்யாணம்" என்றாள்.

"அதே வரன்தான், என் மைத்துனன். இப்போ தான் சொன்னார். அசடே, வாய்க்கு வாய் பரிகாசம் செய்ய இடம் வைத்துக்கொண்டாயே! ஆனால் நீதான் என்று ஒன்றும் எனக்குத் தெரியாது அப்பொழுது. எங்கள் புக்ககத்தில் எல்லோரும் இதைப்பற்றிக் கேலி செய்தார்கள். நீதானா அது? சமயம் வாய்த்தபோதெல்லாம் மாமியார் என்னிடம், 'கல்லலேவளை, இந்தமாதிரி நீ சொல்லியிருந்தால் நான் என்ன பண்றதடியம்மா! எங்க செல்லப்பா கட்டிச் சமத்துன்னு' என்று சந்தோஷம் தாங்காமல் சொல்லுவார். அவர் சொல்றப்போலே அடங்காப்பிடாரியாக ஒரு நாட்டுப்பெண் வந்துவிட்டால் அப்புறம் குடித்தனம் சின்ன பின்னமாகவல்லவா சிதறி நாசமாகி விடும்? எழவு பெண்கள் தாம் எல்லாத் துன்பத்துக்கும் காரணம்னு பட்டம் வேறே! நான் பார் இப்போ, கலந்த குடும்பத்தைச் சேர்க்கப் போகிறேனே! நீயும் நானும் ஒன்று!"

"இதொரு பரிகாசமா சுந்தா?"

"பரிகாசமே இல்லை; நிஜந்தான். என் மாமனார் அண்ணன் தம்பிகளுக்கு, 'பாகஸ்த' விஷயமாக ரகளையாகிப் பத்து வருஷமாப் பேச்சுவார்த்தை கிடையாதாம். இப்போ என்னாலே அவர்கள் கூடப்போகிறார்கள். வேணும்னாப் பாரேன்; அடுத்த வருஷம் நீயும் நானும் ஒருபானைச் சோற்றிலே சாப்பாடு. மாப்பிள்ளையைப் பிடிக்கவில்லை யென்பதில்லையே உனக்கு? ஒளிக்காமல் சொல்லு!"

"....................."

"சரி, மௌனம் சம்மதம்!"

"அவர்கள் சேர்வார்களென்று என்ன நிச்சயம்?"

"அது எங்கள் இருவரின் வேலை. அந்தக் கவலை உனக்கு வேண்டாம். என் மாமியாரும் தங்கமான குணம். இதைச் சொல்லவில்லையே உன்னிடம்! அவாள் இரண்டு

பேருந்தான் பேசுகிறதில்லையே யொழிய இவாள் அண்ணன் தம்பிகள் ரொம்ப நேசம். பெண்களில், இரு வீட்டுக்கும் போக்கு வரத்து உண்டு. அவாள் என் கல்யாணத்திற்குக்கூட வந்தார்களே! ஒரு விஷயம். நீமட்டும் என் உண்மைச் சிநேகிதையானால் நான் சொன்னபடி கேட்கவேண்டும். நீயும் நானும் ஒன்றாகவேதான் இவ்வளவு பாசம் நம்மிடம் குடிகொண்டுவிட்டது. போ; கவலை விட்டது. எல்லாம் நடக்கும். இந்தச் சமயத்தைத் தவறவிட மாட்டேன்."

"சரி, ரொம்ப நாழியாச்சு; போய் வரட்டுமா, சுந்தா! நாளைக்கு ஆத்துக்கு வரயா?"

"ஆகட்டும்" என்று அவளைப் பின்பற்றி ரேழிமட்டும் சென்றாள்.

வாசலிலிருந்த பெஞ்சியில் உட்கார்ந்திருந்தான் செல்லப்பா. அவனைப் பார்த்ததும் சட்டென்று பின்வாங்கினாள் கமலா.

சந்தடி சாக்கில், "இப்பொழுதென்னடீ வெட்கம்? படிச்ச பெண்ணும் லக்ஷணமாய் நீபாட்டில் போவாயா? கல்யாணமானபின் கிரமமா மைத்துனர் மரியாதை வரட்டும்" என்று கணீரென்று சொன்னாள் சுந்தா.

பளிச்சென்று சிரித்துவிட்டான் செல்லப்பா; சுந்தாவும் சிரித்தாள். ஒரு லஜ்ஜை கலந்த உவகையுடன் கமலா விர்ரென்று நடந்து சென்றுவிட்டாள்.

சுந்தாவின் மனோரதம் கைகூடி வந்தது. கல்யாணமாகிக் கமலா புக்ககமும் வந்துவிட்டாள். கோகுலம் போன்ற விஸ்தாரமான குடும்பத்திற்குத் திலகம்போல விளங்கினாள் சுந்தா. அவளுக்கு வலதுகை போலக் கமலா. அண்ணன் தம்பிகள் கூடியதைப்பற்றி எல்லோரும் புகழுவது கேட்டுச் சந்தோஷப்பட்டாள் சுந்தா. செல்லப்பாவின் பெரு முயற்சியால் மறுபடி குடும்பம் ஒன்றாகியது.

"குலவதியாட்டமா நாட்டுப்பெண் வந்தா; பெண்களும் பிள்ளைகளும் நாட்டுப் பெண்களும், பெரிய சுமங்கலியா மாமி யாருமாக் குடுத்தனம் கோகுல மாட்டமா யிருக்கு! கொட்டில் நிறைஞ்ச மாடுகளும், தொட்டில் நிறைஞ்ச குழந்தைகளுமாக் இனி கொஞ்சறது பார்த்தால்" - இதே பேச்சு; இதே ஓர் உபமானமாகக்கூடப் பிரசித்திபெற்றது, சிவராமையர் குடும்பம். போவோரும் வருவோரும் வாழ்த்துவது பொருத்தந் தான். ஆமாம். குலவதிதான் சுந்தா. ஊருக்கு உயர்ந்த குடியாக அது பிரபலம் அடைந்தது அவளால்தானே?




# குழந்தை உள்ளம்

[சு. குருசாமி, பி.ஏ., எல்.டி.]

கோயம்புத்தூரிலிருந்து இரவு 7-10 மணிக்கு மேட்டுப்பாளையத்திற்குப் புறப்படும் ரயில் வண்டியின்மீது எனக்கு எப்பொழுதுமே வெகு பிரியம். விசேஷ வேலை ஒன்றும் இல்லாவிட்டாலும், அந்த ரயிலில் பிரயாணம் செய்யும் ஆனந்தத்திற்காகவே நான் அடிக்கடி பெரியநாய்க்கன்பாளையம்வரையில் போய்விட்டு வருவது வழக்கம். வெள்ளிக்கிழமை; பள்ளிக்கூட வாரத்தின் கடைசி நாள். பெரியநாய்க்கன்பாளையத்திற்குச் செல்லலாம் என்று ஓர் ஆசை எழுந்தது. ரயில் கோயம்புத்தூர் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்ததும் ஜன்னலண்டை ஒரு பெஞ்சியில் சௌகரியமாய் உட்கார்ந்துகொண்டேன். ரயில் புறப்பட்டது.

நீலகிரி மலைத் தொடரிலிருந்து இனிமையான காற்று மனோகரமாய் வீசிக்கொண்டிருந்தது. அந்த மந்தமாருதத்தின் முழு இன்பத்தையும் அனுபவித்துக்கொண்டே பின்னால் சாய்ந்தேன். கண்கள் மூடின; ஆம், புறக்கண்கள் மூடின; அகக் கண்கள் திறந்தன. வண்டி வேகமாய் ஓடிக்கொண்டிருந்தது. வேகமாய் ஓடும் ரயிலில் பிரயாணம் செய்யும்பொழுதெல்லாம் என் மனத்தில் உயரிய எண்ணங்களும், சிறந்த சிந்தனைகளும் தோன்றுவது வழக்கம்.

எதிர்பாரா விதமாய்த் திடீரென்று என் சிந்தனை கலைந்தது. கண் விழித்தேன். ஒரு பிச்சைக்கார வாலிபன் பாடிக்கொண்டிருந்தான். பதினேழு, பதினெட்டு வயது இருக்கலாம். உடம்பில் ஒன்றுமில்லை. இடுப்பில் மட்டும் ஓர் அழுக்குத் துணி உடுத்திருந்தான். அதுவும் அநேக இடங்களில் கிழிந்திருந்தது.

அவன் பாடிய பாட்டில், சொற் சுவை, பொருட் சுவை அதிகம் இருந்ததாகச் சொல்லமுடியாது. சந்தத்தையே பெரிதாகக் கருதி, பொருளைச் சிறிதுங் கவனியாது, பதங்களைச் சேர்த்து இயற்றப்பட்டிருக்கும் அப்பாட்டு மிகக் கிழ்த்தரமானது. ஆயினும் அன்று அவன் பாடியபோது அப்பாட்டு என்னை மிகவும் வசிகரித்தது. அவன் குரலில் ஒரு சக்தியும், ஓர் இனிமையும் இருந்தன. மந்தமாருதத்தில் இனிய ஒலியலைகளை எழுப்பிக்கொண்டு, அது என் காதில் மோதியது. "பாரதத் தாய் வீர சக்தியாலே உதித்தோம்" என்று அவன் பாடியபொழுது என் உடம்பெல்லாம் சிலிர்த்தது. பின்பு அவன் தாளம்போட ஆரம்பித்தான். வயிற்றுக்குத் தாளம்போடும் வாலிபன் வயிற்றிலேயே தாளம்போட்டது மிகப் பரிதாபகரமா யிருந்தது. அடித்து அடித்து அவன் வயிறெல்லாம் காய்த்துப் போயிருந்தது!

"இந்தியர்க்குச் சொந்தமா யிருந்த பொன்னாடு" என்று அவன் உருக்கமாய்ப் பாடிய சமயம் இந்தியாவின் அடிமைக் கதை முழுவதும் என் கண்களின் முன்னால் தோன்றுவது போல் இருந்தது. "ஏழை மக்கள் வாடுகின்ற சில நன்னாடு" என்று அவன் பாடியபோது என் கண்களில் நீர் ததும்பித் தளித்தது. வாலிபனது ஏழைமைத் தோற்றமே அவ்வடிக்கு உயிர்ச் சித்திரமாய் விளங்கியது. பாட்டு முடிந்தது. ஏன் அதற்குள் முடித்துவிட்டான் என்று வருந்தினேன்.

"கதரைப்பற்றி ஆயிரம் பிரசங்கங்கள் கேட்டாலும், இவ்வொரு பாட்டிற்குச் சமானமாகாது, ஸார்" என்றார் ஒருவர்.

அந்த அபிப்பிராயத்தைப் பூர்ணமாய் அங்கீகரிக்க எனக்கு இஷ்டம் இல்லை. ஆகையால் மௌனமாக இருந்தேன்.

கையில் இரண்டு மூன்று காலணுக்களைக் குலுக்கிக் கொண்டு அவ்வாலிபன் ஒவ்வொருவரிடமும் சென்று காசு கேட்டு வந்தான். இங்ஙனம் இருக்கையில், திடீரென்று டிக்கட் பரிசோதகர் ஒருவர் வண்டிக்குள் நுழைந்தார். வெண்ணெய் திரண்டுவரும்போது தாழி உடைந்ததுபோலாயிற்று. வாலிபன் திடுக்கிட்டு நின்றான்!

"எஸ். ஐ. ஆர். கம்பெனிக்கு இவர்களெல்லாம் ஸ்வீகார புத்திரர்கள், ஸார்!" என்று சொல்லிக்கொண்டே கையை நீட்டினார்.

"ஜன சமூகத்தின் சட்ட பூர்வமான புத்திரர்கள் என்று ஏன் சொல்லக்கூடாது?" என்றேன் நான்.

"நான் ஏதோ ஹாஸ்யமாகச் சொல்லிவிட்டேன் என்று அவர் 'கட கட' என்று சிரிக்க ஆரம்பித்தார். நான் சொல்லியது அவருக்கு விளங்கவில்லையென்று அறிந்துகொண்டேன். பேசாமல் டிக்கட்டை எடுத்துக் காண்பித்தேன். பிரயாணிகளின் டிக்கட்டுகளையெல்லாம் பரிசோதித்த பிறகு, பையனுடைய கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு ஒரு பெஞ்சியில் போய் உட்கார்ந்தார்.

"எங்கேயடா ஏறினாய்?"

"கோயம்புத்தூரில், எசமான்!"

"டிக்கட் ஏண்டா வாங்கவில்லை?"

பாவம்! பையன் இதற்கு என்ன பதில் சொல்லுவான்? மௌனம் சாதித்தான்.

"உங்கப்பன் வீட்டு ரயிலாடா, டிக்கட் இல்லாமல் போவதற்கு?" என்று சொல்லிக் கன்னத்தில் 'பளீர்' என்று ஓர் அறையும் கொடுத்தார்.

"சாமி! சாமி! அடிக்காதிங்க சாமி!" என்று கெஞ்சினுன் வாலிபன்.

"காசு எவ்வளவடா வைத்திருக்கிறுய்?"

"ஒண்ணே காலணு, சாமி"

"கொடு இங்கே!"

பையன் சற்றுத் தயங்கினுன். மீண்டும் ஓர் அறை கன்னத்தில் விழுந்தது.

"சாப்பாட்டுக்கு ஒண்ணுமில்லை, சாமி!"

"கொடடா இங்கே!" என்று அதட்டினுர் டிக்கட் பரிசோதகர். காலணுக்கள் ஐந்தும் அவர் கையில் வந்துசேர்ந்தன.

"இவ்வளவுதானு?"

"ஆமாங்க சாமி."

"உள்ளதைச் சொல்."

"சத்தியமாகச் சொல்கிறேன், எசமான்."

"திருட்டுப் பயலே! உங்கள் சங்கதியெல்லாம் எனக்குத் தெரியுமடா. எங்கே வேஷ்டியை உதறு, பார்ப்போம்."

பையன் வேஷ்டியை உதறிக்கொண்டே, "ஒண்ணும் இல்லை எசமான்" என்றுன்.

"பொய் சொல்லி, ராஸ்கல்! பின்னுலிருக்கும் முடிச்சு என்னடா?"

"பொடிமட்டை எசமான்."

"உனக்குப் பொடிமட்டை வேறு கேடா? எங்கே அவிழ், பார்க்கலாம்."

பையன் குடலில் நெருப்பு விழுந்ததுபோல் இருந்தது.

"இன்னும் அவிழ்க்காமல் இருக்கிறுயா?" என்று ஓர் அறை அறைந்தார் டிக்கட் பரிசோதகர்.

"சாமி! சாமி!" என்று சொல்லிக்கொண்டு அவன் அம் முடிச்சை அவிழ்த்து, ஒரு பொடி மட்டையை வெளியில் எடுத்துக் காட்டினான்.

"நீ கெட்ட கேட்டுக்கு உனக்குப் பொடி வேறு." பையன் கன்னத்தில் மீண்டும் ஓர் அடி விழுந்தது. அடி விழுந்த அதிர்ச்சியில் பொடிமட்டை கீழே விழவே, 'கலீர்' என்ற சத்தம் கேட்டது. டிக்கட் பரிசோதகர் திடுக்கிட்டுக் குனிந்து அதை எடுத்தார். அதற்குள் இரண்டணாச் சில்லறையாக ஒன்றரை ரூபாய் இருந்தது!

அதைக் கண்டதும், "திருட்டுப் பயலே!" என்று பையனை ஒரு மிதி மிதித்தார்.

"பொய் சொல்லிப் பயல்களைக் கண்டால் எனக்குக் கொஞ்சமாவது பிடிப்பதில்லை, ஸார்!" என்றார், என்னைப் பார்த்து.

"வாஸ்தவம், திருட்டுப் பயல்களைக் கண்டால் எனக்கும் பிடிப்பதில்லை" என்றேன் நான்.

இதற்குள் பெரியநாய்க்கன்பாளையம் வந்துவிட்டது. பிச்சைக்காரனுடைய கேஸ் இன்னும் முடியவில்லை. ஆகையினால் நான் இறங்காமல் தூங்குபவன்போல் பாசாங்கு செய்தேன்.

மெல்லிய மலைக்காற்று, ரயிலின் 'கடகட' சத்தம், நடு நடுவே டிக்கட் பரிசோதகரின் உறுமல், வாலிபனின் பரிதாபக் குரல், இடை இடையே ஏக்கம், பெருமூச்சு, ஒரு குழந்தையின் அழுகை, தாயின் அதட்டல், ஒரு கிழவனின் இருமல் - இவற்றில் ஒன்றையுங் கவனியாது, மனிதனை விதி இழுத்துக் கொண்டு போவதுபோல் ரயில் எங்களை இழுத்துச் சென்றது.

"மேட்டுப்பாளையம்! மேட்டுப்பாளையம்!" என்று ஒரு போர்ட்டர் கத்தினான்.

நான் திடுக்கிட்டு எழுந்தேன். டிக்கட் பரிசோதகரை யும் பிச்சைக்காரனையும் காணோம். விரைவாக இறங்கிப் பிளாட்பாரத்தில் எங்கும் தேடிப் பார்த்தேன்; காணவில்லை. கடைசியில் ஸ்டேஷனின் ஓர் ஓரத்தில் இரண்டு உருவங்கள் இருளில் நிற்பதைக் கண்டு அவற்றை அணுகினேன்.

"தீபாவளிக்குப் புதுத்துணி வாங்குவதற்காகக் கால் கால் அணாவாகச் சேர்த்து வைத்த காசு, எசமான்" என்று அழுதான் வாலிபன்.

பாம்பின் வாயில் அகப்பட்ட தவளை எங்கேயாவது மீளுவதுண்டா? கடைசியில் ஒன்றும் பிரயோசனம் இல்லை என்று கண்டதும், "இன்னைக்கி முழுதும் ஒண்ணும் சாப்பி டல்லே, எசமான். இட்டலி வாங்குவதற்கு அரையணாவாவது கொடுங்க சாமி" என்று கெஞ்சினான். டிக்கட் பரிசோ தகர் காதில் ஒன்றும் விழவில்லை. பேசாமல் போய்விட்டார். வாலிபன் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு சென் றான். என் கையிலிருந்த சொற்பக் காசை அவன் கையில் கொடுத்துவிட்டு, நான் ஊருக்குள் போனேன்.

மேட்டுப்பாளையம் எனக்குப் புதிது. படுப்பதற்கு இடம் அகப்படாமல் தெருத் தெருவாய் அலைந்தேன். கடைசியில் ஒரு வீட்டுத் திண்ணை சிறிது செளகரியமா யிருப்பது கண்டு, அங்கே சென்று உட்கார்ந்து, சிறிது நேரம் அன்று ரயிலில் நடந்த சம்பவத்தைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தேன். உள்ளே யாரோ ஒருவர் பேசும் சத்தம் கேட்டது.

"கனகம்! உனக்கு ஒரு பட்டுப் பாவாடைத்துணி வாங்கிக்கொண்டு வந்திருக்கிறேன், பார்த்தாயா?"

"எங்கே அப்பா!" என்று சொல்லிக்கொண்டு ஒரு குழந்தை சந்தோஷமாய் ஓடி வந்தது.

துணியைப் பார்த்ததும் குழந்தை குதூகலத்துடன், "இதோடு எனக்கு அஞ்சு பட்டுப் பாவாடை யாச்சு; அப்பா" என்று கூத்தாடியது.

பின்பு திடீரென்று ஏதோ ஒரு விஷயம் ஞாபகம் வந்ததுபோல், சொல்ல ஆரம்பித்தது: "இன்னைக்கி ஒரு விசேஷம், அப்பா. எனக்கு ஜிலேபி வாங்குவதற்காக அம்மா ஓர் அணுக் கொடுத்தாள். உடனே நான் கடை வீதிக்கு ஓடினேன். அங்கே ஒரு பிச்சைக்காரன், பாவம்! அழுது கொண்டிருந்தான். 'ஏண்டா அழறே?' இன்னு கேட்டேன். அதற்கு அவன் என்ன சொன்னான், தெரியுமா அப்பா? இன்னைக்கு அவன் ரயிலில் வந்துகொண்டிருந்தானும். அவன் கிட்ட டிக்கட் இல்லையாம். அதுக்காக அவன் தீபாவளிக்கு வேஷ்டி வாங்க வெச்சிருந்த ஒண்ணரை ரூபாயைப் பிடுங்கிக்கொண்டுட்டார்களாம். 'ஏண்டா உங்கப்பா டிக்கட் வாங்காம விட்டா?' என்று நான் கேட்டேன். 'எனக்கு அப்பா, அம்மா யாரும் இல்லே' என்று அவன் சொன்னான். அப்பா! பின்னே அவன் எப்படி அப்பா டிக்கட் வாங்குவான்? எனக்கும் அம்மாவுக்கும் நீதானே டிக்கட் வாங்கித் தரே? நீ இல்லாவிட்டால் நான் டிக்கட் வாங்காமத் தானே போவேன்? அப்போ, ரயில்காரன் நான் போட்டிருக்கிற வளையல், சங்கிலி இதெல்லாம் பறிச்சுக்குவானு, என்ன? அதென்ன நியாயம்? நீயும் அந்த ரயிலில்தானே வேலை பாக்கிறே? ரயில்காரன் கிட்ட இதெல்லாம் நீ சொன்னு என்னப்பா?"

குழந்தையின் தந்தை சிறிது நேரம் மௌனமாயிருந்தார்; "அப்புறம் நீ என்ன பண்ணினே? ஜிலேபி வாங்கிண்டு வந்திட்டயா?" என்று கேட்டார்.

"அதென்னப்பா அப்படிக் கேக்கறே? அவன் அழுத அழுகையைப் பார்த்தா நீயானு அங்கேயே அவனுக்கு

ரெண்டு வேஷ்டி எடுத்துக் கொடுத்திட்டு வந்திருப்பே. நீ நிறையக் காசு வச்சிருக்கே. நான் என்னப்பா பண்றது? அம்மா கொடுத்த ஓரணுத்தான் இருந்தது. அதை அவன் கையிலே கொடுத்து, 'இந்தா, இப்ப ஓரணு வச்சுக்கோ. நாளை எங்கப்பாகிட்டயாவது, அம்மாகிட்டயாவது ஒரு ரூபாய் வாங்கிண்டு வந்து ஒனக்குத் தரேன்' இன்னு சொல்லிட்டு வந்தேன். நாளைக்கு ஒரு ரூபாய் தரயா, அப்பா?"

இந்தச் சமயம் இன்னொரு குரல் கேட்டது. பேசியது குழந்தையின் தாய் போலும்; "ஏண்டி, கனகம்! ஜிலேபி அங்கேயே சாப்பிட்டுட்டேன் இன்னு சொன்னியே; எங்கிட்டப் பொய்தானே சொன்னே?"

தாய் சொன்னதைச் சிறிதும் கவனியாது, "நாளைக்குத் தரயா, அப்பா?" என மீண்டும் கேட்டது குழந்தை.

"என் கண்ணே! நாளைக்கு ஒனக்கு இரண்டு ரூபாய் தருகிறேன், அம்மா. அந்தப் பிச்சைக்காரனுக்குக் கொடு" என்று தழுதழுத்த குரலில் தந்தை சொன்னார்.

நான் ஆச்சரிய முற்றேன். அக்குழந்தையையும், அதன் தந்தையையும் பார்க்க ஆவலுற்று, ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். குழந்தையின் முகம் மல்லிகைப் பூப் போல் மலர்ந்திருந்தது. அதன் தந்தையின் முகத்தை என்னால் பார்க்க முடியவில்லை. அவருடைய முதுகுதான் என் பக்கம் இருந்தது. களிபொங்கிய கனகத்தின் முகத்தில், திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. மிக்க ஆச்சரியத்துடன், "ஏனப்பா நீ அழறே?" என்று கேட்டது.

"ஏ ஈசா! என்னை மீண்டும் குழந்தை ஆக்கமாட்டாயா?" என்று விம்மல்களுக்கும் விக்கல்களுக்கும் இடையே தந்தை பிரலாபித்தார். அவர் ஏன் அப்படி விம்முகிறரென்பது அந்தக் குழந்தைக்குப் புரியவே இல்லை,

# மூன்றாம் பிறை

[சி. வைத்தியலிங்கம்]

டாங்.........டாங்ங்.........டாங்ங்ங்......... அவர்கள் திடுக்கிட்டார்கள். ராமேசுவரத்தில் எழுந்து நிற்கும் தேவ மாளிகையி லிருந்து கிளம்பிய அந்தக் கம்பீர நாதம் ஜனங் களை அந்திக்காலப் பூஜைக்குக் கூவி அழைத்துக்கொண்டிருந் தது. மணியோசை கேட்டதும் தாயின் குரல் கேட்ட குழந் தைபோல் துள்ளிக் குதித்தோடிப் பாலும் மலருங்கொண்டு தேவதேவனைச் சேவிக்கும் அவர்கள் அன்று அந்த மாலை வேளையில் ஓர் ஆலவிருக்ஷத்தின்கீழ் ஒருவரை ஒருவர் பார்த்தவண்ணம் நின்றார்கள்.

மணியோசை மீண்டும் கேட்டது. ஆனால் அவர்கள் அசையவில்லை. இன்று ஒருவர்க்கு மற்றவர் ஆதாரம்; நாளைக் கோ.........? பிரிவு.

ஆம், பிரிவு. மூன்று எழுத்துக்களாலான இந்தச் சின்னஞ் சிறிய சொல், அவர்களுடைய இருதயங்களை வாள்கொண்டு அறுப்பதுபோல் அறுத்துக்கொண்டிருந்தது.

அவன் - அவள் ; கோபாலன் -அம்புலி ; டாங்...... டாங்ங்......டாங்ங்ங்......இருவரும் நடுங்கினார்கள். கோவில் பூசைக்குப் போகவில்லையே என்று நினைக்க அம்புலிக்குப்

பயமாக இருந்தது. அவள் பதறிக்கொண்டு, "கோபு வாயேன் போகலாம் கோயிலுக்கு ; எனக்கென்னவோ பயமா யிருக்கு. ஆரோ என் நெஞ்சில் அடிப்பதுபோல் இருக்கு" என்றாள்.

"அம்பு, ஏன் வீணாய்ப் பயப்படுகிறாய்? நாம் இன்னிக்கொருநாள் போகலையென்று சாமி கோபிச்சுடுவாரா! நித்தமுந்தானே பாலும் பூவுங் கொண்டு கும்பிட்டிட்டு வர்றோம்?" என்றான் கோபாலன்.

"நீ என்னதான் சொல்லேன் கோபு; என் மனம் பதறிட்டே இருக்கு. இப்படிக் கொஞ்சம் இரேன். கோவிலுக் குப் போகாட்டா, இன்னும் சிறிது நேரம் பேசிட்டிருப்போ மே. நாளைக்குத்தான் நீ கொழும்புக்குப் போயிடுவாயே" என்று அவள் சொன்னபொழுது அவளுடைய மனம் குழைந்து குரல் தளர்ந்தது. நீர் நிறைந்துகொண்டிருந்த கண்களால் அவனையே பார்த்தவண்ணம் இருந்தாள்.

கோபாலன் அவளுடைய கைகளை எடுத்துத் தன் மார் புடன் அணைத்துக்கொண்டு சொன்னான்: "அம்பு, ஒன்னைப் பாக்கவே என் நெஞ்சு வெடிக்கும்போலிருக்கே. நான் கொழும்புக்குப் போனா அங்கிட்டே இருந்துடப்போறேனா? சீக்கிரம் வந்துடுவேனே."

"சரி, சீக்கிரம்னா? ஆ.........எத்தனை நாட்களில் வந்துடுவாய்?"

"அங்கே பாரு, மூன்றாம்பிறை இராச கோபுரத்துக்கு மேலே வந்துண்டிருக்கு; இன்னும் பத்தே பத்துப் பிறைகள் பொறுத்துண்டிரு, அம்பு; பதினொண்ணாவது முறை வரும். மூணாம்பிறை அன்று இதே இடத்திலே, இதே வேளையில் சந்திச்சுடுறேன்."

டாங்.........டாங்ங்.........டாங்ங்ங்............மீண்டும் அந்த மணியோசை. "ஐயோ கோபு, இந்த மணியோசை

யைக் கேட்க என் மனசு ஒருநாளும் இல்லாதபடி, கலங்கு கிறது. இங்கிட்டு என் கை உரோமத்தைப் பாரு; குத்திட்டு நிற்கிறது. நெஞ்சம் ஏன் இப்பிடிப் படபடன்னு அடிச்சுண் டிருக்கு?"

"ஏன் என்னை இப்பிடியெல்லாம் வதைச்சுப்பிடுறாய்? அதொண்ணுமில்லே; சும்மா தைரியமாயிரு; ஒன் நரம்பு சோந்திட்டிருக்கலாம். இன்னைக்கு ராவு முழுதும் ஒன்னு டன் பேசிட்டிருக்கணும்னு ஆசையா யிருக்கு."

காதலர்கள் இருவரும் என்ன பேசிக்கொண்டிருந்தார் கள்? அப்பப்ப, அது சொல்லமுடியாது; அவை காதல் வாசகங்கள்.

* * *

ஏதாவது ஒரு வேலையில் அமர்ந்து சிறிது பணம் சம்பா திக்கும் நோக்கத்துடன்தான் கோபாலன் கொழும்புக்குப் போனான். அந்தப் பணத்தைக்கொண்டு நல்ல ஜாதிப் பசுக்களாய் ஐந்தாறு வாங்கி, தன் குலத்தொழிலிலே நிலைத் திருக்க வேண்டுமென்பது அவனுடைய விருப்பம். அப் பொழுதுதான் அம்புலியின் கைகளைப் பற்றுவதற்குத் தான் தகுதி உள்ளவன் என்று எண்ணினான். அதற்காக அவளைப் பிரிந்திருப்பதற்கும் அவன் மனம் சம்மதித்தது.

கொழும்புக்குச் சென்ற சில தினங்களில் அவனுக்கு ஒரு பங்களாவில் 'பொடியன்' வேலை கிடைத்தது. அவன் பாக்கியசாலிதான். இல்லாவிடில் கடவுள் ஏன் அவனுக்குக் கருங்காலிபோன்ற வலிமையும் உறுதியும் உள்ள தேகக் கட்டைக் கொடுத்திருந்தார்? அவன் இடைப் பையன்; அந்தச் சாதியாரைப்போல் அவனிடத்தில் விடாமுயற்சியும் சுறுசுறுப்பும் நேர்மையும் இருந்தன. அவன் வேலை பார்த்து

வந்த பங்களா கருவாத் தோட்டத்தில், விக்டோரியா நந்த வனத்துக் கருகில் அழகாய் அமைந்திருந்தது.

அந்தப் பங்களாவிலிருந்து வேலை பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதெல்லாம் அவனுக்குத் தான் பிறந்த பொன் நாட்டின் நினைவு வந்துவிடும். ராமேசுவரக் கோவிலின் உயர்ந்த கோபுரத்தையும், அகன்று பரந்து கிடந்த மணல் வெளிகளையும், தன்னுடைய மாடு கன்றுகளையும், அவன் மறந்துவிடச் சித்தமாயிருந்தான். ஆனால் அம்புலியை மறப்ப தென்றால் - , அவன் மனிதன் அல்லவா? உணர்ச்சியற்ற வெறும் சடப்பொருளா?

சில நாட்களாயினும் அவளை மறந்து விடாவிட்டால் மன நிம்மதி கிடையாதென்பது அவனுக்குத் தெரியும். மன ஆறு தலுக்காக, தன் மனத்தில் இருந்தவற்றையெல்லாம் கடுதாசி யில் கொட்டி, கடிதத்திற்குப் பின் கடிதமாக அம்புலிக்கு எழுதி வந்தான். ஆனால் அவளுடைய நினைவு வரவர அவனை வாட்டிக்கொண்டு வந்தது. ஆம், அவனால் அவளை மறக்க முடியவில்லை.

பருவங்கள் வந்து மாறிக்கொண்டிருந்தன. ஐந்தாறு மாசங்கள் கழிந்துவிட்டன. காலதேவன் கொடுத்த மருந்து வீண் போகவில்லை. அம்புலியின் உருவம் புகை படர்ந்த சித்திரம்போல மெல்ல மறைந்துகொண்டு வந்தது. கொழும்பு நகரத்திலே ஒரு தனிக்கவர்ச்சி ஏற்பட்டு வளர்ந்து வருவதையும், தன்னுடைய மனப்போக்கு மாறிவருவதை யும் அவன் அறியவில்லை,

தன் வேலைகள் முடிந்ததும் அந்தி நேரங்களில் விக்டோரியா நந்தவனத்திலே போய்ச் சுற்றித் திரிந்துகொண் டிருப்பான். நல்ல வாலிபப் பருவத்திலே மனமும் அமைதி யாக இருக்கச் சம்மதிக்கிறதில்லை. ஒரு சிறுவன்போலத் துள்ளிக் குதித்து இல்லாத குறும்புகள் எல்லாம் செய்து

கொண்டிருக்கும். எழுந்த மாத்திரத்தில் எதையும் பயமில்லாமல் செய்துவிடும். இப்பொல்லாத பருவம் கோபாலன் மேல் ஏறி உல்லாசமாய் உட்கார்ந்திருந்தது.

ஒருநாள் மாலைப்பொழுது, மேகம் கறுத்து மின்னலும் இடியுமாயிருந்தது. கோபாலன் பங்களா வாசலிலே நின்று கொண்டிருந்தான். நந்தவனத்துக்குப் போய் அவ்விடத்தில் குழந்தைகளுடன் விளையாடிக்கொண் டிருக்கும் ஆயாமார்களைப் பார்க்கவேண்டுமென்று, அவனுக்கு ஆசைதான். ஆனால் மழை எந்தச் சமயத்திலும் வந்துவிடுமென்று பயந்து பங்களா வாசலிலே நின்றான். அப்பொழுது ஓர் ஆயா, குழந்தையுடன் அவன் நின்ற இடத்தை நோக்கி, வீதி வழியாக வந்துகொண்டிருந்தாள். திடீரென்று மழை கொட்டத் தொடங்கியது. ஆயாவும் குழந்தையும் இன்னது செய்வதென்று தோன்றாமல் விழித்துக்கொண்டு நின்றனர். பக்கத்தில் தங்குவதற்கு ஓரிடமும் இல்லை. அவ்விடத்தில் ரிக்ஷா வண்டிகளும் இல்லை. அந்த ஆயா தன்னையே பரிந்த பார்வையுடன் பார்த்துக்கொண்டு நிற்பதாகக் கோபாலன் எண்ணினான். உடனே ஓடிப்போய், "ஏம்மா, மழையிலே நிக்கிறீங்க, வங்களாவிலே துரையுமில்லே; வாங்க, அங்கே போயிடலாம்" என்றான்.

முதலில் ஆயா தயங்கினாள். பேசாமல் குழந்தையுடன் பங்களாவுக்குள் நுழைந்தாள். ஆனால் வேறு வழியில்லை. கோபாலன் அவர்களை அழைத்துக்கொண்டுபோய் ஒரு நாற்காலியில் இருக்கச் செய்துவிட்டு, பங்களாவிலுள்ள நூதனமான சாமான்களை எடுத்து ஒவ்வொன்றாக அவளுக்குக் காட்டிக்கொண்டிருந்தான்.

கோபாலன் அம்புலியைவிட வேறு இளம்பெண்களுடன் இதற்குமுன் தனிமையில் பேசியதில்லை. இன்று அந்த ஆயாவுடன் சம்பாஷிப்பது அவனுக்கு ஒரு தனி இன்பமா

யிருந்தது. தானே அவ்வீட்டின் எஜமானன்போலப் பங்களாவின் பல பாகங்களையும் அவளுக்குக் காட்டிக்கொண்டு வந்தான். அவர்கள் திரும்பியபொழுது மழை நின்றுவிட்டது. 'இந்த மழை இன்னும் பெய்யாதா? இவளுடன் இன்னும் பேச முடியாதா?' என்று நினைத்தான் கோபாலன். ஆனால் மழை ஓய்ந்தேவிட்டது. ஆயா போகும்பொழுது அவனைப் பரிவுடன் பார்த்துவிட்டுச் சிரித்தாள். ஐயோ! அந்தச் சிரிப்பு விஷம்போலக் கோபாலனின் தலைக்கேறிக்கொண்டிருந்தது.

அவள் போய்விட்டாலும் அந்தச் சிரிப்பு அவனைக் கலைத்துக் கொண்டிருந்தது. அதை நினைத்து அவனும் இடைக்கிடை சிரித்துக்கொண்டான். அவனுக்கு மயிர்க் கூச்செறிந்தது; தேகம் விம்மிப் பொருமியது. அவயவம் முழுவதும் ஏதோ ஓர் உணர்ச்சியால் சுண்டிக்கொண்டிருந்தது. உள்ளக் களிப்பினால் அவனை அறியாமல் வாய் தெம்மாங்கு பாடியது.

இப்பொழுது கோபாலனுடைய பகல்களெல்லாம் கனவு போல இருந்தன; மாலை எப்பொழுது வரும்? அவளைக் காண முடியுமா?

உண்மையில் அவனுக்கு இப்பொழுது நிமிஷங்கள் நிமிஷங்களல்ல; நீண்ட நாட்கள். ஒவ்வொரு நிமிஷமும் மாலைப்பொழுதையே எதிர்பார்த்திருந்தான்.

ஒருமுறை அவளுடன் பேசிவிட்டான். அவள் அவனைப் பார்த்து ஒருமுறை சிரித்துவிட்டாள். இனி, பயமில்லாமல் முன்னேற அவனுடைய யௌவன உள்ளத்தில் தைரியம் பிறந்தது.

நந்தவனத்திற்குப் போய் அவளைக் காண்பான். கைக்கு வளையல்கள் வாங்கிக்கொண்டுபோய்க் கொடுப்பான்; பேசுவான்; சிரிப்பான்; மலர்களைக் கொய்து அவள்மேல் வீசி எறிந்துவிட்டு வேறெங்கோ பார்த்துக் கொண்டிருப்பான்.

புருக்கள் மாக்கிளையிலிருந்து கொஞ்சுவதைச் சுட்டிக்காட்டிக் கடைக்கண்ணுற் பார்த்துப் புன்னகை புரிவான். கடைசியில் அவளுடைய பின்னலைப் பிடித்து இழுத்துவிட்டு ஓடிவிடுவான். இங்ஙனம் ஓர் இனிய கீதம் போலவே அவனுடைய வாழ்க்கை கழிந்துகொண்டிருந்தது.

அவன் தன் கிராமத்தை மறந்தது ஆச்சர்யமான காரியமல்ல. கள்ளங்கபட மில்லாத அம்புலி ஒவ்வொரு நாளும் தன்னை நினைந்து நினைந்து எப்போது வருவான் என்று ஏங்கியிருப்பாளே என்பதைக் கோபாலன் மறந்தே போய் விட்டானு?

சில வேளைகளிலே அவனுடைய மனம் அலைவீசாமல் அமைதியா யிருக்கும்பொழுது அந்த அமைதியிலிருந்து பிறந்த தேவகுமாரிபோல் அம்புலி அவன்முன் வந்து நிற்பாள்; அல்லது அவளிடமிருந்து காகிதம் வரும்பொழுது அவளைப்பற்றிய நினைவு வந்துவிடும். அவளுடைய முகத்திலே அல்லிமலர் போன்ற தூய்மையும், அழகும் வடிந்து கொண்டிருப்பதுபோல் தோன்றும். அவளுக்கு ஒரு கடிதம் எழுதவேண்டுமென்ற நினைவு வரும். மனத்திலே வேதனை அதிகரித்துக்கொண்டிருக்கும். அவளுக்காகக் கண்ணீர் விடவும் தயாராயிருப்பான்; ஆனல் ஒரு க்ஷணந்தான்.

உடனே நந்தவனத்தில் ஆயா நின்று கெக்கலிவிட்டுச் சிரிக்கும் சப்தம் கேட்பதுபோல் இருக்கும். அவளுடைய கைவளையல்கள் கலீர் கலீரென்னும்; கூந்தலின் சுகந்தவாசனை பரந்து வந்துகொண்டிருக்கும். இவைகள் ஒரு மோஹன சக்தியுடன் வசீகரித்து அவன் இருதயத்தை இழுத்து உணர்வையே அழித்துவிடும்.

"ராமேசுவரத்திலே வாழ்க்கை அந்த மணற்காடுபோல வறண்டுபோயிடுமே. என் குலத்தொழில்? சீ, அஞ்சாறு மாடுகளை வைத்துண்டு மேய்ச்சு, பால்கறந்து........என்ன

இழிவான வேலை? பட்டிக்காட்டுப் பெண் அந்த அம்புலி; சேலை கட்டத் தெரியாது, பேசிடத் தெரியாது, சிரிச்சிடத் தெரியாது.

"பென்னம் பெரிய வங்களாவிலே பொடியன் வேலை பின்னே மவாராசா வாட்டம் இல்லையா? மாசம் பதினைஞ்சு ரூபா சம்பளம். பட்டணத்திலே இருப்பதுன்னா எல்லாருக்குமா கிட்டும்? இந்த ஆயா, ராசாத்தி யாட்டம்......ஆ, ஆ...... இவளைக் கண்ணாலம் பண்ணிக்கிட்டால்? இவளும் பேசிடறாள். அம்புலியுந்தானே பேசிடறாள்? தூ, காக்காயாட்டம்......"

இப்படியிருந்தது கோபாலனின் மனப்பாங்கு. பட்டண வாசம் கோபாலனைத் தன்னுடன் இழுத்துக்கொண்டிருந்தது. அது தான் வளர்ந்துவந்த அந்த ஆயாவை அனுப்பி, அவளை அவன் இருதயத்துடன் புதைக்கச் சதி செய்து கொண்டிருந்தது.

அம்புலியையே கல்யாணஞ் செய்துகொள்ளவேண்டு மென்ற கோபாலனின் நினைவு முதலில் லக்ஷியமாய் இருந்தது; இப்பொழுது எண்ணமாய், கனவாய் அழிந்து கொண்டு வந்தது.

* * *

இப்பொழுது வசந்தகாலம். ஆகாயம் நல்ல நீலவர்ணம் பெற்றுத் தெளிவுடன் விளங்கியது. தென்ற லிளங்கன்னி மென்னடை பயின்றுகொண்டிருந்தாள். எங்கிருந்தோ குயில்களும் செண்பகப் பக்ஷிகளும் பறந்துவந்து நந்தவனத்திலே ஆரவாரஞ் செய்துகொண்டிருந்தன. குக்குக்கு......குக்குக்... ...குக்குக்கு.. ...குக்குக்......மரங்களும் கொடிகளும் இளமையும் காந்தியும் பெற்றுத் தளிர்களை எறிந்துகொண்டிருக்

தன. எங்கும் ஒரு விழிப்பு. கோபாலனின் நரம்புகளிலும் புதிய ரத்தம் ஓடத் தொடங்கிவிட்டது.

அன்று அமாவாசை வந்த மூன்றும் நாள். கோபாலனுக்கு இது தெரியாது. நந்தவனத்தில் ஆயாவுடன் நின்ற அந்த மாலைப்பொழுதில் அவனுடைய உள்ளத்திலே ஒரு புதிய உணர்ச்சி தோன்றித் தேகம் முழுவதும் ஊர்ந்து கொண்டிருந்தது. அந்த உணர்ச்சி வேகத்திலே உடலம் பதறியது. மனம் நிறைவு பெறாமல் இருதயத்திலே ஒரு விடாய் எடுத்தது. அந்தத் தாகம் தீராமல் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துக்கொண்டு வரவே, தன் சரீரம் முழுவதும் எரிந்து சாம்பலாகி விடுமோவென்று பயப்பட்டான்.

பூஞ்சோலைக்கு வந்தவர்கள் ஒவ்வொருவராய்ப் போய் விட்டார்கள். ஆயா மாத்திரம் வழக்கத்திற்கு மாறாக அன்று தங்கி நின்றாள்; இல்லை, கோபாலனுங்கூட. பாவிகளுடைய மனம்போல இருள் சூழ்ந்துகொண்டு வந்தது.

கோபாலனுக்கு இப்பொழுது கட்டுக்கடங்காத பருவம். வயசு இருபது. வெறிகொண்ட காளைப்பருவம். பயமென்பது இன்னதென்பது தெரியாது. ஆயாவை மெல்ல நெருங்கி அவள் கைகளைத் தன் கையில் எடுத்தான். பின்னாலே குயில் குக்...குக்...என்றது.

அவளுடைய கைகளை எடுத்துத் தன் அதரங்களுக்குக் கொண்டு போகுமுன் சுற்றும் பார்த்தான். யாராவது கண்டுவிட்டால்? எங்கும் அமைதி. கைகளை மேலே கொண்டு போக எடுத்தான்; யாரோ இலை மறைவில் நின்று எட்டிப் பார்ப்பதுபோல் இருந்தது; கோபாலன் நடுநடுங்கினான்.

யாரது, இலை மறைவில் நின்று மரங்களின் ஊடாக எட்டிப் பார்த்துக்கொண்டு நின்றது? ஒரு பிறை; அன்று மூன்றும் பிறை.

மின் வேகத்துடன் ஓர் உணர்ச்சி கோபாலனின் நெஞ்சில் பாய்ந்து, "ஏ, பாபி!" என்றது.

அம்புலி அந்த ஆலமரத்தின்கீழ் நிற்கிறாள். அலட்சியமாய் எறிந்து முடித்த கொண்டையைச் சுற்றி ஒரு முல்லை மாலை சூடியிருந்தாள். அவளுடைய சேலை அழுக்கும் தூசியும் நிறைந்த கந்தல்தான். என்றாலும் அவள்மேல் அது ஒயிலுடன் தூங்கி வழிந்துகொண்டிருந்தது. இரக்கமும் பேதைமையும் நிறைந்த கண்களினாலே அவனையே பார்த்த வண்ணம் நின்றாள். அவளுடைய வாய், "சரி, சீக்கிரம்னு? ஆ......எத்தனை நாட்களில் வந்துட்டாய்?" என்று கேட்பது போல் இருந்தது.

கோபாலனுடைய பிடியிலிருந்து அவனை அறியாமலேயே ஆயாவின் கைகள் நழுவிவிட்டன. தான் அம்புலிக்குக் கொடுத்த வாக்கு நினைவில் வரவே, அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஒரு மஹா பாவமான காரியத்தைச் செய்யப் போகையில் அம்புலி கூப்பிடுவதுபோல் இருந்தது. எழுந்து பங்களாவுக்கு ஓடினான். ஆயா ஸ்தம்பித்து நின்றாள்.

கோபாலனுடைய மனத்திலே ஒரு சாந்தம்; முன்போல் அலைபாய்ச்சல் இல்லை. அம்புலியைக் காணவேண்டுமென்ற ஒரே ஒரு நினைவுதான் மனத்தில் பரிபூரணமாய் நிறைந்திருந்தது. பதினோராவது முறை வரும் மூன்றாம் பிறையன்று அம்புலியை வந்து சந்திப்பதாக வாக்குக் கொடுத்திருந்தான். எத்தனை நாட்கள் சென்றுவிட்டன! எத்தனை பிறைகள் கழிந்தன! இவைகளெல்லாம் அவன் கணக்கெடுத்து வைத்திருக்க, தலைக்கேறியிருந்த மோகம் விடவில்லை. ஆனால் குறிப்பிட்ட தினத்தைக் கடந்து அநேக நாட்கள் கழிந்து விட்டன என்பது அவனுக்குத் தெரியும்.

சில தினங்களில் ராமேசுவரத்தை நோக்கிப் பிரயாணமானான்.

ராமேசுவரத்தை நெருங்க நெருங்கக் கோபாலனின் மனம் துள்ளிக்கொண்டிருந்தது. 'அம்பு, இப்போது வளர்ந்திருப்பாள். அவளுடைய கண்கள் கருநீலம் ஏறிப் பார்ப்பதற்கு நல்ல அழகா யிருக்கும். அவளுடைய கந்தல் புடைவையை உதறி எறிந்துவிட்டு நான் கொண்டுபோகும் நீலச் சிற்றாடையைக் கட்டிக்கொண்டால் ஒரு ராணியாட்டம் இருக்கமாட்டாளா? அவளிடம் முதலில் நான் என்ன பேசுவேன்? அவள் என்னைக் கண்டு வெட்கத்தால் பேசவே மாட்டாளோ? அல்லது நான் வாக்குக் கொடுத்தபடி போகவில்லையேயென்று கோபித்தால்? ஓ, இதென்ன பிரமாதமான காரியம்? அவளுடைய கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுவிடுகிறேன்.......'

இங்ஙனம் சிந்தனைச் சுழல் சூழ்ந்துவர இடைச்சேரியைப் போய் அடைந்தான். அம்புலியின் குடிசைக்குப் போய் ஆவலுடன், "அம்பு, அம்பு" என்று கூப்பிட்டான். அவள் தன் குரலைக் கேட்டு மான்குட்டிபோல் எத்திசையிலுமிருந்து ஓடிவரலாமென்று காத்து நின்றான். ஆனால் அவள் வரவில்லை. அவளுடைய தாய்க்கிழவி கையில் ஒரு தடியை ஊன்றிக்கொண்டு வெளியே வந்தாள். கோபுவைக் கண்டதும், "ஐயோ கோபு, கோபு" என்று கதறத் தொடங்கினாள். கிழவி கையிலிருந்த தடி, "தட்" என்று விழுந்தது.

கோபாலனுக்கு ஆச்சர்யமாய் இருந்தது. ஒன்றும் தோன்றாதவனாய், "அம்மா; ஏன் அழுறீங்க? அம்புலியைக் காணோமே!" என்றான்.

கிழவி மேலும் ஒப்பாரி வைத்துப் புலம்பத் தொடங்கிவிட்டாள். அவளையே பார்த்தவண்ணம் நின்றான் கோபாலன். கண்ணீர் விட்டு ஒரு குரல் அழுதபின் கிழவிக்கு ஆறுதலாயிருந்தது. அவள் சொன்னாள்:

போடமாட்டாயென்னும் சொன்னார். அப்படித் தங்கமான மனசு அவளிட்டே இருந்திட்டது. கோபம் என்று சொல் இப்பொழுது அவளுடைய நெஞ்சு தணதணத்தது." கோபா லன் பெருமூச் செறிந்தான்.

"பிறகு, அ......னும், அஞ்சுமாசத்துக்கு முந்தி யிருக்கும். அந்த ஆமையாத்தாளோடே போயிட்டு வந்தாள். எனக்கு அவளைப் பார்க்கப் பயமாயிருந்திடிச்சு. சுடு காட்டுப்போலே மொகம் வீங்கிட்டுக் கிடந்தது. வீட்டுத் திண்ணையிலே கிடந்து விம்மி விம்மி அழுதிட்டுக் கிடந் தாள். நான் ஏன் அழுறாயென்று கேட்டதற்கும் பேசமாட் டேனின்னுட்டாள். எனக்கோ மனசு கேக்கலே. எத்தினையோ சொல்லி ஆத்திப்புடலாம்னு நெனைச்சேன். ஆனா, ஒண்ணுக் கும் அவள் ஆறலே. ஏதோ மொணமொணத்துட்டு வீட்டு மோட்டைப் பாத்துண்டே இருந்தாள். பரியாரியைக் கூட்டிவந்து காட்டினதுக்கு அவளுக்குப் பிச்சி பிடிச்சண்டு தென்னு சொன்னாங்க. மருந்தும் மந்திரமும் செய்து பார்த் தேன். ராமேசுவரச்சாமியைக் கையெடுத்தண்டு வந்தேன். ஒரு சொகமும் வந்தபாடே காணலே. எனக்கென்னவோ பயமாயிருந்திச்சு. வாயில் வந்தபடி பேசிட்டே இருப்பாள். கொழும்புக்குப் போகணும் போகணும் என்பாள். நாலு மாசமாய் இப்பிடித்தான் இருந்தாள்.

"அதுக்குப் பொறவு ஒரு மாசமாய்ச் சாப்பிடவும் மாட் டேன்னுவாள். நெத்திரையு மில்லே. தினே தினே மெலிஞ் சிக்கிட்டு வந்தாள். எனக்குப் பாக்கப் பெத்தவயிறு பத்தி எரிஞ்சிட்டுது." கிழவியால் மேலும் பேச முடியவில்லை. தொண்டை காய்ந்துபோய்விட்டது. உமிழ்ந்து விழுங்கிக் கொண்டு சொன்னாள்.

"எனக்கென்னவோ அவள் பிழைச்சுடுவாண்ணுதான் தோணிச்சு. ஆனா, அவள் எலும்புந் தோலுமாகிப் படுக்கை

யும் பாயுமாய் விழுந்துட்டாள். பேச்சு மூச்சில்லே. எங்கோ பாத்துண்டு கிடையாய்க் கிடந்தாள். இடைக்கிடை 'கோபு, கோபு' என்னு வாய் கூப்பிட்டிட்டே இருந்தது. பதினைஞ்சு நாளாய் இப்பிடித்தான். எல்லாம் ஒடுங்கிட்டுதென்னு பரியாரி சொன்னாங்க. நான் நம்பலே. கோவில் கோபுரத்தைக் கையெடுத்துட்டிருக்கேன். ஆனா, நான் குடுத்துவைக்காத பாவி கோபு! பதினாறாவது நாள் எல்லாம் முடிஞ்சுவிட்டது..."

"ஐயோ! அப்பு.........அப்பு"

"இப்ப அவளைச் சுட்ட இடத்திலே புல்லும் முளைச்சிருக்குமே" என்று பெருமூச்சுடன் முடித்தாள் கிழவி.

கோபாலன் அந்த ஆலமரத்தடிக்கு ஓடிப்போனான். அந்தி மயங்கிக்கொண்டிருந்தது. ஆலமரத்தின் கீழ்க் கிடந்த மணலிலே சிறிது எடுத்து வாய்க்குள் போட்டுக்கொண்டான். அது அவள் காலடி பட்ட மண்.

கீழே விழுந்து கிடந்து புரண்டான். பக்கத்திலே சமுத்திரம் ஓயாமல் புலம்பிக்கொண்டிருந்தது. தூரத்திலே உயர்ந்து நின்ற கோயிற் கோபுரத்தின்மேல் ஏறிக்கொண்டிருந்தது மூன்றாம் பிறை.





# கொல்லைப்புறக் கோழி

[ந. சிதம்பரசுப்பிரமணியன்]

என் வீட்டின் கொல்லைப்பக்கத்தில் கிணற்றடிக்கு அப்பால் ஒரு வேப்பமரம் உண்டு. அதற்கப்புறம் சிறிது திறந்தவெளி. கொல்லைக் கடைசியில் இடிந்துபோன அரைக் கற்சுவர், ஒரு பக்கம் சரிந்து விழுந்தும், மற்றொரு பக்கம் விழுவதற்குத் தயாராகவும் நின்றுகொண்டிருந்தது. அதற்கு வெளியே ஒரு கால்வாய். கால்வாயின் அந்தப் பக்கத்தில் ஏழைக் கூலியாட்களின் குடிசைகள்.

வந்த புதிதில் அலமேலுவின் ஆசையைப் பூர்த்தி செய்வதற்குப் பூமியைச் சுத்தம் செய்து மண்ணைக் கொத்திப் பாத்திகள் போட்டு, ஒரு பக்கம் கீரையும் கொத்துமல்லியும் போட்டிருந்தேன். மற்றொரு பக்கத்தில், அவரையும் புடலும் போடுவதற்குக் கால்கள் நட்டிருந்தேன். கிணற்று ஜலமும், குளித்த ஜலமும் பாத்திகளுக்குப் போய்விடும்படி 'கால்' வெட்டியிருந்தேன்.

பொழுது விடிந்தவுடன் பயிர்க்குழிகளைப் பார்வையிடப் போய்விடுவாள் அலமேலு. "பார்த்தியளா, பார்த்தியளா, முளைவிட்டிருக்கு! பார்த்தியளா!" என்று அழைப்பாள் அவள்.

யும் பாயுமாய் விழுந்துட்டாள். பேச்சு மூச்சில்லே. எங்கோ பாத்துண்டு இடையாய்க் கிடந்தாள். இடைக்கிடை 'கோபு, கோபு' என்னு வாய் கூப்பிட்டிட்டே இருந்தது. பதினேஞ்சு நாளாய் இப்பிடித்தான். எல்லாம் ஒடுங்கிட்டுதென்னு பரியாரி சொன்னுங்க. நான் நம்பலே. கோவில் கோபுரத்தைக் கையெ டுத்துட்டிருந்தேன். ஆனு, நான் குடுத்துவைக்காத பாவி கோபு! பதினருவது நாள் எல்லாம் முடிஞ்சுவிட்டது..."

"ஐயோ! அம்பு.........அம்பு."

"இப்ப அவளைச் சுட்ட இடத்திலே புல்லும் முளைச் சிருக்குமே" என்று பெருமூச்சுடன் முடித்தாள் கிழவி.

கோபாலன் அந்த ஆலமரத்திற்கு ஓடிப்போனுன். அந்தி மயங்கிக்கொண்டிருந்தது. ஆலமரத்தின் கீழ்க் கிடந்த மணலிலே சிறிது எடுத்து வாய்க்குள் போட்டுக்கொண்டான். அது அவள் காலடி பட்ட மண்.

கீழே வீழ்ந்து கிடந்து புரண்டான். பக்கத்திலே சமுத்திரம் ஓயாமல் புலம்பிக்கொண்டிருந்தது. தூரத்திலே உயர்ந்து நின்ற கோயிற் கோபுரத்தின்மேல் ஏறிக்கொண் டிருந்தது மூன்றும் பிறை.





# கொல்லைப்புறக் கோழி

[ந. சிதம்பரசுப்பிரமணியன்]

என் வீட்டின் கொல்லைப்பக்கத்தில் கிணற்றடிக்கு அப்பால் ஒரு வேப்பமரம் உண்டு. அதற்கப்புறம் சிறிது திறந்தவெளி. கொல்லைக் கடைசியில் இடிந்துபோன அரளைக் கற்சுவர், ஒரு பக்கம் சரிந்து விழுந்தும், மற்றொரு பக்கம் விழுவதற்குத் தயாராகவும் நின்றுகொண்டிருந்தது. அதற்கு வெளியே ஒரு கால்வாய். கால்வாயின் அந்தப் பக்கத்தில் ஏழைக் கூலியாட்களின் குடிசைகள்.

வந்த புதிதில் அலமேலுவின் ஆசையைப் பூர்த்தி செய்வதற்குப் பூமியைச் சுத்தம் செய்து மண்ணைக் கொத்திப் பாத்திகள் போட்டு, ஒரு பக்கம் கீரையும் கொத்துமல்லியும் போட்டிருந்தேன். மற்றொரு பக்கத்தில், அவரையும் புடலும் போடுவதற்குக் கால்கள் நட்டிருந்தேன். கிணற்று ஜலமும், குளித்த ஜலமும் பாத்திகளுக்குப் போய்விடும்படி 'கால்' வெட்டியிருந்தேன்.

பொழுது விடிந்தவுடன் பயிர்க்குழிகளைப் பார்வையிடப் போய்விடுவாள் அலமேலு. "பார்த்தியளா, பார்த்தியளா, முளைவிட்டிருக்கு! பார்த்தியளா!" என்று அழைப்பாள் அவள்.

நான் பார்க்கப் போவேன். தரைக்குள்ளிருந்து முளை கள் எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும். மற்றொருநாள், "ஜலம் சரியாய்ப் பாயமாட்டேனென்கிறதே; அந்தக் 'காலை'க் கொஞ்சம் வெட்டிவிடுங்கள்" என்பாள். "சரி" என்று அதைச் சீர்படுத்துவேன். இப்படியாக, அலமேலு வின் கவனிப்பினாலும் என்னுடைய பிரயாசையினாலும் கீரை யும் கொத்துமல்லியும் நன்றாக முளைத்திருந்தன.

கொல்லையில் நாமே பயிராக்கும் காய் கறிகளுக்குத் தனி ருசி. என்னதான் கடையிலும் சந்தையிலும் வாங்கினா லும், இந்த ருசி வரவே வராது. "வாசல்லே கூடைக்காரி கொண்டுவாராளே கொத்தமல்லி; சுத்த உபயோகமில்லே. வாசனையே கிடையாது! மண்மாதிரி இருக்கு" என்பாள் என் மனைவி.

"சில சமயங்களில் மண் வாசனையிருக்கு" என்பேன் நான்.

"நம் ஆத்துக் கொத்தமல்லி வாசனை ஒண்ணுக்கும் வராது" என்பாள் அவள்.

"ரசத்திலேயே கொத்தமல்லி வாசனைதான் தூக்கி யடிக்கிறது. ராத்திரிக்குக் கீரையை வெண்ணெயா மசித்து மசியல் பண்ணு" என்பேன் நான். வாழ்க்கையில் எங்க ளுக்கு ஒரு புது ருசியைக் கொடுத்துவந்தன, கொல்லையில் உண்டான அந்தச் சிறு பயிர்க்குழிகள்.

ஆனால் அதில்கூட ஆசாபங்கம் ஏற்பட வேண்டுமா? ஒருநாள் வழக்கம்போல் கொல்லைப்பக்கம் ஆசையாகப் பார்க் கச் சென்றாள் அலமேலு. அவளுக்குத் தூக்கிவாரிப் போட் டது. கொத்தமல்லித் தளிர்கள் இறைந்து கிடந்தன. கீரைப்பாத்தி உருச் சிதைந்து இறைபட்டுக் கிடந்தது. சிறு தண்டுகள் ஒடிந்து கிடந்தன. யுத்தகளத்தில் கிடக் கும் பிணங்களைப்போல், அவை இங்கும் அங்கும் சிதறிக்

கிடந்தன. "ஐயோ! இங்கே வாங்களேன்; இந்த அநியாயத்தைப் பாருங்களேன்! பாத்தியையெல்லாம் பாழாக்கியிருக்கே" என்று கண்ணீர் ததும்பச் சொன்னாள்.

"அட பாவமே! நாசம் பண்ணியிருக்கே" என்றேன்.

"எந்தப் பசங்களோ இப்படிப் பண்ணியிருக்குகளே, சனியன்கள்!" என்று ஆத்திரப்பட்டுக்கொண்டு முணுமுணுத்தாள். அவளுக்கு மிகவும் வருத்தமாயிருந்தது.

"இவை மனுஷாள் ஒருவரும் செய்யவில்லை" என்று நான் துப்பறியும் வேலை செய்வதற்குள் பறந்துகொண்டு குட்டிச்சுவரின்மேல் வந்து உட்கார்ந்தது ஒரு கோழி. "இந்தக் கோழிதான் இதைச் செய்திருக்கு" என்றேன்.

"அட கட்டையிலே வைக்க! இதுவா பண்ணியிருக்கும்? பயிர்களுக்கெல்லாம் இதுவா யமனாக வந்து சேர்ந்தது? இதன் காலை ஒடியுங்கள்" என்றாள் அவள். அந்தக் கோழியைச் சித்திரவதை செய்து அனுப்பவேண்டுமென்ற ஆத்திரம் அவளுக்கு இருந்தது.

ஆனால் இதெல்லாம் ஒன்றும் தெரியாமல் அந்தக்கோழி, வெகு அலக்ஷியமாக, உலகத்தையே ஜயித்த வீரனைப்போலக் கொக்கரித்துக்கொண்டும் அங்கும் இங்கும் தரையைக்கிளறிக் கொண்டும் தாவிப் பறந்துகொண்டும் இருந்தது. இதுதான் அந்தக் கோழியின் முதல் விஜயம். வரும்போதே எங்களுக்கு அதிருப்தியும் ஆங்காரமும் உண்டாகும்படியான காரியங்களைச் செய்துகொண்டுவந்தது.

அதற்குப் பிறகு கோழி அடிக்கடி கொல்லைக்கு வந்துவிடும். ஒன்றுக்கும் கொல்லை உபயோகமில்லாமற் போய்விட்டது. வடகம் பிழிந்து உலர்த்தியிருந்தால் கோழி வந்து களேபரம் பண்ணிவிடும். அப்பளத்திற்கு உளுத்தம் பருப்பு உலர்த்தியிருந்தால் அதில் வந்து எச்சம் இட்டுவிடும். கொல்லை முழுவதையும் தன்னுடைய ஏகபோக பாத்தியதைக்

குள்ளாக்கிக் கொண்டது அந்தக் கோழி. அக் கோழியைப் பிடிக்க வரும் பையன்கள் வேறு, இடிந்துபோன சுவரில் ஏறி வந்து அட்டகாசம் செய்வார்கள். அவர்கள் ஏறும் போது, ஏற்கனவே இடிந்திருக்கும் சுவர் இன்னும் கொஞ்சம் சரியும். தனியாயிருக்கும் அரளைக்கல் கீழே விழுந்து ஓடும்.

அலமேலுவுக்கும் எனக்கும் கொஞ்சங்கூட இவற்றைச் சகிக்க முடியவில்லை. பார்ப்பதற்கு ரம்யமாகவும் சுத்தமாக வும் உபயோகமாகவும் இருந்த கொல்லையை எங்கிருந்தோ சனியனாக வந்த இந்தக் கோழி பாழ்படுத்தி விட்டது. சிறு வர்கள் வருவதும் கோழியை விரட்டுவதுமாகக் கொஞ்சங் கூடத் தனிமையில்லாமல் ஆகிவிட்டது.

கோழிமேல் கல் எறிந்து பார்த்தேன்; பயமுறுத்திப் பார்த்தேன்; அதைப் பிடித்துக் கட்டிப்போடப் பார்த் தேன். ஒன்றும் சரிப்படவில்லை; அது தன் இஷ்டப்படி வருவதும் போவதும் தொந்தரவு செய்வதுமாகத்தான் இருந் தது. குடிசையிலுள்ள குடியானவர்களையும், அந்தக் கோழி யைப் பிடித்துப்போக வரும் பையன்களையும் கண்டபடி வைதேன்.

"ஏண்டா மடப்பயல்களா! கோழி வளர்க்க உங்க ளுக்குத் தெரியுமாடா? கோழி வளர்க்கத் தெரியாதவர்கள் ஏண்டா கோழி வாங்கிறையள்?" என்றேன்.

"இல்லே சாமி, கட்டித்தான் போடறோம். சமயங்க ளிலே, அத்துக்கிட்டுக் கிளம்பிடறது."

"என் பயிரெல்லாம் போயிடுத்து. சாமானெல்லாம் போறது; யாரடா புணைப்படறது?" என்றேன்.

"தினம் பொழுதுவிடிந்தால், இந்த இழவு, கோழியின் அட்டகாசந்தான் கொல்லையில்! இதைக் கொல்லுங்கள்" என் றாள் அலமேலு. அதை ஹிம்ஸித்துப் பழிவாங்கவேண்டு மென்ற ஆசை உள்ளூற அவளுக்கு இருந்தது.

"ஏ கிராபைகளா! குடியிருக்கும் வீடா, அல்லது தெரு, பாழ் என்று நினைத்தீர்களா? கோழியை விடறது; நீங்களும் சுவரேறிக் குதிச்சு வர்றது. இதெல்லாம் என்ன காரியம்? ஒண்ணும் தெரியல்லே போலிருக்கு? போங்கடா வேலையத்த பசங்களா!" என்று அதட்டினேன்.

"என்ன சாமி பண்றது? சில சமயங்களில் கிளம்பிடறது. இனிமே அங்குட்டு வராமே பாத்துக்கிறோம்" என்றான் நடுத்தர வயதானவன் ஒருவன்.

"தொலையுங்கடா, தொலையுங்கடா! இனிமேல் இந்தத் தொந்தரவுகளைச் சகித்துக்கொண்டிருக்க முடியாது" என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டு அவர்களை அனுப்பினேன்.

ஆனால் என்னுடைய கோபத்தையோ அதிருப்தியையோ வெறுப்பையோ கொஞ்சங்கூட அந்தக் கோழி லக்ஷியம் செய்ததாகத் தெரியவில்லை. அதுபாட்டில் தன் நடவடிக்கைகளை நடத்திக்கொண்டே வந்தது.

காலையில் காபி சாப்பிட்டுவிட்டுப் பத்திரிகையைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

"சனியனே, வந்துவிட்டாயா?" என்று கோழியை விரட்டவும், களைந்து வைத்திருந்த அரிசிக்கு ஆபத்துவராமல் காப்பாற்றவும் ஓடினாள் அலமேலு. கோழியை விரட்டிக் கொண்டு சிறுவர்கள் ஓடிவந்தனர்.

"அப்பன்களா, வந்துவிட்டீர்களா! பொழுதுவிடிந்தால் இதுதாண்டா காரியமாயிருக்கு. கோழி வருவதும் அதைத் துரத்திக்கொண்டு நீங்கள் வருவதும் உங்களைத் துரத்த நாங்கள் வருவதும் இதைத்தவிர வேறு ஜோலியில்லேபோலிருக்கு எல்லோருக்கும்?" என்று அவர்களை விரட்டப் போனேன்.

"இல்லே சாமி; இனிமேல் உங்கள் வீட்டுக்கு வராது, சாமி!"

"ஏண்டா, என்ன சமாசாரம்?" என்றேன்.

"இன்னிக்குக் கோவிலுக்கு அதைப் பொங்கலிடப் போறோம், சாமி" என்றான் ஒருவன்.

"சனியன், இன்னியோடே தொலைஞ்சுதா!" என்றாள் அலமேலு.

"சரி, சரி, பிடித்துக்கொண்டுபோய்க் காரியத்தை முடியுங்கள்" என்று சொல்லிவிட்டு வீட்டிற்குள் வந்தேன்.

குளித்துவிட்டுச் சாப்பிடுவதற்குத் தயாராயிருந்தேன். கொல்லைப்பக்கத்துச் சப்தம் குறைந்த வழியாகக் காணவில்லை. "என்ன! பிடித்துக்கொண்டு போனான்களா இல்லையா?" என்றேன்.

"அந்தப் பக்கிகளுக்குக் கோழியை வளர்க்கவும் தெரியல்லே; பிடிக்கவும் தெரியல்லே" என்று இரண்டும் தெரிந்தவள்போலச் சொன்னாள் அலமேலு.

அந்தக் கோழியை எப்படியேனும், நானாவது கையிலே பிடித்து அவர்கள் கையில் கொடுத்து அவர்களை விரட்டியடிக்கவேண்டுமென்று தோன்றிற்று. அவசரமாகக் கொல்லைப் பக்கம் போனேன்.

கோழி கால்வாயில் அங்கும் இங்குமாக ஓடிக்கொண்டிருந்தது. நாலு பக்கத்திலும் நாலு பேர் நின்றுகொண்டு அதைத் துரத்திக்கொண்டிருந்தனர். திகில்கொண்ட கோழி அங்கும் இங்குமாக ஓடிக்கொண்டிருந்தது. "ஒரு தாவு தாவிப் பிடியுங்களேண்டா!" என்று குட்டிச் சுவரைப் பிடித்துக்கொண்டு யுக்தி சொல்லிக்கொடுத்தேன். ஆனால், அவர்களுக்கு மேலே சாமர்த்தியமாக அது சமாளித்துக் கொண்டு வந்தது. திடீரென்று உயரப் பறந்து குட்டிச் சுவரின்மேல் வந்து உட்கார்ந்தது. ஒரு பாய்ச்சல் பாய்ந்து அதைப் பிடிக்கப் போனேன்.

"அட, கண்ராவியே! நீங்கள் எதற்கு அதைப் பிடிக்கப் போறியள்? மூக்கினால் குத்திவைக்கப் போகிறது" என்று

ஜாக்கிரதைப் படுத்தினாள் அலமேலு. என்னுடைய பாய்ச்சல், அலமேலுவின் குரல் இரண்டிற்கும் முன்பாகவே, அது மற்றொரு தாவுத் தாவி வேப்பமரத்தின்மேல் ஏறிக்கொண்டு விட்டது.

"என்னடா, உச்சாணிக் கிளைக்குப் போயிடுத்தே? கீழே இருக்கிறபோதே பிடிக்க முடியாத பிரகஸ்பதிகள், மரத்தின்மேலே இருக்கிறதைப் பிடிச்சிடப் போறியளாக்கும்!" என்றேன்.

"நீளக் கொம்பாவது, தொரட்டியாவது இருக்குமா? சாமி" என்றான் ஒரு பையன்.

"இலை பறிப்பதுபோல நினைச்சுண்டாயோ?" என்று பரிகாசம் செய்தேன்.

ஒரு பையன் குறி பார்த்து அதன்மேல் கல்லை விட்டெறிந்தான். மற்றொரு பையன், 'ஆ ஆ' என்று அதைப் பயமுறுத்திக் கொண்டிருந்தான்.

"இங்கே, வாருங்கடா, இப்படி..." என்று என்னுடைய யோசனையைச் சொல்ல வாயெடுத்தபடியே பின்னால் வேகமாக நகர்ந்தேன்.

"ஐயோ, கிணறு" என்றாள் அலமேலு. அதே நிமிஷத்தில் என் உடம்பு அளவற்ற கிகிலுடன் ஒரு குலுங்கு குலுங்கிற்று. கிணற்றின் கம்பத்தைப் பிடித்துக்கொண்டு நின்றேன்.

கொல்லைக் கிணற்றுக்குப் பிடிச்சுவர் இல்லை. கோழியைப் பிடிக்கும் உத்ஸாகத்தால் பின்னாலேயே அடிவைத்துவந்ததில் கிணற்றில் விழப் போனேன். அந்த நிமிஷத்திலேயே, உயிரை விடாமல் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும் இயற்கையானதோர் உணர்ச்சியினால் அந்த ஆபத்தை உணர்ந்து, கிணற்றுக் கம்பத்தைப் பிடித்துக்கொண்டு நின்றேன். முகத்தில் வேர்வை அரும்பிற்று. மூச்சுவாங்கிக் கொண்டிருந்

தது. 'பிழைத்தோம்' என்று ஆச்வாசப் படுத்திக்கொண் டிருந்தேன்.

பொதுவாக, எல்லோருக்கும் சாவு நிச்சயம் என்பது தெரியாமல் இல்லை. நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு, "என்றைக்காவது நாமும் போகவேண்டியதுதானே" என்று சொல்லும்போது சாவு அவ்வளவு பயங்கரமாகத் தோன் றுது. ஆனல், நாம் குருட்டு யோசனை செய்துகொண்டு தெருவில் நடக்கையில் மோட்டார் பஸ் முதுகில் முட்ட வரும் போது நம்முடைய ஒவ்வோர் அவயவமும் பதறித் துடிக்கி றது. நம்மை அறியாமல் சரீரத்தைக் காப்பாற்றிக்கொள் ளும் ஆத்திரத்தைக் கொடுக்கிறது. நெஞ்சு பதறுகிறது. துள்ளிக் குதித்து உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடுகி றோம். சாவு தூரத்திலிருக்கும் வரையில் நம்மைப் பய முறுத்துவதில்லை. ஆனல், காதின் பக்கத்தில்வந்து ரகஸ்ய மாய் அழைக்கும்போதுதான் அதன் கோரம் தெரியவரும்.

அகஸ்மாத்தாகக் கிணற்றில் விழப்போனதால் என் மனம் படபடத்துக் கிடந்தது. என்னுடைய அந்த நிமிஷ உபாதையை அறியாத அலமேலு, "நல்லவேளை, கிணற்றில் விழத் தெரிஞ்சியளே! தூணைப்பிடிச்சியளோ, பிழைச்சிய ளோ! ஒரு கண்டம் தப்பிச்சுது. இந்த வீட்டுக்காரக் கடன் காரன் கிணற்றுக்குப் பிடிச்சுவர் கட்டச்சொன்னல் ஆகட்டும் ஆகட்டும்னு கழிச்சண்டு வரான். ஒரு வேளையைப்போல் இருக்குமோ" என்று ஆரம்பித்தாள் அலமேலு.

"அவன் கட்டாவிட்டால், 'காலிபண்ணி விடுவேன்' என்று சொல்லிவிடுகிறேன்" என்று பதில் கூறினேன்.

"போதும் போதும், நீங்கள் கோழி பிடிச்சுக் கொடுக் கிற அழகு! கிணற்றிலே விழுந்து சாகத் தெரிஞ்சியளே!" என்றாள் அவள். எனக்கும் மனசு சரியா யில்லை. கலக்கத் தால் சிதறிக் கிடந்தது.

அண்ணாந்து பார்த்தேன். தன் உயிரைக் காத்துக் கொள்வதற்காக அந்தக் கோழி உச்சாணிக்கிளையில் உட்கார்ந்துகொண்டிருந்தது. யம கிங்கரர்கள்போல உயிரைக் கவர வரும் ஆட்களுக்குப் பயந்துகொண்டு, உயிரின்மேலுள்ள ஆசையால் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் முயற்சியில் அது முனைந்திருந்தது. எனக்கு என் உயிர் போவதில் இஷ்டமில்லை. ஆனால், அந்தக் கோழியின் உயிரைப்பற்றி அக்கரையில்லை. உடலை விட்டு உயிர் போவதென்றால் சாதாரண விஷயமா? அரைக்கால் விநாடி வேதனையில், உயிருக்கு ஆபத்து வருமோ என்ற எண்ணத்தில் என் மனம் என்ன பாடு பட்டது! அந்த வேதனை கோழிக்கும் உண்டு.

"என் உயிருக்குப் பறந்தாயே; இந்தக் கோழியைக் கொன்றுவிடுவார்களே. இதன்மேல் கருணையைக் காணோமே!" என்றேன். கிணற்றடியில் ஏற்பட்ட பதற்றத்தில் சிறிது வேதாந்தமும் பிறந்தது.

"கோழியும் நீங்களும் ஒன்றுதானுக்கும்?" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள் அலமேலு.

கொஞ்ச தூரத்திலே பையன்கள் அந்தக் கோழியையே பார்த்துக்கொண்டு நின்றனர். கற்களை எறியும் பையன், மேலும் கற்களைப் பொறுக்கிக்கொண்டிருந்தான். மறுபடியும் அந்தக் கோழியைப் பார்த்தேன். உச்சாணிக்கிளையில் இருந்தாலும் அதன் பார்வையில் பீதியும் சோகமும் ததும்புவதுபோல் எனக்குப் பட்டது. ஒவ்வொரு பிராணிக்கும் அதனதன் உயிர் அருமைதான். ஒவ்வொன்றும் தன் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள முடிந்தவரையில் முயற்சி செய்யத்தான் செய்கிறது. நடுங்கிக் கொண்டிருக்கும் அந்தக் கோழியைப் பார்க்கையில் இரக்கம் பொங்கி வந்தது. உடலிலிருந்து உயிரைப் பிரிக்க முயலும் அந்தக் கொடுமைக்கு நானும் ஆளாகவேண்டுமா என்ற அனுதாபம் உண்டாயிற்று.

"அடடா, அது எப்படி நடுநடுங்கிக் கொண்டிருக்கும்!" என்று மனத்திற் சொல்லிக்கொண்டே, "போங்கடா போங் கடா, காலிப் பயல்களா! தினம் பொழுது விடிந்தா இது தான் வேலையாப் போச்சு. கோழி பிடிக்கத் தெரியாத முட்டாள்கள்! வந்து ஒரு மணியா ஆர்ப்பாட்டமும் அட்ட காசமுந்தான் ஜாஸ்தியா யிருக்கு. என் வீட்டுக் கொல்லை யிலே ஒத்தரும் நிற்காதேயுங்கள், போங்கள் போங்கள்!" என்று ஒவ்வொருவராக அவ்வளவு பேரையும் விரட்டினேன்.

கொஞ்ச நேரத்திற்கு முன்புவரையில் கோழியைப் பிடிக்க ஒத்தாசைக்கு வந்த மனிதன் இப்பொழுது திடீ ரென்று இப்படி விரட்டி யடிப்பானேனென்ற திகைப்புடனே அவர்கள் சுவர்வழியாக இறங்கிக் குடிசைகளுக்குப் போய்ச் சேர்ந்தனர்.

கோழி சாவுக்குப் பயந்து உச்சாணிக்கிளையிலேயே இருந்தது. அதற்குப் பிறகு வழக்கமாக ஏற்பட்ட தினசரி ஆபீஸ் வேலைகளைக் கவனிக்கப் புறப்பட்டேன். சாயந்தரம் ஆபீஸிலிருந்து வந்ததும் கொல்லைப்பக்கம்போய் அண்ணாந்து பார்த்தேன். கோழியைக் காணவில்லை. "அலமேலு, கோழி எங்கே?" என்றேன் நான்.

"எனக்கென்ன தெரியும்? புடிச்சிண்டு போயிருக்குங் கள், அந்தப் பக்கிகள். காலம்பறக் கொல்லைக் கதவைச் சாத்தி ளுல் சாயந்தரந்தானே திறக்கிறேன்? இந்தக் கோழியைத் தான் கவனிக்கிறேனுக்கும்!" என்ருள்.

வேறு ஒன்றும் பேசாமல், சரிந்து கிடந்த அரளைக் கற்களைத் தள்ளிவைக்கப் போனேன். தள்ளி வைத்துவிட்டுக் கால்வாயை எட்டிப்பார்த்தேன். ஒரு குடிசையின் பக்கத்தில் சிறகுகள் சிதறிக்கிடந்தன. என்னை அறியாமல் தேகத்தில் ஒரு கூச்சம் ஏற்பட்டது. மனத்தை ஏதோ அறுத்துக்கொண் டிருந்தது.

"அலமேலு, கோழியைத் தீர்த்துப்பட்டான்கள்" என்றேன் நான்.

"நல்ல வேளை. சனி தொலைஞ்சது! இனிமேல் கொல் லையைத் துவம்சம் பண்ணாது" என்றாள் அலமேலு.

அந்த வார்த்தை நாராசம்போல் என் காதில் விழுந்தது.

# மறு ஜன்மம்

[பி. எம். கண்ணன்]

## 1

பங்குனி உத்தரம்; பௌர்ணமி; வெண்பஞ்சுபோ
மேகங்கள் வானத்தில் ஓட்டிக் கிடந்தன.

அந்த வெள்ளை மேகங்களைத் தத்திப் பாயும் சந்தி
னும் வீணை நரம்புகளை நெருடி விரையும் விரல்களு
போட்டி யிட்டுக்கொண்டிருந்தன.

சுலோசனாவின் ஹிருதய ரஸமும் அவளது வீணை
நாதமும் லயித்துப்போய்க் கிருஷ்ணசாமியின் மனத்தை
மயக்கின. ஒரு மெழுகுப் பொம்மையென்று சொல்லும்ப
அவன் உடல் ஒரு சாய்வு நாற்காலியில் நெகிழ்ந்துகொண்
டிருந்தது.

நேரம் நிற்கிறதோ போகிறதோ என்று சொல்ல முடி
யாத அமைதி. அவனது மந்த மயக்கமும், உலக மோ
மும் தழுவிய நிலையில் அவளது இனிய சங்கீதம் சடக்கெ
நின்றது.

"நன்னு பாலிம்ப" என்ற மோஹனராகக் கீர்த்தன
தின் அனுபல்லவியாகிய "வனஜ நயன" என்
அடியை உருக்கமாகப் பாடி, மேலே போகாமல் அவ
நிறுத்திவிட்டதும் கிருஷ்ணசாமி திடுக்கிட்டு விழித்தான்.

"சுலோசனா! என்ன இது? உனது சங்கீத விமான
தின் மூலம் சந்திர லோகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்

என்னை ஒரே அடியாகப் பாதாளத்தில் தள்ளிவிட்டாயே?" என்று காதலில் தோன்றும் கற்பனையுடன் கூறினான்.

நிலவு வெளிச்சத்தில் சுலோசனாவின் தங்க முகம் சில செம்புகளை வாரி இறைத்ததுபோல் மாறியது. அவளுடைய நீண்ட விழிகள் ஒரு முறை சுழன்று நின்றன.

"தூங்கிவிட்டீர்களோ என்னவோ என்று நிறுத்தினேன்" என்றாள்.

"இல்லை இல்லை. அரைகுறையாய் விடாதே. அந்தப் பாட்டை முடித்துவிடு" என்று சொல்லிக் கிருஷ்ணசாமி அவளது கையைப் பற்றினான்.

சுலோசனா மறுபடியும் வீணையை மீட்டிக்கொண்டு ஆரம்பித்த கீர்த்தனையைப் பாடி முடித்தாள்.

கிருஷ்ணசாமியின் மகிழ்ச்சி பொங்கி மமதையாய் வழிந்தது. தன் மனைவியின் சங்கீத பாண்டித்தியமும், அவள் கல்வியிடம் காட்டிய அடக்கமுடியாத தாகமும் அவனது நவீன காலக் கொள்கைகளைப் பலப்படுத்தின.

"லோசனா, உன் பாட்டும் படிப்பும் எனக்கு நிரம்பப் பெருமையை அளிக்கின்றன. 'பிரபஞ்சலதா' வில் நீ எழுதிய கதையைப் படித்த பிறகு எப்படி உன்னைப்பற்றிக் கர்வப்படாமல் இருக்க முடியும்? அந்தக் கதை எத்தனை பெண்களுக்குத் தூண்டுகோலா யிருக்கும்!" என்றான்.

சுலோசனாவின் முகம் புன்னகையால் மலர்ந்தது. கூச்சத்தின் மிகுதியால் அவள் கண்கள் குவிந்து கிருஷ்ணசாமியின்மீது பாய்ந்தன.

"நான் ஊருக்குப் போய்விட்டால்கூட நீ இதை மாத்திரம் விட்டுவிடக் கூடாது. பத்திரிகைகளுக்கும் எழுது. பாட்டிலும் நன்றாக அப்பியாசம் செய். நமது சமூகத்தின் பழைய வழக்கங்களும் பெண்களின் கேவலமான அடிமைத் தனமும் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை" என்று

பிரசங்கம் செய்தபோது, சுலோசனாவுக்கு அவன் வார்த்தை அவனது அடிவயிற்றிலிருந்து கிளம்பியதென்பது பளிச் சென்று புலப்பட்டது.

"நீங்கள் இந்தத் தடவை ஊருக்குப் போகும்போது என்னையும் அழைத்துக்கொண்டு போகமுடியுமா?" என்று தயங்கிக் கேட்டாள்.

கிருஷ்ணசாமி சிறிது நேரம் சும்மா இருந்தான். அவனுடைய மனவெழுச்சிகளை யெல்லாம் அப்படியே படமெடுத்துக் கொள்பவைபோல் சுலோசனாவின் விழிகள் நிலைத்திருந்தன.

"ஏதாவது வேலை கிடைத்தபின்தான் உன்னை அழைத்துக்கொள்ளவேண்டுமென்று அம்மா சொல்லு கிறாள்" என்று நலிந்த குரலில் பேசி முடித்தான்.

அதற்குமேல் அவள் ஒன்றும் சொல்லவில்லை.

## 2

ஒரு வருஷம் கழிந்தது. சுலோசனாவின் கலா ரசனை யும், சங்கீத முயற்சியும் மேன்மேலும் விகஸித்து விளங்கின. அவளுக்குக் கல்வியிலுள்ள அபிலாஷை அவள் ஆபரணங் களைக்கூட விற்று அருமையான புஸ்தகங்களைச் சேகரிக்கும் படி செய்தது. அந்த ஆவலைப் பின்னும் ஊக்கியது கிருஷ்ண சாமியின் கணக்கற்ற கடிதங்கள்.

முக்கியமாக ஒரு சுமங்கிலிஸ்திரீக்கு வேண்டிய சொற்ப நகைகளையே அவள் அணிந்திருந்தாள். ஒரு காலத்தில் அவ ளது மேனியை அலங்கரித்த நகைகள், இப்பொழுது அவ ளது மூளைவட்டத்திலிருந்து கலைக்கிரணங்களாக ஒளிவீசின.

இவ்வளவுக்கும் உதவியாயிருந்தவர் அவள் ஏழைத் தந்தை ராமையங்கார்; தம் மனைவியைத் துறந்தபின் மகளே உலகமென்றெண்ணிப் போற்றிவந்த பிதா.

ஒருநாள் மாப்பிள்ளையிட மிருந்து அவருக்குக் கடிதம் வந்தது; தனக்கு ஏதோ வேலை கிடைத்திருப்பதாயும், சுலோசனையைக் கொண்டுவந்துவிட்டால் சௌகரியமாயிருக்கு மென்றும் கிருஷ்ணசாமி எழுதியிருந்தான்.

ராமையங்கார் களிப்புடன் பெண்ணைக் கொண்டுபோய்ப் புக்ககத்தில் விட்டு விட்டு வந்தார்.

சில நாட்கள் சென்றன.

கூடத்து அறையில் உட்கார்ந்து சுலோசனா ஏதோ எழுதிக்கொண்டிருந்தாள். தாழ்வாரத்தில் வம்பர் மஹா நாடு கூடியிருந்தது.

" நாட்டுப்பெண் வந்தாளே; என்ன கொண்டு வந்தாள் ?" என்றாள் அம்புஜம்.

" உம், என்ன கொண்டுவந்தாள்? ஒண்ணையும் காணோம் " என்றாள் கிருஷ்ணசாமியின் தாய் ஆண்டா ளம்மாள்.

" அதென்ன அப்படிச் சொல்றேள் ?" என்றாள் கோமு.

" என்ன இருக்கு, கொண்டுவர ?" என்று குறைப்பட் டாள் ஆண்டாளம்மாள்.

" ஏன் ? வீட்டுக்கேத்த வாசப்படி; பொன்னாலே செய்யாமெப் போனாலும் பூவாலேயாவது சேஞ்சுதான் அனுப்புவா. அவாளவாளுக்கு ஆசை இல்லையா ?" என்றாள் குப்பு.

" கொண்டு வந்திருந்தால் சொல்லிக் கொள்ளவேண்டி யதுதான் " என்று இழுத்தாள் மாமியார்.

" இந்தக் காலத்திலே சீர் செனத்தியில்லாமே எந்த நாட்டுப்பெண்தான் வரா ? எந்த மாமியார்தான் கூட்டிக் கறா ?" என்றாள் கனகம்மாள்.

இதற்குமேல் ஆண்டாளம்மாளுக்குப் பொறுக்கமுடிய வில்லை. கூட, கனகம்மாள் நாட்டுப்பெண் பணக்காரவீட்டுப் பெண்; 'ரெட்டைச்சீர் எடுத்தவளாம்' என்று அந்தச் சபையில் புகழ்ச்சியாய்க் குறிப்பிடப்பட்டவள். ஆகவே தன் நாட்டுப்பெண்ணை, அவள் நாட்டுப்பெண்ணுடன் ஒப்பிட்டுப் பார்க்க ஆண்டாளம்மாளுக்குப் பொறுமைக் கனல் மூண்டது.

"காலத்துக் கேத்தாப்போல மனுஷியா நான்? அதோ பாருங்கோ. ஓர் அலமாரி புஸ்தகம், ஒரு கட்டுக் காயிதம், ஒரு பத்திரிகைக்கூளம், பேனு மைக்கூடு இதெல் லாந்தான் அவள் பொறந்தாத்துச் சீதனம். தாயாரில்லாத தகப்பன் செல்லம். கண்டிக்கிறவா யாரு அவளை? இல்லாமற் போனல் மாமியார் எதிரே அந்தப் பெண் அப்படிப் பேனு வும் கையுமா அவ்வளவு தைரியத்தோடே உட்கார்ந்திருக் குமா?" என்று ஆத்திரத்துடன் கர்ஜனை செய்தாள்.

சுலோசனவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. குடும்ப வாழ்க்கையில் அதுவே அவளது முதல் அத்தியாயம். பேனு வையும் காகிதத்தையும் அப்படியே வைத்துவிட்டு எழுந்து சமையலறைப் பக்கம் போனள்.

"அடுப்பங்கரையிலே கலப்பத்து நாறிக் கிடக்கறது. இங்கே பத்திரிகையாம் பத்திரிகை! அதுக்கு எழுத்து பலக்கறது."

மேலே கூறியது ஒரு நாள் கூட்டத்தில் நடந்தேறிய வம்பின் சிறு பகுதி. இந்த மாதிரியே பல நாட்கள்.

அன்றியும் வருகிறவர்கள் தங்கள் பெண்களைப் பற்றி யும், தங்கள் நாட்டுப்பெண்களின் குடும்ப நிர்வாகத் திறமை யைப் பற்றியும் புகழ்வதோடு நில்லாமல், சுலோசனவை மறைமுகமாகப் பரிகாசம் செய்யவும் ஆரம்பித்தனர்.

இதெல்லாம் ஒன்று கூடி ஆண்டாளம்மாளை முற்றும் ஒரு புது மனுஷியாக மாற்றிவிட்டது. ஏற்கனவே பெண்கள் படிப்பிலும், முன்னேற்றத்திலும் அவளுக்குக் கொஞ்சங்கூட நம்பிக்கை இல்லை. கூட, நாட்டுப்பெண்ணோ தன் கொள்கைக்கு முற்றும் மாறுபட்டவளாக அமைந்தது, தனது மதிப்புக்கே ஏதோ பங்கம் வந்துவிட்டதென்று நினைக்கும்படியிருந்தது அவளுக்கு.

கொஞ்சங் கொஞ்சமாகக் குடும்பத்தில், 'கசமுசல்' ஆரம்பமாயிற்று.

சுலோசனை இதையெல்லாம் பாராட்டவில்லை. கிருஷ்ணசாமி தன் தாய் எதிரில் மனைவிக்குச் சலுகை காட்டாதபோதிலும், தனிமையில் அவளது கலாஞானத்தைப் புகழ்ந்து பேசித் தட்டிக்கொடுத்து வந்தான்.

தினந்தோறும் குடும்ப வேலைகளின் இடைக்காலங்களில் அவகாசம் ஏற்படும்போதெல்லாம், சுலோசனை தன் முழுக் கவனத்தையும் எழுத்திலோ படிப்பிலோ செலுத்தி வந்தாள். ஒரு நாளாவது சாயங்காலத்தில் விளக்கேற்றி வைத்துவிட்டு லக்ஷ்மி, ஸரஸ்வதி படங்களின் முன்னிலையில் தனது வீணையை வாசித்துப் பாடாமற் போனால் அவளுக்கு அன்றிரவு தூக்கமே பிடிக்காது.

## 3

ஒருநாள் காலை, ஆண்டாளம்மாள் தெருத்திண்ணையில் உட்கார்ந்து கூடைக்காரியிடம் பேரம் பேசிக்கொண்டிருந்தாள். வாசலில் போகும் இரண்டு மனிதரின் சம்பாஷணை அவள் காதில் விழுந்தது.

"இந்த வீட்டில் ஒரு பெண் இருக்கிறது. தெரியுமா?"

"என்ன ஆச்சரியம்? வீட்டுக்கு வீடு பெண்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்."

"சே! அதல்லடா. பாட்டென்றால் பாட்டா! அருமையான ஞானம். ரொம்ப இனிமையான குரல்."

"அடே! எனக்குத் தெரியாதே; கச்சேரி செய்கிறதா?"

"அப்படியெல்லாம் இல்லை. தினமும் சாயந்தரம் வீணையுடன் பாடுகிறது. கேட்டவர்களுக்குத்தான் தெரியும் அந்த ருசி."

ஆண்டாளம்மாள் திடீரென்று தன் கையிலிருந்த காய் கறிகளைக் கூடையில் விசிறிப் போட்டுவிட்டுப் பேரம் பிடியாதவள்போல் முணுமுணுத்துக்கொண்டே உள்ளே எழுந்து போய்விட்டாள்.

சுலோசனாவைப்பற்றித் தெருவில் போகிறவர்கள் பேசுவது அவளுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

அவளது குயிலிசை போன்ற சங்கீதம், தெருத் திண்ணைமேல் தினமும் குறைந்தது பத்துப்பேராவது கொண்ட ரஸிகக் கூட்டத்தைச் சிருஷ்டி செய்துவிட்டது. ஆனால் இந்த விபரமெல்லாம் அவளுக்குத் தெரியாது. அவள் சங்கீத உலகத்தில் சஞ்சரிக்கும்போது, தனது ஆத்மாவை வீணைநரம்புகளிடம் பறிகொடுத்துப் பரவசமடைவாளே தவிர, வெளியுலக விவகாரங்கள் அந்தச் சமயத்தில் அவளுக்கு எட்டுவதில்லை.

தெருத்திண்ணையில் 'சபாஷ்' கொட்டிக் கொண்டிருக்கும் ரஸிகர்களின் குரல் ஆண்டாளம்மாளின் செவிகளில் ஈயத்தைக் காய்ச்சி வார்ப்பதுபோலப் பாயும். சில சமயங்களில் அவளது கோபம் அவர்கள்மேலும் பாய்ந்து பதறும்.

தவிர, நாள் தவறினாலும் சுலோசனாவுக்குப் பத்திரிகையோ பாராட்டுக் கடிதமோ வருவது தவறுவதில்லை. பல

எழுத்தாளர்களும் பிரமுகர்களும் அவள் எழுத்துக்களைச் சிலாகித்து எழுதிய கடிதங்கள் மலையாய்க் குவிந்தன.

"ஏண்டா, இது நன்னா யிருக்காடா உனக்கு? நான் சொன்னா, தொடச்சுப் போட்டுட்டு லக்ஷ்யமே செய்வதில்லே, உன் பெண்டாட்டி. நீயும் கேள்வி முறைமை யில்லாமே திரியறே; குடும்பஸ்திரீக்கு யோக்யதையா படிப்பும் பாட்டும்? ஊர் முழுக்க இவளைப்பத்தியா வார்த்தை?" என்று கூச்சலிட்டாள் ஆண்டாளம்மாள்.

கிருஷ்ணசாமி பேசாதிருந்தான். மௌனமே சிறந்த வழி யென்றிருந்தானோ என்னவோ!

ஆனால் அவன் தாய், சுலோசனாவைக் கண்டிக்கும்படி எச்சரிக்கும்போது மௌனம் சாதித்த கிருஷ்ணசாமி, தனிமையில் அவளது வித்தைக்குத் தாராளமாக ஊக்கமளிப்பதை மாத்திரம் நிறுத்தவில்லை.

எப்பொழுதாவது சுலோசனாவே தன் மாமியார் கண்டிப்பதைக் கண்டு கல்வியை நிறுத்திவிடத் தீர்மானித்தால், அப்படிச்செய்வது புத்தியீனமென்று மாத்திரம் சொல்லுவான்.

ஆனால் தன் தாயிடத்தில் அவளது கல்விச் சிறப்பைப் பற்றியாவது, பெண்கள் முன்னேற்றம், மூடக்கொள்கைகள், அடிமை நிலை, சமூக ஊழல்கள் முதலிய தற்கால ஆராய்ச்சி முறைகளைப்பற்றியாவது பேசி ஜயிக்க அவனுக்குப் போதிய தைரியம் இல்லை.

நாளடைவில் முன்னுக்கு இழுக்கும் எருது ஒன்று, பின்னுக்குத் தள்ளும் எருது ஒன்று பூட்டிய சகடத்தின் கதிக்கு வந்துவிட்டது அவனது வாழ்க்கை.

ஆனால் அந்தச் சங்கட வாழ்க்கையும் நிலைக்கவில்லை.

## 4

மூன்று வருஷங்கள் ஓடி மறைந்தன. கிருஷ்ணசாமி சுலோசனையைப் பிறந்தகத்திற்கு அனுப்பும்போது, கூடிய சீக்கிரத்தில் தன் தாயைச் சரிப்படுத்தி விட்டு அவளை மறுபடியும் அழைத்துக்கொள்ளுவதாகச் சொல்லித்தான் அனுப்பினான்.

ஆனால் சுமார் ஆறு மாத காலமாக அவனிடமிருந்து அவளுக்குக் கடிதம் வருவதும் நின்றுபோயிற்று. அவளுக்கு அதுவரையில் வரும் கடிதங்களிலெல்லாம் அவளது வித்தையை உற்சாகப்படுத்தும் வாக்கியங்களும் சொற்களும் அபரிமிதமாக மிளிர்ந்தன. ஆகையால் கணவன் அருகில் இல்லாதபோதிலும், அவன் உத்தரவென்று சுலோசனா தனது கலையை மிகவும் சிரத்தையாகப் போஷித்துவந்தாள்.

சில நாட்களாக அவனிடமிருந்து கடிதம் கிடைக்காதது அவளுக்கு ஏதோ விரஸமாகத் தோன்றியது. ஒருகால் தன்னிடம் கொண்ட அவனது ஆவல் குறைந்துவிட்டதோ என்றுகூடக் கலங்கினாள்.

கிருஷ்ணசாமிக்கு அவன் தாயால் வெகுவிதத் தொல்லை ஏற்படத் தொடங்கியது. கொஞ்சங் கொஞ்சமாக முயன்று, ஆண்டாளம்மாள், கடந்த ஆறு மாதமாக இடைவிடாமல் அவனது மறு விவாகத்தைப்பற்றியே பேசி அவன் மனத்தைக் கலைக்கப் பார்த்தாள். தான் திருப்தியடைந்த ஒரு விவாகத்தில் தனது தாயைத் திருப்திசெய்விக்க முடியாத கிருஷ்ணசாமிக்கு மறு விவாகம் என்பது வேப்பங்காயாய்க் கசந்தது.

எதிர்த்துப் பேசாதபோதிலும், அவன் மனம் தனது பக்கத்தில் இருக்கவேண்டிய பெண்ணை விலகத் தள்ளி வைத்து, அந்த ஸ்தானத்திற்கு மற்றொரு பெண்ணைக்

கொண்டு வந்து வைத்து வாழ்க்கை நடத்துவதற்கு இடம் கொடுக்க மறுத்துவிட்டது. மேலும், வரப்போகும் புதிய வாழ்க்கையின் இனிய நாட்களுடன், வேறொரு பெண்ணினுடைய இன்ப காலத்தையும், அதே சமயத்தில் அதற்கு முதன்மையான பாக்கியதையும் சுதந்திரமும் ஏற்கனவே பெற்றிருக்கும் ஒரு பெண்ணுடைய துன்ப நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்க அவனது நெஞ்சில் ஓர் ஆவேசம் கிளம்பியது. அந்த ஆவேசம் முற்றிப் பழுத்து அவனுக்கு அதற்கு முன் இல்லாத புதிய சக்தியையும் அளித்தது.

சிறிது சிறிதாகத் தன் தாயின் வார்த்தைகளில் குறுக்கிடவும் தலைப்பட்டான். முடிவில் ஒருநாள் மறுவிவாகம் என்பது அசாத்திய மென்றும், இனி அதைப்பற்றி அவள் பேச வேண்டியதில்லையென்றும் கண்டிப்பாய்க் கூறிவிட்டான்.

ஆண்டாளம்மாள் திடுக்கிட்டுப் போனாள். ஒரு நாளும் தட்டிப் பேசாத புத்திரனது குரலில் தொனித்த தீரம் அவளைத் தத்தளித்துத் தயங்கச் செய்தது. அன்று முதல் அவளிடமும் சில மாறுதல்கள் தென்பட்டன.

ஆனால் கிருஷ்ணசாமிக்குச் சுலோசனவைப்பற்றிப் பேச மாத்திரம் இன்னும் தைரியமில்லை. இந்த நிலைமையில் அலைபாயும் அவன் மனம் சுலோசனவுக்குக் கடிதம் எழுதுவதையும் நிறுத்திவிட்டது.

இந்த ஆறு மாத காலமாகச் சுலோசனவின் ஊக்கமும் குறைய ஆரம்பித்தது. அவளது கற்பனு சக்தியும் தடைப்பட்டது.

ஒரு நாள் மாலை கட்டாயமாகத் தான் எழுதி முடிக்க வேண்டிய ஒரு கட்டுரையைப்பற்றி யோசித்துக்கொண்டே வாசற்பக்கம் ஜன்னலருகே அவள் உட்கார்ந்திருந்தாள். எழுத்தும் யோசனையும் ஓடவில்லை. ஊர்ப் பெண்களில் சிலர் குடங்களை எடுத்துக்கொண்டு தெருவில் பேசிக்

கொண்டே சென்றார்கள். அவர்கள் பேச்சு அவளை வசப் படுத்தியது.

“என்னவோ? யார் கண்டா? தப்பில்லாமற் போனா ஏன் தள்ளி வைக்கணும்?”

“எத்தனை பேர் எழுதல்லே? படிக்கல்லே? இதுவா ஒரு தப்பு!”

“உள் மர்மம் யாருக்குத் தெரியும்? படிப்பாம், பாட்டாம்! யார் யாரோ வராளாம், போறாளாம். அவளைப் பத்தி ரொம்ப லிலாக்கியமாக்கூடப் பேசிக்கொள்கிறாளாம். இந்த மாதிரி நாட்டுப்பெண்ணை வச்சுண்டு எந்த மாமியார்தான் கொட்டுவா?”

“அவளாம்படையான்தான் ஒண்ணும் சொல்றதில்லை யாமே? அவன் கொடுத்த இடந்தானும் இதெல்லாம்.”

“அதெல்லாம் மலையேறிப் போச்சு. மூணு வருஷமாச்சே அவளைத் தள்ளி வச்சு. புருஷன்தானே அவன்! வேறு கல்யாணங்கூட நிச்சயமாய்விட்டதாம்.”

சுலோசனா புழுத் துடிப்பதுபோல் துடித்தாள். அதற்குமேல் அந்தச் சம்பாஷணையைக் கேட்க அவள் விரும்பவில்லை. ஓடி மறைந்தாள்.

## 5

“ஏண்டி ஜயா, பள்ளிக்கூடத்திலேருந்து இப்பத்தான் வரையா? கொஞ்சம் இங்கே வந்துட்டுப் போ” என்றாள் வாசற்படியில் நின்ற ஆண்டாளம்மாள்.

ஜயா புஸ்தகமும் கையுமாய் உள்ளே நுழைந்தாள்.

“ஒரு நாளும் இல்லாமே என் பேருக்கு இன்னிக்கு ஒரு கடுதாசு வந்திருக்கு. எனக்கென்ன படிக்கவா தெரியும்? கொஞ்சம் வாசிச்சுச் சொல்லு. என் பிள்ளை சாயந்தரந்தான்

"உங்க நாட்டுப் பெண் இருந்தா சௌகரியமாயிருக்குமோன்னோ?" என்று கிண்டலாகச் சொல்லிச் சிரித்தாள் ஜயா என்னும் சிறுமி.

ஆண்டாளம்மாள் வார்த்தையை நிறுத்திக்கொண்டு மடியிலிருந்த ஒரு கடித உறையை எடுத்து ஜயாவிடம் கொடுத்தாள்.

மங்கலம்,
22—7—35

அன்புமிக்க மாமியவர்களின் பாத கமலங்களுக்கு நமஸ்காரம். இந்த மூன்று வருஷ காலமாக எனக்கு விமோசனம் ஏற்படுமென்று நம்பி நம்பிக் காலங் கழித்தேன். வாழ்க்கையையும் கல்வியையும் அலசி அலசிப் பார்த்ததில், என் வரையில் கால தேச வர்த்தமானங்களுக் கேற்றபடிதான் கல்வி சோபிதமடையும் என்ற உண்மை என் உள்ளத்தில் வேரூன்றிப் பதிந்துவிட்டது.

துணிந்து இதை எழுதுகிறேன். இன்று முதல் நான் ஒரு புதுப் பெண்; அதாவது பழைய காலத்துப் பெண். இந்தக் கடிதத்தின் கடைசியில் போடும் கையெழுத்தே என் கடைசிக் கையெழுத்து. அதற்குப் பிறகு நான் ஒரு கிறல் பேர்வழிதான் என்பதை நீங்கள் உறுதியாக நம்பலாம்.

எனது குடும்ப வாழ்க்கைக்காக என் பாட்டையும் படிப்பையும் முழுத் தியாகம் செய்கிறேன். கருணைகூர்ந்து என்னை அழைத்துக்கொள்ளப் பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு,
என் வாழ்க்கையின் தெய்வமாக
உங்களையே நம்பியிருக்கும் அடியாள்,
சுலோசனை

உண்மையிலேயே ஆண்டாளம்மாள் மனம் கரைந்து போயிற்று. கிருஷ்ணசாமி வேறு கல்யாணம் செய்துகொள்ள

மறுக்கும் பிடிவாதம் வேறு அவளது மனசில் ஊன்றிப் போய்விட்டது. அவனது தனித்த வாழ்க்கையின் பரிதாபம் அவளது தாயுள்ளத்தில் முள்போல் தைத்தது.

சில நாட்களில் ஐயாவின் கையெழுத்து மூலமாகவே சுலோசனாவுக்கு விமோசனக் கடிதமும் போய்ச் சேர்ந்தது.

அதிகாலை மணி மூன்று.

சுலோசனா எழுந்து வெந்நீர் அடுப்பை மூட்டினாள். வெந்நீர் அறையின் ஒரு பக்கமாக ஓர் அலமாரியும் அதனருகில் ஒரு நீண்ட பெட்டியும் இருந்தன. அடுப்புத் தீப் பற்றிக்கொண்டது.

பெட்டியைத் திறந்தாள். அதிலிருந்த வீணையைக் கையில் எடுத்தாள். உலகமே மௌன மயமாயிருந்தது. அவள் முகத்தில் ஒரு புதிய சோபை தெரிந்தது. கல்வியால் உண்டானதல்ல; வேறு ஒரு ஜொலிப்பு.

ஒரு நிமிஷம் நின்று கைகூப்பி வணங்கினாள். அவள் முகம் அஸாதாரணமான உழைப்பின் பிறகு குருவிடம் உத்தரவு பெற்ற சிடனின் அமைதியையும் திருப்தியையும் தோற்றுவித்தது. வீணையை இரண்டாக முறித்தாள். இரண்டு துண்டுகளும் அடுப்பில் விறகுக்குப் பதிலாகப் புகுந்தன.

அவள் நெஞ்சை இரண்டாகப் பிளந்ததுபோல ஒரு வேதனை கண்டது.

சில நிமிஷங்கள் சென்றன. வீணை மறைந்தது. அலமாரியைத் திறந்தாள். ஒவ்வொரு புஸ்தகமாக எடுத்து நெருப்பில் இடத் தொடங்கினாள். காகிதம் எரியும் வாசனை குபீரென்று கிளம்பியது. ராமையங்கார் கண்விழித்துக்கொண்டார். ஏதோ தீப்பற்றிக்கொண்டதென்று அலறிக்கொண்டு வாசனை வந்த திக்கை நோக்கி ஓடிவந்தார்.

சுலோசனாவின் செயலைக் கண்டு ஸ்தம்பித்து நின்று போனார். சுலோசனா அவரிடம் அப்பொழுது ஒன்றும் பேச

வில்லை. ஆனால் மாமியார் எழுதிய கடிதத்தை எடுத்து அவரிடம் சேர்ப்பித்தாள். அதை அவர் படித்து முடித்து விட்டு அவளை உற்று நோக்கினார். அவளது தோற்றம் லோகமாதாவைப்போல் இருந்தது அவருக்கு. மறு விநாடி மௌனமாகவே அந்த இடத்தை விட்டு மெல்ல நீங்கினார். பின்னும் பல நிமிஷங்கள் சென்றன. புஸ்தகங்களும், பத்திரிகைகளும் அக்கினியில் மாய்ந்து மறைந்தன. அந்த ஹோமத் தீயில் ஜலம் நன்றாய்க் காய்ந்து பரிசுத்தமடைந்தது. அழகிய மஞ்சளைப் பூசி, அந்தப் புனித நீரில் அவள் குளித்தாள். அவளது மனத்துக்குள்ளேயே புதிய மகிழ்ச்சி தோன்றியது.

## 6

"ஏண்டி சுலோசனா! உன் பேருக்கு ஏதோ 'செக்' வந்திருக்காம்; நூறு ரூபாயாம்; மூணு மாசத்துக்கு முன்னே ஏதோ கதைப் போட்டியிலே ஜயிச்சதாமே; அதை வாங்கிக் கொள்ள நீதான் கையெழுத்துப் போடணுமாமே. இந்தா, இந்தப் புஸ்தகத்திலே ஒரு கையெழுத்துப் போடு" என்றாள் ஆண்டாளம்மாள்.

"எனக்கு எழுதப் படிக்கத் தெரியாதே" என்றாள் சுலோசனா.

"ஆனா நான் எழுதின கடுதாசியைப் படிச்சுட்டுத்தானே வந்தே?"

"இல்லை, பக்கத்து வீட்டுப் பையன் படித்தான்."

மாடிப்படிகளில் நின்றிருந்த கிருஷ்ணசாமியின் கண்களில் நீர் ததும்பியது. சூரிய வெளிச்சத்தில் அந்தக் கண்ணீரில் அவனது சீர்திருத்தக் கொள்கையின் பல வர்ணங்கள் பளபளவென்று பிரகாசித்தன.

"அடி அசடே! போதும் பிடிவாதம்; நூறு ரூபாயை வாங்க ஒரு கையெழுத்துப் போட்டால் என்ன?

இனிமேல் வேண்டுமானு எழுதவேண்டாம்" என்றாள் மாமியார்.

"இல்லே மாமி. அந்தச் சுலோசனு வேறு, நான் வேறு. இது அவளுடைய மறுஜன்மம் என்று வைத்துக்கொள்ளுங்களேன்" என்று சொல்லிச் சிரித்தாள் சுலோசனு.

மாமியார் மேலே ஒன்றும் பேசவில்லே.

ஆனல் கிருஷ்ணசாமியின் கண்களில் தேங்கியிருந்த வர்ணமயமான கண்ணீர் இரண்டு துளிகளாக உதிர்ந்து மறைந்தது!




# மஞ்சள் விரட்டு

[கோத்தமங்கலம் சுப்பிரமணியம்]

## 1

"ஆதீனங் காத்தாரா? அனுதினங் காத்தாரா?" என் பதில்தான் தாவா. மாமரப்பட்டி தெற்குக் கோடியிலிருக்கும் கோவிலில் குடிகொண்ட ஐயனாரின் பெயரைப்பற்றித்தான் குறிப்பிடுகிறேன். சென்ற நூறு வருஷ சரித்திரத்தைக் கிழவர்களிடம் கேட்டு ஆராய்ந்து பார்த்தும், அந்த ஊர் ஓர் ஆதீனத்திலும் உட்பட்டிருந்ததாகத் தெரியவில்லை. அனுதினங் காத்தார்தான் என்று நிச்சயிக்கப் புகுந்தாலோ, ஊரில் ஒரு நாளாவது கலகம் நடைபெறாமல் இருந்ததில்லை! இவர் காவல் திருப்திகரமாயில்லை! இந்தச் சந்தேகம் எப்படியிருந்தாலும் எங்கள் ஊரில் ஓர் ஐயனார் கோவில் உண்டு என்பதும், அவர் பொதுஜனத் தொடர்பு உள்ளவர் என்பதும் நிச்சயம்.

பொதுவாகக் கவனித்தால் இந்த ஊராரும் ஜனங்கள் தாம்; ஒற்றுமை இல்லாத ஜனங்கள். ஊரில் மொத்தம் 400 வீடுகள் உண்டு. இதில் 100 வீட்டில் விதவைகளே வசிக்கிறார்கள். இவர்கள் கணவர்கள் யுத்தத்தில் இறந்தவர்கள். ஆனால், மகாயுத்தத்தில் அல்ல; அந்த ஊர்க் கலகங்களில் காலாவதியானார்கள். ஒவ்வொரு வீட்டுக்காரனுக்கும் சொத்து மதிப்புச் சராசரி ஒரு மா நிலமும், ஓரணை மாடும், 120 ரூபாய் கடனும் உண்டு.

அந்த வருஷந்தான் பொன்னுச்சாமி ரங்கூனிலிருந்து வந்தான். பொன்னுச்சாமி, காலஞ்சென்ற குப்பமுத்தா பிள்ளையின் மகன். அவன் ரங்கூனுக்குச் சென்று 18 வருஷங்கள் ஆகிவிட்டன. மொகல் தெருவில் தோசை விற்றும், கப்பலில் டோரியாம் பழம் விற்றும், காக்கா கடையில் சாயா ஆற்றியும், எப்படியோ கொஞ்சம் பணம் சேர்த்துக்கொண்டு இந்த வருஷம் ஊருக்கு வந்துவிட்டான்.

கிட்டத்தட்ட 400 வீடுகளில் 150 வீடு அகமுடையவர்கள் (அகம்படியர்கள்). இவர்களுக்குப் பிள்ளை என்ற பட்டப் பெயர் உண்டு. 150 வீடு மறவர்கள்; 100 வீடு மற்றவர்கள். மறவர்களுக்குத் தேவர்களென்று பட்டப் பெயர். தேவர்களுக்கும் பிள்ளைமார்களுக்கும் எப்பொழுதுமே ஒத்துக்கொள்வதில்லை. எதற்கெடுத்தாலும் சண்டை. ஒவ்வொருவருக்கும் தங்கள் ஜாதியாரே பெரியவர்களென்ற அபிப்பிராயம். பிள்ளை கழியெடுத்தால், தேவன் மண்வெட்டி எடுப்பான். தேவன் அரிவாளை எடுத்தால், பிள்ளை துப்பாக்கி எடுப்பான். இது இன்று நேற்றல்ல; பல காலமாக இப்படியே நடந்துவருகிறது. இந்த இரண்டு வகுப்புக்களுக்கும் பொதுவாகக் கவனிக்கவேண்டிய சில காரியங்களும் உண்டு.

கறுப்பர் கோவில் திருவிழா, மாரியம்மன் தேர், மடையடிப் பூசை, வாரி அடைப்பு, கண்மாய்க்குக் கரை போடுவது, ஐயனார் கோவில் பூசை, மஞ்சள் விரட்டு, இரணிய நாடகக் கூத்து, மஹேசுவர பூசை - இவைகள் ஊர்ப் பொதுக் காரியங்கள். இன்னும் வருஷம் வருஷம் ஊரின் நாட்டாமையை, முறையே தேவர்கள் ஒரு வருஷமும் பிள்ளைகள் ஒரு வருஷமும் பார்ப்பது வழக்கம்.

நாட்டாமையின் வகுப்பாருக்குத் தலைவரி வசூல் செய்வது (தலைவரி என்றால், ஓர் ஆளுக்குக் கால் ரூபாயும் குறுணி

செல்லும் கிராமகாரியங்களுக்குக் கொடுப்பது), ஐயனூர் கோவில் மகேஹசுவர பூசையின்போது சமைப்பது, ஐயனூருக்கு மண்டபப்படி செய்வது, மஞ்சள் விரட்டுக்கு வரும் ஆயிரக்கணக்கான மாடுகளுக்கு வேட்டி வாங்கிக் கொடுப்பது, கூத்துக்கு ஏற்பாடுசெய்து நடக்கச்செய்வது - இவைகள் வேலை.

எதிர்க் கக்ஷியாருக்கோ (அசெம்பிளி மாதிரியல்ல!) சுற்றுப்புறத்து ஊர்களுக்குப் பாக்குவைப்பது, பெரிய மாட்டுக்காரர்களுக்கு அழைப்பு அனுப்புவது, வடித்து வைத்த சாதத்தை வட்டிப்பது, வாங்கி வைத்திருக்கும் வேட்டியைக் கொடுப்பது, கூத்துக் கொட்டகையில் கலவரங்களில்லாமல் பார்ப்பது - இவைகள் வேலை.

நாட்டாமைக்கு மரியாதைக்காகப் பரிவட்டமும் எதிர்க் கக்ஷி மரியாதைக்கு மகேஹசுவர பூசையின் விபூதியும் தரப்படும். இது 15 வருஷமாய்ப் பக்கத்து ஊராரின் பஞ்சாயத்துப்படி நடந்துவரும் வழக்கம்.

திடீரென்று அகம்படியர் வகுப்பில் ஒரு பையன் பணக்காரனாக வந்ததில் தேவர்களது வகுப்புக்கு வயிற்றெரிச்சல். ஒவ்வொரு தேவனுக்கும் பொறுமை ஏற்பட்டது. பிள்ளைகள் வகுப்பாருக்கும் உள்ளூற வயிற்றெரிச்சலா யிருந்தாலும், பணக்காரனாக வந்தவன் ஓர் அகம்படியன் என்ற முறையில் சந்தோஷமே. பொன்னுச்சாமிக்கோ தன் ஊர்மண்ணில் கால்வைத்ததில் ஏராளமான சந்தோஷம்.

மொத்தத்தில் தேவர்களது மண்டையில் ஆக்ரோஷமும், அகம்படியர்கள் மண்டையில் அகம்பாவமும் ஆரோகணித்தன. தேவர்களின் கூட்டத்தலைவனான கறுப்பண்ணத்தேவன், பொன்னுச்சாமியின் செல்வத்தையும் அகம்படியர்களின் அகம்பாவத்தையும் கண்டு நெஞ்சம் புழுங்கினான்.

கறுப்பண்ணத் தேவனுக்கு வயது அறுபது இருக்கும். குப்பமுத்தா பிள்ளைக்குப் பிறகு கறுப்பண்ணத்தேவனுக்கு அந்தக் கிராமத்தில் செல்வாக்கு அதிகப்பட்டிருந்தது. ஊரில் நடக்கும் எந்தக் கலகத்துக்கும் அவன்தான் பிறப்பிடம்!

ஒரு தடவை அவனுடைய கை வரிசையை ஒரு குடும்பத்தில் காட்டவே, அந்த வீட்டு மறப்பெண் அவனுடைய கையை ஒரு மரத்தில் வைத்து விரல்களை வெட்டிவிட்டாள். அன்றுதான் அவனுக்கு மொண்ணையனென்று நாமகரணம் ஆயிற்று.

கறுப்பண்ணத் தேவன் குடிகாரன்தான். அதிக வயதாகிவிட்டதால் உடம்பு சௌகரியத்துக்காக இப்பொழுது இரண்டுவேளை குடிக்கிறானும். இதற்கு அதிகமான சமயமும் உண்டு. இருந்தாலும் இரண்டு வேளைதான்; கண்டிப்பு.

பிள்ளைமார் வகுப்பில் பெரியமனிதன் இல்லாததால் சென்ற 18 வருஷங்களாக அந்த ஊருக்குக் கறுப்பண்ணத் தேவன் இட்டதே சட்டமாக இருந்தது. ஊருக்கு எவன் நாட்டாமையாக வந்தாலும் அவன் மொண்ணையன் நாட்டாமைக்கு அடங்கித்தான் நடக்கவேண்டும்.

இப்படியிருக்க, வெகுநாள் கழித்து வந்த பொன்னுச்சாமி அவ்வளவு கோவில்களுக்கும் 'வௌைப்பு' விட்டான். பள்ளையம் போட்டான். அனுமாருக்கு வடைமாலை சாத்தினான். ஐயன் கோவிலுக்கும் நாள் பார்த்துப் பூசை போட்டான். இரண்டு மாதகாலம் ஓயாமல் இந்த வேலைகளே அவனுக்குச் சரியாக இருந்தது.

தைப்பூசமும் வந்தது. வழக்கம்போல் நாட்டாமையானது, தேவர்கள் வசமிருந்து அகம்படியார்களுக்கு மாறிற்று. அகம்படியர்கள் சந்தோஷப்பட்டு நாட்டாமையைப் பொன்னுச்சாமியின் பார்வையில் ஒப்பித்தார்கள்.

ஊரார் எல்லோரும் பிள்ளையார் மடத்தில்* கூடியிருந்தார்கள். பொன்னுச்சாமி தலையில் முண்டாசு கட்டிக்கொண்டான். இது கறுப்பண்ணத் தேவனுக்குத் தன் தலையில் நெருப்பை அள்ளிவைத்தது போலிருந்தது!

பொன்னுச்சாமி, பிள்ளையார் படத்தையும் ஊராரையும் மண்ணிலே விழுந்து கும்பிட்டுவிட்டு நாட்டாமையை ஏற்றுக்கொண்டான். ஊர்ச் சுவடியில் பொன்னுச்சாமி நாட்டாமைக்காரனாகப் பதிவுசெய்யப்பட்டான்.

கறுப்பண்ணத் தேவன் ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி ஊரில் ஒரு கலகம் உண்டாக்கிவிட வேண்டுமென்று மனத்தில் பதிவு செய்துகொண்டான். மறுநாளைக் கெல்லாம் பொன்னுச்சாமி தன் கைப்பணத்தில் முப்பதுரூபாய் போட்டுப் பிள்ளையார் மடத்துக் கூரையைப் பிரித்துக் கட்டிக் கீழே

---

* ஊரார்கள் பொதுவாகக் கூடிப் பேசுவதற்கு ஏற்பட்ட இடம் பிள்ளையார் மடம். இது ஊராரின் பொதுச்சொத்து. இங்கே முன்காலங்களில் நியாயங்கள்கூட வழங்கப்பட்டதாகப் பிரஸ்தாபம்.

எந்தப் பொதுக் காரியத்திற்கும் இங்கே கூட்டம் கூடி முடிவு கட்டிய பின்தான் காரியம் பார்ப்பது வழக்கம். கோயில்களையும் விட அதிகமான மதிப்பு இந்தக் கட்டிடத்துக்கு உண்டு.

காலில் செருப்புப் போட்டவனும், தோளில் 'வல்லவாட்டுப்' போட்டவனும், வாயில் புகை விடுபவனும், குதிரை யேற்றக் காரனும் இதன் வாயில் வழியாகச் செல்லவே மாட்டான். இது பதினைந்து வருஷங்களுக்கு முந்திய சங்கதி.

இப்போதோ இந்தப் புனித க்ஷேத்திரம் நாட்டாமைக் காரர்களுக்கும், சில சோம்பேறிகளுக்கும், பதினஞ்சாம் புள்ளி ஆடுவதற்கும், சுருட்டுக் குடிப்பதற்கும், காலித்தனமான ரகசியங்களைப் பேசுவதற்கும், பகலில் தூங்குவதற்கும், நிறையக் குடித்து விட்டு வந்து மறைந்து படுப்பதற்கும் இடமாக விளங்கிற்று.

சிமெண்டுத் தளவரிசை போட்டான். இதில் மிஞ்சியிருந்த சாமான்களைக்கொண்டு கூத்துக் கொட்டகையையும் 'ரிப்பேர்' பார்த்தான். இத்துடன் விடவில்லை. பிள்ளையார் மடத்தைச் சுற்றிப் பட்டியல் அடைப்பு அடைத்துப் பூட்டுப் போட்டுப் பூட்டிவிட்டான்.

கறுப்பண்ணத் தேவன் வகையாருக்கு இந்த அபி விருத்திகளைக் காணும்போது ஆத்திரம் பெருகிற்று. பொதுச் சொத்தைப் பொன்னுச்சாமி சுயாதீனப்படுத்துவதாகப் புகார் செய்தார்கள். இதற்குப் பதில் பொன்னுச்சாமி என்ன செய்தான் தெரியுமா? பௌர்ணமிதோறும் அங்கே பொதுக் கூட்டம் கூடுவதாகத் தமுக்குப்போடச்செய்து பொன்னம்பல ஓதுவாரைக் கூப்பிட்டுத் தினசரி பாரதம் வாசிக்கும்படியும் ஏற்பாடு செய்தான்.

ஒருநாள் ஊர்க் கூட்டம் கூடியது. அந்தக் கூட்டத் துக்குக் கறுப்பண்ணத்தேவன் வரவில்லை. ஊர் முறைப்படி பொன்னுச்சாமி காவற்காரனை விட்டு எல்லோரையும்போல் அவனையுந்தான் கூப்பிடச் சொல்லியிருந்தான்.

ஆனால் கறுப்பண்ணத்தேவனுக்குப் பொன்னுச்சாமி நேரில் வந்து கூப்பிடாதது சிரமமாக இருந்தது. கூட்டம் முடியப்போகும் தருணத்தில் கறுப்பண்ணத்தேவன் குடி வெறியால் ஆடி விழுந்துகொண்டு கூட்டத்திற்கு வந்தான். வந்த வரத்தில் கறுப்பண்ணத் தேவன், "என்னடா, பசகள் கூட்டம்? குளுவச்செடி இலைவிட்டாப்பலே பத்துப் பயகளாகக் கூடிக்கிட்டு? எவண்டா கறுப்பண்ணனில்லாமல் கூட்டம் போட்டது?" என்று மீசையை முறுக்கினான்.

பொன்னுச்சாமி: வாங்க தேவரே. ஊரார் கூட்டம் போட்டிருக்காக. உங்களையும் காவல்காரன் வந்து கூப்பிட் டிருப்பான். நீங்க வல்லே. அதுக்காகக் கூட்டத்தை நிறுத்த முடியுமா?

கறுப்: எவன்டா ஊரான்? ஊரிலே ஒரு பெரியான் பெருந்தலே கிடையாதா? ஏண்டா, என்ன? தடி எடுத்த பயல் எல்லாம் தண்டக்காரஞ?

பொன்னு: இல்லே; ஊர் பார்த்து வச்சவன் நாட்டாமைக்காரன். கூட்டத்தைக் கூட்டிஞன். ஐயர் வற வரைக்கும் அமாவாசை காத்திருக்கணும்னு அஞஷியமில்லே.

கறுப்: எவன்டா எதுத்தெதுத்துப் பேசறவன்? அவனுக்கு ஈரல்லே பித்தா? எலும்பிலே பித்தாடா? நான் இல்லாமே கூட்டம் போடக் கறுப்பண்ணனுக்கு எதிரி பண்ணறவன், அவன் வாயிலே அரிசி அள்ளிப் போட்டுக்கிட்டு வரணும்டா.

பொன்னு: உத்சு, நிறுத்து தேவரே, பொன்னுச் சாமிக்கு மருவாதி கொடுக்காட்டிப் போவுது; ஊர் நாட்டாமைக்கி மருவாதெ கொடு.

கறுப்: என்னடா நாட்டாமே? நாங்க பாத்து வச்ச கழுதை எங்க காலேயே கடிக்கிதோ?

பொன்னு: தேவரே, தள்ளி நில்லு! மூஞ்சிலே உதையப் போகுது.

கறுப்: அட பலெ! தண்ணிமேலே போனதுலே தலே கிறுத்துப் போச்சோ? எழுந்து வாடா எதிரே.

பொன்னுச்சாமி கப்பலில் போய் வந்ததை நினைத்துக் கறுப்பண்ணன் இதைச் சொன்ஞன். இருந்தாலும் ஜனங்கள் சிரித்துவிட்டார்கள். மொண்ணையத்தேவன் குடி வெறியால்தான் இப்படிப் பேசுகிருன் என்பது அவர்கள் அறிந்த விஷயம்.

தேவர்கள் கூட்டத்தில் ராக்கன் ஒரு துடிப்பான பயல். மெள்ள, “ஐயனுக்கு ஒரு புட்டி அதிகம்போலே இருக்கு” என்று சொல்லிச் சிரித்தான்.

கறுப்: "ஏண்டா பசங்களா! உங்க நாட்டாமைக்கார நாயிக்கு முன்னாலே சிரிச்சுக் குறைப்பாட்டிறியளோ? ஊர் நல்லா வந்திரும், விளையாட்டுப் பிள்ளைகள் தட்டைக்காடு காத்தாப்பலே!" இவ்வாறு சொல்லிக் கூட்டத்தினரை ஏற இறங்க ஒரு பார்வை பார்த்து மீசையை முறுக்கி வேட்டியைத் தூக்கிக் கச்சம் கட்டினான்.

இதற்குமேல் பொறுத்துக்கொண்டிருப்பது விபரீதமாக வரும் என்று பொன்னுச்சாமிக்குத் தோன்றியது. அதற்குள் பிள்ளை வகுப்பாரில் ஒருவன் எழுந்து, "என்ன மொண்ணை யண்ணே! கடக்குது கடக்குதுன்னு பாத்தா ரொம்ப மேலே போறியே" என்றான்.

பொன்னுச்சாமி அவனைக் கை அமர்த்திவிட்டுக் கூறினான்.

"ஊருக்கு ஒரு வார்த்தை. நாட்டாமையை நான் கேட்டு நீங்க தல்லே. ஊரார் பிரியப்பட்டுக் குடுத்தது. எனக்கு வருகிற மானம் மருவாதை, ரோக்கிதை சாக்கிதை எல்லாம் ஊரைச் சேர்ந்தது. மொண்ணையத் தேவன் பேசின பேப்படியெல்லாம், ஊரு கேக்கல்லியா? ஊர் அவனுக்குப் புத்தி சொல்லுமா? இல்லை, நான் சொல்லிக்கவா?" என்று கூறி நாலு பக்கமும் திரும்பிக் கோபத்தைக் கக்கிக்கொண்டு மொழிந்தான்.

ஊரார் பதில் சொல்லவில்லை. கிணற்றில் போட்ட கல்லுப்போல் உட்கார்ந்திருந்தார்கள்.

கறுப்பண்ணத்தேவன் இன்னம் கொஞ்சம் கடுமையில் ஆரம்பித்தான்.

"அடியம்மா! குங்குமஞ் சொமக்கிற கழுதை கும்பிடு கேக்குதோ? ஊர் காலிலே விழுகாதடி; ஊர் வந்து வேச வச்சுப் பிடாது!" என்று கட கட கட வென்று சிரித்தான்.

இதற்காவது ஊர் பதில் சொல்லிற்றா? இல்லை; பொன்னுச்சாமியை ஒருபுறத்தில் மரியாதையும், ஒருபுறத்திற் கட்டுப்பாடும் துன்புறுத்தின. மறுபடியும் ஊராரைப் பார்த்தான்; “இது ஊராருக்கு நாயந்தானா? நீங்க கேக்கமாட்டீங்கன்னு இந்த மட்டோடே தெரிஞ்சுகிட்டா நான் பாத்துக்கறேன்” என்றான் பொன்னுச்சாமி.

“கையிலே மூளையிருந்தா கம்பு எடுத்துக்கிட்டு வாடா” என்றான் கறுப்பண்ணன்.

பொன்னுச்சாமி, சரேலென்று கொட்டகையின் பரணியின்மேல் போட்டிருந்த சில அளவுகோலை எடுத்துக்கொண்டு கூட்டத்தை விட்டுக் கறுப்பண்ணனை நோக்கிப் பாய்ந்தான். எல்லோரும் எழுந்து அவனைப் பிடித்துக்கொண்டார்கள்.

பொன்னுச்சாமி, “என்னை விடுங்கண்ணே! அந்தக் குப்பை மோட்டுக் கழுதை என்னைக் குங்குமம் சுமந்த கழுதைன்னு கேக்குது; என்ன அம்பிட்டு ஆணவம் - விடுங்க - உண்டு இல்லேன்னு பாத்துப்பிடுவம்” என்று கட்டுக்குள் அடங்காத புலிபோல் திமிறினான்.

கறுப்பண்ணத் தேவனுக்கு உடம்பு வெட வெடத்தது. எதிரே நின்று சண்டை செய்து அவனுக்குப் பழக்கமில்லை. கனைத்துக்கொண்டு, “விட்டுடுங்கடா; அவன் என்னைக் கொல்லட்டும்; பெரிய மனுசங்கிற மரியாதை ஊரிலே இல்லாதபோது இந்த உசுரு என்னத்துக்கு? விட்டுடுங்க அவனை” என்றான். இதற்குள் கூடியிருந்தவர்கள் சமாதானம் செய்து பார்த்தார்கள்.

பொன்னு: கெஞ்சினா மிஞ்சறது, மிஞ்சினாக் கெஞ்சறது இது கறுப்பண்ணத்தேவன் வளக்கமோ?

கறுப்பன், “இந்தக் கையிலே கம்பு எடுக்கணும்னு அதுக்கு நீயா ஆள்?” என்று விரலில்லாத தனது இடது கையைத் தூக்கிக் காட்டினான்; “அப்படி ரோசமிருந்தா

ஆம்பிளை மகனாயிருந்தா, முதல்லே என் மயிலைக் காளையைப் பிடிக்கட்டுமடா; அப்பறம் எங்கிட்ட வரட்டும்" என்றான்.

இதற்குள் எல்லாரும் சமாதானம் செய்து கறுப்பண்ணைத் தேவனை அரச மரத்தடியில் கொண்டுபோய்ப் படுக்க வைத்தார்கள்.

ராக்கன் :—மயிலைக்காளையைப் பிடிச்சா, உன் மகளை....

கறுப்ப :—அது அப்பறமில்ல. மாடு வாங்கின பெற கல்ல தயிரு விக்கிற யோசனை.

ராக்கன் :— நீ உனக்குப் பதிலா மாட்டைச்சொன்னே. பொன்னுச்சாமி யண்ணனுக்குப் பதிலா நான் மடக்கிறேன் உன் மாட்டை.

பொன்னுச்சாமி மறுபடியும் கூட்டத்தைப் பார்த்து, "ஹூம், நல்லாயிருக்கு ஊரு! அவன் பேசாததெல்லாம் பேசறான்; நீங்க பாத்துக்கிட்டு இருக்கறிய" என்றான்.

கூட்டத்திலிருந்த ஒருவன், "நாங்க பாத்ததும் பாக்காததும் கடைசிலேல்ல தெரியும்" என்றான்.

மற்றொருவன், "சரி, சரி, விசயம் ஆகட்டும்" என்றான். பொன்னுச்சாமி, "சரி; காரியம் பெரிசு. புதன்கிளமை பூசையும் மஞ்சவெரட்டும் நடக்கணும். ஊர்க்கணக்கு கச்சாத்து எல்லாம் இந்தா இதோ இருக்கு. நான் நாட்டாமை பாத்தது போதும்; வேறே யாராவது ஒப்புக்குங்க" என்றான்.

அதற்குள் ஒரு கிழவன், "அட போ, ஊருண்ணு இருந்தா நாலுந்தான் இருக்கும்; இதெல்லாம் கவனிக்கலாமா?" என்றான்.

பொன்னு : நாலும் இருக்கிற ஊரிலே நாட்டாமெ என்னத்துக்கப்பா!

கிழ : அட எவனோ மேப்படி பேசினா, நீ ஏன் கவலைப் படறே?

பொன்னு : என் மனசுக்குத் திருப்தியில்லே.

கிழ: நாட்டாமைக்காரன் எல்லாத்தையுந்தான் சகிச்சுப் போகனும். கறுப்பண்ணத் தேவன் வேறே எங்கேயாவது போய்ப் பேசப் போருனு! நம்ம நாட்டாமேங்கிற போது அவன் ஆத்திரத்தைச் சொல்லுறான்.

பொன்னு: இப்படியா சொல்றது? கூட்டத்துக்கு நானு போய்க் கூப்பிடணும்? இந்தமாதிரி வந்து கூப்பிடாட்டி நாக்கிலே நரம்பில்லாமே பேசலாமா?

கிழ: ஆமா; நம்ப என்ன? குடியானவங்கதானே? இதைவிடத்தான் என்ன மரியாதையாய் நாம்ப பேசறது? சரிதான் தம்பி விடு.

இதற்குள் கூட்டம் முழுவதும், "ஆமாங்கறேன், இது ஒண்ணுங் குத்தமில்லே" என்று ஆமோதித்தது.

பொன்னுச்சாமி தன்னைக் கடிந்துகொண்டான். பிறந்த ஊரென்னும் பாசத்தால் ஒழுங்கு தெரியாத இவர்களுக்குத் தலைமை வகித்தது பிசகு என்று அறிந்தான். ஜன்ம பூமியில் பற்றுதல்கொண்ட அவனது உள்ளத்தில் கறுப்பண்ணனின் மரியாதையற்ற வார்த்தைகள் நெருப்பை மூட்டின. அந்த நெருப்பில் ஊரார் செய்த சமாதானம் மண்ணெண்ணெயை ஊற்றியதுபோல் இருந்தது. தான் மேற்கொண்ட காரியத்தை நடத்திவிட்டுப் பிடியிலிருந்து விலகிக்கொள்ள விரும்பினான். "சரி, பூசையும் மஞ்சவெரட்டும் புதன் கிளமை. வேண்டியவர்களுக்கெல்லாம் பாக்கு வைக்கச் சொல்லுங்கோ" என்று சொல்லிவிட்டு வெளியே சென்றான்.

பொன்னுச்சாமியோடுகூட ராக்கன் என்னும் பையனும் சென்றான். போகும்பொழுதே ராக்கன் சொன்னான்: "அண்ணே இது வாழ்ந்தானுக்கு மாரடிச்ச ஊரு, நீ என்னமோ பெரிய சலுக்கார் சிப்பந்தியாட்டமா ஊரை ஒரிசாய் நடத்திவிடலாம்னு பாக்கறே. அதற்கு இந்த ஊரு லாயக்கில்லே யண்ணே! பெருச்சாளி கொடஞ்ச செவரண்ணே;

பாரம் எத்தாதே; பட படன்னு விளைந்திடும்" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

## 2

மேற்கண்ட கூட்டத்தினால் தேவர்களது வகுப்பார் பொன்னுச்சாமியை அகம்பாவம் பிடித்தவனென்றும், அடக்கி ஆள நினைக்கிறான் என்றும் கருப்பண்ணத்தேவன் மறவனாக இருப்பதால் பெரிய மனிதன் என்றுகூட மதிக்கவில்லை என்றும் சீக்கிரம் பாடம் கற்பிக்கவேண்டுமென்றும் பேசிக் கொண்டார்கள்.

பிள்ளை வகுப்பார்களோ பொன்னுச்சாமிக்கு வீரத்தனம் போதாதென்றும், கூட்டத்திலேயே கலகம் செய்யாமல் விட்டது பிசகென்றும் பேசிக்கொண்டார்கள். நாட்களும் சென்றன.

புதன்கிழமை. இது இப்படியிருக்க, கருப்பண்ணத் தேவனுக்கு அஸ்தியில் ஜுரம் கண்டுவிட்டது. அன்றைத் தினம் ஊருக்கு நாற்புறத்திலும் எங்கே பார்த்தாலும் வேப்பிலை, மாவிலை, நெல் கதிர்களால் கட்டிய தோரணங்களும் பச்சைப் பசேலென்று ஈச்சங்குருத்துகளை ஆடைகளாக அணிந்து தலையில் பனை நுங்கு, இளநீர், ஈச்சங்காய் இவைகளைக் கொத்துக் கொத்தாகக் குலை குலையாகத் தாங்கிக் கொண்டிருக்கும் கம்பங்களும் ஊரை அழகு செய்தன.

ஊரில் ஹரிஜனங்கள் பானையில் வைத்திருந்து மக்கிப் போன சரிகை வேஷ்டிகளாலும், பாசிமணி கோத்த விருதுத் துப்பட்டாக்களாலும் தங்களை அலங்கரித்துக்கொண்டு ஆனந்தமாகத் தப்புக்கொட்டி ராமாயணமும் பள்ளும் பாடிக் கால்களில் சலங்கை கட்டிக்கொண்டு ஒயில் ஆட்டம் ஆடுகிறார்கள். அவர்களுடைய குலச் சிறுமிகள் தலையில் வேப்பெண்ணெய் தடவி வாரி, கொண்டையை அள்ளிச் செருகிக்கொண்டு ஒவ்வொருவர் கழுத்திலும் தலையிலும் ஒவ்வொரு கட்டு மருக்

கொழுந்தும் செவ்வந்திப் பூக்களும் அணிந்து முத்து யிராயி பாட்டுப் பாடி, கும்மியடிப்பதும், குலவை போடுவதும் இன்பத்தை வாரி வீசுகின்றன.

இந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருக்கும் சில கிழட்டு வாலிபர்களும் அவர்களுடன் கூடிக் கும்மி யடிக்கத் துவங்க, சிறுமிகள் கேலி செய்து சிரிக்கிறார்கள்.

கழுத்தில் ஐல்ஜல் என்று சலங்கைகளும், நெற்றியில் குங்குமப் பொட்டும், வீரப் பார்வைகளும் உள்ள காளைகளைப் பூட்டிய கொட்டை வண்டிகள், ஒற்றை மாட்டு வண்டிகள், இவைகளில் ஏராளமான வெளியூரார்கள் வந்தவண்ணமாக இருக்கிறார்கள். பாவம், பாதசாரிகளோ ஒரு நிமிஷம் வீணாவதை உலகமே வீணாவதுபோல் நினைத்து ஆவலுடன் ஓடியோடி வருகிறார்கள்.

மஞ்சள் விரட்டுக்காக நீலவேணி, ஐரோப்பியான் மாஸ்டர், பவுன் குட்டை, பதுகுட்டை, டாங்காரி, பட்டி மட்டை, வல்லாசாரனை, சாவை, காரிமேனை, எடையாத்தூர் மட்டை, தங்க ஊசி முதலிய புனைபேர் கொண்ட காளைகள் நெற்றியில் தங்கத்திலும் வெள்ளியிலும் செய்த அரசிலைத் தாயத்துக்கள் அணிந்து, சீவி மெருகு ஏற்றிய கொம்புகளில் எலுமிச்சம்பழங்களைக் கோத்துக்கொண்டு, மதோன்மத்தமாக நடந்துவரும் காட்சி, இந்தியக் கிராம வாசிகள் கௌரவத்தை ஒருபடி உச்சியில் தூக்குகிறது. மாடுகளால் கௌரவமடையும் சில மனிதர்கள் வெற்றிலையையும், புகையிலையையும் மூட்டையாக மடித்துக் கட்டிக்கொண்டு வருவாருக்கும் போவாருக்கும் வாரி வழங்கித் தங்கள் காளைகளைப்பற்றி வாய்ச் சவடால் அடித்தவண்ணம் இருக்கிறார்கள்.

பகல் சரியாய் பன்னிரண்டு மணி இருக்கும். நல்ல வேளையிலே பிள்ளையார் மடத்து வாயிலிலிருந்து ஊர்வலம் புறப்பட்

டது. தட்டுகளிலும், ரங்கூன் சாய மரவைகளிலும் தேங்காய், பரங்கிப் பழம், வெற்றிலைபாக்கு, பூசணிக்காய் முதலியவை களும் புழுங்கரிசியும் அதன்மேல் கத்தரிக்காயும் குத்தி வைத்து, பெண் பிள்ளைகள் தூக்கிக்கொண்டு முன்செல்லு கிறார்கள். மேளகாரக் கந்தன், சந்தனத்தேவன் தெம் மாங்குகளைச் சரமாரியாக ஊதித் தள்ளுகிறான். தவில்கார னும் தவில் கிழிய வெளுத்து வாங்குகிறான். முதல் வகுப் பில் செல்லும் ஹரிஜனங்கள் வாயில் வைத்திருக்கும் கொம்புகளை ஆகாயத்தில் தூக்கி ஊதி வானவர்களைத் தங்கள் ஊர்த் திருவிழாவுக்கு அழைக்கிறார்கள். திமிரி நாயனத்தில் தேர்ந்த கட்டையன் 'தங்க ரத்தினம்' பாட்டு வாசிக்கிறான்.

இவைகளுக்கு மத்தியில் ஒரு சுத்த வீரனுக்குள்ள லட்சணங்களுடன் கறுத்து மெருகு ஏறிய கடைந்து எடுத்த உடம்பில் கட்டுக் கட்டாய் விபூதியைக் குழைத்துப் பூசிக் கொண்டு நெற்றியில் சந்தனப் பொட்டிட்டுத் தலையில் உருமாலை கட்டி, இடுப்பில் சிவப்புக் கரை வேஷ்டியைக் கச்சம் வைத்துக் கட்டி ஆண் சிங்கம்போல் அழுத்தலாய்ப் பொன்னுச்சாமி நடந்துவருகிறான். எதிர்க்கட்சித் தலைவன் குள்ளநரி கறுப்பண்ணனும் கூடவே செல்லக் கூட்டம் ஊர்வலமாய்க் கோவிலை வந்தடைந்தது.

கண்மாய்க் கரையிலிருந்து அதிர்வேட்டுகள் படார் படார் என்று கிளம்பின. ஐயனாரின் சிரசில் பாலையும் பன்னீரை யும் இளநீரையும் விட்டு அபிஷேகம் செய்தார்கள். சாமிக்குப் பட்டுச் சாத்தினார்கள். பள்ளயம் போட்டார்கள். கற்பூர தீபாராதனை காண்பித்தார்கள். சாம்பிராணிப் புகையிலிருந்து பூசாரியும் 'பூத் பூத்' என்று சாமியாட ஆரம்பித்தான். பிள்ளை பிறக்கவும், கல்யாணமாகவும், காணாமல் போன மாடு அகப்படவும், எதிரியின் உயிர் போகவும், மழை பெய்யவும், [illegible] வரங்களை எல்லாம் கொடுத்த

படியே ஒருபுறம் குதித்துக்கொண்டிருந்தான். பண்டாரம் நெற்றியில் விபூதியை அணிந்துகொண்டு எல்லோருக்கும் விபூதிப் பிரஸாதம் கொடுக்க ஆரம்பித்தான்.

முதலில் கறுப்பண்ணத் தேவனுக்கு விபூதியைக் கொடுக்கும்படி பொன்னுச்சாமி கையைக் காட்டினான். மொண்ணையனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. சென்ற இரவு, கறுப்பண்ணன் தூங்கும்போது மணி 4 இருக்கும். போக்கிரிப் பயல்களாக 20 பெயரைத் தனக்கு உதவியாகக் கலகத்துக்குத் தயார் செய்துவிட்டுத்தான் வந்து படுத்தான். தன் பேரிலுள்ள மனத்தாங்கல்களால் பொன்னுச்சாமி தனக்கு விபூதி தர மறுப்பானென்றும், வேறொரு தேவனுக்குக் கொடுக்கச் சொல்லிக் கட்டளையிடுவானென்றும், அப்பொழுது கலகம் செய்யவேண்டுமென்றும் கறுப்பண்ணத் தேவன் எதிர்பார்த்தான். பொன்னுச்சாமி இவனுக்கு விபூதி கொடுக்கச் சொல்லிவிடவே கறுப்பண்ணன் ஏமாந்தான்; தான் திடுக்கிட்டதைக் காட்டிக்கொள்ளாமல் விபூதியை வாங்கித் தரித்துக்கொண்டான்.

பின்னாலிருந்து ஒரு பையன் நறுக்கென்று மொண்ணையனைக் கிள்ளினான். கறுப்பண்ணன் திரும்பிப் பார்த்தான்.

"என்னத்துக் கப்பேன் மீசை வச்சிருக்கே? அதைப் போய்ச் செரச்சுக்கிட்டு வந்திருவே" என்றான்.

கறுப் :—ஏண்டாப்பா?

பையன், "ஆமா! என்னமோ, கலகம் பண்ணனும்னியே! உன்னை நம்பிக் கையிலே கம்பு எடுத்தா மண் குதிரையை நம்பி ஆத்திலே எறங்கினது மாதிரித்தான். சரி சரி, துண்ணூத்தைப் பூசு" என்று முகத்தைக் கோணிக் காண்பித்தான்.

கறுப் :—உஸ்! சும்மாயிருடா; மஞ்சவெரட்டுப் பொட்டல்லே வச்சுக்குவம் கச்சேரியை.

பொன்னுச்சாமியும் பண்டாரமும் இவைகளைக் கவனிக்கவில்லை. ஊர் வழக்கப்படி காளாஞ்சி (தேங்காய்மூடி வெற்றிலையோடு) கொடுப்பதில் முனைந்து நின்றார்கள்.

முறையே, பிராம்மணர்கள், சர்க்கார்க் கணக்கன், மணியக்காரர், வெளிக் கிராமத்தார் முதலியவர்களுக்குக் காளாஞ்சி கொடுத்துப் பின் வந்திருந்தவர்களுக்கெல்லாம் சாதம் வட்டிக்க ஏற்பாடு செய்துவிட்டுப் பொன்னுச்சாமியும் வீட்டுக்குச் சென்றான்.

மூன்று மணிக்கு, நண்பர்கள் புடைசூழப் பொன்னுச்சாமி தன் கைப்பணத்தை அதிகம் போட்டு வாங்கிய வேஷ்டி மூட்டைகளுடன் ஆலவட்டம் கருட்டியுடன், எதிர்க்கவிக்கு அழைக்க வந்த கறுப்பண்ணனுடன் மஞ்சள் விரட்டுத் தொழுவுக்குச் சென்றான்.

மஞ்சள் விரட்டுக்கு ஊர்ப் பொதுப் பணத்தில் இருநூறு ரூபாய்க்கு வேட்டி வாங்குவது வழக்கம். இவைகளைக் காளைகளின் கழுத்தில் கட்டி, மூக்குக் கயிற்றையும் கூட உருவிக்கொண்டு தொழுவிலிருந்து பத்துப் பத்து மாடுகளாக வெளியே விரட்டிவிடுவார்கள்.

இந்த மாடுகளைப் பிடித்து, இவைகளின் கழுத்தில் கட்டியிருக்கும் வேட்டிகளை அவிழ்த்துவிடக் கங்கணம் கட்டிக்கொண்டு வாலிபர்கள் வெளியே கூட்டம் கூட்டமாகக் காத்திருப்பார்கள். சில மாடுகள் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு பாய்ந்து பாய்ந்து வெளியே ஓடிவிடும். சில மாடுகள் நின்று பாய்ந்து விளையாடும்.

வாலிபர்கள் தரையில் மார்புற ஊர்ந்து அந்த மாடுகளைப் பிடிக்க நெருங்குவதும், மாடுகள் அவர்களை முட்ட நினைத்துத் தம் கொம்புகளால் குத்துவதும் பார்ப்பவருக்கு வேடிக்கையாக இருக்கும். ஆனால், நாலு அணா வேட்டியை அவிழ்க்கப் போய் மாட்டுக் கொம்புகளுக்கு இரையானவர்களும் உண்டு.

வேட்டிக்காக ஏற்பட்ட விளையாட்டல்ல இது! தமிழ்நாட்டு வியவசாயிகளின் வீர விளையாட்டு.

பொன்னுச்சாமி மஞ்சள் விரட்டுத் தொழுவை அடைந்தான். தொழுவின் வாயிலில் தேர்ச்சீலைகளால் அலங்கரிக்கப் பட்ட ஒரு பரண் இருந்தது. கறுப்பண்ணத்தேவன் அதில் ஏறி உட்கார்ந்தான். 40 மூட்டை வேட்டிகளைப் பரண்மீது ஏற்றினார்கள். பொன்னுச்சாமி தொழுவுக்குள் சென்று ஒவ்வோர் அங்கணம் அங்கணமாக மாடுகளைப் பார்த்துக்கொண்டே வந்தான். பொன்னுச்சாமியும் ஒரு கன்றுக்குட்டி வாங்கியிருந்தான். அதுவும் தொழுவுக்குள் விளையாடிக் கொண்டிருந்தது. எஜமானனைக் கண்டவுடன் மா வென்று கத்திக்கொண்டு அது அருகில் வந்தது. பொன்னுச்சாமியின் உடம்பு வேர்த்தது; மனம் கலங்கிற்று. சாதாரணமாகவே மாடு கத்தினால் குடியானவன் அபசகுனமாகக் கருதுவான். அதிலும், அருமைக் கன்றுக்குட்டி மஞ்சள் விரட்டுத் தொழுவில் கத்துவது பொன்னுச்சாமியின் உடம்புக்கு நடுக்கம் கொடுத்தது.

பக்கத்தில் இருந்தவனைப் பார்த்து ஈன சுவரத்தில், "என்ன அண்ணே" என்று கேட்டான்.

அவன், "அட போ, மாட்டை மாடாட்டமா வளத்தாத் தானே! பிள்ளை கணக்கா வளத்துட்டே. அது மச்சினன்முறை கொண்டாடுது" என்றான். இதற்குள் ஒருவன் ஓடி வந்து, "தொழு திறக்கணும், நாழியாச்சு" என்று அழைக்கவே உலகத்து இன்பங்களை ஒருமிக்க இழந்தவன்போல் தன் அருமைக் கன்றுக்குட்டியை விட்டுப் பிரிந்தான் பொன்னுச்சாமி.

அந்த வருஷம் ஏற்பாடுகள் எல்லாம் வெகு விதரணையா யிருந்தன. ஒரு பட்டிக்காட்டான் செய்யும் திருவிழாவைப் போல் இல்லை. வந்த விருந்தினர்களில் ஒவ்வொருவரும் நமது ஊருக்கும் ஒரு பொன்னுச்சாமி இல்லையே என்று அடிக்கடி

நினைத்துக்கொண்டார்கள். கறுப்பண்ணத் தேவனே, "நமது ஊருக்குப் பொன்னுச்சாமி என்று ஏன் ஒருவன் இருக்கிறான்?" என்று வருந்தினான்.

காலத்தை எதிர்பார்த்திருந்தான் கறுப்பண்ணன். மாட்டுக்கு உடையவர்கள் பரணின் கீழே கூட்டமாக வந்து நின்றார்கள். பொன்னுச்சாமி பரணில் ஏறி உட்கார்ந்தான்.

மூட்டையைப் பிரித்தான் கறுப்பண்ணத்தேவன். அது வரை கட்டுண்டிருந்த கோபம் பீறிட்டெழுந்தது. பார்த்தான் வேட்டிகளை. ஒரு நிமிஷம் யோசித்தான். "என்னால் இந்த வேட்டிகளைக் கொடுக்க முடியாது" என்று கூவினான்.

அவன் சொல்லி முடிக்குமுன் பொன்னுச்சாமி, "ஏன்?" என்றான்.

கறுப்:—ஏனா? நீ குதியங்கால் மண்ணைத் தட்டிவிட்டு நாளையே ரங்கூனுக்குப் போவே. இந்த ஊர் அவியறதை என் கண்ணால் பார்க்க முடியாது; இதுகளை நான் குடுக்க முடியாது.

பொன்னு:—ஏன்? மொண்ணையத்தேவன் வேட்டி குடுத்தா ஊர் மொட்டையாப் போயிடுமா?

கறுப்:—என்னடா? சல்லிப்பயலே! மறவங்களை மண்ணுங்கட்டியாவா மதிக்கறே? நான் தொடமாட்டேண்டா.

பொன்னு:—காரணம் என்ன? சொல்லு பெரியவரே. நீ குடுக்காட்டி நான் குடுக்கறேன்.

நான் குடுக்கறேன் என்று பொன்னுச்சாமி சொன்னதும் மறவர்களின் மீசை படபடத்தது. ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். கறுப்பண்ணத்தேவன், "என்ன, நீ கொடுக்கிறியா? மலை பொரண்டு வந்திச்சுன்னாலும் மறவன் மரியாதையை விட்டுக்கொடுக்கமாட்டாண்டா; எங்கே? தொடு வேட்டியை" என்றான்.

பொன்னுச்சாமி வந்த கோபத்தை அடக்கிக்கொண்டான்.

பொன்னு:—காரணத்தை எங்கிட்டச் சொல்லாட்டி ஊருக்காச்சும் சொல்லு.

கறுப்:—காரணமாம், கத்திரிக்காயாம். வளமைக்கி விரோதம்டாங்கிறேன்.

இதற்குள் பிள்ளை வகுப்பாரில் ஒருவன், "என்ன ஐயனே வளமைக்கி விரோதம்?" என்று கேட்டான்.

கறுப்:—விரோதமா? வருசா வருசம் சொவப்பா டப்புக்கரை போட்ட சாயத்துண்டுதானேடா மாட்டுக்குக் கொடுக்கிறது. அதுக்கு மாறுதலாயிருந்தா? வளமைக்கி விரோதம் பண்ணி ஊர் நாசமாப் போறதா?

மூலையிலிருந்து ஒரு தேவன், "அதென்ன வைகுண்டச் சல்லாவோ?" என்று ஒரு கேள்வி கேட்டான்.

கறுப்:—என்னைக் கேட்பானேன்? கண்ணை வெளக்கிப் பிட்டு நீங்களே பாருங்களேன்.

இவ்வாறு சொல்லி ஒரு துண்டை எடுத்துப் பிரித்துக் காட்டினான். எல்லோரும் பார்த்தார்கள். நான்கு முழத்தில் நாற்புறமும் அழகிய மாம்பிஞ்சுக் கரைகளுடன் மத்தியில் மகாத்மா காந்தியின் தலையுடன் காட்சி யளித்தது சரிகை வஸ்திரம். அது எல்லோருடைய மனத்திலும் அமைதியை உண்டாக்கிற்று. அப்போது எள் விழுந்தால் சத்தம் கேட்கும்.

"சாயத்துணிக்கிச் சரிகைவேட்டி மட்டமா?" என்று பொன்னுச்சாமியின் குரல் அமைதியைப் பிளந்துகொண்டு வந்தது.

"நேத்து வந்த துணிக்காக, பாட்டன் முப்பாட்டன் தலைமுறை வளக்கத்தை மாத்தமுடியுமா?" என்றான் மொண்ணையன்.

போன்:—பாட்டன் காலத்தைச் சொல்லு; பூட்டன் காலத்தைச் சொல்லாதே. பூட்டன் காலத்திலேயும் அதுக்கு முந்தியும் இந்தத் துணி இருந்தது.

இதற்குள் ஒரு தேவன், "என்னடா? ஊரான் வீட்டுப் பணமா? உங்கப்பன் வீட்டுப் பணமா? நீ எப்படிடா உன் நோக்கத்துக்குத் துணி வாங்கலாம்?" என்று கேட்டு எதிரில் வந்து நின்றான்.

போன்:—ஊரார் பணத்துக்கு மேல் என் பணம் 200 போட்டு, 400 ரூபாய்க்குத் துணி வாங்கினேன். என் நாட்டாமையில் நடக்கும் திருவிழாவுக்கு நல்ல துணி வாங்க வேணுமென்று வாங்கினேன்.

கறுப்:—ஊரார் திருவிளாவுக்கு நீ ஏண்டா கைப்பணம் போட்டு வாங்கறே? நீ என்ன சமீன்தார் மகனு? உன் பிச்சையிலேயா ஊர் பிழைக்கிறது?

பொன்னுச்சாமி எழுந்தான்; "நான் செய்தது நியாயமோ, பிசகோ, ஊரார் சொல்லும் முடிவுக்கு நான் கட்டுப்படுகிறேன். இப்போது மணி 4½. இருபது மைல் போய் வேறு வேட்டி வாங்கிவருவதற்குள் இருட்டிவிடும். மாடு அவுக்க முடியாது. ஆனதால் இப்போ இந்த வேட்டியையே கட்டி, மாடு அவுக்க உத்தரவு செய்யுங்கள்" என்றான்.

இதற்குள் வெளியூரான் ஒருவன், "ஆமாப்பா அதுதான் ஐயா சரி. உங்க ஊரோ, மஞ்சவெரட்டோ, லெச்சணமோ?" என்று சொல்லிவிட்டு வெற்றிலை எச்சிலைக் கீழே துப்பினான். கறுப்பண்ணன் அவன் பக்கம் திரும்பி, "பொயிலை எச்சியை எங்க மூஞ்சிலே துப்பண்ணே! நேத்திப் பயல் நாட்டா மேலே ஊருக்கு நல்ல மருவாதை வந்திருச்சு" என்றான்.

இவர்கள் சண்டை முற்றிக்கொண்டிருக்கையில் கறுப்பண்ணத் தேவன் கையாள் ஒருவன் ஒரு தொழுமாட்டை

வெளியே விரட்டிவிட்டான். பொன்னுச்சாமி இதைப் பார்த்துவிட்டான். ஒரு அட்டைத் துணியுடன் கீழே குதித்தான். உயிரைத் திரணமாக மதித்து நான்கு மாடுகளுக்கு வேட்டியைக் கட்டினான். பரணிலிருந்த கூட்டமும் கீழே குதித்தது. கறுப்பண்ணத் தேவனின் கை, பொன்னுச்சாமியைத் தூக்கிப் பத்து மாடுகளுக்கு மத்தியில் போட்டது.

பின்னே வகுப்பாரில் ஒருவன் கறுப்பண்ணனை ஓங்கி அறைந்தான்!

தேவர்களும் பிள்ளைகளும் வரம்பின்றி மாடுகளை அவிழ்த்துவிட்டார்கள். கம்புகளும், கைகளும், கழிகளும், கல்லுகளும் தாராளமாய் விளையாடின. இருதரப்பிலும் காயங்கள். ஊரத்தில் புகை தெரிந்தது. பொன்னுச்சாமி கட்டிய கூத்துக்கொட்டகை தீக்கிரையாயிற்று. கறுப்பண்ணத்தேவன் வைக்கோல் படைப்பில் யாரோ ஒருவன் நெருப்பு வைத்தான்.

ஊருக்குள் வீட்டுக் கதவுகள், படார், படார் என்று சாத்தித் தாழிடப்பட்டன. ஊரெல்லாம் ரகசியம் பேசப்பட்டது. பக்கத்தூரில், "கலகம், கலகம்" என்ற வார்த்தை கேட்டது. கூத்து மேடையிலிருந்து பாட்டுக் கேட்க வேண்டிய சமயத்தில் ஊரில் குய்யோ முறையோவென்று அழுகைச் சத்தம் கேட்டது.

## 3

**ப**த்து நாட்களுக்குப் பிறகு பஞ்சாயத்தார்கள் முன்னிலையில் பிள்ளையார் மடத்தில் நாட்டாமை வைக்கப்பட்டது. பிள்ளைமார்களை மறவர்கள் சூறையாடுவதும், மறவர்களைப் பிள்ளைமார்கள் சூறையாடுவதும் சர்வ சாதாரணமாகிவிட்டன. ஊருக்குள் போலீஸ் வருவது ஆச்சரியம் இல்லாமலிருந்தது.

அடுத்த நகரத்து வக்கீல் வீடுகளில் இந்த ஊராரின் கூட்டமே நிறைந்திருந்தது.

தேவனைச் சாராயக் கடையில் கண்டால் பொன்னுச் சாமியைக் கள்ளுக்கடையில் காணலாம். இருவருக்கும் காலிகளின் சேர்க்கை ஏற்பட்டது. மொத்தத்தில் ஊரில் காலிகள் கூட்டம் அதிகப்பட்டது. ரிசர்வுப் பட்டாளம் காம்ப் வந்தது. தண்டவரி வசூலிக்கப்பட்டது. ஊரின் அழகு ஊரை விட்டுப் புறப்பட்டுவிட்டது. கோவில் பக்கம் யாரும் திரும்புவதே இல்லை. காலிகள் ஒளிந்துகொள்ள கோவில்கள் மறைவிடமாக இருந்தன. இதன் எதிரொலி ஐந்து வருஷங்கள் நீடித்தது.

நாட்டுக்கு விமோசன மணி அடித்ததை யொப்பச் சத்யாக்ரக இயக்கம் பாரதபூமியில் ஆரம்பித்தது. அநேக மறவப்பிள்ளைகளும், தேவர் வகுப்புப் பையன்களும் தேச நன்மைக்காகச் சிறை புகுந்தனர். பின்னர், காங்கிரஸ் தேர்தல் வந்தது. தேசீயப் பிரசாரம் கரை புரண்டு ஓடிற்று. அப்போது ஊரில் ஒற்றுமை ஏற்பட்டதுதான் ஆச்சரியம். காங்கிரஸ்காரர் மந்திரிகளாய் வந்தபின்பு கடன் தொந்தரவு களும் சிறிது நீங்கின. ஊர் ஒருமுகப்பட்டது. மழைக்கும் விளைவுக்கும் குறைவில்லை.

அடாடா! ஒற்றுமையுடன் இந்த ஊரில் நடக்கும் உற்சவத்தை இப்போது நீங்களும் பார்க்கவேண்டுமே.

கதர் வேஷ்டி கட்டித்தான் ஸார், போனவருஷம் மஞ்சள் விரட்டும் நடந்தது. அதோ அரசமரத்தின் உச்சியில் கதர்க்கொடி தெரிகிறதே! அதுதான் ஊரின் மஞ்சள் விரட்டுப் பொட்டல்.

# சொத்துக்கு உடையவன்

[கி. ரா.]

அன்றுதான் சனிக்கிழமை.

பலராமையரின் மனம் அன்று பொழுது விடிந்தது முதல் ஒரு நிலையில் இல்லை. ஒரு வேலையிலும் புத்தி செல்லாமல் மலைத்து மலைத்து நின்றார்.

விடியற்காலம் ஐந்து மணிக்கே அவர் வயலில் இருந்திருக்க வேண்டியவர். அன்று 'வெங்காறு' பாய்ச்சிப் புது உழவு உழ வேண்டிய நாள். முதல் நாளே பண்ணைக்காரன் வேலுவிடம் நாலு ஏர் கூட விட்டு அன்றைக்குள் ஒன்றரை ஏக்கருள்ள 'முடுக்குப் பள்ளம்' முழுவதையும் முடித்துவிட வேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தார். அது போலவே வேலுவும் விடியற்காலம் ஐந்து மணிக்கே வந்து ஐயரை எழுப்பிவிட்டு, "நான் நம்ம பண்ணை ஏர் ரெண்டையும் கட்டிக்கிட்டுப் போறேங்க. நீங்க எந்திருச்சாப்பலே வந்திடுங்க; உங்க தலையைக் காணாட்டிப் பயலுங்க நெளிஞ்சு குடுப்பானுங்க" என்று அறிவித்துவிட்டுப் போனான். ஆனாலும் அன்று அவர் போகவில்லை.

ஐந்து மணிக்கு எழுந்திருந்துவிட்டார். சற்று நேரம் படுக்கையில் உட்கார்ந்துகொண்டிருந்தார். மனம் ஏதோ பாரத்தால் அழுந்துவதுபோல், ஒரு விசாரம் ஏற்பட்டது

போல் தோன்றிற்று. அப்படியே படுத்துக்கொண்டார். தூங்கவில்லை; அண்ணாந்து பார்த்துக்கொண்டே யோசனையில் ஆழ்ந்தார்.

ஐந்தரை மணிக்கு வழக்கம்போல் வாசல்கூட்ட வேலைக்காரி வந்தாள். வலது கால்மேல் இடது காலைத் தூக்கிப் போட்டுக் கண் விழித்தபடியே மேலே அண்ணாந்து பார்த்துக்கொண்டு திண்ணையில் படுத்திருந்த ஐயரைக் கண்டதும் சிறிது ஆச்சரியப்பட்டுப் போனாள். எப்போதும் அவள் வரும்போது ஐயர் திண்ணையில் படுத்திருப்பதை அவள் பார்த்தது இல்லை. வேலை இருந்தாலும் இல்லாவிட்டாலும் பலராமையர் தினம் ஐந்தரை மணிக்குள் எழுந்து வெளியே போய்விடுவார்.

வேலைக்காரி போய் 'சளார்' என்று சாணம் தெளிக்கும் சத்தம் கேட்டதும் ஐயர் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தார். அதே சமயத்தில் உள்ளேயிருந்து சிவகாமி அம்மாள் வெளியே வந்தாள். வந்தவள் சட்டென்று சிறிது திடுக்கிட்டவள்போல் நின்று, "இன்னும் எழுந்திருக்கவில்லையா, என்ன? ஏன் இப்படித் தூக்கம் இன்னிக்கி? விடியக்காலம் நாலுமணிக்கே வயலுக்குப் போகணும்னு சொன்னிய...?" என்றாள்.

பலராமையர் முதலில் ஒன்றும் சொல்லவில்லை. வாசல் பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு, இரண்டு நிமிஷம் கழித்துத் திடீரென்று அப்போதுதான் தம் மனைவி வந்ததை உணர்ந்தவர்போல், "ஒன்றும் இல்லை; என்னவோ தூங்கிப்போயிட்டேன்" என்றார். அவருடைய குரலின் மெதுவான சுரம் அவருடைய மனம் எங்கேயோ யோசனையில் லயித்திருந்ததைக் காட்டிற்று.

அவருடைய பதில் முழுவதும் சிவகாமி அம்மாளின் காதில் விழவில்லை. "கரியாப்போறது! எப்போ வந்து

இன்னமே கறவைமாட்டை ஓட்டிண்டு போறது? அதை இப்படிக் காயப்போட்டா, பால் எங்கேயிருந்து கறக்கும்?” என்று எருமை மாட்டை மேய்ச்சலுக்கு ஓட்டிக்கொண்டு போகும் மாட்டுக்காரப் பையன் வராமையைக் குறித்துக் கோபித்துக்கொண்டே உள்ளே போய்விட்டாள்.

பலராமையர் படுக்கையைச் சுற்றி வைத்துவிட்டு வாசல் பக்கம் போனார். மணி ஆறாயிருந்தது. தெருவில் ‘சளபுளா’, ‘சளபுளா’ என்று சாணம் தெளிக்கும் சத்தம் ஏகமாகக் கேட்டது. மேலைத் தெருக் கணபதி ஐயர் சம்சாரம் சம்பூரணம் அடுத்த வீட்டு வேலைக்காரி தன் வீட்டு வாசலில் ஆக்கிரமித்துக் குப்பையைத் தள்ளுவது பற்றிய தனது நித்தியப்படிப் பல்லவிகளில் ஒன்றை முடித்துக்கொண்டிருந்தாள்.

“ஏ, வள்ளி! மொட்டமுண்டை! எத்தனை தரம் சொல்றது உனக்கு? கையில் கட்டை முளைக்க.”

உச்சஸ்தாயியில் கூறப்பட்ட இந்த ஆசீர்வாதம் பலராமையரின் காதில் விழவேயில்லை. அவர் மேலைத்தெருவைக் கடந்து தென்னந் தோப்புக்குள் நுழைந்தார்.

உற்சாகமாகத் தில்லானாப் பாடிக்கொண்டு மரமேறிகள் சுறுசுறுப்புடன் தென்ன மரங்களில் ஏறி ஏறி இறங்கிக் கொண்டிருந்தனர். ஒருவன் ஏறும்போது மற்றொருவன் இறங்குவதும், ஒருவன் இறங்கும்போது வேறொருவன் ஏறுவதும் நூல் கயிற்றில் ஏறி ஏறியிறங்கும் பழைய காலத்து வேடிக்கைப் பொம்மையைப் போல் இருந்தன. ஆனால் அந்த மரமேறிகள் மரத்தின் உச்சியிலிருந்து, ‘லொட்டு லொட்’ டென்று தட்டும் சத்தம் வேதனையாயிருந்தது.

பலராமையர் வீடு திரும்பும்போது மணி ஏழாகிவிட்டது. வந்தவர் நேராக வீட்டுக்குள்ளே போகாமல் திண்ணையிலேயே குறட்டில் காலைத் தொங்கவிட்டுக்கொண்டு உட்கார்ந்தார்:

சமாதி நிலையைப்போல் அசைவற்று உட்கார்ந்திருந்த அவருடைய மௌனத்தை முதலில் கலைத்தவன் வேலு. "என்னுங்க, நம்ப மயிலைக்காளை நொண்டிச்சு. கால் ரொம்பப் புண்ணாயிடுச்சு. ரெண்டு சுத்துக்கூட வரல்லே. அதுனாலே மொத்தம் அஞ்சு ஏருதான் விட்டேன். பள்ளப் பயல்கூட ஏதோ வவுத்தை வலிக்குதுன்னு சொன்னான்; நேத்திக்கெல்லாம் குடிச்சுப்புட்டுக் கெடந்திருக்கான். நீங்க வந்திருந்தாக் கொஞ்சம் ஒளுங்கா வேலை செஞ்சிருப்பான். இப்போ இன்னும் உளவு பாக்கியிருக்குங்க" என்றான் அவன்.

பலராமையருக்குச் சற்று உணர்வு வந்தது; "அப்போ, எத்தனை பாக்கி இருக்கு?" என்றார் மெதுவாகவே.

"இன்னும் மேலத்தளை பூரா இருக்குங்க" என்றான் வேலு.

அப்போது, "என்ன, இப்படி இன்னிக்கி? காப்பி சாப்பிடக்கூட இல்லாதே -?" என்று கேட்டுக்கொண்டே உள்ளிருந்து வந்த சிவகாமி அம்மாள் வேலுவைக் கண்டதும், "ஏண்டாப்பா வேலு, இந்த மாட்டுக்காரப்பயல் என்ன இப்படி அக்கிரமம் பண்ணறது? பத்து மணிக்கு வந்து கறவை மாட்டை ஓட்டிக்கிண்டு போனால் அது பால் என்னமாக் கறக்கும்? காலை வேளையிலே சித்தக் காலாறப் போனாத் தானே தேவலை?" என்று பிரச்னையைத் திருப்பினாள்.

ஒன்றையும் கவனியாதவர்போல் இருந்த ஐயர் எழுந்து உள்ளே போனார். கூடத்தில் தொங்கிய ஊஞ்சல் பலகையில் போய் உட்கார்ந்தார். ஆனால் அதை ஆட்டவில்லை.

வேலைக்காரியை ஏதோ அதிகாரம் பண்ணிக்கொண்டே உள்ளே நுழைந்த சிவகாமி, "இதோ காப்பி கொண்டு வரேன்" என்று சொல்லிக்கொண்டே சமயலறைப் பக்கம் போனாள்.

அப்போது பின்புறமிருந்து ஊஞ்சல் திடீரென்று எதிர்பாராவிதமாய்த் தள்ளப்படவே, 'சடக்' கென்று முன்னேக்கி நெடித்தார் பலராமையர். ஆனல் சமாளித்துக் கொண்டு சட்டென்று திரும்பிப் பார்த்தார். குழந்தை குஞ்சு நின்றுகொண்டிருந்தாள். அவருடைய முகத்தில் தோன்றிய குழப்பத்தைக் கண்டு கையைக் கொட்டிக்கொண்டு மடமடவென்று சிரித்தாள்.

"ஐயா! தாத்தா மொட்டை மண்டை ஒடையணும்!" என்று ராகம் போட்டுச் சொன்னாள்.

எதிரில், வினையே அறியாது குதூகலித்து விஷமமே உருவாக நின்று கலகலப்புடன் குதிக்கும் அந்தச் சின்னக் குழந்தையைக் கண்ட ஐயரின் மனத்தில் கொஞ்சம் பாசி விலகித் தெளிவு ஏற்படுவது போன்று ஒரு நிமிஷம் இருந்தது. ஆனல் மறு நிமிஷமே அவருடைய முகத்தில் சாயை கவிழ்ந்துகொண்டுவிட்டது. அவருடைய முக மாறுதலை அந்தக் குழந்தை சுயமாகவே உணர்ந்துகொண்டது போல் தன்னுடைய விளையாட்டைச் சட்டென்று நிறுத்தி விட்டது. அதன் புருவங்கள் நெரிந்து சின்ன முகமும் சுருங்கிற்று.

ஐயர் அப்படியே தாவிக் குழந்தையை வாரியெடுத்து அணைத்துக்கொண்டார். குழந்தை ஒன்றும் பேசவில்லை. தாத்தாவின் முகத்தையே குறிப்பாக உம்மென்று உற்றுப் பார்த்தது.

"என்னடி, ராஜாத்தி! குஞ்சுக் கண்ணுக்கு என்ன வேணும்! எங்க பட்டு ராணி ஏன் கோவிச்சுண்டுது?" என்று கொஞ்சினர் பலராமையர்.

முகத்தைத் திருப்பாமலே குஞ்சு, "ஒன் மொட்டை மண்டையை ஒடைக்கணும்!" என்று சொல்லிக்கொண்டே அவருடைய முதுகில் ஓங்கி ஓங்கிக் குத்திற்று.

" ஐயோ, என்னைக் கொல்லாதேயேன்! நான் செத்துப் போயிடுவேனே!" என்று ராகம் போட்டு இழுத்துச் சொன்னார் ஐயர்.

" நன்னாப் போயேன்!" என்றது குழந்தையும் அதே ராகத்தில்.

அப்போது காப்பி டம்ளருடன் சமையலறையிலிருந்து வெளிப்பட்ட சிவகாமி இந்தப் பரஸ்பரக் கொஞ்சல்களைக் கண்டதும் அப்படியே கையில் கொண்டுவந்த டம்ளரைக் கீழே வைத்துவிட்டு, " இங்கே ஓடி வாடி சனியனே! தலையை வாரி மொட்டயறேன். இப்படி, சொன்ன வார்த்தை கேட்காதே அலையறயே" என்றாள்.

குஞ்சுவும் " இப்படி-சொன்னவார்த்தை-ஏ-ஏ-" என்று பாட்டிக்குச் சரியாக வாயைக் கோணிக்கொண்டு கழுத்தை நீட்டிப் பரிகாசம் பண்ணினாள்.

" குழந்தையை ஏண்டி வையறே? இன்னம் கொஞ்ச நாழி - " என்றார் ஐயர். அவர் வார்த்தைகளை முடிக்கவில்லை. அவருடைய கண்கள் கலங்கின. குழந்தையைக் கீழே விட்டார்.

" தாத்தாக்கும் பாட்டிக்கும் சண்டை" என்று தன்னுடைய சொந்தமான ராகத்தில் பாடிக்கொண்டே அது வெளியே ஓடிற்று.

" எதுக்குச் சொல்றய?" என்று கேட்ட சிவகாமி, உடனே தெரிந்துகொண்டவளாக, " ஓஹோ? இன்னிக்கித் தானே சனிக்கிழமை? இன்னிக்கித்தானே வரேன்னு எழுதியிருந்தான்?" என்று சொல்லும்போது தொனி சற்று இறங்கித்தான் இருந்தது. அவளுடைய முகத்திலும் விசாரம் தோன்றிப் படர்ந்தது.

## 2

குஞ்சு பலராமையரின் பெண் வயிற்றுக் குழந்தை. தங்கம் அவருடைய ஒரே பெண். அவருக்கு வேறு ஆண் குழந்தை இல்லை. அதனால் பெண்ணை மிகவும் செல்வமாக வளர்த்ததில் ஆச்சரிய மென்ன?

அவருடைய மனம் போலவே அவருக்கு மாப்பிள்ளையும் வாய்த்தான். கல்கத்தாவில் 'போர்ட் டிரஸ்டி'ல் உத்தியோகம் மாப்பிள்ளைக்கு. கல்யாணம் ஆகி ஆறுமாதத்துக்குள்ளாகவே தங்கத்தை அழைத்துக்கொண்டு போய்விட்டான்.

ஐயர் முதலில் சற்று யோசித்தார், தனியாகப் பெண்ணை அவ்வளவு தூரம் அனுப்ப. ஆனாலும் பெண் சற்றுத் தைரியமாக இருந்ததால் கொஞ்சம் ஆறுதலடைந்தார்.

கல்கத்தா போனவுடன் வாரத்துக்கு ஒருகடிதம் எழுதினாள் தங்கம். "என்னிடம் ரொம்பப் பிரியமா இருக்கா", "என்னைக் காரியமே செய்யப்படாது என்கிறு" என்று அவள் எழுதும் கடிதங்களைப் படிக்கும்போதெல்லாம் ஐயர் உள்ளம் பூரித்துப் போவார். தமக்கு நிகர் இனி இந்த உலகத்தில் யாருமில்லை என்று எண்ணி இறுமாப்படைந்திருந்தார்.

கல்கத்தா போய் ஒரு வருஷத்துக்குப் பிறகு தங்கம் பிரசவத்திற்காகத் திரும்பி வந்தாள். மாப்பிள்ளைதான் அவளை அழைத்துக்கொண்டு வந்தான். பெண்ணும் மாப்பிள்ளையுமாய் வண்டியில் வந்து இறங்கும்போது அவர்களைப் பார்த்த பார்வையில் அவருடைய ஆனந்தத்திற்கு அளவே இல்லை என்று தோன்றிற்று. அன்று வீட்டில் ஏக தடபுடல். தமது நாற்பத்தைந்து வயதையும் மதியாது ஐயர் குதித்துக் குதித்து ஓடினார். வயலில் வேலைசெய்யும் பண்ணையாட்களிடம். "ஏண்டா கறுப்பா, நம்ம மாப்பிள்ளை

ஐயரைப் பார்த்தியாடா? கல்கத்தாவிலே இருக்காரு; சர்க்கார் வேலை, மாசம் இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம்" என்பார். அவருடைய சந்தோஷத்தில் அவருக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை.

அவருடைய சந்தோஷத்தைக் கண்டு யாரோ திருஷ்டி வைத்துவிட்டார்கள் என்றுதான் சொல்லவேண்டும். இல்லாவிட்டால் இப்படி இடி விழுந்த மாதிரி துக்கம் ஏற்பட முடியுமா?

குஞ்சுவைப் பிரசவித்த முப்பதாம் நாள் தங்கம் அவளைத் தன் தந்தையிடம் ஒப்புவித்துவிட்டுப் பிரிந்தாள். பத்து நாள்வரையில் ஒன்றும் இல்லை. இராப்பகலாய்க் கண்விழித்துக் கவலையுடன் காத்திருந்த ஐயர் சுகப் பிரசவம் என்று கேள்விப்பட்டதும் சற்று நிம்மதி அடைந்தார். ஆனால் பத்தாவது நாள் கொஞ்சம் ஜுரம் அடித்தது. உடனே டாக்டர் வந்தார். வழக்கம்போல், "அது ஒன்றும் இல்லை; ஜலதோஷம். இந்த மருந்தை இரண்டுவேளை சாப்பிட்டால் சரியாப்போய் விடும்" என்றார். ஆனால் சரியாய்ப் போகவில்லை. ஜுரம் அதிகரித்தது; பத்து நாளில் ஜன்னி கண்டுவிட்டது. எத்தனை டாக்டர் வந்துதான் என்ன பண்ணுவது? ஒன்றும் பிரயோஜனமில்லை. ஜுரம் கண்ட இருபத்தோராவது நாள் தங்கம் தன் குழந்தை, ஐயர், தன்னுடைய புருஷன் எல்லாவற்றையும் மறந்து கண்ணை மூடிக்கொண்டு போய்விட்டாள்.

தலையில் அடித்துக் கொண்டார் ஐயர்; "இதற்காடி பாவி உன்னைப் பெற்று வளர்த்தேன்! கண் காணாதே போனியே! என் காலின் கீழேதான் வந்து பிராணனை விடணும்னு வந்தியாடி!" என்று என்ன என்னவோ சொல்லிக் கதறினார்.

அன்றிருந்து ஆறு மாதம் வரையில் ஐயர் எழுந்திருக்கவில்லை. பெண்ணைத் தொடர்ந்து தகப்பனாரும் போய்

விடுவாரோ வென்று எல்லோரும் நினைத்தனர். அன்ன ஆகாரம் இல்லை. எப்போதும் பித்துப் பிடித்த மாதிரி உட்கார்ந்திருப்பார்; யாராவது கூப்பிட்டால்கூடப் பேசுவதில்லை.

இப்படியாக ஒரு வருஷம் கழிந்தது. வர வர ஐயர் கொஞ்சம் தேறலானார். அந்தக் குழந்தையின் முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் அவருக்குப் பழைய ஞாபகம் வந்துவிடும். அப்படியே மலைத்து நின்றுவிடுவார்.

நாளடைவில் அவருடைய கவனமெல்லாம் குழந்தையிடம் திரும்பியது. "என் கண்ணு; குஞ்சம்மா!" என்று அதோடு ஓயாமல் கொஞ்சுவார். அந்தக் குழந்தை தங்கத்தின் சாயலாகவே இருந்தது.

அவருக்குத் தங்கத்தினிடம் இருந்த பிரியமெல்லாம் குஞ்சுவினிடம் மாறியது. அந்தக் குழந்தையை மிகவும் செல்வமாக வளர்த்தார். அது என்ன கேட்டாலும் வாங்கிக் கொடுத்துவிடுவார். அது துளிகூட முகத்தைச் சிணுங்கக் கூடாது. கொஞ்சம் முனகல் கேட்டாலும், "என்னடி இது! குழந்தை என்ன கேட்கிறதோ அதை முதலில் கொடு" என்று மனைவியை அதிகாரம் பண்ணுவார்.

வெளி வேலையாய்ப் போய்விட்டு வந்ததும் ஒரு தடவை குழந்தையை வைத்துக்கொண்டு கொஞ்சிவிட்டுத்தான் வேறு வேலை பார்ப்பார். அவர் வரும் சமயத்தில் அது வெளியில் விளையாடப் போயிருந்தால்கூடப் பண்ணைக்காரனை விட்டு எங்கே இருந்தாலும் தேடி அழைத்துக்கொண்டுவரச் சொல்லுவார்.

தங்கம் இறந்துபோய் ஆறுமாதம் கழித்து அவளுடைய புருஷன் ஒரே ஒரு தடவை அங்கு வந்திருந்தான். அப்போது அவர் மாப்பிள்ளையைக் கட்டிக்கொண்டு அழுத அழுகை!

அவனும் உடம்பு இளைத்து முகம் தேய்ந்துபோய்க் கேவலமாய்க் காணப்பட்டான். அவனும் துக்கப்படுகிறான் என்பதை உணர்ந்துகொண்ட ஐயருக்குச் சற்று ஆறுதலாய் இருந்தது.

அதன்பின் அடிக்கடி மாப்பிள்ளையிடமிருந்து அவருக்குக் கடிதம் வந்தது. ஒரு கடிதத்திலாவது, "குஞ்சு சௌக்கியமா?", "குஞ்சு விளையாடுகிறாளா?" என்று அவன் விசாரிக்காமல் இருந்ததில்லை.

ஒரு வருஷத்துக்குப் பின் அவனிடமிருந்து அடிக்கடி கடிதம் வருவதில்லை; மாதத்துக்கு ஒரு தடவை வரும். அப்போது ஒரு கடிதத்தில், தான் மறு கல்யாணம் செய்துகொள்ளலாமென்று தீர்மானித்திருப்பதாக எழுதியிருந்ததைக் கண்ட ஐயர் மனத்தில் பலதரப்பட்ட உணர்ச்சிகள் தோன்றின.

ஆனால் அவரே முன்பு ஒரு கடிதத்தில் இதைக் குறித்துச் சிபாரிசு செய்து எழுதியிருந்தார்: "இப்படியே எத்தனை நாளைக்கு இருக்கமுடியும்? உனக்கென்ன வயசாச்சா? எங்கேயாவது நல்ல இடமாகப் பார்த்துப் பண்ணிக்கொள். நான் வேண்டுமானாலும் பெண் பார்க்கிறேன்" என்று. ஆனாலும் இப்போது அவனுடைய கடிதத்தைக் கண்டதும் அவருடைய மனத்துக்கு என்னவோபோல் இருந்தது.

மாப்பிள்ளை மறு கல்யாணம் பண்ணிக்கொண்டுவிட்டான் என்ற செய்தியும் கடைசியில் கிடைத்தது. அதற்கு அப்புறம் அவருக்கு மாப்பிள்ளையிடமிருந்து கடிதம் வருவது அபூர்வமாகப் போயிற்று.

இரண்டு, மூன்று, நாலு வருஷமாயின. பலராமையர் எல்லாவற்றையும் மறந்துவிட்டார்; குழந்தை குஞ்சுதான் அவருடைய முழு உலகமும்.

## 3

இப்படி இருக்கையில்தான் அந்தக் கடிதம் வந்தது.

மாப்பிள்ளை - (பெண் இறந்துபோய் வேறு கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டபின்கூட மாப்பிள்ளை உறவு உண்டா?) - எழுதியிருந்தான்:

குழந்தை குஞ்சுவுக்குப் படிப்புக் கெட்டுப்போகிறதாம். அவளைக் கல்கத்தாவுக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டு மாம் - இத்தனை நாளாய்க் குஞ்சு இல்லையோ? அஞ்சு வருஷ மாய் ஒரு கார்டுகூடக் காணோமே?

அவருக்கு அந்தக் கடிதத்தின் அர்த்தமே விளங்க வில்லை.

குஞ்சு, அவளை அனுப்பிவிட்டு அவர் என்ன பண்ணு வது? படிப்பு, படிப்பு எதற்கு? இங்கே படிக்கப்படாதோ? இத்தனை நாளாய், அஞ்சு வருஷமாய் அவளுக்கு வேண்டிய தைச் செய்த இடத்தில் படிப்புச் சொல்லிக்கொடுக்க மாட்டார்களா?

இப்படி என்ன என்னவோ எண்ணினார் ஐயர்.

இங்கேயே படிப்புச் சொல்லிக் கொடுப்பதாகப் பதில் எழுதினார். ஆனால் மாப்பிள்ளை, "அங்கே பட்டிக்காட்டில் இருப்பதைவிடக் கல்கத்தாவில் இருப்பதுதான் தேவலை. ஆகையினால் இன்னும் ஒரு வாரத்தில் புறப்பட்டு வரு கிறேன். அடுத்த சனிக்கிழமை அநேகமாக வந்துவிடுகி றேன்" என்று தீர்மானமாக எழுதிவிட்டான்.

பலராமையருக்குக் கோபம் வந்தது. மாப்பிள்ளையின் பிடிவாதம் அவருக்கு அர்த்தமாகவே இல்லை. அந்தக் கடிதம் வந்தது முதல் அவருடைய கலகலப்பெல்லாம் எங்கேயோ போய்விட்டது.

## 4

அன்று மணி எட்டாயிற்று. பதினொரு மணிக்குத் தான் மாப்பிள்ளை வரவேண்டியது.

மணி ஆக ஆகப் பலராமையரின் மனம் தவிக்க ஆரம்பித்தது. என்ன என்னவோ எண்ணினார். ஆனால் மனம் ஓர் இடத்தில் லயித்தால்தானே? சொல்லமுடியாத ஒரு பரபரப்பு, வேதனை.

வாசலிலிருந்து உள்ளே வந்தார். பிறகு நேராகக் கொல்லைப்புறம் போனார். அப்படியே வயலுக்குப் போய் விடலாமென்று நினைத்தார். கொஞ்சதூரங்கூடப் போனார். ஆனால் உடனே எதையோ வைத்து மறந்துவிட்டவர்போல் திரும்பினார்.

மணி ஒன்பதாயிற்று.

சிவகாமி அம்மாள் குழந்தைக்குத் தலையை வாரிப் பின்னி அலங்காரம் பண்ணிக்கொண்டிருந்தாள்.

“ அசக்காதேம்மா ! என் தங்கம் இன்னிக்கி ஊருக்குப் போகப்போகிறது. அப்பா வரப்போரு ” என்று அதைக் கொஞ்சித் தாஜா பண்ணித் தலை வாரிக்கொண்டிருந்தாள்.

“ போடி ! நான் ஊருக்குப் போகல்லே ! இங்கேதான் இருப்பேன் ” என்று சிணுங்கிற்று, குழந்தை. ஆனால் உடனேயே, “ தாத்தா வருவாளோன்னோ, பாட்டி ?” என்று கேட்டது.

அப்போதுதான் பலராமையர் உள்ளே நுழைந்தார். தாத்தாவைக் கண்டதும் குஞ்சு, “ தாத்தா, நம்ப ரெண்டு பேரும் இன்னிக்கி ஊருக்குப்போகிறோமோன்னோ ? இந்தப் பாட்டி வாண்டாம் ! இவ அசடு!” என்றாள் கொஞ்சிக் கொண்டு, முகத்தைக் கோணிக்கொண்டு.

“அடீ !. அசக்காதேடின்னு!” என்றாள் பாட்டி.

பலராமையருக்கு ஒன்றுமே காதில் விழவில்லை. விர் ரென்று வாசலில்போய் திண்ணையில் உட்கார்ந்தார். அடுத்த வீட்டுக்காரரான பஞ்சு வம்பு விசாரித்துக் கொண்டே வந்தார்.

"ஏண்டா உன் மாப்பிள்ளை வரப்போறுனுமே? எத்தனை நாள்தான் விட்டுட்டு இருப்பன்?"

பலராமையருக்கு அவரை அப்படியே மண்டையில் அடிக்கவேண்டுமென்று தோன்றிற்று. ஒன்றும் பதில் சொல்லாமல் எழுந்திருந்து உள்ளே போனுர்.

முற்றத்தில் வேலை செய்துகொண்டிருந்த வேலைக்காரி யின் குரல் கேட்டது. "ஆமாம், சொத்துக்கு ஒடையவங்க வந்தா குடுத்துடத்தானே வேணும்? என்னதான் வளத் தாலும் நம்புளுக்குப் புள்ளையா அது?".

"இருந்தாலும் இத்தனை நாள் தாயில்லாக் குழந்தையை வச்சுக் காப்பாத்தி - யாரு இந்த மாதிரி செய்வா! பெத்த குழந்தையையே யாரும் கவனிக்க மாட்டேன்கிறு; இந்த நாளிலே ஒன்மாதிரி யார் செய்வா சிவகாமி?"

இது கீழைத் தெருக் காமாச்சியின் குரல். அவளுக்கு ஊரில் 'வக்கீல்' என்று பட்டப் பெயர். எந்தச் சிக்கலான பிரச்னையையும் எளிதில் உடைத்துத் தெளிவாக்கி விடுவாள் அவள். அவளுக்குச் சம்பந்தப்பட்ட விஷயமாக இருக்க வேண்டுமென்ற அவசியமே யில்லை.

பலராமையர் மனம் குழம்பிற்று. மணி பத்தடித்தது. ஒன்றும் நிதானம் இல்லாமல் கொல்லைப்புறம் ஓடினுர்.

"தாத்தா! என்னைப் பாரு! பூச்சாண்டி, பே!" என் றுள் குஞ்சு, கதவு மூலையிலிருந்து. அவர் காதில் ஒன்றும் விழவில்லை.

"சொத்துக்கு உடையவன்!" - யார் சொத்துக்கு யார் உடையவன்?

கொல்லைப்புறம் போனவர் எதையோ கண்டு மிரண்டவ
போல் பைத்தியம் பிடித்தவர்மாதிரி வயல் காடுகளை நோக்
ஓடினார்.

"சாமி! தந்திங்க!" என்ற வேலுவின் குரலைக் கேட்
நின்று திரும்பினார்.

கையில் தந்தியை வைத்துக்கொண்டிருந்தான்; அதை
பிரித்துப் படித்தார்:

"இன்று வர முடியவில்லை. செவ்வாய்க்கிழமை வ
கிறேன்" என்று மாப்பிள்ளை கொடுத்திருந்தான்.

இன்னும் மூணு நாளா........!



# சாவித்திரி

[க. நா. சுப்ரமண்யம்]

ஆபீஸிலிருந்து அன்று வெகு சீக்கிரம் வீடு திரும்பி விட்டேன். வாசலில், வழக்கமான நாற்காலியில் அப்பாவைக் காணோம். உள்ளே பானையிலிருந்து ஜலம் எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவருக்காக நான் புத்தக சாலையிலிருந்து கொண்டுவந்த புத்தகத்தை அவர் நாற்காலியில் போட்டுவிட்டு, "அப்பா...வ்...வ்!" என்று குரல் கொடுத்தேன்.

பதில் இல்லை. நாங்கள் இருவரும் ரேழியில் சந்தித்தோம். அவர் உதடுகள் கோணல் கோணலாகத் துடித்துக் கொண்டிருந்தன; கண் கலங்கியிருந்தது.

"என்ன அப்பா?"

"ஒண்ணும் இல்லையே!" அவர் குரல் சற்று நடுங்கிற்று.

சரி, சட்டையைக் கழற்றிவிட்டு இன்னுங் கொஞ்ச நாழி கழித்து விசாரித்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்து, மாடிச் சாவியை எடுத்துவரச் சமையலறைக்குள் புகுந்தேன். ராஜியின் கண்களும் கலங்கியிருந்தன. அவள் கலக்கத்துக்குக் காரணம் அவள் நறுக்கிக்கொண்டிருந்த வெங்காயமாக இருக்கலாம்! சாவிக் கொத்தைக் கையில் எடுத்தபடியே, "அப்பா

ஏன் அப்படி என்னமோபோல் இருக்கா?'' என்று விசாரித்தேன்.

“ஏன்? எனக்குத் தெரியாதே!'' என்றுள் என் மனைவி. அவள் குரலும் சற்று நடுங்கிற்று. அவள் கண்களில் உள்ள கலக்கம் வெங்காயத்தால் மட்டும் ஏற்பட்டதல்ல என்று தீர்மானித்துக்கொண்டேன். என்ன தகராறு என்று யோசித்தபடியே, “ஏன்? என்ன விசேஷம்?'' என்று விசாரித்தேன்.

ஒரு நிமிஷம் மௌனம் சாதித்தாள் என் மனைவி. பின்னர், “எதுத்தாத்திலே, கார்த்தாலே ஒரு புடைவை, மத்யானம் ஒரு புடைவை, சாயங்காலம் ஒரு புடைவை புதுசு புதுசாக் கட்டிக்கொண்டு வாசலில் நின்னுண்டிருக்குமே, அந்தப் பெண் செத்துப் போயிடுத்தாம்......'' என்றுள்.

“யாரு?''

“சாவித்திரீன்னு அந்த எதுத்தாத்து மாமா பெண். அவ பாட்டி கார்த்தாலே முதல் முட்டிண்டு மோதிண்டு அழறு.''

“எப்போ செத்துப் போச்சாம்?''

“கார்த்தாலே பத்து மணிக்கு.''

“எந்தூரிலே?''

“எல்லாம் இந்த ஊரிலேதான். ஏதோ தொண்டையில் ஆபரேஷன்னு ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போனுளாம். டாக்டர் மயக்கம் கொடுத்தானும்; அந்த மயக்கத்திலேருந்து முழிச்சுக்கவேயில்லே......பாவம் இப்படித்தான்....''

“எத்தனை......?''

“கேளுங்களேன். அந்தப் பெண் நாலு மாசமாய் ஸ்நானம் பண்ணுமல் இருந்துதாம். பத்துநாள் கொண்டுவந்து வைத்துக்கொள்ளலாம் என்று அவப்பா முந்தாநாள்தான் அழைச்சுண்டு வந்தார். தொண்டையிலே ஏதோ கஷ்டமாயிருக்குன்னு ஆஸ்பத்திரிக்கு அழைச்சுப் போனுர்களாம்.

பாவிகள் மயக்க மருந்தைக் கொடுத்து ஒரே மயக்கமாய்க் கிடத்திப் புட்டான்கள்... பாவம்!... பார்க்கச் சகிக்கவில்லே. வயசு இன்னம் முழுசாப் பதினஞ்சு ஆகவில்லே."

"பதினஞ்சா?"

"போன வருஷந்தான் கல்யாணம் ஆச்சாம். ஆம் படையானுக்குக் கர்நூலில் எண்பது ரூபாய் சம்பளமாம். பாவம்! குழந்தை பிறக்கப்போகிறது என்று அவன் சந்தோஷமா ஸ்வப்னங் கண்டுகொண்டிருப்பான். கார்த்தாலே யிலேயே அவனுக்குத் தந்தி யடிச்சாய் விட்டதாம். நாளைக்கு வந்துவிடுவான்; அவன் வந்துதானே எல்லாம் ஆக வேணும்?......என்ன கஷ்டம்!" இவ்விடத்தில் மறதியாக வெங்காயம் நறுக்கிய கையுடன் கண்ணைத் துடைத்துக் கொண்டுவிட்டாள்; கண்ணீர் பெருகிற்று.

"உலகத்திலே எத்தனையோ கஷ்டம்; நம்ம கஷ்டங் களைச் சகிக்கவே நம்மால் முடியவில்லே. ஏதோ போ...... இருந்தாலும் கஷ்டந்தான்......வயசு பதினஞ்சுகூட ஆக வில்லை யென்றால்......அவரவர் பண்ணின பாவம்!" என்று நான் சமாதானஞ் சொன்னேன்; "நான் மாடிக்குப் போகி றேன். காப்பி கொண்டுவா!" என்று சொல்லிவிட்டுச் சாவியை எடுத்துக்கொண்டு சமையலறையை விட்டு வெளியேறினேன்.

மாடிப்படி ஏறும் போதுதான் மறுபடியும் அப்பா வைப்பற்றி ஞாபகம் வந்தது. "ஓஹோ, அதுதான்; அந்தப் பெண் இறந்தது, அவருக்குத் தம்முடைய ஒரே பெண் இருபத்திரண்டாவது வயதில் இறந்தது ஞாபகம் வந்துவிட் டதுபோலும்! அதுதான் அந்தக் கண்கலக்கத்தின் அர்த் தம்" என்று யோசித்தபடியே மாடிக்குப் போகாமல் கீழே இறங்கி வாசல்பக்கம் போனேன்.

அப்பா சிமிண்டுத் திண்ணையில் காலைக் கட்டிக்கொண்டு பித்துப் பிடித்தவர்போல் உட்கார்ந்திருந்தார். என்னைக்

கண்டதும் அவர் கண்களில் பிரகாசித்த பித்துக் கொஞ்சம் மறைந்தது. ஒருதரம் கனைத்துக்கொண்டார். ஆனால் ஒன்றும் பேசவில்லை.

நான் அவர் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டேன்.

“ எதிராளாத்தில்........” என்று ஆரம்பித்தேன்.

“ என்ன கஷ்டம் போ! ஏதோ கஷ்டப்படப் பிறந்தவாள் நாமெல்லோரும். வயசு ஆக ஆக நமக்கெல்லாம் கஷ்டந்தான் அதிகரிக்கிறது..............”

“ யார் பெண்? அந்த ஸ்டோர்ஸ்...........”

“ இல்லை, போலீஸிலிருந்தாரே அவர் பெண்; நாலைந்து நாளைக்கு முந்தித்தான் அவர் என்னிடம் தம் பெண் வரப் போவதைப்பற்றி ரொம்பப் பெருமையாகச் சொல்லிக் கொண்டிருந்தார். ”

“ பாவம், சாதுப் பிராம்மணன்.”

“ இந்தத் தர்ம ஆஸ்பத்திரியிலேயே அநியாயந்தான். பணக்காரன்னா ஒரு தினுசு; ஏழைன்னா ஒரு தினுசு! அப்பா! இந்த ஆஸ்பத்திரிக்கே போகப்படாது.......”

“ என்ன வியாதி?” என்றேன் நான்.

“வியாதியும் இல்லை, ஒண்ணும் இல்லை. ஏதோ டான்ஸில்ஸ். ஆஸ்பத்திரியில் கத்துக்குட்டி வைத்தியன்களெல்லாம் சேர்ந்துகொண்டு குளோரபாரத்தை நிறையக்கொடுத்து ஆபரேஷன் செய்தான்களாம். ஆபரேஷன் சரியாகப் போச்சு; மயக்கத்திலிருந்து பெண் விழித்துக்கொள்ளவே இல்லை.”

“ அந்த டாக்டரை யெல்லாம் ப்ராஸிக்யூட் பண்ணினால் என்ன?”

“ யார் பண்றது? என்னத்துக்காகப் பண்றது? பெண்ணோ போயிடுத்து. இன்னம் பணத்தைக் கொட்டி அழுது கோர்ட்டுக்கு வேறே போகணுமா?”

"அதுவும் சரிதான்; இருந்தாலும்........."

"போன வருஷந்தான் கல்யாணம் ஆச்சாண்டா! மூவாயிரம் ரூபாய் கடன் வாங்கிக் கல்யாணம் பண்ணிஞாம். இன்னும் கடன் முழுவதும் அடைஞ்சபாடில்லே. அதுக்குள் பெண்ணே போயிடுத்து!"

"பெண்ணுக்குப் பதில் அந்தக் கடன்காரனுக்கு நெருப்புப் போடக்கூடாதா என்றிருக்கும் அவருக்கு!"

"என்ன பண்றது? பெண் வந்ததுபற்றி எவ்வளவு பெருமைப்பட்டார் தெரியுமோ அவர்? என்னவோ, இந்தப் பெருமையிருந்தால் கடவுளுக்கே பொறுக்காது போலிருக்கு. மனித ஆசையைப் பங்கப்படுத்துவதில் ஈசனுக்கு ஏனே இந்தப் பிரேமை! சாஸ்திரியார் இருந்தாரே - உங்க தாத்தா, அவர் இரண்டு பிள்ளைகளும் மன்மத ஞட்டமா யிருக்கும்; ஆனல் ஒரே மக்கு; ஒண்ணுக்காவது மெட்றிகுலேஷன் கூடப் பாஸாக மாட்டேனென்று விட்டது. ஆனல் அவர்களிடம் சாஸ்திரியாருக்கு என்ன ஆசை! என்ன பெருமை! ......கடவுளுக்கே சகிக்கவில்லே. ஒருத்தன் இருபது வயதிலே போய்விட்டான். இன்னெருத்தன் இருபத்திரண்டாவது வயதில் போயிட்டான்.... சாஸ்திரியாருடைய ஜோரும் அத்துடன் போய்விட்டது. அவர் வாழ்விலே உற்சாகமில்லே.........நான் அப்போது இதைப்பற்றி எண்ணிப் பார்த்திருக்கிறேன். இருந்தாலும் என் பெண்ணிடம் எனக்கிருந்த பெருமை..........." அவர் கண்கள் நிறைந்தன; உதடு துடித்தது; மேலே பேச முடியாமல் தவித்தார்.

"என்னவோ போ! நமக்கு எட்டாதது எத்தனையோ இவ்வுலகில் இருக்கிறது. சாவையும் வாழ்வையும் பற்றி யோசித்துக்கூடப் பிரயோசனம் இல்லே. ஒருகோடிகூட நம்மால் காணமுடியாது" என்று தத்துவம் படித்தேன் நான்.

இரண்டு நிமிஷம் அப்பா ஒன்றும் பேசவில்லை. நான் மறுபடியும் பேச ஆரம்பித்தேன், "நான் நேற்று ஒரு கதை வாசித்துக்கொண் டிருந்தேன். பாக்தாத்தில் ஒரு பணக்காரன் தன் வேலைக்காரனைக் காலையில் சந்தைக்கு ஏதோ வாங்கிவர அனுப்பினான். வேலைக்காரன் பத்து நிமிஷத்தில் உள்ளம் பதைபதைக்க மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்க யஜமானிடம் வந்து, 'சாமி! சந்தையில் நான் இன்று எமனைக் கண்டேன்! அவன் என்னை ஒரு விதமாக உற்றுப் பார்த்து முகத்தைச் சுளித்தான். நான் பயந்துவிட்டேன். இன்று நான் பாக்தாத்தில் தங்கினால் எமன் என்னை அழைத்துப் போய்விடுவான் என்றே தோன்றுகிறது. யஜமானே! தாங்களே வழிகாட்ட வேண்டும். நான் ஆயிரம் மைல் களுக்கப்பால் இருக்கும் சமாராவுக்குப் போய்விடுகிறேன்; எமன் என்னைத் தேடி அவ்வளவு தூரம் வரமாட்டான். தங்கள் லாயத்திலிருக்கும் அதிவேகமான குதிரை யொன்றைத் தரவேணும்' என்று காலில் விழுந்து கெஞ்சினான்."

"பைத்தியக்காரன்!" என்றார் எங்கப்பா.

நான் மேலே கதையைச் சொன்னேன்: "யஜமானும் வேலைக்காரனிடம் அனுதாபங் கொண்டு தன் குதிரையில் மிகச்சிறந்தது ஒன்றின் மேலேற்றி அவனைச் சமாரா நோக்கி அனுப்பினான். பின்னர் யஜமானே சந்தைக்குச் சென்றான். அங்கே அவன் எமனைக் கண்டதும், 'நீ ஏன் இன்று காலை என் வேலைக்காரனைப் பயமுறுத்தினாய்?' என்று கேட்டான். எமன் அதற்கு, 'நான் அவனைப் பயமுறுத்தவில்லை. நான் இன்று மாலை ஆறு மணிக்கு அவனைச் சமாராவில் சந்திப்பதாக ஏற்பாடு செய்திருந்தேன். அவன் இன்று காலை வரையில் பாக்தாத்தில் இருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தேன்' என்றான்.

"அசடன்! வேலைக்காரன் எமனை ஏமாற்றிவிட்டு ஓடி விடுவதாக எண்ணிக்கொண்டு அவனைத் தேடிக் குறிப்பிட்ட இடத்தில் சந்திக்கவே கிளம்பி யிருக்கிறான். ஆம், நாம் செய்யும் காரியங்களில் பல இதுபோன்றவையே. எல்லாத் தத்துவ விசாரமும் நமக்கு இதை அறிவுறுத்தவே பிரயோசனப்படுகிறது......ஹூம். காப்பி சாப்பிட்டாச்சோ?"

"இல்லை" என்று சொல்லிக்கொண்டே எழுந்து மாடிக்குப் போனேன்.

கையில் சூடு ஆறிக்கொண்டிருந்த காப்பியுடன் காத்துக் கொண்டிருந்தாள் ராஜி; "சட்டைகூடக் கழற்றாமல் என்ன பேச்சு?" என்று கோபித்துக்கொண்டாள்.

காப்பியைக் கையில் வாங்கினபடியே சிரித்தேன்.

எங்கள் மாடி வராந்தாவிலிருந்து பார்த்தால் எதிர் அகம் தெரியும். ராஜி வராந்தாவில் போய் நின்றுகொண்டாள். நான் சட்டையைக் கழற்றிவிட்டுக் கையில் காப்பியுடன் பின் தொடர்ந்தேன். ராஜி அந்தப் பெண்ணைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள்:

"பாவம், பதினஞ்சு வயசுலே போறதுன்னா? பாவந்தான்! இந்தக் காலத்தில் சுமங்கலிக் கிழவிகள், எழுபது வயதில் நெற்றியுங் குங்குமமுமாய் மஞ்சள் புடைவையுடன் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்! அது மாதிரி ஒரு கிழவி இருந்தால் வீட்டுக்கே மங்களகரமா யிருக்கு. இப்போல்லாம் பூவும் பிஞ்சுமாய்......வந்துவிட்டாளா வாசல்லே முண்டை! குடியிருக்கிற ஆத்துலே கிளியாட்டமா ஒரு பெண் போயிடுத்து. அழகாத் தலையை வாரிப் பின்னிண்டு, பொட்டு வைத்துக்கொண்டு, வாசல்லே பூவும் மணமுமாக வந்து நிற்கிறாள் தேவடியாள்!" என்று வசை மாரி பொழிய ஆரம்பித்தாள்.

யாரை என்றறிய நான் அவள் பக்கம் போய் நின்று பார்த்தேன். எதிர்வீட்டில் போலீஸ்காரருடன் ஒட்டுக்

குடியிருந்த ஸ்டோர்ஸ்காரரின் மனைவி கோமளம் வழக்கம் போலக் காட்சி அளித்தாள். அவள் பார்க்கக் கொஞ்சம் அழகா யிருப்பாள். நல்ல சிவப்பு; நீண்டு கறுத்த கூந்தல்; அழகிய உருண்டையான முகம். மூன்று குழந்தை பெற்றெடுத்தவள் எனினும் பதினாறு வயதுச் சிறுமிபோல் இருப்பாள், நடப்பாள், நிற்பாள்.

"போறவா போனு இருக்கிறவா நன்னாயிருக்க வேண்டியதுதானே!" என்றேன் நான்.

"லீலா நேத்துத்தான் சொன்னாள்: அந்த முண்டையைத் தேடி வருகிற ஆனுக்குக் கணக்கு வழக்கில்லையாம்; ஆனுக்கொரு புதுப்புடைவை கொண்டுவந்து தரான். கட்டிண்டு மினுக்கறாள்."

"உங்க லீலா ரொம்ப யோக்யந்தான்."

"நீங்க கோமளத்துக்குப் பரிஞ்சுண்டுதான் பேசுவேள்; பேசமாட்டேளா! பொம்மனாட்டி கொஞ்சம் அழகா யிருந்தால் புருஷாள்ளாம் பல்லைக் காட்டமாட்டேளா?"

"அந்தச் சாவித்திரி செத்ததற்காக இவளை என்ன பண்ணச் சொல்லறே?"

"எனக்குக்கூட இன்னிக்குத் தலைவாரிப் பூ வச்சுக்க மனசில்லை; அவாத்திலே குடியிருந்துண்டு இப்படிப் பண்றாள். அவள் கட்டேலே போக! ராத்திரி பிரேதத்தை எடுத்துண்டு வந்தால் உள்ளே வரக்கூடாது என்றுகூடச் சொல்லுவாள் அவள்."

"இன்னும் ஆஸ்பத்திரியிலிருந்து எடுத்துண்டு வரவில்லையா?"

"இல்லை. ராத்திரி எட்டு மணிக்கு மேல்தான் கொண்டு வரப் போறாளாம். பொணம் ரேழியில் கிடக்க இந்தத் தேவடியாள் தன்னைத் தேடி வந்த ஆளை அழைச்சுண்டு உள்ளே போயிடுவாள். என்ன வேண்டிக்கிடக்கு?" என்றாள் ராஜி.

"அவ எப்படியாவது போறா; நமக்கென்ன?" என்றேன் நான்.

"அப்பா இன்னிக்குச் சாயங்காலம் காப்பி கூடச் சரியாகச் சாப்பிடல்லே. பாதி டம்ளர் மீதி வச்சுட்டார்...அடேடே! உள்ளே வாணலியில் கறி, கரியா யிருக்கும்!" என்று சொல்லிக்கொண்டே கீழே ஓடிவிட்டாள்.

அன்று அப்பாவுக்கிருந்த மனோ நிலையில் அவர் தாமாக எங்கும் கிளம்பமாட்டார் என்று எண்ணி, நான் அவரையும் அழைத்துக் கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பினேன். அவரைப் பீச்சுப் பக்கம் அனுப்பிவிட்டு நான் மவுண்ட் ரோட் பக்கம் போய் இரவு எட்டரை மணிக்குத்தான் வீடு திரும்பினேன். அப்பா நான் வந்ததற்கு அப்புறம் கால்மணி கழித்துத்தான் வந்தார்; சமாசாரப் பத்திரிகை வாங்கிக்கொண்டு வந்தார். சாப்பிட்டுவிட்டுப் பத்திரிகை பார்த்துக் கொண் டிருக்கையில், இரவு ஒன்பதரை மணிக்கு எதிரகத்தில் ஒற்றை மாட்டு வண்டியில் 'சாவித்திரி' வந்து இறங்கினாள்; ரேழியில் கிடத்தப் பட்டாள். அவள் தாயும் பாட்டியும் கம்மிய குரலில் துக்கந் தாளாமல் சப்தஞ் செய்ய முடியாமல் திணறினர். அவர் தகப்பனார் வாய் திறவாமல் தலையைத் தம் கைகளில் தாங்கிகொண்டு திண்ணையில் உட்கார்ந்திருந்தார். நான் வாசித்துக்கொண்டிருந்த பேப்பரைக் கீழே வைத்துவிட்டு வேடிக்கை பார்க்க வெளி 'கேட்டைத்' திறந்துகொண்டு தெருவில் போக முயன்றேன்.

அப்பா அழைத்தார்; "இங்கே வா ராஜா, பாவம்! அதைப் பார்க்கப் போவானேன்?" என்றார். அவருக்குப் பழைய ஞாபகங்கள் மறுபடியும் வந்து மூளாமலிருக்க நான் அருகிலிருந்தால் தேவலை என்று எண்ணினார்போலும்!

"கிராமத்தில் என்றால், தெருவில் யாராவது செத்துக் கிடந்தால் யாரும் சாப்பிடக்கூடாது என்று கட்டுப்பாடு.

செத்தவர்களின் ஆப்த சிநேகிதர்களே பிணத்தைத் தூக்க வேணும். பட்டணத்தில் அதெல்லாங் கிடையாது! நமது சாவிலேகூட நாகரிகம் வந்துவிட்டது!" என்றார்.

"ஆஸ்பத்திரியிலேயே வைத்து எடுக்கக்கூடாதோ! வீட்டுக்கு எடுத்து வருவானேன்? கூடக் குடியிருப்பவர்கள் ஆக்ஷேபணை செய்தால்..."

"கஷ்டந்தான். ஆனால் கூடக் குடியிருப்பவர்கள் இந்தச் சமயத்திலெல்லாம் ஆக்ஷேபணை சொல்வார்களா என்ன?"

"அவர்களுக்கு இடஞ்சல்தானே?" என்றேன்.

"ஆமாம். ஏழையா யிருந்தால் எல்லாக் கஷ்டமுந் தான்."

இந்தச் சமயம் எதிர் வீட்டில் அழுகை இன்னும் பலமாக ஆரம்பித்தது. அப்பா, "என்னத்துக்கு இப்படி அழறது? இனிமேல் என்ன பிரயோஜனம்? பாவம்! அந்தப் பிராமணன் காலம்பர முதல் சாப்பிடவில்லை. மந்திரியானம் யாராவது தீர்த்தங்கூட வேணுமானால் கொடுப்பாரில்லை. நான் துக்கம் விசாரிக்கலாமோ என்று எண்ணினேன். ஆனால் நான் விசாரித்து என்ன பிரயோஜனம்?" என்று பெருமூச்சு விட்டார்.

"நாளைக்கு அவன் வந்துதான் நெருப்புப் போடணும்; எப்போ வரானோ?"

"யார் வந்தா என்ன? எனக்கு என்னவோ அவா படற துக்கத்தைக் காண ஸஹிக்கவில்லை. அந்தப் பாழும் எமன் என்று ஒருவனிருந்தால் அவனுக்கு எப்படித்தான் ஸஹிக்கிறதோ!"

"எமன் இங்கே நின்னால்தானே! வேறு யாரையாவது அழைக்க எங்காவது போயிருப்பான்."

"இவனுக்குப் பதில், உலகத்தில் பற்றுதல் இல்லாத ஒருவன் எமனிடம், 'என்னை அழைத்துப் போ; நான் வறேன்,

இவளை விட்டுவிடு' என்று சொன்னால் ஏன் அவன் கேட்கக் கூடாது. அவனுக்கு என்ன நஷ்டம்?"

"அப்படிச் சொல்லக் கூடியவர்கள் யார்? இதோ எதுத் தாத்தில் அழுதுகொண் டிருக்கிறார்களே அந்தப் பெண்ணுக் காக, அவர்களில் யாராவது தங்கள் உயிரைத் தியாகஞ் செய்யத் தயாராக இருப்பார்களா? அவள் தாய்? அவள் தகப்பன்? அவள் தம்பி? அவள் கணவன்? - யார்?"

"ஒருவன் தியாகஞ் செய்து அவள் பிழைத்துக்கொண் டால் தன்னைப்பற்றிய வரையில் லாபமில்லை யென்பதற்காகத் தியாகஞ் செய்யத் தயாராக இருப்பதில்லை. மனைவி இறக்கக் கணவன் தன் ஆயுளில் பாதியை அவளுக்குத் தத்தஞ் செய்து அவளை மீட்டான் என்று கதையில் கேட்டதில்லையா? அது யாரும் செய்யத் தயாராக இருப்பான்."

"நிஜந்தான். இறந்தவளுடைய உறவினர்தாம் அந்தத் தியாகஞ் செய்யத் தயாராக இருக்கவேணும் என்று என்ன அவசியம்? தெருவில் போகிற யாராவது, நம்மைப்போல் அன்னியன், அவர்கள் துக்கங் கண்டு பரிதாபங் கொண்டு, தன் வாழ்விலே இன்பங் காணுதவனாய்த் தன் உயிரைக் கொடுத்து ஓர் இளம் உயிரை மீட்கத் தயாராக இருக்க லாம்."

"ஏன் இருக்கக்கூடாது? ஆனால் அபூர்வ மனிதன் என்றே அப்படிப்பட்டவனைச் சொல்ல வேணும். எனக்கு வாழ்விலே பிடிப்புக் கிடையாது; நான் உயிருடனிருந்து இனிப் பிரயோஜனம் என்ன? ஆனால் என்னை இப்படிப்பட்ட தியாகஞ் செய்யச் சொன்னால் நான் தயங்கத்தான் தயங்கு வேன். நான் மஹாத்மா அல்ல" என்றார் அப்பா.

"நல்ல வேளை!" என்றேன் நான்.

"மாடியில் அவள் தனியாய் இருக்காள். பயப்படப் போறா. நானும் படுத்துக்கத்தான் போறேன். நீ போ!"

நான் மாடிக்குப் போனேன். ராஜி வராந்தாவில் நின்றுகொண்டிருந்தாள்.

"அப்பாவுக்கு ரொம்ப மனசுக்குக் கஷ்டமாயிருக்கு" என்றேன் நான்.

"இன்னிக்கிச் சரியா சாப்பிடவே இல்லே."

"நாம் என்ன பண்றது போ. போய்ப் படுத்துக்கோ, போ. நான் கொஞ்ச நாழி எழுதிவிட்டு வருகிறேன்" என்றேன். அவள் படுக்கப் போகும்போது மணி பத்திருக்கும். நான் இரண்டு மணி நேரம் எழுதிக்கொண்டிருந்தேன். மணி பன்னிரண்டு அடிக்கும்போது மாடி வராந்தாவுக்குப் போய்ப் பார்த்தேன். எதிர்வீட்டு ரேழியில் ஹரிக்கன் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. விளக்குக்கருகில் சாவித்திரியின் அம்மா உட்கார்ந்திருந்தாள். அவள் அப்பா திண்ணையில் சாய்ந்து கொண்டிருந்தார். உருவம் தெரிந்ததே தவிர, விழித்துக் கொண்டிருந்தாரா, தூங்கினாரா என்று தெரியவில்லை.

மெள்ளக் கீழே இறங்கிப்போய் விளக்கைப் போட்டுப் பார்த்தேன். அப்பா பாயில் காலைக் கட்டிக்கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்தவராக உட்கார்ந்திருந்தார். நான் விளக்குப் போட்டதும் திடுக்கென்று நிமிர்ந்து பார்த்தார்.

"ஏன் அப்பா இன்னும் தூங்கவில்லே?"

"தூக்கம் வரவில்லே." குரல் துக்கத்தாலும் மனோவியாகூலத்தாலும் கம்மியிருந்தது.

"படுத்துக்கோயேன்" என்றேன்,

"நீயும் போய்ப் படுத்துக்கோ. நாழியாச்சு" என்றார். அவர் படுத்ததும் நான் விளக்கை அணைத்துவிட்டு மேலே போய்ப் படுத்தேன். படுத்ததுதான் தாமதம், தூங்கியும் விட்டேன்.

அரைமணிதான் தூங்கியிருப்பேன். அப்பா ஒரு மஹாரத்மா ஆகிவிட்டதாகக் கனவுகண்டு திடுக்கென்று விழித்

தெழுந்தேன். மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு சந்தடியில்லாமல் கீழே இறங்கிப் போய் விளக்கைப்போட்டுப் பார்த்தேன். அப்பா நிம்மதியாகத் தூங்கிக்கொண் டிருந்தார். அன்று இரவு எனக்கு அதற்குமேல் தூக்கம் பிடிக்கவில்லை. ஏதோ எழுத உட்கார்ந்தேன். அன்றிரவு முழுவதும் எழுதிக் கொண்டே இருந்தேன். பொழுது விடிவதற்குள் அப்பா என்ன பண்ணுகிறார் என்று பார்க்க நான் மூன்று தரம் கீழே இறங்கிப் போய்வந்தேன்.

விடியற்காலம் வராந்தாவில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து சற்றுக் கண் அயர்ந்திருப்பேன். எதிர்வீட்டில் அழுகையும் கூக்குரலும் கேட்டு விழித்துக்கொண்டேன். சாவித்திரியின் கணவன் வந்துவிட்டான். இருபத்தைந்து வயதிருக்கும். நடப்பது ஒன்றிலும் பட்டுக்கொள்ளாமல் அவன் தூர நின்றுகொண் டிருந்தான்; யாரோ தெருவில் வேடிக்கை பார்க்க வந்தவன்போல் காணப்பட்டான். அவன் செய்வதற்கு, சொல்வதற்கு, என்ன இருந்தது? ஏதோ அவன் வாழ்வில் ஓர் அத்தியாயம் முடிந்துவிட்டது; அவ்வளவுதான்.

கீழே இறங்கிப் போனேன். அப்பா திண்ணையில் உட்கார்ந்திருந்தார். என்னைக் கண்டதும், “அந்தப் பையனை நான் கும்பகோணத்தில் பார்த்திருக்கிறேன்” என்றார்.

“இருக்கலாம்.”

“நானும் துக்கம் விசாரித்துவிட்டுக் கூடப்போய் ஒரு முழுக்குப் போட்டுவிட்டு வருகிறேன்” என்றார்.

நான் தடுத்துக் கூறவில்லை.

எதிர்வீட்டில் ஏற்பாடெல்லாம் விமரிசையாக நடந்தது. காலை எட்டு மணிக்குப் பல்லக்குக் கிளம்பிற்று. சாவித்திரியின் கடைசிப் பிரயாணம் ஆரம்பமாயிற்று. சிவிகைக்குப் பின்னால் ஏழெட்டுப் புருஷர்கள் நடந்தனர். அதில் அப்பாவும்

கலந்துகொண்டார். அதற்குப் பின்னுல் ஒரு சிறு கோஷ்டி பெண்கள். நானும், ராஜியும் மாடி வராந்தாவிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தோம்.

"இவரும் எதுக்குப் போகணும்?" என்ருள் ராஜி.

"போயிட்டு வரட்டுமே. அதனுல் என்ன?" என்றேன் நான்.

ஆனுல் என் மனத்தில் இருந்த கலவரம் அப்பா திரும்பி வரும்வரையில் நீங்கினபாடில்லை. அவர் திரும்பிவந்து, மறுபடியும் ஒருதரம் ஸ்நானஞ் செய்துவிட்டு வழக்கப்படி சாப்பிட்டான பிறகுதான் எங்கள் அப்பா ஒரு மஹாத்மா அல்ல என்று அறிந்து என் மனம் நிம்மதி அடைந்தது!





# நொண்டிக் குழந்தை

[சி. சு. செல்லப்பா]

## 1

மாலை வெயில் மங்கிக்கொண் டிருந்தது. பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பிய குழந்தைகள் புஸ்தகங்களை வீசி எறிந்துவிட்டுத் தெருவில் ஒரு வீட்டு வாசல்முன் கூடி எல்லை கடந்த உற்சாகத்துடன் தங்களுக்கு வழக்கமான கண்ணு மூச்சி விளையாட்டில் ஈடுபட்டன. திடீர் திடீரென அவர்க ளிடையே தகராறுகளும் அபிப்பிராய பேதங்களும் முளைத்து எழுந்து மறைவது அதிக வேடிக்கையாக இருந்தது.

திண்ணையில் உட்கார்ந்து ஞானம் மற்றக் குழந்தை களின் உற்சாக ஓட்டங்களில் லயித்துப்போய் ஸ்வாரஸ்ய மாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அடுத்த திண்ணையில் தான் மீனு உட்கார்ந்து கண்களைப் பொத்திக் கொண்டிருந் தாள். குழந்தைகள் எல்லாம் பதற்றத்தில் ஒளித்துக் கொள்ள இடம் தெரியாமல் தெருவில் ஓடித் தத்தளித்துக் கொண்டு இருக்கும். புது இடம் தெரியாமல் பழைய இடத்திலேயே ஒளிந்து அகப்பட்டுக் கொண்டவண்ணமாக இருக்கும். இந்தச் சமயம் ராதா; அடுத்தமுறை அலமு; மறுபடியும் ராதாவின் முறை; பிறகு ஸீதா, லக்ஷ்மி - இப்படி யாகச் சட்டுச் சட்டென்று மாறிக்கொண்டே இருக்கும்,

திரைப்படக் காட்சிகள்போல். ஒரு குழந்தைக்கும், சூசகமாக ஒளிந்து அவ்வளவு சாமர்த்தியமாக அலைக்கழிக்கத் தெரியாது.

ஞானம் விளையாட்டையே பார்த்துக்கொண்டிருந்தான். அவர்களோடு கலந்து தானும் விளையாட முடியவில்லையே யென்று அவன் குழந்தையுள்ளம் கற்பனை செய்துகொண்டிருந்தது என்பது அந்தக் குழந்தைகளுக்கு எப்படித் தெரியும்?

விளையாட்டு ரசனையில் ஞானம் ஈடுபட்டிருந்த மனநிலையில் கையில் பிடித்துக் கன்னத்தில் பதித்துக்கொண்டிருந்த சிலேட் அவனை அறியாமல் தவறிவிட்டது. சமாளித்து அதைப் பிடிக்கப் போனவன் கைவீச்சுக்கு மிஞ்சிவிடவே கைகளைப் பின்னரித்துக் கொண்டான். மறுவிநாடி சிலேட் கீழே கிடந்தது. அவன் கைகள் அந்த நட்டநடுவே உயர்ந்த திண்ணையின் உயரத்தை அளந்து நின்றன. அதை எப்படி எடுப்பது? பரக்கப் பரக்க விழித்துக்கொண்டே விளையாட்டுச் சிறுமிகள் இருந்த அடுத்த திண்ணைப்பக்கம் பார்வையைத் திருப்பினான். சிலேட் விழுந்த சப்தம் கேட்ட குழந்தைகளும் அதே சமயம் அவன் பக்கம் பார்த்தன.

"யாராவது இந்தச் சிலேட்டை எடுத்துக்கொடுக்க மாட்டேளா?" என்று ஞானம் அவர்களைப் பார்த்துக் கேட்டான்.

அவன் வாய்திறந்து கேட்கவும் குழந்தைகள் பயந்து போய் விட்டன. இதுவரை அவனோடு அவை பேசினதே இல்லை; அவன் இருந்தபக்கமே அவை போனது இல்லை. ஒன்றை ஒன்று ஏதோ ஒருவித அர்த்த புஷ்டியுடன் பார்த்துக் கொண்டன. ஒவ்வொன்றின் முகத்திலும் பீதிக்குறிகள் கிளம்பின. தயங்கித் தயங்கிப் பின்னுக்குப் பதுங்கின. அந்தச் சமயத்துக்கு விளையாட்டு நின்றுபோய்விட்டது.

குழந்தைகளின் தயக்கத்தைக் கவனித்த ஞானம், "மாட்டேளாடி?" என்று சிலேட்டுப்பக்கம் கை நீட்டிக் கேட்டான். அவன் பார்வை பரிதாபமாக இருந்தது.

ஆனால் இந்தக் கெஞ்சுதல்கூடக் குழந்தைகள் மனத்தைத் தொடவில்லை. சிறுமிகளின் மனம் பயத்தால் நிரம்பி இருந்தது. ஞானத்தை நெருங்குவதே ஆபத்தென்ற ஓர் எண்ணம் அக் குழந்தைகளின் மனத்தில் ஸ்திரப்பட்டு இருந்தது.

"நான்போய் எடுத்துக் கொடுக்கமாட்டேண்டி அம்மா!" என்று இரண்டு மூன்று சிறுமிகள் நிர்த்தாக்ஷிண்யமாகக் கூறி அப்புறம் போய்விட்டனர்.

"அம்மாடி! எனக்குப் பயமா இருக்கு!" என்று ராதா கண்களை விரிய வைத்துக்கொண்டு சொன்னாள்.

திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருந்த மீனா இதைக் கவனியாமல் இல்லை; "ஐயோ, பாவம்! எடுக்க முடியாமல் திண்டாடுகிறது பாருடி" என்று இடம் நகராமலே பயம் கலந்த தொனியில் இரக்கத்தோடு பேசினாள்.

அவள் வாய் அநுதாபங்கூட இரண்டொரு சிறுமிகளுக்கு அதிகமாகப் பட்டது. "போடி போ, காலைப் பாரு: கோரமாக இருக்கு" என்றாள் அலமு.

"ஆமாண்டி, அதன் கிட்டக்கப்போனால் எல்லாரையும் கிள்ளிவிடுகிறதாம். பைத்தியமும் வேறேயாண்டி!" என்று இன்னும் ஒரு சிறுமி தன் யூகத்தைக் காட்டினாள்.

இதுதான் குழந்தைகள் ஞானத்தைப்பற்றி நினைத்திருந்ததெல்லாம்.

ஞானம் பிறந்து ஆறு கோடைகளைப் பார்த்திருக்கிறான். ஆனாலும் அவன் இன்னும் நடை பழகவில்லை. ஏன், - நிரந்தரமாகவே அந்த ஜீவன் பாதங்களைத் தளத்தில்

ஊன்றி அடியெடுத்து வைக்க முடியாது. பிரம்ம சிருஷ்டிக்கு மாற்று ஏது? வேஷ்டி விளிம்பிற்கு மேலாக வாழைப்பூ முனைபோல் கூம்பிப் போய் எலும்பு இல்லாத சதைப் பிண்டமாகப் பாதங்கள் வெளிக்காட்டி நிற்கும். அந்தக் கோரந்தான் குழந்தையுலகத்தோடு அவனுக்குத் தொடர்பே இல்லாமற் போகும்படி செய்துவிட்டது.

ஞானம் என்ற அழகான பெயர் அவனுக்கு இடப்பட்டிருந்தும் நொண்டிப்பிள்ளை என்றுதான் ஊரார் அவனைப் பற்றிப் பிரஸ்தாபித்தார்கள்.

தன் சிருஷ்டி கோரத்தின் கடுமையை அவனால் பூரணமாக உணர முடியவில்லை. இதர குழந்தைகள் அறிந்து வித்தியாசம் பாராட்டின.

ஓடி ஓடி விளையாடின குழந்தைகளின் விளையாட்டில் ஈடுபட்ட ஞானம் குதூகலம் அடைவான். துள்ளிக் குதிக்கும் பாதங்களைப் பார்த்துப் பரவசம் அடைந்துகொண்டே கண்களைத் தன் பாதத்தின் பக்கம் திருப்புவான். அவனுக்கே புரியாத ஒருவிதச் சந்தேகம், தெளிந்து நிலைக்காத ஒரு வேதனை, நிழல்போலத் தோன்றும். அடுத்த க்ஷணம் அந்த நினைப்பு அழிந்து விளையாட்டுக் கவனம் வந்துவிடும்.

ஞானத்தை விட மீனுவுக்கு ஒருவயது அதிகம் இருக்கும். எட்டி நின்று ஞானத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். ஞானத்தின் பரிதாபமான பார்வையையும், அவன் கைக்குத் திரும்பக் கிடைக்க வழி இல்லாமல் கீழே கிடந்த கிலேட்டையும் மாறி மாறிப் பார்க்க ஆரம்பித்தாள். அவள் மனம் கிளர்ச்சி அடைந்தது. 'ஐயோ, பாவம்! அவனால் அந்தத் திண்ணையிலிருந்து இறங்கி எப்படி அதை எடுக்கமுடியும்? நடக்க முடியாதே பாவம்!' என்ற நினைவு ஊறியது சிறுமி மீனுவுக்கு.

"பாவம் எடுத்துக் கொடுத்துடுவோம்" என்று சொல்லி முடிப்பதற்குள் குழந்தைகள் அவள்மீது சீறி விழுந்தன.

மீனு தயங்கி நின்று யோசித்தாள். அவளுக்கும் உள்ளூற ஞானத்தை நெருங்குவதற்குப் பயம். ஆனால் நொண்டிப் பிள்ளையின் கெஞ்சும் பார்வை அவள் மனத்தில் தைத்து விட்டது. அந்தச் சில நிமிஷங்களுக்குள் பலவிதமான சிந்தனைகள் அவள் மனத்தில் குறுக்கிட்டு ஓடின. 'எடுத்துக் கொடுப்பதா? வேண்டாமா? ஐயோ பாவம்! - கிட்டப் போனதும் ஏதாவது பண்ணிவிட்டால்? ஹூ ஹூம்; தள்ளியே நின்று கொடுத்துவிட்டு வந்து விடுவோமே! இல்லாவிட்டால் திண்ணைமேல் வச்சுட்டு வந்துவிடுகிறேன்' என்றெல்லாம் நினைத்துக்கொள்ளுவதனால் முகக்குறி அடிக்கடி மாறிற்று.

அதே சமயம் மீனுவைப் பார்த்து ஞானம் கையை அலைக்கவும் அருகில் நின்ற குழந்தைகள் அவளை, "போகாதேடி" என்றதைக் கூடக் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை; கூட்டத்திலிருந்து விர்ரென்று பாய்ந்து ஓடினாள்; பரபரப்புடன் சிலேட்டை எடுத்துத் திண்ணை விளிம்பில் ஒருபக்கம் தடாலென்று வைத்துவிட்டுத் திரும்பவும் சகாக்களுடன் சேர்ந்துகொண்டாள்.

இதைச் செய்யும்போது அவளுக்கு இருந்த பயத்தில், "மீனு! மீனு!" என்று ஞானம் கூப்பிட்டதுகூட அவள் காதில் விழவில்லை.

மீனுவின் முகத்தில் ஒரு பெரிய காரியத்தை, மற்றக் குழந்தைகள் செய்யத் தவறிய ஒரு கடமையை, செய்து விட்ட ஒரு கர்வம், திருப்தி, இருந்தது அப்போது.

## 2

மற்றச் சிறுமிகள் அவளை ஒருதரம் விறைத்துப் பார்த்துவிட்டு மீண்டும் விளையாட்டில் ஈடுபட்டனர். சிலேட்

டைக் கையில் வாங்கிய ஞானம் மறுபடி ரசனையில் ஈடுபட்டான். ஆனால் அவன் பார்வை இப்போது பெரும்பாலும் மீனாவின் ஓட்டத்திலும் உருவத்திலுமே லயித்திருந்தது.

குழந்தைகளின் மனத்தில் எந்தவிதமான உணர்ச்சியும் நிரந்தரமாகத் தங்குவதில்லை. வளர வளரத்தான் மனிதன் குரங்காகிறான். எதிலும் தன் பிடிவாத முத்திரையைப் பார்ப்பதில் அவன் மனம் உற்சாகம் அடைகிறது. குழந்தைகள் உரண்டை இட்டுக்கொள்வதும் ஒத்துப்போவதும் எவ்வளவு சுலபம்! எவ்வளவு சீக்கிரம்!

குழந்தை யுலகத்துடன் ஞானத்துக்குத் தொடர்பு ஏற்படுவதற்கு மீனாதான் காரணமாக இருந்தாள், மீனாவுடன் ஞானத்துக்குப் பழக்கம் ஏற்பட அந்தச் சம்பவம் காரணமாக இருந்ததுபோல்!

சிறுமிகளது விளையாட்டு மும்முரமாக ஆக ஞானத்தின் உற்சாகம் அதிகரித்துக்கொண்டிருந்தது. ஒளியத் தெரியாமல் தவிக்கும் குழந்தைகளுக்குப் புதிய புதிய இடங்களைக் காட்டிக்கொண்டிருந்தான். முதலில் அவன் வார்த்தைகளைக் கேட்க மறுத்த குழந்தைகள் மீனா வழி வைத்ததும் கொஞ்சம் துணிவு கொண்டன. மீனாவுக்கு அவன் காட்டிய ஒளிவிடங்களைக் கண்டுபிடிக்க முடியாமல் தவித்த மற்றக் குழந்தைகளின் பொறாமையே அவர்களை அவனோடு நெருங்கச் செய்தது. கொஞ்சம் கொஞ்சமாகக் குழந்தைகள் மனத்தில் ஞானத்தைப்பற்றிய கோரசித்திரம் அழிந்துகொண்டே வந்தது. ஞானமும் தங்களைப்போல ஒருவன் என்ற நினைப்புத் தோன்ற ஆரம்பித்தது.

நீண்ட சிறைவாசத்துக்குப்பின் விடுதலையான கைதியின் நிலைமையில் இருந்தான் ஞானம். தனிமையில் தத்தளித்துப் பொருமிய அவன் ஹிருதயத்தைப் பல உள்ளங்கள் தொட்டுக் கரைக்க இழுத்தன. கட்டவிழ்த்து விடப்பட்ட

அவனது உற்சாகம் பல திசைகளிலும் ஓடிப் பாய்ந்தது. போகப் போகக் குழந்தைகளின் விளையாட்டில் ஞானம் பூரணமாக ஈடுபட்டுவிட்டான். ஓடி ஒளிய யோசனை கேட்கும் குழந்தைகளுக்குப் புதுப்புது இடங்களை எத்தனை விதவிதமாகக் காட்டிக்கொண்டிருந்தான் அவன்!

அந்த நிலைமையிலும் குழந்தைகள் எட்டி நின்றுதான் அவனிடம் யோசனை கேட்கும். மீனு ஓடி வந்து, "எங்கே டா ஒளிந்து கொள்ளட்டும்?" என்று ஆவலோடு கேட்கும்போது அவளுக்கு விசேஷமான ஒளிவிடம் காட்டுவதில் அவன் எவ்வளவு குதூகலம் அடைந்தான்! அவனை அறியாமல் மீனுவிடம் அவன் மனம் தனிச் சலுகை காட்ட ஆரம்பித்து விட்டது. மீனுதானே அவனைக் குழந்தைபுலகத்திற்குள் இழுத்துவிட்டாள்?

குழந்தைகள் யோசனை கேட்கும்போதும், கண்டுபிடிக்க முடியாமல் தவிக்கும்போதும் தானே அங்கங்கே சென்று ஓடிவிளையாடுவதாக நினைத்துக்கொண்டான் ஞானம். ஓடும் குழந்தைகளுடன் அவன் ஹிருதயமும் ஓடிச் சென்று அவர்களோடேயே திரும்பிவரும். விளையாட்டாலும் தன் யோசனைகளாலும் குழந்தைகள் அடைந்த ஆனந்தத்தைப்பற்றிக்கூட அவனுக்கு அக்கறை இல்லை. சுயநலத்துடன் தான் அதில் ஈடுபட்டிருந்தான். அந்த விளையாட்டிலும் யோசனையிலும் அவன் சந்தோஷம் அடைந்தான். அந்தத் திருப்திதான் அவனுக்குப் பெரிதாக இருந்தது. மாயக்கண்ணன் ரூபம்போல் அவன் ஹிருதயம் பல ரூபங்களாகப் பிரிந்து அவனை மகிழச் செய்துகொண்டிருந்தது.

ஓடும் குழந்தைகளின் அத்தனை கால்களும் தன்னுடையவை போன்ற உணர்ச்சிதான் அவன் வெறியுள்ளத்தில் பதிந்து கிடந்தது. அத்தனை கால்களும் அவனுடையனவாக இருக்கும்போது அவனுக்குக் கால்கள் இருந்தாலென்ன,

இல்லாவிட்டால்தான் என்ன? இந்தக் காட்சி நினைப்பில் அவன் தன் மனத்தைப் பறிகொடுத்திருந்தான்.

## 3

அன்றும் வழக்கம்போல் குழந்தைகள் விளையாட ஆரம்பித்தன. கொஞ்ச நேரந்தான் சென்றிருக்கும். அதுவரையில் அமைதியாக நடந்த விளையாட்டு, திடீரென்று நின்றுவிட்டது. ஞானத்தின் உற்சாகத்துக்கும் மகிழ்ச்சிக்கும் தடை கட்டுவதுபோல், அதுவரை கண்ணைமூச்சி பொத்திக்கொண்டிருந்த சிறுமி இனி முடியாதென மறுத்துவிட்டாள்; திண்ணையினின்று குதித்து ஓடித் தானும் ஒளியத் தயாரானாள்.

இனி யார் பொத்துவது? ஆட்டத்தில் ஓடியாடி நேரடியாகக் கலந்துகொள்வதில் ருசிகண்ட சிறுமிகள் பொம்மைபோல் உட்கார்ந்து பொத்திக்கொண்டிருக்கத் தயாராக இல்லை. பல்லக்கு ஏற எல்லோரும் தயார்; சுமக்கமாத்திரம் தயாராக இல்லை.

ஞானத்தின் மனம் சஞ்சலப்பட்டது. விளையாட்டு நின்றது குழந்தைகள் மனத்தில்கூட அவ்வளவாகப் படவில்லை, சண்டை மும்முரத்தில்; சுய நலத்துடன் வேடிக்கை பார்த்து வயிற்று ஆத்மத் திருப்திகொண்ட ஞானத்துக்குத்தான் உறுத்தியது; உற்சாகம் குன்றியது. ஒவ்வொரு கூணமும் அவன் சாதகமான முடிவை எதிர்பார்க்கப் பார்க்க ஏமாற்றந்தான் அதிகமானது. அவன் வேண்டுகோள்களும் பயன்படவில்லை.

குழம்பிய மனத்துடன் கொஞ்சம் யோசித்தான். சரேலென்று அவன் முகம் பிரகாசத்துடன் மாறியது. அவன் கூவினான்: "மீனு; ராதா! நான் பொத்துகிறேன்; நீங்கள் ஓடி ஒளியுங்கோ!"

தன் ஆசையைக் கொட்டி இதைக் கூறிவிட்டு, அவர்கள் ஸம்மதத்தை எதிர்பார்த்து ஒவ்வொரு சிறுமியின் முகத்தையும் ஆவலுடன் நோக்கினான்; விளையாட்டைப் பார்க்க அவன் மனசு அவ்வளவு ஆத்திரப்பட்டது. ஒவ்வொரு குழந்தையும் தன் தன் விளையாட்டை ரசித்தது; ஞானமோ அத்தனை பேர் விளையாட்டையும் ரசித்தான்.

ஆனால் பழைய பயம் இன்னும் முழுதும் மறைந்து விடாத அந்தக் கோரிலைவு அந்தக் குழந்தையுள்ளத்தில் இருந்தது. அவர்கள் பார்வை அதைக் காட்டிக் கொடுத்தது. ஸம்மதிப்பதா? மறுப்பதா? அவர்களால் நிதானிக்க முடிய வில்லை. பழைய காப்பு மாறிவந்த நிலைமைக்கும், பயத்தின் சாயல் முற்றும் அழியாத நிலைமைக்கும் நடுவே கிடந்து அவை தத்தளித்தன. எல்லாக் குழந்தைகளும் மீனாவைப் பார்த்தன, அவள்தான் அந்தப் பிரச்னையைத் தீர்க்கவேண்டு மென எதிர்பார்ப்பதுபோல்.

மீனா ஞானத்தின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவன் ஆவற் கண்கள் அவளை ஸம்மதிக்கும்படி கெஞ்சுவதுபோல் இருந்தன. "நல்லதாப் போச்சு; வாங்கோடி, நித்தியம் அவனே பொருத்துவான்" என்று உற்சாகம் காட்டிச் சிறுமி களை இழுத்தாள் அவள். குழந்தைகளுக்கு அரைமனசு. ஆனால் அவசியமும் அவசரமும் அவர்களை விரட்டின.

"மீனா கிட்டப் போனபோது ஒன்றுமே செய்யவில் லையே!" என்றது ஒரு குழந்தை. அடுத்தடுத்து ஒவ்வொரு குழந்தையின் வாயிலும் அதே அபிப்பிராயத்தின் எதிரொலி கள் உண்டாயின.

மீனா முன் இழுக்க ஞானம் இருந்த திண்ணைப் பக்கம் முன்னால் காலெடுத்து வைத்தார்கள். பாதங்களின் கோரம் அவர்கள் கண்களில் பட்டது. கால்கள் பயத்துடன் மீண்டும் பின்வாங்கின.

அவர்கள் காலெடுத்து வைத்ததும், மீண்டும் பின்னரித்ததும் ஞானத்துக்கு ஒரு மாதிரியாக இருந்தன. என்ன தோன்றியதோ தெரியவில்லை, கால்களை இழுத்து வேஷ்டிக்குள் மறைத்துக்கொண்டான்; குழந்தைகளைப் பொத்துவதற்குத் தயாரானவன்போல் இருந்தான்.

"மீனு" என்று கைநீட்டிக் கூப்பிட்டான் ஞானம்.

மீனு ஓடிப்போய் அவன் முன்னின்று கண்ணாமூச்சிக்குத் தயாரானாள். குழந்தைகள் பயம் அதோடு ஒடுங்கிப் போய்விட்டது. நிரந்தரமாகக் கண்பொத்த ஓர் ஆள் கிடைத்துவிட்டான் அவர்களுக்கு. அவனால் ஓடி விளையாட முடியாது. அவர்களுக்கும் சண்டை ஏற்பட வழி இல்லை இனி!

"கண்ணாமூச்சி ரே ரே........."

4

இத்தனை வருஷங்களாக ஆடி இராத விளையாட்டு அத்தனையும் ஒரே அடியாக விளையாட விரும்பினவன்போல் வெறியுடன் கண் பொத்துவதில் ஈடுபட்டிருந்தான் ஞானம். உள்ளூற மக்கிப்போய்க் கிடந்த அத்தனை உற்சாகமும் அவன் மனத்திலிருந்து வெடித்துக் கிளம்பினதுபோல் இருந்தது.

மீனுவின் ஓட்டமும் உருவமுந்தான் அவன் கவனத்தை விசேஷமாக இழுத்துச் சென்றன. அவள் ஒளியும் இடம், தப்பும் வகை இவைகளையே கண்கள் பார்த்துக்கொண்டிருக்கும். தூரத்தில் அவள் ஓடி வரும்போது ஆர்ப்பரிப்பான். அவள் தப்புவதைக் கண்டு தானே தப்பிவிட்டதுபோல் பூரிப்புக் கொள்வான்.

விளையாட்டுப்போக்கில் மீனுவிடம் அவனுக்குத் தனிப் பற்றுதல் ஏற்பட்டுவிட்டது. அவனுடைய அத்தனை உற்சாகத்துக்கும் அவள்தானே காரணம்? மீனு பிடிபடாமல்

இருக்கவேண்டுமே என்ற கவலைதான் சதா அவனுக்கு. நடுநிலைமை வகிக்கவேண்டிய இடத்தில் பாரபக்ஷ எண்ணம் விழ ஆரம்பித்தது. ஆனால் அந்தச் சலுகையை ஆட்டத்தில் அவன் எப்படிக் காட்டமுடியும்?

மீனா சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று தரம் பிடிபட்டு விட்டாள். யாரையாவது பிடித்தால்தான் அவள் நிலைமை மாறும். ஓடவும் பிடிக்கவும் முடியாமல் இளைத்துப்போன அவள் முகத்தை ஞானம் கவனித்தான். அவன் முகமும் கலக்கம் காட்டியது. 'ஐயோ, யாராவது அகப்பட்டுக்கொள்ள வேண்டுமே' என்று உள்ளூறத் தெருக்கோடிப் பிள்ளையாரை வேண்டிக்கொண்டான். பயனில்லை. அந்த அல்ப எண்ணம் கூட அவன் மனத்தில் ஒவ்வொரு சமயம் தோன்றிவிட்டது: காட்டிவிடலாமா என்று. ஆனால் எப்படியோ தன் ஸ்தானத்தின் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொண்டுவிட்டான்.

மீனாவும் ஒருவாறு ஒரு சிறுமியைப் பிடித்துவிட்டாள்!

மறுமுறை மீனா ஒளிந்துகொண்டிருந்த இடத்திலிருந்து மெதுவாக எட்டிப் பார்த்தாள். அவளைத் தேடிய சிறுமியின் கால்கள் அவளை நோக்கிப் பாய்ந்தன. மீனாவை விரட்டினாள்.

தெருக்கோடியிலிருந்து குடல் தெறிக்க ஓடிவந்தாள் மீனா. வேகத்தில் அசைந்தாடும் அவள் பின்னலுக்கு நேராக விரட்டிய சிறுமியின் நீட்டிய விரல்கள் ஓடிவந்தன.

இன்னும் சில எட்டுக்கள்தான்! மீனா பிடிபட்டு விடுவாள்; சந்தேகமே இல்லை.

ஞானத்தின் மனசு பதைத்தது; அவள் அகப்படக் கூடாதெனத் துடித்தது. தான் பணம் கட்டிய பந்தயக் குதிரையின் ஓட்டத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவனைப் போலத் தவித்தான்.

“மீனா! மீனா! ஓடிவா!” என்று அடித்தொண்டையி லிருந்து கத்தினான். உட்கார்ந்தவாறே கைதட்டினான். தவ்வித்

தவ்வி எழுந்தான். விளையாட்டு வெறியுடன் மீனு மீதுள்ள கவலையும் கலந்தது. அவள் ஞாபகந்தான் அவன் மனசு முழுதும். தன்னைப்பற்றிய நினைப்பே அவ்வளவாக இல்லை!

மீனு கிட்ட நெருங்கிவிட்டாள்! இன்னும் சில எட்டுக்கள்தான் பாக்கி! அவனைத் தொட்டுவிடலாம்.

ஆனால் விரட்டிய சிறுமியின் வேகம் கொஞ்சமும் தளரவில்லை. மீனுவின் பின்னலைத் தொட்டால்கூடப் போதும்.

இடையிலுள்ள தூரம் இன்னும் குறைந்துவிட்டது!

தூரத்தின் அருகாமைப்புத் தாங்க முடியவில்லை. மீனு பிடிபடக்கூடாது என்ற ஆத்திரம் அவனை மெய்ம்மறக்கச் செய்தது.

“மீனு! மீனு! தொடு என் கையை, சீக்கிரம்!” என்று தன்னை அறியாமல் எழும்பிக் கையை நீட்டிவிட்டான். அவனுக்கு இருந்த ஆத்திரத்திலும் வெறியிலும், நீட்டிய கையைத் தொட்டுவிடமாட்டாளா என்ற ஆசையிலும், கால்கள் இருந்திருந்தால் இறங்கிக்கூட எதிர்த்து ஓடியிருப்பானோ என்னமோ?

வேகமாக எழும்பிவிட்டான், திண்ணை நுனியை மறந்து!

“மீனு தொட்டுட்......”—அவன் முடிக்கவில்லை.

பலத்த சப்தத்துடன் கீழே தரையில் யோகி உடல் சரிந்தது.

அப்போது அவனை ஓடித் தொட்ட மீனுவின் விரல்களில் அவன் சூம்பிய பாதந்தான் பட்டது!

# “என் மனைவி”

[ஜே. தங்கவேல், பி. ஏ.]

நானும் எத்தனையோ அற்புதமான சித்திரங்களை யெல்லாம் பார்த்திருக்கிறேன். ஆனால் அப்படி ஒரு சிருஷ்டியை இதுவரையில் கண்டதேயில்லை. என் வாழ்நாளில் எத்தனையோ கலாநிபுணர்களின் கைத் திறத்தை யெல்லாம் கண்டு வியந்திருக்கிறேன். ஆனால் அது என்னவோ சைத்திர மென்றே எனக்குத் தோன்றவில்லை.

இரண்டு வருஷங்களுக்கு முன்னே எங்களூரில் நடந்த சித்திரக் காட்சியில்தான் அதைக் கண்டேன். அங்கு வைக்கப்பட்டிருந்த சித்திரங்களை யெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்து அனுபவித்துக்கொண்டே வந்தேன். அந்தப் படத்தினிடம் வந்த உடனே எனக்கு உடல் சிலிர்த்தது. அதைக் கண்டவுடனே ஏதோ ஒரு சக்தி என்னைத் தாக்குவதுபோல் இருந்தது. மெய்ம்மறந்து அப்படியே நின்றுவிட்டேன். வெறும் சித்திரத்தைப் பார்ப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை; ஏதோ இன்பக் கனவு காண்பது போலத்தான் இருந்தது.

ஆமாம், அந்தச் சட்டத்துக்குள்ளே ஓர் அதிசயமான கனவுலகத்தைத்தான் சிருஷ்டித்து வைத்து விட்டான் அந்த மாயாவி. பச்சைப் பசேலென்று கண்ணுக்குக் குளிர்ச்

சியா யிருக்கும் மாஞ்சோலை. நடுவிலே கன்னிப் பருவத்தில் கால் வைத்திருக்கும் தனி மாமரம். வசந்தனின் மலரடி பட்டுப் பொங்கிச் சிரிப்பதுபோல் அது தளிர்விட்டுத் தழைத்திருந்தது. அதன் தாழ்ந்த கிளையொன்று தரையைக் குனிந்து முத்தமிட்டுக் கொண்டிருந்தது. அதன் மீதுதான் அந்த மாது, அந்தக் காட்சிக்கு அதிதேவதை, உட்கார்ந்திருந்தாள். சின்னஞ்சிறு மங்கையல்ல; சுமார் இருபத்தைந்து வயதிருக்கும். கடைசல் பிடித்தாற் போலிருந்த அவள் அங்கங்களிலே யௌவனம் பூத்துக் குலுங்கிக்கொண்டிருந்தது.

அதிகச் சிரமமில்லாமல் கோதி முடித்திருந்த கூந்தலில் இங்கும்அங்கும் இரண்டொரு கேசம் சுருண்டு பறந்துகொண்டிருந்தது. வாழைப்பட்டை மடித்ததுபோல் விழுந்திருந்த அந்த முடிச்சில் இரண்டு பச்சை இதழ்களோடு பெரிய குண்டுமல்லிகை யொன்றை ஒருபுறமாகச் செருகியிருந்தாள். காதிலே ஒரு சிறு கம்மல். கையிலே ஒரு மெல்லிய வளையல். கழுத்திலே தெரிந்ததும் தெரியாததுமாய் நூல் சரடு போல் ஓர் ஒற்றைச் சங்கிலி. பனி படர்ந்த தாமரை போன்றிருந்த அந்த மென்மையான மேனிக்கு இந்தப் பொன்னாபரணங்கள் பிரமாதமாக ஒன்றும் அலங்காரஞ் செய்து விடவில்லை. ஆனால் சிறிதாக அரக்குக் கரை போட்ட அந்தக் கறுப்புப் புடைவையும் சந்தனங் குழைத்துப் பூசியதுபோல் உடலோடு ஒட்டியிருந்த அந்த ரவிக்கையும் அவள் மேனியழகைப் பெரிதும் எடுத்துக்காட்டின.

சற்றுத் திரும்பினாற்போல் அலட்சியமாய்க் காலைத் தொங்கப் போட்டுக்கொண்டு அவள் உட்கார்ந்திருந்தவிதமே அலாதியா யிருந்தது. மடியிலே துவண்டு கிடந்த புடைவைத் தலைப்பைக் கைகளால் நிமிண்டிக் கொண்டிருந்தாள். கால் பெருவிரல்கள் ஒன்றோடொன்று உறவாடிக்கொண்டிருந்தன. தலையும் நாணத்தால் சற்றுக் குனிந்திருந்தது.

குனிந்ததனால் அந்த வதனத்தின் வனப்பு மறைந்து விடவில்லை; அமுதக் கடலிலே தோய்ந்தெழுந்து வரும் பனி நிலவைப்போல் அது பிரகாசித்துக் கொண்டிருந்தது. சற்றுக் கவிந்திருந்த இமைகளுக்கு இடையே சுழன்று வட்டமிட்ட அந்தக் கருவிழிகள் ஏதோ கவிதைக் கடலில் மிதப்பவை போலத்தான் இருந்தன. ரோஜா மொட்டு அவிழ்வதுபோல் லேசாகத் திறந்திருந்த அதரங்களுக்கிடையே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த பற்களும், அந்தப் பற்களிலே பதுங்கிக் கிடந்த முறுவலும் பஞ்சு போன்ற மேகக் கூட்டங்களுக் கிடையே பூரணசந்திரன் பதுங்கி நின்று நிலவுவீசும் காட்சியைத்தான் ஞாபகப்படுத்தின. புன்னகையிலே கலந்திருந்த குறும்பு அந்த முகமண்டலத்துக்கு இணையில்லாக் கவர்ச்சியை அளித்தது. அந்தக் கவர்ச்சியிலே காந்தம் வைத்திழைத்ததுபோல் லேசாகப் படர்ந்திருந்த சோகக் களை அதற்கு வர்ணிக்க முடியாத கவித்துவம் கொடுத்தது.

இதுதான் அந்தப் படத்திலே தீட்டப்பட்டிருந்த காட்சி. ஆனால் அதைப் படமென்று சொல்லவே எனக்கு வாய் வரவில்லை. அதில் அவ்வளவு ஜீவன் ததும்பிக் கொண்டிருந்தது. மரத்தின் இலைகளி லெல்லாம் பசுமை ஓடியிருந்தது. அந்தப் பெண்ணின் உடலிலே உயிரும் உணர்வும் துடித்தன. ஆமாம், அந்தக் கண்கள் சுழன்று வட்டமிடுவது நன்றாய்த் தெரிந்தது. கன்னத்திலே நாணத்தால் நரம்புகள் துடிப்பதும் தெரிந்தது. ஏன் - அந்தக் குண்டுமல்லிகையிலிருந்து இன்பமணங்கூட வீசியது. எனக்கென்னவோ, அந்த மாந்தோப்பில் எங்கோ ஒரு மூலையிலிருந்து ஒரு குயிற்பேடை குரலெடுத்துக் கூவுவதுகூடக் கேட்டது. உண்மையில் வர்ணத்தைக் கொண்டு தீட்டிய ஓவியமாகவே அது தோன்றவில்லை; காவிய அழகை யெல்லாம், கவிதைச் சுவையை யெல்லாம் குழைத்து ஏதோ ஒரு மாயத்தூரிகை கொண்டு

இழைத்த அதிசய சிருஷ்டி என்றுதான் தோன்றிற்று. அதைப் பார்க்கும்போது ஒரு பெண்ணின் படத்தைப் பார்க்கிறோ மென்ற உணர்ச்சியே எனக்கு ஏற்படவில்லை; ஏதோ அதிசய உலகில் கொலுவீற்றிருக்கும் சௌந்தர்ய தேவதையை நேரில் கண்டு அனுபவிப்பதுபோலவே இருந்தது.

சித்திரக்கலை யென்றாலே எனக்குப் பெரிய பைத்தியம். இப்படிப்பட்ட உயிரோவியத்தைப் பார்த்துவிட்டால் சொல்ல வேண்டுமா? வைத்த கண் வாங்காமல் மணிக் கணக்காகப் பார்த்துக்கொண்டு நின்றேன். கடைசியிலே, அதன் அடியில் எழுதியிருந்ததைப் பார்த்தபோதுதான் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. “என்ன! ‘என் மனைவி’ என்று எவனோ சுதந்தரங் கொண்டாடியிருக்கிறானே! உண்மையிலேயா இப்படி ஒருத்தி இருக்கிறாள்!” என்று திகைத்தேன். அடுத்தாற்போல ஒருவித அச்சமும் என் மனத்தில் எழுந்தது. “யாரோ ஒரு பெண்ணின் படத்தை-யாரோ ஒருவனுடைய மனைவியை - இத்தனை நாழிகையாக இப்படி முறைத்துப் பார்த்துக்கொண் டிருக்கிறோமே. யாராவது பார்ப்பவர்கள் என்ன நினைத்துக்கொள்வார்கள்?” என்று தோன்றிற்று.

உடனே அங்கிருந்து அகன்று பாக்கியிருந்த படங்களை ஒப்புக்காகப் பார்த்துவிட்டு வீட்டுக்குப் புறப்பட்டேன். அந்தக் கூடத்தின் வாயிலண்டை வரும்போது யார் அந்தச் சித்திரகாரப் பிரமன் என்று அறியவேண்டு மென்னும் ஆவல் எழுந்தது. அதற்குமேலே அந்தத் தேவமங்கையை மனைவியாகப் பெற்ற பாக்கியசாலி யாரென்று அறிய ஆத்திரமாயிருந்தது. ஆனால் திரும்பி மறுபடியும் அங்கே போனால் யாராவது ஏதாவது நினைத்துக் கொள்வார்களே யென்று மனத்தை அடக்கிக்கொண்டு வெளியே வந்துவிட்டேன்.

வழியெல்லாம் அதே யோசனையாக இருந்தது. வீட்டுக்கு வந்தபிறகும் அந்தப் படம் என் கண்முன்னேயே

நின்றுகொண் டிருந்தது. ஆவலை அடக்கமாட்டாமல் மறு நாள் மறுபடியும் காட்சிக்குப் போனேன். ஆனால் அந்தப் படத்தினருகில் போக எனக்குக் கூச்சமா யிருந்தது. முன் நாள் என்னைக் கவனித்தவர்கள் யாரேனும் அன்றைக்கும் என்னைப் பார்த்துவிட்டால் என்ன செய்வது? ஆயினும் உடனே ஒரு தைரியம் வந்தது. "சீ சீ! இது என்ன, படந்தானே? அந்த மாதிரி ஒரு பெண்ணாவது, உண்மையில் இருப்பதாவது! பிரம சிருஷ்டியில் அப்படி இருக்கவே முடியாது" என்று தோன்றிற்று. மற்றொருபுறம், "வெறுங் கற்பனையிலிருந்து இப்படி எங்கேயாவது சிருஷ்டிக்க முடியுமா?" என்று என் மனம் கேட்டது. "சரி, எதற்கும் போய்ப் பார்த்துவிட்டால் போகிறது" என்று ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு போனேன்.

போன உடனே மறுபடியும் என் மனம் அதில் லயித்து விட்டது. வெகுநேரம் நின்று பார்த்துவிட்டுக் கடைசியில் எழுதியவர் யார் என்று கவனித்தேன். என்ன விந்தை! படம் முழுதும் துருவித் துருவித் தேடினேன். ஓரிடத்தி லும் ஓர் அக்ஷரங்கூடக் காணோம். இதனால் என் ஆவல் பன்மடங்காகி விட்டது. அந்தப் படத்தைச் சூழ்ந்திருந்த மாயையும் பின்னும் அதிகமாய் விட்டது. "இவ்வளவு உன்னதமான ஓவியத்தைத் தீட்டியவன் தன் பெயரையே போடக் காணோமே. வேண்டுமென்றேதான் போடாமல் விட்டிருக்கிறான். இதில் என்னவோ ரகசியம் இருக்கிறது. இதை எப்படிக் கண்டறிவது?" என்று என் மனம் துடித் தது. ஒரே ஒரு வழிதான் எனக்குத் தோன்றியது. காட்சி மூடும் நேரம்வரை என்னவோ படங்களைப் பார்ப்பவன்போல் சுற்றிக்கொண்டிருந்துவிட்டு, எல்லோரும் போனபின்பு அங்கே மேற்பார்வை பார்த்து வந்தவரிடம் போனேன். ஆனால் அவரைக் கேட்பதற்கு எனக்கு வாய்வரவில்லை. நான்

திகைப்பதைப் பார்த்துவிட்டு அவரே, "என்ன சமாசாரம்?" என்றார்.

"ஒன்றும் இல்லை; அதோ இருக்கிறதே அந்தப்படம்..."

"ஆமாம், அதற்குத்தான் முதற் பரிசு கிடைத்திருக்கிறது."

"இல்லை; அதை......"

"ஊஹூம், அது விற்பனைக் கில்லை."

"இல்லை, இல்லை. அதை எழுதியவர் யார் என்று கேட்கிறேன்."

"மன்னிக்கவேண்டும்: அதைமட்டும் சொல்ல முடியாது."

இதைக் கேட்டவுடனே என் எண்ணத்தில் இடி விழுந்தது. "ஓஹோ, அப்படியா? கோபித்துக் கொள்ளாதீர்கள். நான் வருகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டுவிட்டேன்.

ஆனால் என் மனம்மட்டும் ஓயாது வேலைசெய்து கொண்டே இருந்தது. அந்தப் படத்தில் ஏதோ மர்மம் இருக்கிறதென்னும் என் சந்தேகம் உறுதியாய் விட்டது. அதைக் கண்டறியாவிட்டால் என் தலை வெடித்து விடும்போல இருந்தது. இதற்கு என்னவழி என்பதே ஓயாத யோசனையாய்ப் போய்விட்டது. ஆசையை அடக்க மாட்டாமல் மீண்டும் ஐந்தாறு தடவை அந்தப் படத்தைப் போய்ப் பார்த்தேன். அந்தக் கனவான் தினம் என்னைக் கவனித்துக்கொண்டே இருந்தார்போலும்; கடைசியாக ஒருநாள் நான் திரும்பிவரும்போது அவரே என்னைக் கூப்பிட்டார்; "என்ன ஸார், இது எட்டாவது தடவைபோல் இருக்கிறது" என்றார். "என்னவோ சித்திரத்திலே எனக்குக் கொஞ்சம் கிறுக்கு" என்று ஓர் அசட்டுச் சிரிப்புடன் பதில் சொன்னேன்.

"இல்லை, அது என்ன, அந்தப் படத்திலே மட்டும் உங்களுக்கு அவ்வளவு பித்தம்?"

"என்னவோ, அது என் மனத்தை அப்படிக் கவர்ந்து விட்டது. உண்மையில் அது அபாரமாகத்தான் இருக்கிறது; இல்லையா?"

"அப்படியா? எழுதியவர் சாமான்ய ஆசாமியா என்ன?"

"அந்தச் சிருஷ்டிகர்த்தாதான் யார் என்று தெரிந்து கொள்ளலா மென்றால் நீங்கள் சொல்லமாட்டே னென்கிறீர்களே."

"உங்கள் சிரத்தையைப் பார்த்தால் சொல்லிவிட வேண்டுமென்றுதான் தோன்றுகிறது. ஆனால்........"

"என் மனத்தை விட்டு அது பெயராது என்று நீங்கள் உறுதியாய் நம்பலாம்."

அதற்குப் பிறகும் அவர் தயங்கினார். கடைசியில் என் முகத்தில் அடித்த ஆத்திரத்தைப் பார்த்து அனுதாபப்பட்டு, "உதயகிரி தேவவர்மாதான் அதை எழுதியவர்" என்று ரகசியமாகக் கூறிவிட்டு, "தப்பித் தவறி யாரிடமாவது சொல்லிவிடப் போகிறீர்கள்; அப்புறம் அவர் மனம் மிகவும் சங்கடப்படும்" என்று எச்சரிக்கை செய்தார்.

அந்தப் பெயரை அதற்கு முன்பும் இரண்டொரு தடவை கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அவர் இவ்வளவு பெரிய நிபுணரென்று நான் நினைத்ததே இல்லை. இப்போது அவர் பெயரைக் கேட்டவுடனே அவரிடத்தில் எனக்கு ஒரு விதமான பக்தியே உதித்துவிட்டது. ஒரு விநாடி மலைத்து நின்றுவிட்டு, "அப்படியா! ஏன் அவர் இப்படி மறைத்து வைத்திருக்கிறார்?" என்று கேட்டேன்.

"அது என்னவோ ஸ்வாமி; நமக்குத் தெரியாது. அந்த விசித்திர மனிதர் படத்தையே கொடுக்கமாட்டே னென்று சொன்னார். அவரிடம் படம் இருப்பதே யாருக்கும்

தெரியாது - இரண்டொருவரைத் தவிர. அவரைச் சரிப் படுத்துவது பெரும் பாடாய்ப் போய்விட்டது. பெயரை யாருக்கும் தெரிவிக்கக்கூடாது என்னும் நிபந்தனையின் பேரில்தான் அவர் அதைக் கொடுத்தார்" என்று அந்தக் கனவான் கூறினார். "குடத்திலிட்ட விளக்குப்போலும்! பெரிய மேதாவிகளெல்லாம் இப்படித்தான்" என்று சொல்லிக் கொண்டே நான் புறப்பட்டேன்.

வீடுபோய்ச் சேருவதற்குள் என் மனத்திலே ஓர் ஆவல் வேரூன்றிவிட்டது. அந்த பூலோகப் பிரமனை எப்படி யாவது ஒரு தடவை தரிசிக்கவேண்டும். முடிந்தால் அந்த ஒப்பற்ற ஓவியத்திற்கு ஆதாரமாயிருந்த திவ்ய சொரூபியையும் கண்டு தரிசித்துவிட்டு வரவேண்டும். முக் கியமாக, அவர் இதை இவ்வளவு ரகசியமாக வைத்திருப் பதற்குக் காரணத்தைக் கண்டறியவேண்டும். ஆனால் இது எப்படி முடியும்? அவரை என்ன வென்று கேட்பது? அந்தப் படத்தைப்பற்றிய பேச்சைத்தான் அவரிடம் எப் படி எடுப்பது? எடுத்தால் அவர் பெயரை ரகசியமாக எனக் குக் கூறிய அந்தக் கனவானுக்கு எவ்வளவு அபராதம் செய்த வன் ஆவேன்? இப்படிச் சிறிதுநேரம் மனம் ஒரே குழப்பமா யிருந்தது. ஆனால் கடைசியில் அவரைப் போய்ப் பார்த்து விட்டாவது வரவேண்டுமென்ற முடிவுக்கு வந்தேன். இரண்டு நாளைக்குப் பிறகு துணிந்து புறப்பட்டுவிட்டேன்.

உதயகிரி எங்களூரிலிருந்து முப்பது மைல் தூரத்தில் தான் இருக்கிறது. ஊருக்குப் போய்ச் சேருவதில் ஒன்றும் கஷ்டமேயில்லை. அவர் வீட்டைக் கண்டுபிடிப்பதும் கஷ்டமா யில்லை. அந்த ஊரில் அநேகமாக எல்லாருக்குமே அந்தக் குடிசை தெரிந்திருந்தது - ஆமாம்; அது குடிசைதான்.- ஆனால் அதற்குள் நுழைவதற்கு என்ன காரணத்தாலோ எனக்குத் தைரியம் வரவில்லை. சிறிது நேரம் வாயிலண்டை

தயங்கித் தயங்கி நின்று மெதுவாய் எட்டிப் பார்த்தேன். நல்ல வேளையாய் அந்தச் சமயத்தில் அவரே அங்கு வந்து விட்டார். பார்த்த உடனே அவர்தாம் அந்தக் கவிமன்னர் என்று எனக்குத் தெரிந்துவிட்டது. சுமார் ஐம்பது வயதிருக்கும். சாதாரண உடல்தான்; சிறிது தளர்ந்துகூட இருந்தது. ஆனால் அந்த முகத்திலே ஏதோ ஒரு மேதா விலாசம் தாண்டவமாடியது. உண்மையில், வேதாந்தி, கவிஞன், கலைஞன் மூவரையும் உருக்கி ஒரு பிம்பம் வார்த்ததுபோலத்தான் இருந்தது அந்த உருவம். பரந்த நெற்றியிலே காலத்தேவன் ஆழ உழுது அனுபவத்தை விதைத்திருந்தான். கண்களிலே வைராக்கியம் ஜொலித்தது.

"யாரது? உள்ளே வாருங்களேன்" என்று அவர் அழைத்த அழைப்பிலே என் தயக்கமெல்லாம் பறந்துவிட்டது. ஏதோ நெடுநாள் பழக்கமானவர் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

"நமஸ்காரம்" என்று வணங்கிவிட்டு உள்ளே போட்டிருந்த பாயில் உட்கார்ந்தேன். வேறு ஒன்றும் எனக்குச் சொல்லத் தோன்றவில்லை. அவரே, "என்ன விசேஷமோ?" என்று பேச்சை ஆரம்பித்தார்.

"ஒன்றும் இல்லை; தங்களைத் தரிசித்துவிட்டுப் போகலாமென்றுதான் வந்தேன்" என்றேன்.

அதைக் கேட்டு, "என்ன! தரிசிக்கவா! என்னையா!" என்று அவர் சிரித்தார்.

"இல்லை, தங்கள் சித்திரங்களைப்பற்றிக் கேள்விப்பட்டேன். அதுமுதல் தங்களைக் காணவேண்டுமென்று ஒரே ஆவலாயிருந்தது."

"நான் என்ன, அப்படி ஒன்றும் எழுதவில்லையே? எத்தனையோ வருஷங்களுக்கு முன்னே சாமான்ய சித்திரங்கள் சில எழுதினேன். அவ்வளவுதான். அவைகளை அதிகமான

பேர் பார்த்துக்கூட இருக்கமாட்டார்களே? அந்தத் தொழிலை விட்டு எத்தனையோ நாளாகின்றன. இப்போது என்னிடம் தூரிகைகூடக் கிடையாதே."

இதைக் கேட்டவுடனே எனக்கு ஒரே ஏமாற்றமாய்ப் போய்விட்டது. 'ஏதடா எக்கச்சக்கமாய் மாட்டிக்கொண் டோமே' என்ற கலக்கங்கூட ஏற்பட்டுவிட்டது. நான் திகைப்பதைப் பார்த்து, " சமீபத்தில் என் சித்திரம் எதை யாவது பார்த்தீர்களா ?" என்று அவர் கேட்டார். எனக்கு என்ன பதில் சொல்லுவதென்று தெரியவில்லை. ஒரு கண நேரம் திக்குமுக்காடினேன். பிறகு உண்மையைச் சொல்லி விடுவோம், அதுதான் உத்தமம் என்றெண்ணி, " ஆமாம் " என்றேன்.

"என்ன படம் அது ?" என்று அவர் சாவதானமாகக் கேட்டார். கேட்டமாதிரியிலேயே அவர் ஊகித்துக்கொண்டா ரென்று எனக்குத் தெரிந்துவிட்டது. இனித் தப்ப முடியா தென்று, "தங்கள்..." என்று வாயெடுத்தேன்; ஆனால் அதற்குமேல் ஒன்றும் சொல்ல முடியவில்லை. " சொல்லுங் கள், இதிலென்ன தப்பு ?" என்று அவர் தைரியங் கொடுக்கவே, " தங்கள் மனைவியின் படந்தான் " என்றேன்.

இதைக் கேட்டபோது அவர் முகத்திலே உணர்ச்சி ரேகை மின்னல்போல் பாய்ந்தது. நான் என் வார்த்தையைத் தொடர்ந்து, " மன்னிக்க வேண்டும். எனக்கென்னவோ அதில் அளவில்லாத லயம் ஏற்பட்டுவிட்டது. அதன் சிருஷ்டிகர்த்தா யார், அந்த சௌந்தர்ய தேவதையை மனைவி யாகப் பெற்ற பாக்கியசாலி யார் என்று அறிய என் மனம் துடியாய்த் துடித்தது. எப்படியோ கேட்டுக்கொண்டு வந்து விட்டேன். என்னை ஒரு பக்தனாகக் கொள்ளவேண்டும். தாங்கள் யார்மீதும் கோபங் கொள்ளக் கூடாது " என்று சமாதானம் சொல்லிக்கொண்டே போனேன்.

அவர் இடைமறித்து, "இதில் என்ன கோபம்? இந்த உலகம் ஒன்றையும் சரியாக அறியாது. அதனால்தான் அதைப்பற்றி யாருக்குமே தெரியவேண்டாமென்று நினைத்தேன். உண்மையில் உங்களைப்போல் என் மனத்தோடு ஒட்டி அனுபவிக்கக்கூடிய ஒருவர் அகப்பட்டால் அவரிடம் அதன் விருத்தாந்தத்தைக்கூடச் சொல்லவேண்டு மென்பது தான் என் எண்ணம். இன்பமோ துன்பமோ, ஒத்த மனமுடையவர் யாருடனாவது அதைப் பகிர்ந்துகொண்டால் தானே மனத்துக்கு நிம்மதி ஏற்படுகிறது?" என்றார்.

எனக்கு என்னவோ ஒரு புதையல் கிடைத்ததுபோல் இருந்தது. காதைத் தீட்டிக்கொண்டு உட்கார்ந்தேன்.

"இந்த உலகத்திலே 'லட்சியம்' என்றால் 'கிட்டாது' என்றுதான் அர்த்தம்; அல்லவா?" என்று ஓர் ஆழமான கேள்வியோடு அவர் ஆரம்பித்தார்.

"ஆமாம், ஆமாம்; அப்படித்தான்" என்றேன்.

"ஆனால் எனக்கு என்னவோ அதில் நம்பிக்கையே இல்லை. அது வெறும் அசட்டுத்தனம் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. என் விஷயத்திலே கேளுங்கள்" என்று அவர் சொல்லலானார்.

* * *

"வாழ்க்கையிலே இரண்டு லட்சியங்கள் இருந்தன எனக்கு. இரண்டும் பரிபூரணமாய் நிறைவேறிவிட்டன. ஒன்று என் கலையைப் பற்றியது; மற்றொன்று என் வாழ்க்கையைப் பற்றியது. சிறு பையனாக இருக்கும்போதே எனக்குச் சித்திரம் வரைவதில் அளவில்லாத ஆசை. ஏதோ விட்ட குறை, தொட்டகுறை போலும். எங்கள் பரம்பரையிலே நாலைந்து தலைமுறையாக எல்லோரும் சித்திரத்திலும் சிற்பத்திலும் பெயர் பெற்றவர்களே. கொஞ்சம் பெரியவ

ஞன உடனே என் மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது. எப்படியாவது என் வாழ்நாளில் சித்திரக் கலைக்கே சிகாமாய் விளங்கும் ஓவியமொன்றைத் தீட்டிவிட வேண்டுமென்ற லட்சியம் ஒவ்வொருநாளும் என் மனத்தில் ஆழமாக வேர் விட்டுக்கொண்டே வந்தது. இதற்காக விஷயத்தைத் தேடிக் கொண்டே இருந்தேன். சிறிது காலத்துக்குப் பிறகு, காளைப்பருவம் வந்த உடனே, இது விஷயமாய் வேறோர் எண்ணம் தோன்றிற்று. ரோமாபுரியிலே இருந்த உலகப் பிரசித்திபெற்ற சித்திரகாரர்களைப்பற்றிக் கொஞ்சம் கேள்விப் பட்டிருந்தேன். தங்கள் மனைவிமாரையே மாதிரியாய் வைத்து அவர்கள் கலைச் சிகரங்களைச் சிருஷ்டித்திருப்பது எனக்கு ஞாபகம் வந்தது. அது என்னவோ வாழ்க்கையிலே சம்பாதிக்க வேண்டிய பெரும் பேறு என்று எனக்குத் தோன்றிற்று. நானும் என் மனைவியை வைத்தே என் லட்சிய சித்திரத்தைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று தீர்மானித்துவிட்டேன்.

"அது எவ்வளவு கஷ்டம் என்பது பிறகுதான் தெரிந்தது. ஓர் உயர்ந்த ஓவியத்தைத் தீட்டவேண்டுமென்றால் நம்முடைய கைத்திறமையை எல்லாம் உபயோகித்து வருஷக் கணக்காக உழைத்து வேண்டுமானலும் அந்த எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆனல் மனைவியை மாதிரியாக வைத்து எழுதவேண்டுமானல் அந்த மனைவியும் அதற்கு ஏற்ற லட்சிய உருவையுடையவளாய் இருக்கவேண்டுமல்லவா? அதற்கு என்ன செய்வது? எங்கே இருந்து அப்படிப்பட்டவளைத் தேடுவது? தேடிக் கண்டுபிடித்துவிட்டாலும் அவளை எப்படி மனைவியாகப் பெறுவது? அத்தகைய செளந்தர்யத்துக்கு ஈடாக என்னிடம் என்ன இருக்கிறது? இந்த ஏழைச் சித்திரகாரனை யார் சட்டை செய்வார்கள்?"

அவர் சொல்லிக்கொண்டே போனர். கட்டுக்கடங்காமல் மோதிக்கொண்டிருக்கும் ஏரிக்குக் கரை உடைந்தால் எவ்வளவு திருப்தியா யிருக்குமோ அவ்வளவு திருப்தி அவர் முகத்

திலே ஜொலித்தது. "ஆமாம், இந்த உலகமே அப்படித்தான். அது எதைக் கண்டது?" என்று நான் சொன்னது அவருக்கு இன்னும் கொஞ்சம் உற்சாகம் கொடுத்தது. "அப்படியில்லை; உலகத்தின்மீது ஒன்றும் தப்பில்லை. உண்மையில் என்னிடம் என்ன இருந்தது? இப்போது தான் என்ன இருக்கிறது? - அப்புறம், கேளுங்கள்" என்று அவர் தொடர்ந்து சொல்லலானார்.

"கனவிலே கண்ட புதையலைத் தேடி அலைவதுபோல் என் மனைவியை, எனக்கு மனைவியாக வரவேண்டியவளை, தேடிக்கொண்டே இருந்தேன். எங்கள் வீட்டார் எத்தனையோ பெண்களை மணம் முடித்துவைக்கப் பிரயத்தனப்பட்டார்கள். ஆனால் எதற்கும் நான் சம்மதிக்கவேயில்லை. 'என் சித்தத்துக்கேற்ற மனைவி கிடைக்கும்வரை காத்திருந்தே தீருவேன், எத்தனை யுகங்களானாலும்' என்று ஒரே வைராக்கியம் கொண்டேன். இந்தக் காரணத்தை மட்டும் அவர்களிடம் சொல்லவில்லை. வருஷங்கள் ஓடிக்கொண்டே இருந்தன. அவர்களும் சலித்துப்போய்க் கல்யாணப் பேச்சையே விட்டுவிட்டார்கள். நான் மட்டும் என் நம்பிக்கையை விடவில்லை. என்றைக்காவது ஒரு நாள் அவள் வருவாள் என்று எனக்கு நிச்சயமாய்த் தோன்றிற்று. இதற்கிடையிலே காலத்தேவன் என்ன என்னவோ மாறுதல்களையெல்லாம் செய்துவிட்டான். நானும் தன்னந் தனியாக இந்த ஊரில் வந்து வசிக்க ஆரம்பித்தேன். ஏதோ சில சாதாரணப் படங்களை எழுதிக் காலக்ஷேபம் செய்துகொண்டு வந்தேன். ஆனால் என் எண்ணம் மட்டும் நாளுக்கு நாள் உரம் பெற்று வந்தது. மலைச்சாரலுக்கோ, நதிக்கரைக்கோ, நந்தவனத்துக்கோ போனால் அங்கே எங்கேயாவது அவள் இருக்கக்கூடாதா என்று எனக்குத் தோன்றும். போகும் இடங்களிலெல்லாம் சளைக்காது தேடிவந்தேன். அப்புறம் ஒரு நாள்......"

இந்த வார்த்தையைக் கேட்டவுடனே நான்தான் ஏதோ வருஷக் கணக்காகத் தேடியதைப் பெற்றுவிட்டதுபோல் இருந்தது எனக்கு. "சுமார் எவ்வளவு நாளைக்கு முன்னே இருக்கும்?" என்று ஆர்வத்தோடு கேட்டேன்.

"இன்றைக்கு எட்டு வருஷங்கள் ஆகின்றன. அப்போது எனக்கு வயது நாற்பத்து நான்கு. தலையெல்லாம் பாதி வெளுத்துவிட்டது. இனி எவள் நம்மைக் கல்யாணம் செய்துகொள்ளச் சம்மதிப்பாள் என்று ஒவ்வொரு சமயம் தோன்றும். ஆனால் அப்போதும் என் லட்சியம் மட்டும் தளரவே இல்லை. கேளுங்கள்: ஒரு நாள் இந்த ஊர்க் கோடியிலேயுள்ள மாந்தோப்புக்குப் போனேன்."

"ஓஹோ, அந்த மாந்தோப்பேதானா படத்தில் இருப்பது!"

"ஆமாம். மிகவும் ரம்மியமான இடம். அந்தச் சோலைக்குள்ளே புகுந்தாலே என்னவோமாதிரி யிருக்கும். சௌந்தர்ய தேவதை குடியிருப்பதற்குச் சரியான இடம் அது. அதற்கு முன் எத்தனையோ தடவை அங்கே போயிருக்கிறேன். அன்று என்னவோ என்றும் இல்லாத உணர்ச்சி என் மனத்தில் பொங்கிக்கொண்டிருந்தது. அங்கே தான் நான் தேடி அலைந்தவள் இருக்கிறாள் என்று தோன்றிற்று. அன்று எப்படியாவது அவளைக் கண்டுபிடித்து விடுவதென்று தீர்மானித்தேன். அந்தச் சோலை முழுதும் சுற்றிவந்தேன். ஒரு மரத்தினருகில் வந்த உடனே என் மனத்திலே குபீரென்று உணர்ச்சி பொங்கியது. மற்ற மரங்களைப்போல் அதுவும் ஒரு மாமரந்தான். ஆனால் மற்ற மரங்களிலே காணாத ஒரு தனிக் கவர்ச்சி அதற்கு இருந்தது. அதன் அழகிலே ஈடுபட்டு அங்கேயே நின்றேன். பிறகு அதை விட்டு அசைய மனம் வாராமல் அதன் அருகிலேயே உட்கார்ந்தேன். என் புலன்களெல்லாம் பெட்டிப் பாம்பு

போல் ஒடுங்கிவிட்டன. என்னைச் சுற்றி நடப்பது ஒன்றுமே தெரியவில்லை. மனம் மட்டும் பிரமாதமாக வேலை செய்து கொண்டிருந்தது. அப்படி லயித்திருந்த சமயத்தில்தான் என் தேவி - இனிமேல் அப்படிச் சொல்லலாமல்லவா? - என் வாழ்க்கையில் கால் வைத்தாள்; என் மனத்திலும் குடி புகுந்தாள்."

அவர் வாயையே பார்த்துக்கொண்டு மந்திரத்தால் கட்டுண்ட நாகம்போல நான் உட்கார்ந்திருந்தேன். காதைத் தவிர வேறொன்றும் வேலை செய்யவில்லை. இருதயம் மட்டும் வெகுவேகமாக அடித்துக்கொண்டிருந்தது. என்னைப் பார்த்தால் அவருக்கு என்ன தோன்றிற்றோ; "என்ன, கேட்கிறீர்களா?" என்று நடுவிலே ஒரு கேள்வியைப் போட்டுவிட்டு மீண்டும் அந்த விருத்தாந்தத்தில் ஆழ்ந்துவிட்டார்.

"கேளுங்கள் என் அதிர்ஷ்டத்தை. எவளுக்காக வருஷக் கணக்காய்த் தவங்கிடந்தேனோ, எவளைத் தேடி மலையிலும் காட்டிலும் நதிக்கரையிலும் நந்தவனத்திலும் அலைந்தேனோ, அவள் என்னைத் தானே நாடிவந்து விட்டாள். ஆடை அசையும் சப்தம் கேட்டுத் திரும்பிப்பார்த்தேன். அவள் அந்த மரத்தின் தாழ்ந்த கிளையொன்றின்மீது ஒய்யாரமாக உட்கார்ந்திருந்தாள். சற்றுத் திரும்பினபடி உட்கார்ந்திருந்தாள். அதனால் என்னைப் பார்த்திருக்க முடியாது. என் லட்சிய உருவத்தை நேரில் கண்டபோது, என் மனத்திலே புகைபோல, நிழலாடுவதுபோல இருந்த உருவத்தை எலும்பும் தசையும், உயிரும் உணர்வுமாகக் கண்ணெதிரே கண்டபோது, என் உணர்ச்சியை என்னால் கட்டுப் படுத்தவே முடியவில்லை. எங்கே இருதயம் வெடித்துவிடுமோ என்று கூடப் பயமாய்விட்டது. 'லட்சியம் நிறைவேறிவிட்டது, நிறைவேறிவிட்டது' என்று மனம் எக்களித்தது. ஆனால் கூடவே ஒருபுறம் ஒருபயம் தோன்றித் தோன்றி

வேதனைப் படுத்தியது. நான் தேடியபடி ஒரு பெண்ணைக் கண்டுபிடித்து விட்டேன் - மெய்தான். ஆனால் அவள் என்னை மணக்கச் சம்மதிப்பாள் என்பது என்ன நிச்சயம்? கைக் கெட்டியது வாய்க்கெட்டாமல் போய்விட்டால் என்ன செய்வது! இருந்தாலும் ஒரு விதத்திலே நம்பிக்கை ஏற்பட்டது. அவள் எனக்கென்றே படைக்கப்பட்டவள் என்று தோன்றிற்று. இல்லாவிட்டால் இந்த ஆச்சரியம் நடந்திருக்குமா? இப்படி அவளே என்னை நாடி வந்திருப்பாளா?

"இந்தத் தைரியத்தால் மெதுவாக எழுந்து அவளருகில் சென்றேன். என்னைக் கண்டவுடனே அவள் கீழே குதித்துத் தலைகுனிந்து நின்றுகொண்டாள். எனக்கு அவளை என்ன கேட்பதென்று தோன்றவில்லை; வாயும் வரவில்லை. அவளும் பேசாமல் நின்றிருந்தாள். சிறிது நேரம் இப்படி மௌனமாகக் கழிந்தது. அந்தச் சிறிது நேரத்தில் நான் கொஞ்சம் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, 'அம்மா, நீ யார்?' என்று மெதுவாகக் கேட்டேன். ஒருவேளை கோபித்துக்கொண்டு ஓடிவிடுவாளோ என்று எனக்குப் பயந்தான். ஆனால் அவளோ ஒரு குறும்புப் புன்னகையுடன், 'நீங்கள் யாரோ?' என்று திருப்பிக் கேட்டாள். 'நான் ஒரு சித்திரகாரன்' என்றேன். அவள் உடனே, 'நான் ஒரு பெண்' என்றாள். அவள் கோபங்கொள்ளவில்லை, சங்கோசப் படவுமில்லை என்று கண்டவுடனே, என் விஷயத்தை ஆரம்பிக்கவேண்டுமென்று தோன்றியது. சீக்கிரம் இரண்டிலொன்று தெரிந்துகொண்டுவிட வேண்டுமென்று எனக்குப் பதைத்தது. 'நான் ஓர் ஏழை' என்று ஆரம்பித்தேன். அவள், அடித்த பந்தைத் திருப்பி அடிப்பது போல், 'நான் ஒரு பரம ஏழை' என்றாள்.

"அவள் சொன்னது உண்மைதான் என்று எனக்குத் தோன்றிற்று. கழுத்திலே ஏதோ ஒரு மணியைத்தான்

கொத்துப் போட்டுக் கொண்டிருந்தாள். காதிலே ஒரு பித்தளைக் கம்மல், கையிலே ஒரு சாதாரணக் கண்ணாடி வளையல்; அரையிலே கட்டியிருந்த கறுப்புப் புடைவையும் மிகச்சாதாரணமான நூல்புடைவை. அந்த வெளுத்த மஞ்சள் ரவிக்கையும் மிகவும் விலை சாஸமானதென்று தோன்றிற்று. இந்த விவரங்களை யெல்லாம் நான் முதலில் கவனிக்கவில்லை. அவளை யார் பார்த்திருந்தாலுமே அவைகளைக் கவனித் திருக்க மாட்டார்கள். அவைகளால் அவள் வனப்புக் கூடவு மில்லை, குறையவுமில்லை. அவளுக்கு அலங்காரமே தேவை யில்லை என்றுதான் எனக்குத் தோன்றிற்று.

"அவளும் ஏழை என்று தெரிந்த உடனே எனக்கு இன்னும் கொஞ்சம் தைரியம் வந்தது. மெல்ல மெல்ல என் லட்சியத்தை அவளிடம் சொன்னேன். அதையெல்லாம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்து விட்டுக் கடைசியில், 'அப்படியென்றால், என்னை உங்கள் மனைவியாக்கிக் கொள்ளலா மென்று பார்க்கிறீர்களா?' என்று அவள் வெடுக்கென்று கேட்டாள். கேட்டமாதிரி யிலே ஏதோ நம்பிக்கைக்கு இடமிருப்பதுபோல் தோன்றி யது. ஆனால் நான் ஒன்றும் சொல்லவில்லை; என் உதடு மட்டும் துடித்தது. அந்த க்ஷணநேரம் என்மனம் பட்ட பாட்டை வர்ணிக்கவே முடியாது. சுவர்க்கத்துக்கும் நரகத் துக்கும் இடையே ஒரு மெல்லிய கயிற்றில் ஊசலாடிக் கொண்டிருப்பதுபோல் இருந்தது.

"உங்கள் முன்னே இரண்டு திருவுளச் சீட்டுக்களை எழுதிப் போட்டு இரண்டில் ஒன்றை எடுக்கச் சொல்லு கிறார்களென்று வைத்துக்கொள்ளுங்கள். ஒன்றை எடுத் தால் உங்கள் மனத்தைக் கவர்ந்த காதலியையும் பெரிய ராஜ்யாதிகாரத்தையும் அடையலாம். மற்றொன்றை எடுத் தால் தேளும் பாம்பும் சையானும் பூரானும் கடித்துப்

கொடுங்கச் சித்திரவதைப்பட்டு மாளவேண்டும். அந்த நிலையில் உங்கள் மனம் எப்படியிருக்கும்? அப்படித்தான் இருந்தது என் மனமும். எத்தனையோ காலமாகத் தேடி அலைந்து கண்டுபிடித்த கதவைத் தட்டினேன். அவள் திறந்தால்தான் தெரியும், அது சுவர்க்கவாயிலா நரகத்துக்கு வழியா என்பது. ஆனால் என்னை இப்படி நீண்டநேரம் நெருப்பின்மீது நின்று துடிக்கவிடவில்லை அவள். இரண்டொரு நிமிஷம் என் வேதனையைப் பார்த்து அனுபவித்துக் கொண்டிருந்துவிட்டு, 'சரி, பின்னே என் நிற்கிறீர்கள்? வாருங்கள் போகலாம் நம் வீட்டுக்கு' என்றாள். பிறவிக் குருடன் கண்பெற்றதுபோல் பிரமித்து நின்றேன். ஆனால் அவள் என்னைச் சும்மா விடவில்லை. அந்த மரத்திலே ஒரு கொம்பிலே மாட்டிவைத்திருந்த முல்லைமாலையை எடுத்து என் கழுத்தில் போட்டு என் கையைப் பிடித்துக்கொண்டு புறப்பட்டுவிட்டாள்."

தேவ வர்மாதாம் பேசுகிறாரா, அல்லது விக்கிரமாதித்தனது சிம்மாசனப் படியிலுள்ள பதுமை ஏதாவதுதான் கதை சொல்லுகிறதா என்று எனக்குச் சந்தேகமாயிருந்தது. அத்தனை நாழிகையாக அடக்கிவைத்திருந்த மூச்சையெல்லாம் விட்டுவிட்டு, "ஊம், அப்புறம்?" என்றேன்.

"அப்புறம் என்ன? என் லட்சியமே உருவெடுத்து என் வீட்டுக்கு வந்தபிற்பாடு எனக்கு என்ன குறைச்சல்? என் வீடே தேவலோகம்போல் ஆய்விட்டது. அவள் என்னிடம் காட்டிய பரிவுக்கும் அன்புக்கும் அக்கறைக்கும் எல்லையே இல்லை. ஒரு நொடி என்னை விட்டுப் பிரிந்திருக்கமாட்டாள். வித விதமாக எனக்குப் பிடித்த பண்டங்களைச் செய்து கொடுப்பாள். ஏதாவது ஒரு சமயம் சித்திரம் எழுதுவதில் ஆழ்ந்திருந்து சாப்பாட்டு வேளை தவறிவிடின் சின்னக்குழந்தையைக் கோபித்துக்

கொள்வது போல் கோபித்துக்கொள்ளுவாள். என்றைக் காவது இரவிலே அதிகநேரம் உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்தால், 'போதும், படுத்துக்கொள்ளுங்கள்; எல் லாம் நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம்' என்பாள். ஆனால் என் படங்களுக்கெல்லாம் சலிக்காமல் வர்ணமிழைத்துக் கொடுப்பாள். படம் எழுதுவதற்குப் புதுப்புதுக் கற்பனைக ளெல்லாம் சொல்லிக்கொடுப்பாள். நல்ல படம் ஏதாவது எழுதினால் பார்த்துப்பார்த்துப் பூரித்துப் போவாள். அவள் பார்த்து மகிழுவதைக் காணும்போது உலகமே திரண்டு வந்து பார்த்துப் பாராட்டுவதுபோல் எனக்கு உச்சி குளிர்ந்து விடும். அவளுக்கு மிகவும் பிடித்திருந்துவிட்டால் சந் தோஷம் தாங்கமாட்டாமல் என்னைக் கட்டியணைத்து முத்தாய்ப் பொழிந்து தள்ளிவிடுவாள். சிலசமயம் தன் மடி மீது என் தலையைவைத்துப் பரிவாகத் தடவிக்கொண்டே, 'இப்படி ஒரு சித்திரம் எழுதுங்கள்' என்பாள். உடம்புக்கு ஏதாவது வந்துவிட்டால் ஓயாது பக்கத்தில் உட்கார்ந்து சுசுருஷை செய்வாள். இரவெல்லாம், எவ்வளவு தடுத்தாலும் கேட்காமல், ஆதரவோடு கால்பிடிப்பாள். அவள் தொட் டாலே நோயெல்லாம் பறந்துவிடும். அவள் மதுரமான மொழியைக் கேட்டாலே - ஆமாம், அவள் பெயரே மதுரந் தான் - உடல் தேறிவிடும். இப்படி எங்கள் வாழ்க்கை இன்ப மயமாக...."

அவர் சொல்வதற்குள் எனக்குப் பதைத்தது. நான் இடைமறித்து, "ஆமாம், இந்தப் படத்தை உடனே எழுத ஆரம்பித்துவிட்டீர்களா?" என்று கேட்டேன். உடனே அவர் கவனம் அதில் திரும்பியது.

"பார்த்தீர்களா! அதை மறந்தே போய்விட்டேன். அந்தக் காலத்தை நினைத்தாலே இப்படித்தான் எங்கெங் கேயோ ஓடுகிறது மனம். படத்தை உடனே எழுத

ஆரம்பிக்கவில்லை. ஆனால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் மட்டும் உடனே ஆரம்பித்துவிட்டன. அழகுக்கு அழகு செய்யவேண்டியதில்லை என்பது உண்மைதான். இருந்தாலும் எனக்கு என்னவோ அவளுக்கு இரண்டொரு நகை போட்டுப் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருந்தது. கொஞ்சம் மும்முரமாக உழைத்துப் பணம் சேர்த்தேன். முதலில் அந்த மணிக்குப் பதிலாக ஒரு மெல்லிய தங்கச் சங்கிலி செய்தோம். பிறகு கண்ணாடி வளையலுக்குப் பதில் ஒரு பொன்வளையல் வாங்கினோம். அப்புறம் நல்ல கல் இழைத்த கம்மலொன்று பண்ணினோம். அதன் பிறகு, அன்று நாங்கள் சந்தித்தபோது அவள் அணிந்துகொண்டிருந்தது போலவே நல்ல பட்டிலே ஒரு புடைவையும் ஒரு ரவிக்கையும் வாங்கினோம். அப்புறந்தான் படம் உருவாக ஆரம்பித்தது.

"தினம் காலையிலே சாப்பாட்டை முடித்துக்கொண்டு மாந்தோப்புக்குப் புறப்படுவோம். அன்று கண்ட இடத்திலேயே அதே மாமரத்தின்மீது அதே கோலத்தோடு அதே நிலையில் அவள் பதுமைபோல் உட்கார்ந்துகொள்ளுவாள். பார்த்துப் பார்த்து நான் எழுதுவேன். பொழுது போவதே எங்களுக்குத் தெரியாது. பொழுது சாய்ந்து வெளிச்சம் மங்கினால்தான் எழுந்து வருவோம். வீடு திரும்பும்போது எங்கள் மனத்திலே பொங்கும் மகிழ்ச்சியைச் சொல்லிமுடியாது. பக்கத்திலே வந்துகொண்டிருப்பவளைத் திரும்பித் திரும்பிப் பார்ப்பேன். கர்வம் தலைக்கேறும். அவளுக்கோ பரம திருப்தி. இப்படி வேறு ஒன்றும் செய்யாமல் தினம் அதையே மும்முரமாகக் கவனித்துவந்ததால் இரண்டே கால் வருஷத்தில் அந்தப் படம் முடிந்தது.

"படம் முடிந்த அன்று, பரமபதத்தையே எட்டிப் பிடித்துவிட்டதுபோல் இருந்தது எனக்கு. அவளுக்கு ஒரே

ஆனந்தம். ஓயாது அதை உற்றுப் பார்த்துக்கொண்டே நிற்பாள். அவள் முகத்திலே பொறுமைகூடத் தோன்றும். சில சமயம் நானே அதைக் கண்டு மயங்கிவிடுவேன், படமா பத்தினியா என்று தெரியாமல். அவ்வளவு தத்ரூபமாக அது அமைந்துவிட்டது. அவளையே சட்டத்துக்குள் பெயர்த்து வைத்துவிட்டது போல் இருக்கும். ஆமாம், அப்படியே தான் என் கிருஹலக்ஷ்மியை - என் மனக் கோயிலில் எழுந்தருளியிருந்த அதிதேவதையை — என்........"

இதற்குமேல் அவரால் பேச முடியவில்லை. கண்டம் விம்மியது; உதடு துடித்தது; கண்ணும் கலங்கியது. எனக்கோ வாய் திறக்க முடியவில்லை. அவர் நிலையைக் கண்டு எனக்கும் கண் கசிந்தது. இரண்டொரு நிமிஷம் கழித்துக் கண்ணைத் துடைத்துக்கொண்டு, "ஏன், அந்தப் புண்ணியவதி இப்போது எங்கே?" என்று பயந்துகொண்டே கேட்டேன்.

அவர் அதற்குள் கொஞ்சம் சமாளித்துக்கொண்டார். "இதோ இருக்கிறாள். வாருங்கள் காட்டுகிறேன்" என்று பக்கத்திலே மூடியிருந்த அறையொன்றுக்கு அழைத்துக்கொண்டு போனார். அதனுள் நுழைந்த உடனே எனக்குப் புல்லரித்தது. ஒரு குடிசைக்குள் உள்ள அறையாகவே அது காணப்படவில்லை; அவ்வளவு வசீகரமாயிருந்தது. ஏதோ ஒரு தெய்விக வாடை அதனுள் வீசியது. மழ மழவென்று சன்னமாடியிருந்த அந்தச் சுவரில் தொங்கிக்கொண்டிருந்த படத்தைக் காட்டி, "இதோ இருக்கிறாள், பாருங்கள்" என்றார். நான் அங்கே காட்சியில் கண்ட அதே படந்தான் அதைப் பார்த்த உடனே நான் திகைத்து நின்றேன். அவரும் அதைப் பார்த்து அனுபவித்துக்கொண்டே நின்றார். சிறிது நேரத்துக்குப் பிறகு, "வாருங்கள், பாக்கியையும் சொல்லுகிறேன்" என்று வெளியே அழைத்துவந்தார். திரும்பவும் வந்து பாயின்மேல் உட்கார்ந்தோம். அவர்

சற்று மௌனமாக இருந்துவிட்டுச் சொல்ல ஆரம்பித்தார்:

"கேளுங்கள். செடி வளர்ந்தால் விதை நசித்துப்போகிறது. கவிதை உருவாகி விட்டால் அதற்கு ஆதாரமாயிருந்த கற்பனை காலியாகிவிடுகிறது. இதுதான் சிருஷ்டி விசித்திரம்போலும்! ஒன்றை அழித்துத்தான் மற்றொன்றைச் செய்யவேண்டும்போலும்! இப்படித்தான் முடிந்தது என் வாழ்க்கையும். இந்தப் படம் எழுதியாகும்வரை அவள் அதற்கு மூலமாய், ஆதாரமாய், தூண்டுதலாய் இருந்து வந்தாள். படம் முடிந்தது; அவளும் மெலிய ஆரம்பித்தாள். நாளுக்கு நாள் உடல் தேய்ந்து வந்தது. கடைசியில் ஒரு நாள், எப்படி எதிர்பாராத சமயத்தில் திடீரென்று என் வாழ்க்கையில் வந்து புகுந்தாளோ அப்படியே......" என்று முடிக்காமலே கையைமட்டும் காட்டினார்.

சோக காலத்தையே வார்த்தெடுத்ததுபோல் இருந்தது அவர் முகம். அந்த முகத்தைப் பார்க்கப் பார்க்க எனக்கு வயிற்றெரிச்சலா யிருந்தது. அவர் சிந்தனையைக் கலைப்பதற்காக, "அப்புறம் எத்தனை நாள் இருந்திருப்பார்கள்?" என்று கேட்டேன். "ஏதோ ஒரு மாதம் இருக்கலாம்; எத்தனை நாளாயிருந்தாலென்ன?" என்று குனிந்த தலை நிமிராமலே பதில் சொன்னார்.

பிறகு சுமார் பத்து நிமிஷம் இருவரும் மௌனமாயிருந்தோம். அவரை அந்த நிலையிலே விட்டு வருவதற்கு எனக்கு மனம் வரவில்லை. ஆனால் அதற்குமேல் அங்கிருக்கவும் முடியவில்லை. மெதுவாக, "அப்போது எனக்கு...." என்று ஆரம்பித்தேன். "சரி, செய்யுங்கள். இன்னும் எத்தனை நாள் என் தலையில் போட்டிருக்கிறதோ. ஏதோ இந்த அபாக்கியவானை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் - ஆமாம். அதைச் சொல்ல மறந்துவிட்டேன். தயை

செய்து இதையெல்லாம் உங்கள் மனத்திலேயே வைத்து கொள்ளுங்கள். இந்த உலகம் எதையுமே மதிக்காது என்று எச்சரிக்கை செய்துவிட்டு அவர் விடைகொடுத்தா "நான் யாரிடம் இதைச் சொல்லப்போகிறேன்" என் கூறிவிட்டு மீண்டும் ஒருமுறை அந்தப் படத்தைப் பார்த் விட்டுப் புறப்பட்டேன்.

*　　*　　*

"யாரிடம் சொல்லப்போகிறேன்" என்று சொல் விட்டேனே ஒழிய, யாரிடமாவது அதைச் சொல்லி எ உணர்ச்சியைக் கொட்டித் தீர்த்துக்கொள்ளாவிட்டால் எ இருதயம் பிளந்துவிடும்போல் இருந்தது. ஆனால் சில நா வரை அவருக்குக் கொடுத்த வாக்கு என் வாயை அடைத் நின்றது.

ஒருநாள் நானும் என் நண்பரொருவரும் ஏ ஒரு சித்திரத்தைப்பற்றிப் பேசிக்கொண் டிருக்கும்போ இந்த விருத்தாந்தத்தை அவரிடம் சொல்லவேண்டுமென் எனக்கு ஒரே ஆத்திரமாயிருந்தது. என்ன அடக்கி என்னை மீறிக்கொண்டு அது வாயில் வந்துவிட்டது. நா கேட்டபடியே அவரிடம் சொன்னேன். அவரும் பக் சிரத்தையோடு கேட்டுவந்தார். கடைசியில் முடிவைச் சொ லும்போது எனக்குத் துக்கமாக அடைத்துக்கொண்டு தது. ஆனால் அதைக் கேட்டு அவர் குலுங்கிச் சிரிக்க எனக்கு அளவில்லாக் கோபம் வந்தது. "நீங்களென் மனிதர்தானா? உங்கள் ஹிருதயம் என்ன சதையா அல்ல இரும்பா? இரும்புங்கூட இதைக் கேட்டுக் குழைந் விடுமே. உங்களைச் சொல்லி என்ன பயன்? நான்தான் டை தியக்காரன். உலகம் இவ்வளவு வைரம் பாய்ந்த நெஞ்சுடை தென்று தெரிந்துதான் அவர் இதை யாரிடமும் சொல் வேண்டாமென்றார்" என்று கடுமையாகத் திட்டிவிட்டேன்

அந்தத் திட்டையெல்லாம் பொருட்படுத்தாமல் எ
னிடம் அனுதாபப் படுபவர்போல் மிகவும் நிதானமாக அ
கூறியதைக் கேட்டு நான் திடுக்கிட்டுப் போனே
"கோபித்துக் கொள்ளாதிர்களையா; எனக்கும் தெரிய
அந்தத் தேவ வர்மாவை. அவரைச் சிறு பிராயமுதல் நா
அறிவேன். எனக்குத் தெரியாத சம்பவமே அவர் வாழ்
கையில் இல்லை. நான் அணுவளவுகூடச் சந்தேகம் இல்
மல் சொல்லுகிறேன் கேளுங்கள்: அவருக்குப் பெ
டாட்டி யென்று ஒருத்தி இருந்ததே கிடையாது. மூன்
வருஷ மென்ன? மூன்று நாள்கூடக் கிடையாது" என்
அவர் அழுத்தத் திருத்தமாகச் சொன்னார். ஆனால் எவ்வள
அழுத்தமாய்க் கூறினாலும் எனக்குமட்டும் நம்பிக்கை
ஏற்படவில்லை. உடனே எழுந்துபோய் அந்தத் தேவ வர்ம
வையே கேட்கவேண்டுமென்று தோன்றிற்று. ஆனால் அ
போது நான் என் வாக்கை மீறியது அவருக்குத் தெரிந்
விடுமல்லவா? அதற்காக அவர் சங்கடப்பட்டால் என்
செய்வது? இருந்தாலும் அவரைக் கேட்டுத்தான் ஆகவேண்
மென்று தீர்மானித்தேன். அவர் சொன்னது உண்மை
யல்லவென்றால் நான் சரியான பைத்தியக்காரனென் ற
லவா ஏற்படும்? சி சி! அந்த விருத்தாந்தத்தைச் சொல்லு
போது அவர் முகத்திலே எவ்வளவு உணர்ச்சி பொங்கியது
அவள் முடிவைக் கூறும்போது அவர் நெஞ்சு எப்படி
குமுறியது! இத்தனையும் பொய்யா!

இரண்டு மூன்றுநாள் தயங்கினேன். அதற்குமே
என்னால் தாளமுடியவில்லை. மறுபடியும் உதயகிரிக்கு
போனேன். அந்தத் தெருவிலே போகும்போது அவ
தெருவழியாய் வெகு அவசரமாய் வந்துகொண்டிருந்தா
அவரைப் பார்த்தபோது, "இவரா பொய்சொல்லக் கூ
யவர்?" என்று தோன்றியது. அருகில் வந்த உடனே

“நமஸ்காரம், எங்கேயோ அவசரமாய்ப் போகிறீர்கள்போல் இருக்கிறது” என்று ஒரு கும்பிடு போட்டேன். அவரும் பதில் கும்பிடு போட்டுவிட்டு, “ஓ, வாருங்கள். ஒன்றும் விசேஷம் இல்லையே?” என்றார்.

“இல்லை, ஒரு சந்தேகம்.”

“சொல்லுங்கள்.”

“ஒன்றும் இல்லை. நீங்கள் அன்று சொல்லிய விருத்தாந்த மெல்லாம் கற்பனை யென்றல்லவா...” என்று தயங்கினேன். எங்கே அவர் கோபித்துக் கொள்ளுகிறாரோ என்று எனக்குப் பயமாயிருந்தது. ஆனால் அவர் கொஞ்சங்கூடக் கோபமோ வருத்தமோ காட்டவில்லை; “ஹும், இந்த உலகமே கற்பனைதானே?” என்று சொல்லிவிட்டு ஓர் அசட்டுச் சிரிப்பு சிரித்தார்; அதைக் கேட்டபோது என் உடல் குலுங்கிவிட்டது. அந்த அதிர்ச்சி தெளிவதற்குள்ளே, “வரட்டுமா? கொஞ்சம் அவசரமாகப் போக வேண்டும்” என்று சொல்லிக்கொண்டே அவர் போய் விட்டார்.

அந்தப் பயங்கரமான சிரிப்பு இன்னும் என் காதிலே ஒலித்துக்கொண்டே இருக்கிறது. ஆனால் அதன் அர்த்தத்தை மட்டும் இன்னும் என்னால் அளக்கமுடியவே இல்லை.

# பெற்றோர்கள்

[புரசு பாலகிருஷ்ணன், எம். பி. பி. எஸ்.]

அம்புஜவல்லி தன் வீட்டின் முற்றத்தில் உட்கார்ந்
படியே அன்றைத் தினம் வாங்கிய உளுத்தம் பருப்
லிருந்து கற்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். அவ
நடுவயதைத் தாண்டியவள் என்றாலும், அவளுடைய தோ
றத்திலிருந்து அவளுடைய சென்ற வருஷங்களின் முகட
பொலிவை ஒருவாறு உணரலாம். அவளைப் பார்க்கையில்
அவளுடைய தேய்ந்த வனப்பைப்பற்றி எழும் உணர்ச்
யினால் அவளைச் சுற்றியிருந்த பல வஸ்துக்களும் சிந்தனை
கூடிய அழகுடன் விளங்கலாயின. நிசப்தம் குடிகொண்டி
ருந்த முற்றமும், முற்றத்தின் கதவிற்கு வெளியே நயன
கோசரத்திலிருந்த பசுவும், அதன் அருகில் மௌன
விரதத்தினால் வாய் அடைத்ததுபோலிருந்த கிணறும், அதன்
பேச்சற்ற தோழனான தண்ணீர்க் குடமும் ஆகிய இவை
பலவும் அவளுடன் ஒரு சமான அழகைப் பகிர்ந்து கொண்
டன. முற்றம் மேலே ஆகாயத்தைப் பார்த்திருந்தது.
இருண்டு மேகம் கவிழ்ந்திருந்த ஆகாசமும், வெளியே
சலசலக்கும் மரங்களும், சடுதியில் பொழியப் போகும்
மழையைச் சூசிப்பித்தன.

"மழை கொட்டப்போறது இப்போ" என்று ஆலோசித்தாள் அம்புஜவல்லி. "யாரு இப்போ இந்த மழையை வேண்டிறு? நான் அப்பளாம் போடணும்னு காத்துக் கொண்டிருந்ததாக்கும், நாசமாப் போற மழை......எனக்குத் தான் என்ன பைத்தியம் இது? கல்யாணம் நடக்கப் போறதோ இல்லையோன்னு அந்தத் தெய்வத்துக்குத்தான் தெரியும். அதுக்குள்ளே நான் இங்கே அப்பளாம் தயார் பண்ண ஆரம்பிச்சுட்டேன். பணத்தைக் கொண்டான்னு இப்போ கேக்கறு எல்லாரும். விஷயம் எப்படி முடியப் போறதோ, ஒன்னும் தெரியல்லையே."

அச் சமயம் முற்றத்தின் கதவு வழியாக மழைக் காற்று, குளு குளு வென்று கூடத்திற்குள் பலமாய் வீச அம்புஜவல்லி தன் வேலை மத்தியில் நிமிர்ந்து ஆகாசத்தைநோக்கினாள்.

"இந்த மழையை யாரு வேணும்னு கேட்டா இன்னிக்கி? அவர் சீக்கிரமாய்த் திரும்பி வந்துடணுமே, மழை ஆரம்பிக்கறத்துக்குள்ளே?"

மழை எப்பொழுது வந்துவிடுமோவென்று மேகங்கள் பயமுறுத்திக் கொண்டிருந்ததால், அவள் உளுத்தம் பருப்பை யெல்லாம் பக்கத்திலிருந்த பாத்திரத்தில் அள்ளி எடுத்துக்கொண்டு உள்ளே செல்ல எழுந்தாள். அச் சமயம் முற்றத்தின் கதவு வாயிலாகப் பதினைந்து வயதுள்ள ஒரு பெண், தன் கைகளில் பளிச்சென்று துலங்கும் செம்பு வெண்கலப் பாத்திரங்களுடன் உள்ளே நுழைந்தாள். அவளுடைய முன்னங் கைகளும் புடைவையின் ஓரமும் மேலாக்கும் நனைந்து, அவள் சற்று முன்புதான் அப் பாத்திரங்களை விளக்கிக்கொண்டிருந்திருக்க வேண்டுமென்பதை வெளிப்படுத்தின.

"அம்மா, நான் பாத்திரத்தை யெல்லாம் தேச்சாயிடுத்து. கோவிலுக்குப் போயிட்டு வரேன். ஆங்கரைப்

பாட்டி கூப்பிடறாள்" என்று தன் தாயிடம் மொழிந்தாள் அவள்.

"என்னடி, பட்டு? மழை எட்டுருக்கு வரப் போறதே இப்போ" என்று கூறி அவள் தாய் மேலே நிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தாள். பட்டுவும் அவளைப் பின்பற்றி அப்படியே செய்தாள்.

பட்டு, தன் தாய் தன் வயதில் எப்படி இருந்திருப்பாள் என்று ஊகிக்கலாமோ அப்படித் தோன்றினாள். மப்பு மூடிய வானம், வருஷங்களால் இளமை மறைவு படுவது போல் மேகங்களால் மறைந்துள்ளது; பின்பு ஆனந்த மேனும் பொழிவு கவலைக் குறிகளை முகத்திலிருந்து நீக்கி விடுவதுபோல், ஒரு வர்ஷம் மேகங்களைக் கலைத்துவிடுகிறது; உடனே பசுமைப்பரப்புகள் ஒரு புதிய யௌவனத்தை அணிந்து விளங்குகின்றன; திக்குகள் களங்கமற்றுப் பிரகாசிக்கின்றன. அதுபோலப் பட்டு, தன் தாயுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் தனது இளம் சௌந்தரியத்துடன் விளங்கினாள். அம்புஜவல்லிக்கும் பட்டுவுக்கும் உள்ள பந்தம், 'தாயார் - பெண்' என்ற முறைமட்டு மன்று; மனத்தோடு ஞாபகம்போல் அம்புஜவல்லியோடு பட்டு பிணைக்கப்பட்டிருந்தாள். இந்த அன்னியோன்னியத்தால்தான் போலும், அம்புஜவல்லி தன் பெண்ணின் உண்மைப் பெயர் 'விசாலாக்ஷி' என்பதானாலும் அதற்கு ஒரு சம்பந்தமுமில்லாத 'பட்டு' என்னும் செல்லப் பெயரால் அவளை அழைத்துவந்தாள்.

"இருக்கட்டும், அம்மா. நான் கோவிலுக்குப் போகத்தான் வேணும்" என்று உற்சாகத்துடன் பதிலளித்தாள் பட்டு. "கோவில் இங்கேருந்து ரொம்ப தூரமில்லையே. அப்படி மழை பேஞ்சாலும், பெய்யட்டுமே. மழேலே நனையற

— — ரொா பிரு

கும் அது!......குளு குளுன்னு காத்து அடிச்சுண்டு......
அத்தோடே மழேலே குளிச்சுண்டு...''

"இன்னும் அந்தக் குழந்தைத்தனம் உன்னை விடல்லயே!" என்று அவளைக் கண்டித்தாள் அம்புஜவல்லி. "கல்யாண காலத்துலே உடம்புக்கு எதையாலும் வரவழைச்சுக்கப் போறே!"

"அதெப் பத்தியெல்லாம் நீ கவலைப் படாதே" என்று மறுமொழி கூறினாள் பட்டு. "இத்தனை நாழியா எனக்காக ஆங்கரைப் பாட்டி காத்துண்டிருப்பாளே!" என்றவாறே அவள் தன் கைகளிலிருந்த பாத்திரங்களை அவற்றின் இடங்களில் வைத்துவிட்டு, மழைச் சாரலையும் ஈர மண்ணையும் வாடைக் காற்றையும் நுகருவதன் பொருட்டுக் களிப்புத் துள்ளாட்டத்துடன் வெளியே சென்றாள். வானம் ஏற்கனவே இருண்டுவிட்டது. ஆயினும் அம்புஜவல்லி, இவ்விதம் ஒரு செல்லக் குழந்தையின் ஸ்வதந்திரத்துடன் வெளியே செல்லும் பட்டுவைத் தடுப்பதற்கும் சாதுரியமற்றவளாய் அவளை வெறுமனே நோக்கியவாறு நின்றாள்.

'இன்னும் குழந்தைத்தனம் போகவில்லையே' என்று அவள் போகும்பொழுது தனக்குள் எண்ணிக்கொண்டாள் அம்புஜவல்லி; 'இருக்கட்டும்...இப்படியே இருக்கட்டும் இவளுடைய குழந்தைத்தனம். இப்படி நமக்கு நிலைக்காமல் இருந்தாக்கே, நம்முடைய வறுமை எவ்வளவு கஷ்டமாயிருந்திருக்கும்! வீடு முழுக்க ஒரே விசனமாயிருந்திருக்குமே!......' இச்சமயம் வெளியில் தூற்றல் போடத் தொடங்கவும், அம்புஜவல்லி மறுபடியும் தன்னைச் சுற்றியுள்ள விஷயங்களின் ஞாபகத்திற்கு வந்தாள். 'இந்த மழையிலே அவள் போயிட்டாளே - நான் சொன்ன வார்த்தையையும் கேக்காதபடிக்கு! பிள்ளைகள் இப்படி இருந்தாக்கே, நாம்ப என்னத்தைச் செய்யறது!......கிடக்கட்டும்; கோவிலுக்குத்

தானே போறா அவ? குழந்தைத்தனமா மழையிலே நனையறத் துக்காகப் போறா. ஆனாலும், இப்படிக் கோவிலுக்கு வற வளைப் பாத்துண்டு பகவான் சும்மா இருப்பாரா ?...... இன் னும் குழந்தைப் புத்தி போகல்லே அவளுக்கு......கபடமே தெரியாது......அவளுக்குத் தகுந்த மாதிரி ஆம்படையான் கிடைக்கணுமே! - அவளுடைய குணத்தைத் தெரிஞ்சுண்டு, அவளைச் சரியானபடி நடத்தறத்துக்கு!......இப்படி மழை லே ஓடிட்டாளே அவ!' என்று பலவிதமாகச் சிந்தித்துக் கொண்டிருந்த அம்புஜவல்லி, இப்பொழுது தன் எண் ணங்களை வாய்விட்டுப் பேசலானாள். ஏனெனில் அவள் தன் மனத்திலே அடிக்கடி தோன்றிப் பிறகு அதைப் பற்றி எண்ணுவதிலேயே ஓர் ஆத்மத் திருப்தியைக் கண் டுள்ள ஒரு விஷயத்தைப் பற்றி யோசிக்கத் தொடங்கினாள்; " ஒரு குழந்தையின்னா எப்படிப்பட்ட பொக்கிஷம்னு யாருக் கானுந் தெரியுமா இப்போ? இப்போ ஏதோ பெண்கள், பள்ளிக்கூடமாம், காலேஜாம், அங்கே என்னவெல்லாமோ படிக்கறதுகள். ஆனா, முக்யமானதா, உலகத்துலே வேணுங் கறதா, எதையானும் படிக்கறதா? எதுக்கானும் இப்போ குழந் தையை வச்சுக்கத் தெரியுமா? வளக்கத் தெரியுமா? இதென்ன படிப்பு வேண்டியிருக்கு! - காலணாவுக்குப் பிரயோஜனமில் லாத படிப்பு! குழந்தை அருமை தெரியாமெ இருக்கிறது, தன் தருமம் தெரியாமெ இருக்கறத்துக்குச் சரி......"

இதற்குள்ளாகக் காற்று வெளியிலே ஹூ ஹூ என்று இரையலாயிற்று. மடமட வென்று ஓர் இடி முழக்கம் அம்புஜவல்லியைத் திடுக்கிடச் செய்தது.

" அடியம்மா!" என்று கலக்கத்துடன் எண்ணினாள் அம்புஜவல்லி. " பட்டு நிச்சயமாய் மழையிலே அகப்பட் டுண்டுடுவள். மானம் இவ்வளவு இருண்டுண்டு வந்துடுத்தே! அவரும் இன்னும் திரும்பி வரக்காணோம். அவர் எப்போ

திரும்பி வருவாரோ? இன்னிக்கு அவருக்கு எவ்வளவு அலைச்சல் இருந்ததோ, காரியம் எப்படி முடிஞ்சதோ, ஒண்ணும் தெரியல்லே. எல்லாத்துக்கும் நடராஜர்தான் துணை!......அப்பாடா!" என்று கடைசியில் ஒரு ஆசுவாச மூச்சு விட்டாள். அதனில், வீட்டிற்கு வெளியே வந்துள்ள மாட்டு வண்டியின் ஓசை அவளுடைய செவிகளை எட்டியது. "நல்ல வேளையாய் அவர் திரும்பி வந்துவிட்டார்!" என்று சொல்லிக்கொண்டே துரிதமாய் மேல்மூச்சு வாங்க வாசற் கதவுக்கு விரைந்து சென்றாள். தன்னுடைய பெண், கணவர், இருவரும் வீட்டில் இல்லாமல், அந்த மழையிரவிலே யிருந்தது அவளைக் கவலையுறச் செய்தது. ஆனால் அவள் இப்பொழுது தன் கணவர் திரும்பி வந்துவிடவே, வீடு வந்திராத பெண்ணின் விஷயத்திலுங்கூடச் சற்றுத் தைரியமடைந்தாள்.

அவள் வாசற்படியை அடைந்தபொழுது அவளுடைய கணவர் ஜானகிராமையரும் உள்ளே நுழைந்தார். அவர் திடகாத்திரமுள்ள மனிதர்; அவருடைய முகமோ, வாழ்க்கையின் இன்னற் குறிகளை ஏற்று மிகவும் சோர்வுற்று வதங்கி யிருந்தது. அவருடைய தோற்றமும், உடையும் அவர் அப்பொழுதுதான் காற்றிலும் மழையிலும் அடிபட்டு வந்தவரென்பதை விளக்கின.

"அப்பாடா! கடைசியில் வீடு வந்து சேர்ந்தாச்சு!" என்று அவர் தமது பரந்த மார்பு ஏறி இறங்கும்படியாகப் பெருமூச் செறிந்தார். பிறகு தூற்றலில் சற்று நனைந்திருந்த தமது அங்கவஸ்திரத்தைத் தமது தோள்களி லிருந்து எடுத்து அதனால் முகத்தைத் துடைத்துக்கொண்டே உள்ளே சென்றார். அம்புஜவல்லி அவரைப் பின்தொடர்ந்தாள். அதே சமயம் தொழுவிற்கு ஓட்டப்படும் மாட்டு வண்டி முற்றத்தின் பின்கதவு வழியாகக் காணப்பட்டது.

"காரியம் என்ன ஆச்சு?" என்று ஆவலுடன் அவரை விசாரிக்க ஆரம்பித்தாள் அம்புஜவல்லி.

"அந்தக் கதவை ஏன் தெறந்து வச்சிருக்கே?" என்று, அவள் கேட்டதற்குப் பதிலளிக்காமல் வெடு வெடுப்பாய்க் கேட்டார் ஜானகிராமையர்; "மழை காத்தெல்லாம் வீணுப் போறதென்ன?"

இதற்கு எதிர்ப்பேச்சுப் பேசாமல் அம்புஜவல்லி தன் மேல் விழும் தூற்றலையும் கவனியாமல் முற்றத்தைக் கடந்து சென்ருள். அச் சமயம் வண்டிக்காரன் கதவண்டை எட்டிப் பார்க்க அவள், "சரி, நீ வீட்டுக்குப் போகலாம்" என்று அவனிடம் கூறினுள். இப்படி அவன் வீட்டிற்குச் செல்லத் துரிதப்படுவதைக் கண்டபொழுது அவளுக்கு, 'பட்டு இன்னும் திரும்பி வரவில்லையே!' என்ற எண்ணம் தோன்றிற்று. 'அவனை இந்த இருட்டிலேயும் மழையிலேயும் போக விட்டுவிட்டேனே!' என்று எண்ணிக்கொண்டாள். 'ஆயினும்......இம்மாதிரி, குழந்தைக் குணத்துக்கேற்றபடி மழையில் கோவிலுக்குச் சென்ற அப்பெண்ணிடம் பகவான் இறங்கமாட்டாரா? அவளுடைய கல்யாணம் இனிதே முடியாதா?'

திறந்திருந்த முற்றத்துக் கதவைச் சாத்தித் தாழிட்டாள் அம்புஜவல்லி. பிறகு அவள் திரும்பும் நேரத்திற்குள் அவளுடைய கணவர் உடுப்பை மாற்றிக்கொள்ளுவதற்காகத் தம் அறைக்குச் சென்றிருந்தார். அவ் வறையில் விளக்கில்லை. அப்படியும் அவர் அவ்வளவு அவசரமாய் அங்கே சென்றதற்குக் காரணமென்னவோ? தான் அவரை உடனே பேச்சுக்கு இழுக்க வேண்டாமென்ருே?

அவள், தன் கையில் ஒரு லாந்தரை எடுத்துக்கொண்டு கலக்கமுற்றவளாய் அவ் வறைக்குள் நுழைந்தாள். அவளுடைய மனப்பதற்றத்தில் கைகள் சிறிது அசைவுற அறையில்

இருந்த பல வஸ்துக்களின் நிழல்கள் சுவர்களின்மேல் விபரீதத் தோற்றத்துடன் நடனமாடின.

"போன காரியம் முடிந்ததா?" என்று அவரை வினவினாள் அவள்.

அவர் பதில் அளிக்கவில்லை. மறுபடியும் இருமுறை கேட்டபொழுதுங்கூட அவர் மௌனம் சாதித்தார். அதன் மேல் அவளும் பேசாமல், அவரே எப்பொழுது வார்த்தையாடத் தொடங்குவாரோ வென்று காத்திருந்தவளாய் அவர் அருகில் நின்றுகொண்டிருந்தாள்.

வீட்டிற்கு வெளியே காற்றின் ஓலம் சற்றுக் குறைவுபட்டிருந்தது; எப்பொழுது தொடங்கிவிடுமோ என்று பயமுறுத்திக்கொண்டிருந்த மழை இன்னும் ஆரம்பிக்கவில்லை; ஒன்றிரண்டு தூற்றல்களே போட்டுக்கொண்டிருந்தன. மழை இன்னும் அரை மணி அல்லது ஒரு மணி நேரம் வரையில் பெய்யாது என்று தோன்றிற்று. அதனால் பட்டு அதற்குள் வீட்டிற்குத் திரும்பி வந்துவிடலாம்.

"பட்டு எங்கே?" என்று கடைசியில் தாமாகக் கரகரத்த குரலில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு கேட்டார் ஜானகிராமையர்.

"கோவிலுக்குப் போயிருக்கா, ஆங்கரைப் பாட்டியோடே."

"கோவிலுக்கா? - இந்த மழையிலேயும் காத்துலேயும்? நீயும் அவளைப் போகவிட்டையாக்கும்! உங்களுக்கு எவ்வளவு தரம் சொன்னாலும் தெரியறதில்லே! என்ன புத்தியோ உங்களுக்கு!"

"ஆமாம், உங்களைப்போல ஒருத்தருடன் இருந்தாக்கே புத்தியும் கெட்டுவிடும்; பைத்தியமும் பிடித்துவிடும். கடலங்குடிக்குப் போயிருந்தேளே; அங்கே காரியம் என்ன

ஆச்சுன்னு கேட்டேளோ இல்லையோ; அதுக்கு ஏதானும் பதில் சொன்னேளோ?"

ஜானகிராமையருக்கு அன்றைத் தினத்தின் அலைக் கழிப்புகளால் சோர்வும் மனக்கசப்பும் ஏற்பட்டிருந்தது உண்மைதான். அதிகாலையில் பக்கத்துக் கிராமமாகிய கடலங்குடிக்குப் புறப்பட்டு, நாள் முழுவதும் திரிந்து அலைந்து முடிவில் மழையிலும் அகப்பட்டுக்கொண்டு இருட்டும் சமயத்தில் வீடு திரும்பினுல், எவருக்குத்தான் மனச்சலிப்பு உண்டாகாது?

"காரியம் என்னுச்சா? என்ன ஆகும்? எல்லாம் பணத்தாலேதான் முடியும்! உலகமே பணத்துக்குள் தானே இருக்கு! நீ உன் பெண்ணை மழையிலேயும் காத்துலேயும் கோவிலுக்கு அனுப்பலாம். ஆனு அதனுலே ஒண்ணும் உண்டாகப் போறதில்லே! அதனுலே ஒண்ணும் வராது! கோவிலைச் சாமிக்கே விட்டுவிடு - பணத்தைக் கவனி! அந்தக் கூனிப்பாட்டி - பக்கத்து வீட்டுலே இருக்காளே அவள் - அவள் வரட்டும். அவளண்டே சொல்லறேன், பட்டுவை இன்னமே கோவிலுக்கு அழச்சுண்டே போகக்கூடாதுன்னு, இதுலெ யெல்லாம் அவளுக்கு என்னத்துக்கு ஜோலி?...... ...எப்படியும் பட்டு இன்னிக்கு மழேலே போயிட்டா; இன்னிக்கு ஒண்ணும் செய்ய முடியாது......சரி, பட்டுதான் வீட்டிலே இல்லையே; இப்போ வாய்விட்டுப் பேசறேன், கேளு: உன் கிட்டே எல்லாத்தையும் சொல்லிவிடறேன்."

இப்படிக் கூறி ஜானகிராமையர் நாற்காலியிலிருந்து எழுந்தார். மேஜையின் மேலிருந்த ஒரு புஸ்தகத்தை ஒரு காரணமும் இல்லாமல் தம் கையில் எடுத்துக்கொண்டு அறையின் நடுவே அங்கும் இங்கும் நடக்கத் தொடங்கினுர். அவர் நடந்தபொழுது தரையிலும் சுவர்களிலும் விழுந்த அவருடைய நிழலின் சலனம் லாந்தரின் மங்கலான வெளிச்சத்தில்

ஏதோ வொரு சாயா பூதம் அசைவதுபோல் தோன்றிற்று. அவருடைய தாழ்ந்த குரலும் ஒருவிதத்தில் இதற்கு ஏற்ற வாறே இருந்தது.

"சரி, நான் இப்போ மெலக்கப் பேசலாம்" என்று திருப்பிச் சொன்னார் அவர். ஆனால் மனத்தினுள் எதற்கோ பயந்தவர் போலக் காணப்பட்டார்; "அவள் எப்போ திரும்பி வருவ?" என்று தம் மனைவியை வினவினார்.

"இப்போதான் போனாள். வறத்துக்குக் கொஞ்சம் நாழியாகும்."

தாம் உரக்கப் பேசலாம் என்ற எண்ணத்தை வெளி யிட்டிருந்த போதிலும், "பட்டு எப்போ வருவ?" என்ற முன்யோசனை உண்டானதோடல்லாமல் அவர் தாழ்ந்த குரலில்தான் பேசினார். அவருடைய குரல் தாழ்ந்திருந்த போதிலும், அவருடைய வார்த்தைகள் எப்படியோ லாந்த ரின் மங்கி வெளிச்சத்துடன் கூடி நிச்சப்தமாய் அசையும் அவருடைய நிழலுடன் சேர்ந்து ஓர் அசாதாரணமான சக்தி யுடன் அறையை நிரப்பின. இதுவரையில் விளக்கைக் கையில் பிடித்துக்கொண்டிருந்த அம்புஜவல்லி இப்பொழுது ஏற்பட்ட மனக் கலக்கத்தால் அச்சிறு சுமையும் பளு வானதுபோல் மேஜைமீது வைத்துவிட்டு மேஜை மேலேயே தன் கைகளையும் ஊன்றிக்கொண்டு தன் 'அக முடையான்' என்ன சொல்லுவாரோ என்று எதிர்பார்த்து நின்றாள்.

"நான் என் மனசில் இதை வைத்துக்கொண் டிருந்ததே பாபமா யிருக்கலாம்" என்று கலங்கிய குரலில் ஆரம்பித்தார் ஜானகிராமையர்; "இதை நான் ரொம்பநாளாய் எனக்குள் ளேயே வைத்துக்கொண் டிருந்துவிட்டேன். இது ஓயா மல் என் மனசைக் குழப்பிக்கொண்டே இருந்தது. இப்போ இதை உன்னிடம் சொல்லிவிடறேன்...சில சமயம் எனக்குத்

தோணுறது: பட்டுவுடன்தான் நம் துரதிஷ்ட மெல்லாம் நம்மை வந்து அடைந்துவிட்டது......"

அச் சமயம் பளிச்சென்று ஆகாசத்தில் ஒரு மின்னற் கொடி வீச க்ஷணநேரம் அவ் வறை முழுவதும் வெளிச்ச மடைந்தது. அவ் வெளிச்சத்தில் அம்புஜவல்லி, அம் மின் னல் வீச்சுத்தான் தன்மீது பாய்ந்துவிட்டதோ வென ஓர் உட் சுவாசம் இழுத்ததை ஜானகிராமையர் கண்டார்.

"ஆமாம், நான் பாபி. எனக்கு இவ் வெண்ணம் சில சமயங்களில் உண்டானதுண்டு. அதை ஒளியாமல் உன்னி டம் சொல்லிவிட்டேன். ஆனால் இதற்காக நான் பட்டுவை நிந்திக்கவில்லை. என்னைத்தான் நிந்தனை செய்துகொள்ளு கிறேன்; உன்னை நிந்திக்கிறேன்; கடவுளை நிந்திக்கிறேன்..."

ஜானகிராமையர் லாந்தருக்கு அருகில் மேஜைமீது தம் கைகளை வைத்துக்கொண்டு தம்மைச் சற்று நிலைப்படுத்திக் கொண்டார்.

"ஆமாம், உன்னை நிந்திக்கிறேன். உன் வார்த்தையைக் கேட்டுத்தானே நாம் திருப்பதிக்குப் போனோம்? ராமேசு வரத்துக்குப் போனோம்? கண்ட இடங்களுக்கெல்லாம் போனோம்? நீ சொல்லித்தானே எங்கெங்கேயோ பிரார்த்தனை பண்ணிக்கொண்டோம்?......"

"பிரார்த்தனைக்குத்தான் பலன் கிடைத்ததே" என்று சொல்லுவதற்கு அம்புஜவல்லி வாயெடுத்தாள். ஆனால் சொல்ல வில்லை. அதற்குத் தைரியம் போதவில்லையோ, அல்லது எக்காரணத்தினாலாவது மனம் இடங் கொடுக்க வில்லையோ!

"கடவுள்...பிரார்த்தனை...எல்லாம் பொய்...எல்லாம் ஏமாற்றம்" என்று மேலும் மொழிந்தார் ஜானகிராமையர்; "குழந்தைக்காகப் பிரார்த்தனை பண்ணினோம். குழந்தை கிடைத்தது. பட்டு பிறந்தாள். நம் செல்வமும் நம்மை

விட்டுச் சென்றது. நம்மேல் ஒரு விளையாட்டு வேடிக்கை புரிந்தார் கடவுள்......"

இவ் வார்த்தைக்குப் பிறகு சற்றுநேரம் தம் பேச்சை நிறுத்தினார் ஜானகிராமையர். ஏனெனில், அச் சமயம் கிடு கிடு வென்று வானிலிருந்து பூமியின்மேல் பாய்வதுபோல், அந்த மங்கலான அறையில் மெதுவான குரலில் உச்சரிக்கப் படும் ஒரு தந்தையின் ஏமாற்றத்தை உக்கிரமாகக் கடவுளின் செவிகளுக்கே எடுத்துக் கூறுவதுபோல், ஓர் இடி முழக்கம் முழங்கிற்று. அம் முழக்கம் ஓயும்வரை காத்திருந்து பிறகு ஜானகிராமையர் மேலும் தொடங்கினார்.

"ஆமாம், எனக்காகச் சொல்லவில்லை. பட்டுவுக்காகத் தான் சொல்லுகிறேன். குழந்தை இல்லாதபோது நமக்குச் செல்வம் இருந்தது. அப்போது இருந்து என்ன பயன்? பிறகு அருமைக் குழந்தை ஒன்றை அடைந்தோம். அப் போது செல்வங் குறைந்தது, அழிந்தது. வெறும் வறுமை. வறுமையில் வளருவதற்காகப் பிறந்த குழந்தை கடவுளின் வரமா? நாம் கடவுளை வரம் கேட்டோம். அவர் நம்மைச் சபித்தார். பட்டுவின்மேல் நாம் வைத்த ஆசை எண்ணங்க ளெல்லாம் எப்படி ஏமாற்றமாய்ப் போயின! பாத்திரம் முதல் குழந்தையே தேய்க்கிறாள்!"

இச் சமயம் 'கூ கூ கூ' வென்று வெளியே காற்றுக் கூக் குர லிட்டது. கள கள வென்று பிரமாதமான இரைச் சலுடன் மழை பெய்ய ஆரம்பித்தது. அம்புஜவல்லிக்குப் பட்டுவின் கல்யாணத்தைப் பற்றிய விசாரம் அதிகமாகி விட்டது.

"பட்டு இப்போ வந்துடுவாள். அவள் வறத்துக் குள்ளே நடந்ததைச் சொல்லுங்களேன்."

"பணமும் பண்பும் நிறைந்த நம் வீட்டில் பிறந்து, அவளுடைய கதி என்னவாச்சு! இப்போது அவளுடைய

கல்யாணத்தையும் சீராகச்செய்யப் பணமில்லை... என்ன நடந்ததா? - வேறென்ன இருக்கும்? பேசுவதிலே எல்லாரும் ரொம்ப நயமானவர்தான். அதுவும் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளைப் பத்திக் கேக்கவேண்டாம். நம் வீட்டுச் சம்பந்தம் அவருக்கு ரொம்பப் பிடிச்சிருக்காம். ஜாதகப் பொருத்தமெல்லாம் ரொம்பச் சரியா யிருக்குன்னு சொன்னார். எனக்கும் எல்லாம் ரொம்பப் பிடிச்சுருக்கு... ஆனா, பணம், பணம், பணம்! பணத்துக்கு நானெங்கே போறது?"

ஜானகிராமையர், தம்முள் எழும் வேகத்தில், குதிக்க ஆரம்பித்தவர்போல் துள்ளி வேகமாய் நடக்கத் தொடங்கினார்.

"நான் முழுதும் திரிஞ்சு கடைசியில் நிலங்களையும் வித்துத் தொலைச்சேன். பத்து வருஷங்களாய் விக்காத நிலத்தையும் இப்போ வித்தாச்சு. இன்னமே என்ன? கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியைப் பார்த்தேன். முகூர்த்தத்தைக் குறிப்பிட்டு விடலாம்..."

"அம்மாடா! இருந்தாலும், அதைச் சட்டுனு சொல்லி யிருக்கக் கூடாதா?"

"அவள்மேலே நாம் வச்ச அன்பும் பிரீதியும் அவளுக்கு அங்கேயும் கிடைக்கணும்!"

"நடராஜரே துணை!" என்று ஆனந்தப் பெருக்கில் மொழிந்தாள் அம்புஜவல்லி; "...ஆனாலும் என்னை இப்படிப் பயமுறுத்திவிட்டேளே! காரியத்தை யெல்லாம் முடிச்சுண்டு வந்தேளே; வந்தவுடனேயே சொல்லி யிருக்கப் படாதா?"

ஜானகிராமையர் மேலே தொடர்ந்து பேசுகையில், அவருடைய குரல் தழுதழுத்ததா யிருந்தது.

"நான் ஏதோ பாபம் பண்ணி யிருக்கணும். இல்லாவிட்டால் இந்த எண்ணம் எனக்கு வருவானேன்?... பத்து

வருஷங்களாக இந்த முடியாத தொல்லை! அதன் பிறகு, நாம் நமது அருமைப் பெண்ணை இழப்பதற்காக எல்லாவற்றையுமே இழந்துவிடுகிறோம்! அவள் நம் வீட்டை விட்டுப் போகிறாள். அந்தத் துக்கத்தோடு இந்தக் கஷ்டமும்! நான் செய்த பாபம்!"

"இன்னிக்கு ரொம்ப அலைஞ்சிருப்பேளே நீங்க? நல்ல வேளையாய், என்னையும் கேட்டுண்டு செய்யலாம்னு இல்லாத படிக்கு நீங்களே ஒருமிக்கக் காரியத்தைச் செஞ்சு முடிச்சுண்டு வந்துட்டேளே! அப்படியிருந்துங்கூட, நீங்க என்னை ஒரு நிமிஷத்துக்குள்ளே இப்படிப் பயமுறுத்தி ஆட்டி வச்சுட்டேளே!...அம்மம்ம! கடலங்குடி கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளின் குடும்பம்னு சாதாரணக் குடும்பமா?"

இச்சமயம் அறையில் சில்லென்று காற்றடித்தது. வெளிக் கதவு திறந்தது. மழை ஜலம் சொட்டுகின்ற புடைவையுடன் பட்டு உள்ளே நுழைந்தாள்.

"பட்டு, பட்டு! இதென்ன, தெப்பமா நனைஞ்சிருக்கயே —குளிச்சுட்டு வந்தாப்போலே!" என்று கூறிக்கொண்டு அம்புஜவல்லி அவளை ஆவலோடு தன் அருகில் இழுத்துக் கொண்டாள்.

"அதுக்காகத்தானே நான் போனேன்?" என்று சிரித்துக்கொண்டு விடையளித்தாள் பட்டு; "அப்பா வந்துட்டாரே!"

"ஆமாம், வந்துட்டார். அந்தப் பையனுடைய அப்பாவைப் போய்ப் பாத்துட்டு வந்தார். அந்த வக்கீல் துரையை உனக்குப் பிடிக்குமோ இல்லையோ?" அம்புஜவல்லி ஒரு சிறு அவகாசத்திற்குள் தானும் ஒரு சிறு பெண்ணாக மாறி விட்டாள்.

ஜானகிராமையர் மேஜையருகில் நின்றவராய் இருவரையும் அன்புடன் மாறி மாறிப் பார்த்தார். அவர் மனத்தில்

திடீரென்று தம் பெண்ணின்மேல் அளவு கடந்த வாஞ்சை பிறந்தது.

"பட்டு, இங்கே வா" என்ருர் பிரேமை பொருந்திய குரலில். தன்னுடைய தாய் தன்னைப் பின்தொடர, பட்டு அவரை அணுகினள்.

சாதாரணமாய் ஜானகிராமையர், தம் விசுவாச உணர்ச்சிகளை வெளியில் காண்பித்துக்கொள்ளும் சுவபாவம் உடையவர் அல்லர். என்ருலும், தற்சமயம் அவர் அன்பால் மிகவும் மனம் இளகியவராய் அவளை அணைத்துக்கொண்டு, "பட்டு, போய்ப் புடைவையை மாத்திக்கோ. உடம்புக்கு ஏதாவது வந்துடப் போறது" என்ருர்.




# ஏழையின் குழந்தை

[ஏ. முகம்மது ரஷீத், பி. எஸ்ஸி. (ஆனர்ஸ்)]

## 1

"அப்பா!"

"ஏண்டா, கண்ணே?"

"என் பக்கத்திலேயே நீ உட்கார்ந்திரு, அப்பா!"

"சரிடா கண்ணு."

"நீதான் வேலைக்குப் போய்விடுகிறாயே?"

"இன்றைக்குப் போகவில்லை, பாலு."

"உண்மையாகவா?"

"உண்மையாகத்தான்."

சிறுவன் முகத்தில் ஏற்பட்ட ஆனந்தம் அவன் மிருதுவான கன்னங்களில் உண்டான குழிகளாகிய சின்னங்களால் வெளிப்பட்டது. தகப்பன் தன் பக்கத்திலேயே இருப்பதில் அச் சிறுவனுக்கு அவ்வளவு திருப்தி.

முகுந்தன் முகத்திலும் ஓர் அற்ப சந்தோஷம் மின்னலைப்போல் தோன்றி மறைந்தது. தன் மகனின் உடம்பை வாஞ்சையோடு தடவினான். சிறுவன் மன நிம்மதியுடன் கண்களை மூடித் தூங்கலானான்.

முகுந்தனுக்கு இதுவரையில் எட்டுக் குழந்தைகள் பிறந்துவிட்டன. யமனுக்குத்தான் அவன்மேல் என்ன

வர்மமோ தெரியாது; முதல் ஏழு குழந்தைகளையும் தன் பாசக் கயிற்றில் மாட்டி இழுத்துக்கொண்டு போய்விட்டான். கடைசியாக எஞ்சி நின்றவன்தான் பாலு. அவனை இத்தனை காலமாக மறந்திருந்த யமனுக்குத் திடீரென்று அவன் ஞாபகம் வந்துவிட்டதோ என்னவோ, சிறுவன் ஜ்வரத்தில் விழுந்துவிட்டான்.

வர வரப் பாலுவின் நிலைமை மோசமாகிக் கொண்டு வந்தது. நாலைந்து தினங்களாகத் திடீர் திடீரென்று பயந்து அலறவும் ஆரம்பித்தான். தனியாக இருக்க மிகவும் அஞ்சினான். ஆதலால் எப்பொழுதும் அவன் பக்கத்தில் யாரேனும் இருக்கவேண்டியிருந்தது. அவன் தாய் கோமளம் இருப்பதைவிட, தந்தை பக்கத்தில் இருந்தால் அவனுக்குத் தனித் தைரியந்தான்.

## 2

**பா**லு கண்ணயர்ந்ததும் முருந்தன் சீக்கிரமாகத் தன் எஜமானர் புண்ணியமூர்த்தி பிள்ளையின் வீட்டிற்குச் சென்றான். ஒரு நாள் வேலைக்குப் போகாவிட்டால் தன் வேலையில் மண் விழுந்து, தன் குடும்பத்திலும் மண் விழுந்து விடும் என்பது அவன் நன்றாக அறிந்த விஷயம். என்றாலும் தன் மகனின் வேண்டுகோளை நிராகரிக்க அவன் மனம் இடம் தரவில்லை. ஏன்? அவனுக்கே தன் பாலுவை விட்டுப் பிரியச் சிறிதேனும் இஷ்டமில்லை.

புண்ணியமூர்த்தி பிள்ளையின் இதயத்தில் எவ்வளவு ஈரம் உண்டு என்பதை அவன் நன்கறிவான். ஆனால், எப்படியேனும் கெஞ்சிக் கூத்தாடி அன்று மாத்திரம் 'ரஜா' பெற்றுவிடலாம் என்று அவன் அன்பு - பாலுவின் மேல் வைத்திருந்த புனித அன்பு - தைரியம் சொல்லி வைத்தது.

மேலும், கையில் ஒரு தம்பிடிகூட இல்லையே! மத்தியான்னம் பாலுவுக்கு அரிசிக்கஞ்சி எப்படிக் கொடுக்க முடியும்? பிள்ளையவர்களிடந்தான் எப்படியேனும் ஒரு நாலணாவாவது பெற்றுக்கொண்டு வரவேண்டும்.

இப்படியாக அவன் தன் மனத்தைப் பல திசைகளில் அலையவிட்டு எஜமானர் வீட்டை அடைந்தான்.

புண்ணியமூர்த்தி பிள்ளையைக் கண்டதுமே அவனிடம் கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கையெல்லாம் பஞ்சாகப் பறந்துவிட்டது.

"அடே! தடிக்கழுதை! ஏண்டா இவ்வளவு நேரம்? மணி எட்டாகப் போகிறது. கவர்னர்போல......" என்று படபடவென்று உதிர்த்தார்.

முருந்தன் ஒன்றும் பேசவில்லை. கெஞ்சுதலாக அவரைப் பார்த்துக்கொண்டு அடக்க ஒடுக்கமாக நின்றான்.

அவர் குரல்தான் மறுபடியும் கேட்டது.

"இனிமேல் நீ இப்படி வந்தால் உன் வேலையின் ஓலை கிழிந்துவிடும். உன் அப்பனுக்கு நான் கொடுத்திருக்கும் கடன் இருபது ரூபாயையும் எண்ணிக் கீழே வைத்துவிட்டு ஓடவேண்டியிருக்கும்."

இதெல்லாம் அவன் காதில் சரியாக நுழையவில்லை. அவன் மனந்தான் பாலுவிடம் சஞ்சரித்துக்கொண் டிருந்ததே?

முருந்தன் வழி முழுவதும் அவரிடம் எப்படிக் கெஞ்சிக் கேட்கவேண்டும், எப்படி நான்கு அணாவைப் பெற்றுப் போக வேண்டும் என்று செய்துவந்த ஏற்பாடெல்லாம் அவனை உதறித் தள்ளி மறைந்துவிட்டன. மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் அவன் நின்றுகொண்டிருந்தான். அவன் பரிதாபமான கண்களே அவன் இதயத்தில் மும்முரமாக வீசிய சண்டமாருதத்தை எடுத்துக்காட்டின.

பிள்ளையவர்கள் அவன் கண்களில் தோன்றிய பரிதாபப் பார்வையைச் சிறிதேனும் பொருட்படுத்தவில்லை. அவர் மனம் வரப்போகிற அவருடைய புது மாப்பிள்ளையைப் பற்றித்தான் எண்ணிக்கொண்டிருந்தது.

"சரி, நீ சீக்கிரமாகப் போய்ச் சந்தையில் சாமான்களை வாங்கிவா. பிறகு நம் வண்டி மாட்டை நன்றாகக் குளிப்பாட்ட வேண்டும். புது மாப்பிள்ளை தலைத் தீபாவளிக்கு இன்று மத்தியானம் வரப்போகிறார். ஸ்டேஷனுக்குச் சென்று அவரை அழைத்துவர வேண்டும்" என்று சொன்னவாறே அப்பால் சென்று சாய்வு நாற்காலியொன்றில் அமர்ந்துவிட்டார்.

முகுந்தனுக்குப் பகீரென்றது. "என்ன! ஐந்து மைல் தூரத்திலிருக்கும் ஸ்டேஷனுக்குப் போய் மாப்பிள்ளையை அழைத்துக்கொண்டா வரவேண்டும்? மத்தியானம் வரையிலுமா இங்கே இருக்கவேண்டும்?" என்று அவன், தன் உலர்ந்த உதடுகள் அசைய முணுமுணுத்துக் கொண்டான்.

சாய்வு நாற்காலியில் உல்லாஸமாகச் சாய்ந்து கொண்டிருந்த புண்ணியமூர்த்தி பிள்ளையிடம் அவன் ஓடினான்; கால்களைப் பிடித்துக்கொண்டான்.

"மகாராசா! என் குழந்தைக்கு அனலாய்க் கொதிக்கிறது. எப்படி நான் அவனை விட்டு மத்தியானம் வரையில் பிரிந்திருப்பேன்! கொஞ்சம் பெரிய மனசு பண்ண வேண்டும்" என்று பரிதாபமாகக் கெஞ்சினான்.

பிள்ளையவர்களுக்கு ஏகப்பட்ட கோபம் வந்துவிட்டது. 'ஆரம்பிக்கும்பொழுதே இவன் அபசகுனம்போல இப்படிச் சொல்லிவிட்டானே' என்ற எண்ணத்துடன் அவனை அவர் முறைத்துப் பார்த்தார். முகுந்தனுக்கு அது தெரியவில்லை. அவன் அகக்கண்ணின் முன்புதான் வேறொரு நாடகம் நடந்துகொண்டிருந்ததே! அவன் மறுபடியும் ஆரம்பித்தான்.

"ஏழு குழந்தைகளை வாரி வச்சுட்டேன்...இது ஒன்று தான்...ஏதோ தயைபண்ணி..." என்று அவன் சொல்லுமுன் அவர் சினம் சிகரத்தை அடைந்துவிட்டது.

"குழந்தையு மாச்சு, கோட்டானு மாச்சு, அபசகுனம் போல! பிடை! நீ ஸ்டேஷனுக்குப்போய்க் கூப்பிட்டுக் கொண்டு வரவேண்டுமென்றால், கூப்பிட்டுக் கொண்டுதான் வரவேண்டும். ஞாபகத்தில் இருக்கட்டும்!"

அவர் விரல்கள் இடது பக்க மீசையை முறுக்கின. முகுந்தனால் பிறகு அவரை ஒன்றும் கேட்க முடியவில்லை.

ஏழைத் தந்தைமாருக்குத் தங்கள் குழந்தைகளின் மேல் அன்பிருக்க என்ன உரிமை இருக்கின்றது! எல்லா அன்பும் எஜமானரின் ஏவல்களையெல்லாம் முடித்த பிறகு தானே?

## 3

தன் மனத்தை அடக்க இயலாமல் சந்தையில் பழங்கள் வாங்கப் போகும்பொழுது முகுந்தன் தன் வீட்டிற்கு மறைந்து மறைந்து ஓடினான். பாலுவை ஆவலோடு நோக்கினான். பாலு இன்னும் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான்.

கோமளம் அவன் சமீபத்தில் வந்தாள். அவன் குவிந்த வதனமே அவன் உடைந்த நெஞ்சை அவளுக்கு எடுத்துக் காட்டியது.

"கோமளம்! குழந்தையை நன்றாகக் கவனித்துக் கொள். நான் சீக்கிரமாக மத்தியானம் வந்துவிடுகிறேன்."

உதிர்ந்துவிட்ட கண்ணீரை அவனால் சமாளிக்க முடியவில்லை.

"என்ன? நீங்கள் ஐயாவிடம் கேட்கவில்லையா?"

"உம்!.........எல்லாம் கேட்டாச்சு.........பாலுவுக்கு மத்தியானம் என்ன ஆகாரம் கொடுக்கப் போகிறாய்?"

"என்ன தருவது? அரிசியே இல்லையே."

முகுந்தன் தன் முகத்தை மறைக்க வேறொரு பக்கம் திருப்பிக்கொண்டான். உள்ளே சென்று தன் உடைந்த பெட்டியைப் புரட்டிப் பார்த்தான். நான்கு தம்பிடிகள் கிடந்தன. அவற்றை எடுத்துவந்தான்.

"இந்தா, கோமளம்: இதில் கொஞ்சம் அரிசி வாங்கி மத்தியானத்திற்குக் கொடு. நான் இராக்கஞ்சிக்கு எப்படி யாவது ஒரு நாலணா எஜமானிடம் வாங்கி வருகிறேன்."

அவள் அந்தக் காசை வாங்கிக்கொண்டாள். முகுந்தன் சில ரூபாய்களுக்கு ஆரஞ்சும் ஆப்பிளும் வாங்கத்தான் சந்தைக்குப் போனான். அதில் சுலபமாக ஓர் எட்டணா எடுத்துக் கொடுத்துவிடலாம். ஆனால் அவன் மனம் அதற் குச் சம்மதிக்கவில்லை.

பாலுவை மற்றொரு முறை ஆசையோடு நோக்கினான். குழந்தையின் முகத்தில் மலர்ந்திருந்த புன்னகையைக் கண்டதும் உண்மையாக அவன் சில நிமிஷங்கள் தன் துக்கத்தை மறந்துவிட்டான்.

பாலுவிடமிருந்து திடீரென்று, "அப்பா, நீ பக்கத்தி லேயே இரு அப்பா! வேலைசெய்யப் போய்விடாதே" என்ற வார்த்தைகள் அவன் தூக்கத்திலும் வெளிப்பட்டன.

"இங்கேதானடா இருக்கிறேன், என் கண்மணி" என்று சொன்னவாறே அவனைத் தழுவிக்கொண்டான் முகுந் தன்.

பிறகு சந்தைக்குச் செல்ல மனமில்லாமலே புறப்பட் டான்.

## 4

**பா**லுவை எண்ணியவாறே முகுந்தன் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வண்டியை ஓட்டிச் சென்றான். மாப்பிள்ளை

வரவேண்டிய 12½ மணி வண்டியும் வந்தது. ஆனால் மாப் பிள்ளை அதில் வரவில்லை. அடுத்த வண்டி இனிமேல் சாயந் திரம் ஐந்து மணிக்குத்தான். அதுவரையில் காத்திருக்க அவன் உள்ளம் இடந்தரவில்லை. வெறும் வண்டியுடன் திரும்பிவிட்டான். பிள்ளை யவர்களிடம் சமாசாரத்தைக் கூடச் சொல்லாமல் நேராகத் தன் குடிசைக்கே வண்டியை ஓட்டினான்.

அவன் குடிசைக்குள் நுழைந்து தன் அருமை மகனைக் காண இன்னும் இரண்டு நிமிஷங்களே பிடித்திருக்கும். ஆனால்......? ஏதோ காரணமாக அவ்வழியே வந்துகொண் டிருந்த புண்ணியமூர்த்தி பிள்ளையின் கண்களில் அவன் பட்டுவிட்டான். வண்டியும் காலியாக இருப்பதைக் காண, 'எல்லாம் இவன் அபசகுனத்தால்தான் மாப்பிள்ளை வர வில்லை' என்று அவர் முடிவு செய்தார். வேறொன்றும் செய்யவில்லை; காலிலிருந்த செருப்பை எடுத்துப் படார் படாரென்று அடித்துவிட்டார். பிறகும் அவர் மனம் நிம்மதி அடையவில்லை.

"கவர்னர்துரை சாயந்திரம்வரையில் அங்கே காத் திருக்க முடியவில்லையோ? அதற்குள் பிள்ளையை யார் வாரிக் கொண்டு போய்விடுகின்றார்கள்?" என்று கூவினார். அவர் வார்த்தைகளைப் பாதி கேட்டும் பாதி கேளாமலும் முருகன் வண்டியை மறுபடியும் ஸ்டேஷனுக்குத் திருப்பினான்.

ஆம், ஏழையாகப் பிறந்தவன் எஜமானர் இடும் வேலை யைச் செய்யத் தவறினால் எதையும் அனுபவித்துத்தானே ஆகவேண்டும்?

## 5

இரவு மணி எட்டு இருக்கும். புண்ணியமூர்த்தி பிள்ளை மிகவும் அலுப்பாகத் தம் சோபாவின்மேல் படுத்

திருந்தார். முருகனை அடித்ததால் ஏற்பட்ட அலுப்போ, என்னவோ தெரியவில்லை. அவன் அவர் கால்களை வருடிக் கொண்டிருந்தான்:

"மகாராசா!......மாப்பிள்ளை அவர்களையும் அழைத்துக் கொண்டு வந்துவிட்டேன். எல்லா வேலையுங்கூட முடிந்துவிட்டது. நேரமாகின்றது. நான் வரும்பொழுது குழந்தைக்கு மிகவும் காயலாவாக இருந்தது. இப்பொழுது எப்படி இருக்கிறதோ?......ஒரு குஞ்சுதான் மிச்சம் இருக்கிறது. உத்தரவு கொடுத்தால் நான் போகிறேன்" என்று எல்லாப் பற்களையும் காட்டிக் கெஞ்சினான்.

"என்னடா அவ்வளவு அவசரம்? அப்படிப் போனால் தான் போகட்டுமே! சுடுகாடு எல்லாம் எலும்பாகி விடுமா, என்ன?......இந்தா, இந்தக் காலையும் கொஞ்சம் பிடித்துவிடு. பிறகு கடைக்குப் போய் நாளைத் தீபாவளிக்கு வேண்டிய பட்டாஸ், மத்தாப்பு, வாங்கிக் கொடுத்துவிட்டுப் போய்த் தொலையலாம்" என்று தாராளமாகச் சொன்னவாறே மற்றொரு காலையும் நீட்டினார்.

## 6

தன் புருஷன் போன பிறகு கோமளம் பாலுவின் பக்கத்தில் உட்கார்ந்து அவனைக் கவனித்துக்கொண்டிருந்தாள். பாலு பத்து மணி வரையில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். ஆனால் ஜுரம் மாத்திரம் மேன்மேலும் அதிகரித்துக்கொண்டே போயிற்று. கோமளத்தின் அடி வயிற்றில் நெருப்பு விழுந்ததுபோ லிருந்தது. அவள் மனம் ஒரு நிலையிலும் நிற்கவில்லை.

"கொஞ்சம் வெள்ளாட்டுப் பால் கொடுத்துப் பார், அம்மா" என்றாள் அடுத்த வீட்டு ராஜம்மாள். தன் வீட்டிலிருந்த ஆட்டைக்கூட இழுத்துக்கொண்டு வந்தாள்.

கோமளம் என்ன செய்வதென அறியாமல் உன்மத்தம் பிடித்தவள்போல அங்கும் இங்கும் அலைந்தாள். அவள் கண்கள் மாத்திரம், 'புருஷன் வருகிறானா?' என்று நிமிஷத்திற்கு ஒருதரம் வாயிற்படியைப் பார்த்தவாறு இருந்தன. கடைசியில் ஆட்டினிடம் பால் கறக்கச் சென்றாள்.

பாலுவின் பக்கத்தில் இப்பொழுது பகவான்தான் உட்கார்ந்து கவனித்துக்கொண்டிருந்தான். அவன்தானே ஏழைகளுக்கெல்லாம் கதி? இச் சமயம் அவனும் பாலுவைக் கைவிட்டிருக்க வேண்டும். இல்லையெனில் அக் குழந்தையின் தூய்மையான ஆவி, கோமளம் ஆட்டினிடம் இருந்தபொழுது யாரும் அறியாதபடி பறந்துவிட்டதன் அர்த்தம் என்ன?

ஆட்டுப்பாலுடன் தாய் வந்தாள். பாலுவின் நிலைமையை அறிந்ததும் ஒரு பெரிய இடி அவள் தலையில் விழுந்ததுபோ லிருந்தது. பாலிருந்த குவளை நழுவி விழுந்தது. ஆனால் அவள் அழவில்லை; கண்களிலிருந்து ஒரு பொட்டுக் கண்ணீராவது சிந்தவில்லை; ஒரு மூலையில்போய் உட்கார்ந்தாள்; அவ்வளவுதான்!

அங்கே பக்கத்தில் இருந்தவர்கள் உள்ளே வரத்தான் செய்தார்கள். ஆனால் அவர்களும் அவளுக்கு ஒருவிதமான சமாதானமும் சொல்லவில்லை. வாய் திறவாமல் மௌனமே சாதித்தனர். கிழத்தாய் ஒருத்திமட்டும், "ஏழைக்கு ஏது குழந்தையும் குட்டியும்?" என்று மெதுவாக முணாகினாள். ஆனால் யாரும் அதைக் கவனிக்கவில்லை.

## 7

இரவு 11-மணி இருக்கும். மனத்தில் அளவில்லா எண்ணங்களுடன் முருகன் தன் குடிசைக்கு ஓடிவந்தான். அவன் நினைத்துப்போனபடி கையில் நாலணுக் கொண்டுவர முடியவில்லை. விட்டாலே போதுமென்றிருந்தது அவனுக்கு.

குடிசையின் வாயிற்படியை மிதித்தான். எங்கும் நிசப்தமே நிலவி யிருந்தது. அவன் மிகவும் திகிலுடன் உள்ளே நுழைந்தான். ஓர் ஓலைப் பாயின்மீது அவன் எட்டாவது குழந்தை கிடந்தது. கோமளம் ஒரு மூலையில் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தாள். அண்டை அயல் வீட்டுப் பெண்களுள் சிலரும் உள்ளே இருந்தனர்.

அவன் சோர்ந்த உடல், இதைத் தாள முடியாமல் சாய்ந்துவிட்டது. அவன் தலை, பக்கத்துச் சுவரில் வேகமாக மோதிக்கொண்டது. அந்த அதிர்ச்சியினால் மாத்திரம் அவன் மயக்கம் அடைந்திருக்க மாட்டான். அவன் மனமும் அடிபட்டு முறிந்து போயிருந்தது.

## 8

அன்றிரவு தீபாவளி. புண்ணியமூர்த்தி பிள்ளையின் வீட்டில் களிப்பும் விளையாட்டும் சிரிப்பும் கோலாஹலமும் நிலவின. மாப்பிள்ளை, பெண் உள்பட எல்லோரும் மத்தாப்பைக் கொளுத்தி வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தனர். அதன் வெளிச்சம் நாற்புறமும் சிதறி ஜ்வலித்துக்கொண் டிருந்தது.

சிறிது தூரத்திற்கப்பால் நதியின் கரைக்கருகே மற்றொரு வெளிச்சம் காணப்பட்டது. முகுந்தனும் கோமளமும் அருமையாகப் பெற்றெடுத்து வளர்த்த கடைசிக் குழந்தையான பாலுவின் உடலைச் சுற்றித் தீயின் சுடர் சுழன்று எரிந்துகொண்டிருந்தது.

பெற்றோர்களின் வயிற்றில் ஆக்ரோஷத்துடன் மூண்டெரிந்த எல்லாவற்றையும்விடப் பெரிய தீ மாத்திரம் ஒருவர் கண்ணுக்கும் தென்படவில்லை. அப்படித் தென்பட்டிருந்தாலும் அதை யாரும் கவனித்திருக்கமாட்டார்கள்.

# சண்டையும் சமாதானமும்

[த. நா. ஸேனாபதி]

## 1

பழையதோர் ஆலமரம். அதன் பெரிய கிளையொன்றின்மேல் குதிரை சவாரி செய்வதுபோல் இரு பக்கமும் கால்களைத் தொங்கவிட்டு உட்கார்ந்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்திருந்தான் மணி. சாதாரணமாக அவன் எந்தக் காரியத்தையும் ஆய்ந்தோய்ந்து பார்த்துத்தான் செய்வான். ஆயினும் அன்று காலை தான் செய்த காரியம் இவ்வளவு பிரமாதத்திற்கு வந்துவிடும் என்று அவன் நினைக்கவே இல்லை.

நல்ல உச்சி வேளை. மணியின் வயிற்றில் பசி கிண்ட ஆரம்பித்தது. ஜேபியில் கையை விட்டுப் பார்த்தான். அதிலிருந்த ஒன்றிரண்டு கொய்யாப்பழத்தைக்கூட ஞாபக மறதியாய் முன்பே தின்றுவிட்டதால் அது காலியாக இருந்தது. இப்பொழுது மேலே நோக்கினான். ஒரு கிளையில் பிறைச் சந்திரன் போன்ற தேனீக்கூடு ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது. கொஞ்ச நேரம்வரை பசியையும், தனக்குக் கிடைக்கப்போகும் பிரம்படியையும் மறந்து கண் கொட்டாமல் அதையே பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு மெதுவாகக் கீழ்க்கிளைக்கு இறங்கிவந்து உட்கார்ந்துகொண்டான்.

தேனீக்கூட்டுக் கருகில் இருந்தால் ஆபத்து வரும் என்பது அவனுக்குத் தெரியும்.

ஆலமரத்திற்கு எதிரே ஓர் இரும்பு'கேட்'போட்ட வீடு. மரத்திலிருந்து பார்த்தால் வீட்டினுள் நடப்பதெல்லாம் நன்றாகத் தெரியும்; வீட்டிலுள்ளோர் பேசுவதுகூட நன்றாகக் கேட்கும். மறுபடியும் மணி அவ் வீட்டினுள் நுழைந்தால் அவனுக்கு முதல்முதலாகப் பிரப்பம் பழந்தான் கிடைக்கும். 'யாருக்கும் தெரியாமல் எவ்விதமாவது பாட்டியிடம் போய் விட்டால் தேவலை. ஆனால் அதுதான் முடியாத காரியம். ஏனென்றால் வாசலில் வேலைக்கார முனிசாமி காத்துக்கொண்டிருக்கிறான். புழைக்கடையில் வேலைக்காரி தாயி இருக்கிறாள். மதில் சுவரைத் தாண்டித் தோட்டத்துக்குள் குதித்து வீட்டுக்குள் ஓடிவிடலாமென்றால், அங்கே அக்கா காமு இருப்பாளே' என்று யோசனை பண்ணினான் மணி.

மணி ஏன் இங்கே ஒளிந்து கொண்டான் தெரியுமா? அவனுக்கு வயசு எட்டாகிறது. அவன் அக்காள் காமுவுக்குப் பதினொன்றாகிறது. நேற்று மாலை அவன் காமுவோடு சண்டை போட்டான். அதற்காக அவனுக்கு நல்ல உதை விழுந்தது. சமயம் பார்த்துப் பழி வாங்குவதென்று நிச்சயித்து அவன் அப்பொழுது சும்மா இருந்துவிட்டான். இன்று காலை படுக்கையை விட்டு எழுந்ததும், காமு தலை என்னவோ லேசாக இருக்கிறதே என்று பின்னால் தொட்டுப் பார்த்தாள். தலைப் பின்னலின் ஒரு பாகத்தைக் காணோம். ஒன்றும் தோன்றாமல் சுற்று முற்றும் பார்த்தாள். எதிரே சுவரில் அது தொங்கிக்கொண்டிருப்பதைக் கண்டதும் ஓ வென்று அழ ஆரம்பித்தாள்.

தான் செய்த விஷமத்தின் பலன்களை அறியும் பொருட்டு மணி அங்கும் இங்கும் அலைந்துகொண்டிருந்தான். காமுவின் அழுகை யோசையைக் கேட்டவுடன் என்னவோ

பிரமாதம் நிகழும்போல் இருக்கிறது என்றெண்ணி வீட்டை விட்டு மெதுவாக நழுவி ஆலமரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டு, வீட்டில் என்ன நடக்கிறது என்று கவனிக்கலானான். காமு அழுவதும், அப்பா கோபத்துடன், "எங்கே அவன்? அவன் எங்கே?" என்று கர்ஜிப்பதும், வேலைக்காரனைப்பார்த்து, "எங்கே இருந்தாலும் அந்தக் கழுதையைத் தேடிப் பிடிச்சுண்டு வா" என்று கட்டளை யிடுவதும், எல்லாம் சேர்ந்து ஒரே கலவரமாக இருந்தன.

மணிக்குப் பிரப்பம்பழப் பிரயோகம் புதியதல்ல; நித்திய வழக்கமாய்ப் போய்விட்டது. அன்றொரு நாள் காமு மாடியில் விளையாடிக்கொண் டிருக்கையில் அவள் கழுத்துச் சங்கிலி அறுந்து தரையில் விழுந்துவிட்டது. அவள் அதைப் பார்க்கவில்லை. மணி மட்டும் அதைக் கவனித்தான். ஆனால் யாரிடமும் சொல்லவில்லை. காமு கீழே சென்றதும் அவன் அதை எடுத்து ஜேபியில் வைத்துக்கொண்டு, 'எங்கே ஒளிச்சு வைக்கலாம்?' என்று வீடெல்லாம் தேடினான். கீழே சாப்பிடுகிற கூடத்தில் சாதத் தவலை இருந்தது. அதன் மேலிருந்த பாத்திரத்தைக் கீழே எடுத்து வைத்துச் சங்கிலியைச் சாதத்தில் புதைத்துவிட்டான். சாதம் போடும் போது எப்படியாவது தெரிந்துவிடும் என்று எண்ணி அப்படிச் செய்தான்.

ஆனால் விளையாட்டு விபரீதமாக முடிந்தது. சற்று நேரம் கழித்துக் காமு தன் கழுத்தில் சங்கிலி இராததை அறிந்து மாடிக்கு வந்து தேடிப் பார்த்தாள். அங்கே அதைக் காணாததால் மணிதான் திருடிவிட்டான் என்று கத்தினாள். மணியின் தகப்பனார் அவனைப் பிடித்துக்கொண்டு, "தோலை உரிச்சுப்புடுவேன். எங்கே வச்சே. சொல்றயா இல்லையா?" என்று கேட்டார். தான் செய்ததைச் சொன்னால் உதை விழுமென்று எண்ணி அவன் தனக்கு ஒன்றுமே தெரியாது

என்று முதலில் சாதித்தான். அடிமேல் அடி விழவே, சாதத் தவலையில் பார்க்கும்படி சொன்னான். அதில் சங்கிலியைக் காணவில்லை. " திருடியது மல்லாமல் பொய்யுமா சொன்னாய்?" என்று அவன் தந்தை அவனை நன்றாக அடித்து வெளியே துரத்திவிட்டார். அன்று நடந்த அந்த நிகழ்ச்சியிலிருந்து தம்பிக்கும் தமக்கைக்கும் சண்டை முற்றிக் கொண்டே வந்தது. இன்று சரியான சமயம் வாய்க்கவே கத்திரியின் உதவியால் வஞ்சம் தீர்த்துக் கொண்டு விட்டான்.

## 2

மத்தியான்னம் மணி இரண்டு இருக்கும்: வெயில் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வந்தது. " இப்போ அவருக்குக் கோபம் கொஞ்சம் தணிஞ்சு இருக்கும். யாரையும் வெளியிலே காணோம். மெள்ளப் பாட்டி கிட்டே போய்விட்டால் பரவாயில்லை. ஆனால் அந்தக் காமு இருக்கிறதே, அது பிடிச்சுண்டுடுமே. என்னடா பண்றது?" என்று பெருமூச்சுவிட்டான் மணி.

அதற்குள் புழைக்கடையில் பேச்சுக் குரல் கேட்டது. வேலைக்கார முனிசாமியுடன் அப்பா பேசிக்கொண் டிருந்தார்.

" அகப்பட்டானா?"

" எங்கெங்கெல்லாமோ தேடிப் பார்த்தேன். காணுங்களே?"

" சவுக்குத் தோப்பிலே போய்ப் பார்த்தாயா?"

" இல்லீங்க சாமி."

" அப்படியானால் அங்கே போய்ப் பார்த்துவிட்டுவா."

முகத்தில் வெறுப்புத் த்ட்ட முனிசாமி வெளியே போனான்.

மணி தன்னுள்ளே சிரித்துக்கொண்டான். இவ்வளவு கிட்டே தான் இருக்கும்போது எங்கெங்கோ போய்த் தேடினல் அவனுக்கு ஏன் சிரிப்பு வராது?

சூரியன் அஸ்தமிக்கும் சமயம். மணி கீழே நோக்கினன். வீட்டுப் புழைக்கடையில் முனிசாமியும் தாயியும் பேசிக்கொண்டிருந்தனர்.

முனி:—எங்கே ஓடிப் பூட்டுதோ தெரியவில்லையே. இன்னிக்கி முழுதும் என் தலைமேலேதான் வெயிலெல்லாம். அலஞ்சு அலஞ்சு கால் ஓஞ்சு போச்சுது. இதுமாதிரி துஷ்டப் பையனை நான் பார்த்ததே கிடையாது.

தாயி:—(மோவாய்க்கட்டையில் கையை வைத்துக்கொண்டு) ஆம் நாய்க்கரே, நான்கூடப் பார்த்தது கிடையாதுன்னு இதுபோலத் துஷ்டப் பையனை! எங்கே ஒளிஞ்சுக்கினு இருக்குதோ, தெரியல்லேயே.

முனி:—பெரிசானு பலேப் பேர்வழியாப் பூடும். இன்னிக்கு முழுதும் நான் அலேந்தது கடவுளுக்குத்தான் தெரியும். என் கையில் அகப்பட்டு விட்டுதுன்னு நான் அதைச் சும்மா விட்டுடுவேனு? கின்டைப் பிடிச்சு இழுத்துக்குனு வரமாட்டேனு?

அதுவரைக்கும் பொறுத்துக்கொண் டிருந்தான் மணி. அதற்குமேல் அவனல் சும்மா இருக்கமுடியவில்லை. முகம் சிவக்கக் கோபத்துடன் ஜேபியிலிருந்த கோலிக்குண்டை எடுத்து வேலைக்காரனுடைய தலைக்கு நேராகப் பார்த்துப் போட்டான்.

"டொக்" என்று சப்தம் கேட்டது. ஒரு ஆள்ளுத் துள்ளி, "ஐயோ, அப்பாடா!" என்று கத்தினன் முனிசாமி. அவன் வழுக்கைத் தலையில் கொட்டைப் பாக்களவு வீங்கிவிட்டது. தலையைத் தடவிக்கொண்டே மரத்தை நோக்கினன். மணியைப் பார்த்ததும் ஒரே குதி குதித்து,

“சாமீ, சாமீ, சின்ன யஜமான் அகப்பட்டுக்கிட்டார். ஓடி யாங்கோ, சாமீ” என்று கத்தினான்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஆலமரத்தடியில் கூட்டப் கூடிவிட்டது. பாட்டி முதல் ஒன்றரை வயதுத் தம்பி கிட்டுவரை எல்லோரும் வேடிக்கை பார்க்கலானார்கள்.

அப்பா பிரம்பைக் காட்டி, “இறங்கி வரயா? இல்லையா?” என்று கத்தினார்.

“மாட்டேன்” என்றான் மணி.

“என்ன? இப்போ இறங்கறயா இல்லையா? குரங்குக் குட்டி மாதிரி.........”

எல்லோரும் ‘கொல்’ என்று நகைத்தனர். அப்பா முகத்தில் அசடு தட்டியது.

“அடிக்க மாட்டேன்னு சொல்லு. இறங்கி வறேன்” என்றான் மணி.

“அடிக்க மாட்டேன்னு சொல்லச் சொல்றே? உன்னை வெட்டிப் புதைச்சுப்புட மாட்டேனா? இறங்கிவா கழுதை!”

“மா......ட்டே......ன்.”

அப்பா வேலைக்காரனைப் பார்த்து, “மேலே ஏறிக் காதைப் பிடித்துத் திருகி இழுத்துண்டு வா அந்தக் கழுதையை” என்று கட்டளையிட்டார்.

முனிசாமி மரத்தில் ஏற ஆரம்பித்தான். உடனே மணி மெள்ள உச்சாணிக் கிளைக்குப்போய் உட்கார்ந்துகொண்டு “டே முனிசாமி, இப்போ உன்னை அழவைக்கிறேன் இதோ பார்!” என்று கூறித் தனக்குக் கீழே இருந்த தேனீக் கூட்டை அவனுக்குக் காண்பித்தான்.

அந்தக் கூட்டைப் பார்த்ததும் முனிசாமி பயந்து போய், “அப்பாடா, அப்பா! தேனீ இருக்குதுபோய்” என்று கத்திக்கொண்டே அவசர அவசரமாகக் கீழே இறங்க ஆரம் பித்தான்.

கொஞ்ச நேரம்வரை மணி தேனீக்கூட்டைப் பார்த்த வண்ணம் ஸ்தம்பித்து இருந்தான்; "அடாடா, பார்க்காமல் உயர ஏறிவிட்டோமே. இப்போது எப்படி இறங்குகிறது!" என்று விழித்தான். அச் சமயம் தேனீக் கூட்டுக்கருகில் மஞ்சள் வெயிலில் பளபளவென்று என்னவோ தெரியவே அதை உற்று நோக்கினான். காமுவின் கழுத்துச் சங்கிலி! இப்பொழுது எல்லாம் விளங்கிவிட்டது. தான் அன்றைக்குச் சாதத் தவலையை மூட மறந்துவிட்டிருக்க வேண்டும். தான் போனதும் காக்காய் வந்து சாதத்தை அள்ளியிருக்கும். கூடவே சங்கிலியும் வந்திருக்கும். காக்காய் இந்த மரக்கிளையில் உட்கார்ந்துகொண்டு சாதத்தைத் தின்றுவிட்டுச் சங்கிலியை விட்டுவிட்டுப் போயிருக்கும் என்று ஊகித்துக்கொண்டான்.

"அப்பா! காமு கழுத்துச் சங்கிலி இதோ இருக்கு" என்று கத்தினான்.

கழுத்துச் சங்கிலி என்றதும் காமு, "அப்பா, அப்பா, என் கழுத்துச் சங்கிலியைக் கொடுக்கச் சொல்லுப்பா" என்று கத்தினாள்.

"சங்கிலியா? எடுத்துக்கொண்டு கீழே இறங்குடா!"

"அடிக்கலேன்னு சொல்லு. இறக்கறேன்" என்றான் மணி.

"அடிக்கவில்லை. இறங்கி வா" என்றார்.

மணி சந்தேகத்துடன், "என்னக்கூட மாட்டயே?" என்று கேட்டான்.

"மாட்டேன்."

மணி கிளையில் மெதுவாக நகர்ந்துகொண்டே தேனீக் கூட்டை நெருங்கினான். எல்லோரும் அவனுடைய துணிச்சலைக் கண்டு ஆச்சரியப்பட்டு மேலே என்ன நடக்கிறதென்று கவனித்தனர்.

இப்பொழுது ரீங்கார சப்தம் கேட்கவில்லை. மணி நிதானமாகத் தேனீக் கூட்டுக்கருகில் வந்து சங்கிலியைக் கையில் எடுத்துக்கொண்டான். உடனே 'பும்' என்று ரீங்கார சப்தம் கேட்டது. தேனீக்கள் மணியைச் சூழ்ந்துகொண்டன. தேனீக்கள் சும்மா இருக்குமா? மணியின் காது நுனி, மூக்கு நுனி, உதடு, எல்லாம் சிவந்து போயின. ஒரே எரிச்சல். அசைந்தால் அதிக ஆபத்து; ஆதலால் அப்படியே உட்கார்ந்திருந்தான். கொஞ்சம் கொஞ்சமாகத் தேனீக்கள் கூட்டுக்குள் சென்றன. மணி மெதுவாக நகர்ந்துகொண்டே கீழ்க்கிளையில் காலைவைத்து இறங்கிக் கீழே வந்துசேர்ந்தான்.

அவனுடைய முகத்தைப் பார்த்ததும் அப்பா திடுக்கிட்டு, "இது என்ன? இவன் யார்? மணியா, வேறு யாராவதா?" என்றார்.

மணியின் முகம் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாதபடி மாறியிருந்தது. நெற்றி, உதடு, காது, மூக்கு எல்லாம் வீங்கிப்போ யிருந்தன.

இரவு தம்பியும் தமக்கையும் படுக்கையில் படுத்துக்கொண்டனர். கொஞ்ச நேரம் வரை இருவரும் பேசவில்லை. பிறகு காமு மெதுவாகப் படுக்கையை விட்டெழுந்து தம்பியிடம் வந்து, "மணி, ரொம்ப வலிக்கிறதா?" என்று ஆதரவுடன் தழுதழுத்த குரலில் கேட்டாள்.

"ஊம்" என்றான் மணி.

காமுவுக்கு அவன் மேலிருந்த கோபமெல்லாம் போய் விட்டது.

"தேங்காய் எண்ணெய் தடவட்டுமா?" என்று கேட்டாள்.

"ஊம்."

காமு தேங்காய் எண்ணெயை அவன் மூக்கின்மேல் தடவிக்கொண்டே, "ஏன் மணி, என் தலை மயிரைக் கத்த

ரிச்சே? அதனால்தான் சாமி உன் மூக்கு, காது எல்லாத்தையும் வீங்கப் பண்ணிட்டார்" என்றாள்.

மணி, "இனிமேல் அப்படியெல்லாம் செய்யமாட்டேன்; அக்கா என்னை மன்னிச்சுடு" என்றான்.

காமு அவனைக் கட்டியணைத்துக்கொண்டு, "இனிமேல் நல்ல பையனா இருக்கணும்" என்று கூறி அவன் நெற்றியில் முத்தமிட்டாள்.

மணி கொஞ்ச நேரம் மௌனமா யிருந்து, "அக்கா, உன் தலைமயிர் மறுபடியும் வளருமோல்லியோ?" என்று கேட்டான்.

தலைமயிர் என்றதும் தான் பறிகொடுத்த அருமையான கூந்தலின் ஞாபகம் வரவே காமுவின் கண்களில் நீர் ததும்பியது. உடனே கண்களைத் துடைத்துக்கொண்டு, "உன் மூக்கு, உதடு எல்லாங்கூடச் சரியாப் போயிடும். பயப்படாதே, மணி" என்றாள்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம், தம்பியும் தமக்கையும் ஒருவர் கழுத்தை ஒருவர் கட்டிக்கொண்டு நித்திரையில் ஆழ்ந்தனர்.




# விதி

['சம்பந்தன்']

## 1

உள்ளே களியாட்டுக்களும் கேளிக்கைகளும் நடந்து கொண்டிருந்தன. ஆயிரக் கணக்கான ஜனங்கள் அதிலே கலந்து சந்தோஷமாகக் காலத்தைக் கழித்தார்கள். அங்கிருந்தவரும் ஆரவாரமும் சிரிப்பும் தெருவுக்கு அப்பாலும் வெகுதூரம் வரைக்கும் கேட்டுக்கொண்டிருந்தன. ஆனால் தெருவில்...? ஏழைப் பிச்சைக்காரர்களின் கூட்டம். போலீசாரால் துரத்தப்பட்டு ஓடுவதும் ஒளிந்துகொண்டு திரும்புவதுமாக அந்தக் கூட்டம் நிலைதடுமாறி அடிக்கடிக் கலைந்து கூடிக்கொண் டிருந்தது. அதிலே பெண்களும் கிழடுகளும் குழந்தைகளும் கலந்திருந்தார்கள். அவர்களைக் கூர்ந்து பார்ப்பதற்கும் அங்கே ஒருவரும் இல்லை. யாராவது வெளியே புறப்படும் போதுமட்டும், "ஐயா! ஏழைக்கு ஒரு செப்புக்காசு கொடுங்கள்; கோடி புண்ணியம் கிடைக்கும்" என்ற ஏழைகளின் சோகம் நிறைந்த ஒலிகளே தெருநெடுகக் கேட்டுக்கொண்டிருந்தன.

ஜனங்களிற் சிலர் வெளியே வந்தார்கள். சில பிச்சைக்காரர்களும் அவர்களைத் தொடர்ந்தார்கள். "அம்மா!

ஏதாவது கொடுங்கள்; பசிக்கிறது" என்று ஒரு குரல் எழுந்தது. "சீ நாயே! தூரப் போ" என்ற பதிலே அதற்குக் கிடைத்தது. மறுபடியும், "அம்மா", "ஐயா" என்ற குரல்கள். அதற்கு, "ஐயையோ! சகிக்கமுடிகிற தில்லையே. இந்த அரசாங்கமாவது இவர்களைக் கொன்று விட்டால் என்ன? தெருவிலே கிளம்ப முடிகிறதில்லை. தொலைந்து போங்களேன்" என்ற இனிமையான வரவேற்பு மட்டும் கேட்டது.

ஒருவர்பின் ஒருவராகப் போன அத்தனை பேரும் திரும்பிவிட்டார்கள். இப்படியே பல ஆயிரம் பேரிடம் கேட்டுக் கேட்டு அவர்களுக்கு ரோஷமும் மானமும் போய் விட்டன. "கேட்டால், 'இல்லை போ' என்றால் நாங்கள் போய்விடுகிறோம். எதற்காக இத்தனை வசவுகள்? ஆமாம்; ஒருவரிடத்திலும் பிசகில்லை. எங்கள் விதி செய்விக்கிறது" என்ற ஒரு பெண் குழந்தையின் கீச்சுக் குரல்மட்டும் தனிமை யிலே கேட்டது. அதற்குள்ளே பிச்சைக்காரர்கள் தெருக் கோடியிலே மறைந்துகொண்டிருந்தார்கள். அவள் அந்த இடத்தை விட்டு அசையவேயில்லை. இதுவரை எவ்வளவோ நேரமாக அங்கே சுற்றிச் சுற்றி அலுத்துப் போனாள். அறப் புழுவைப் போலவே ஜனங்கள் அவளைத் தூரத் தள்ளினார் கள். சிலர் மட்டும், "உன் ஆட்கள் எங்கே ஒளிந்து நிற்கிறார்கள்? சோவாமற் சாப்பிட இப்பொழுதே கற்றுக் கொண்டாயே; போடி நாயே!" என்று சுடும்படி பேசினார் கள். இந்தப் பேச்சுகள் ஏழைக் குழந்தையின் இருதயத் தைக் கசக்கிவிட்டன. வருகிறவர்கள் போகிறவர்கள் எல் லோரையும் பார்க்கப் பார்க்க அவளுக்கு எரிச்சலும் அழு கையும் வந்தன. யாரையும் பிச்சை கொடுங்கள் என்று கேட்கவும் மனம் வரவில்லை, ஒன்றும் கிடைக்கா விட் டால் என்ன செய்வதென்றும் தெரியவில்லை. 'அம்மா

வீட்டிலே என்ன செய்கிறளோ? ஜ்வரம் எப்படி அடிக்கிறதோ?' என்ற எண்ணங்களும் அவளது ஸ்படிகம்போன்ற உள்ளத்தை அமுக்கிக்கொண்டிருந்தன.

பேசாமல் நின்றவள், தனக்கு எதிரே வந்த மனிதரைப் பார்த்தாள். அவரும் அவளேயே கவனித்துக்கொண்டு வருவதாகத் தெரிந்தது. துணிவாக இரண்டு கைகளையும் அவருக்கு முன்பு நீட்டினள்; ஆனல் தலை நிமிரவில்லை. அவருக்கு இது ஆச்சரியமாகவே இருந்தது. அந்தச் சிறிய கைகளைப் பிடித்துக்கொண்டு, "அம்மா, உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். பெரிய மனிதர் எவரும் இப்படிப் பேசினதை அவள் கேட்டதில்லை. ஆவல் நிறைந்த கண்களால் அவரைப் பார்த்தாள். ஏழைக் குழந்தையின் கண்கள் கலங்க, வாயிலும் பேச்சு வராமல் துடித்தது. "அம்மா! உனக்கு என்ன வேண்டும்? என்னிடம் பயப்படாமற் சொல்லு. தடுமாருதே" என்று அவர் மறுபடியும் கேட்டார். அப்போதுதான் அவள் பேச்சு வெளியே கேட்டது.

"யாரைக் கெஞ்சினலும் உதைக்க வருகிறர்கள். ஏதாவது பிச்சை கொடுங்கள், ஐயா."

"நீ யாரம்மா? உன் பெயர், ஊர் என்ன?"

"ஐயா! நான் ஒரு பிச்சைக்காரப் பெண்ணென்று தெரியவில்லையா? என் பெயர் சாந்தி. எங்களுக்கு அந்த ஆற்றோரக் கிராமம்."

"அப்படியானல் உனக்கு அம்மா இல்லையா?"

"அம்மா காயலாகக் கிடக்கிறள். நான் போகலாமா என்று கேட்டபோது விடமாட்டேனென்று தடுத்தாள். சொல்லாமல் மற்றவர்களோடு ஓடி வந்துவிட்டேன். இனி எல்லோரும் போய்விடுவார்கள். ஏதாவது கொடுங்கள்; நானும் போகவேண்டும்."

"அம்மா சாந்தி! உன்னைத் துணையோடு அனுப்பிவைக்கிறேன். என் வீட்டுக்கு வருகிறாயா?"

சிறிது நேரம்வரை அவள் ஒன்றும் பேசவில்லை. பிறகு, "ஐயா! எல்லோரும் என்னைக் கண்டால் அடித்து விரட்டுகிறார்கள். நீங்கள் ஏன் அப்படிச் செய்யாமல் நல்லவராக இருக்கிறீர்கள்?" என்று அவள் கேட்டாள். இதைக் கேட்டதும் அவரும் சிறு குழந்தை யாகிவிட்டார். ஆவலோடு இரண்டு கைகளாலும் அவளை அணைத்துக்கொண்டு முத்தமிட்டுப் பரவசமானார். பிறகு, "சாந்தி! நீ குழந்தையாயிற்றே! உன்னைக் கண்டால் எல்லோருக்கும் பிடிக்குமல்லவா?" என்று சொல்லிக்கொண்டே தம் வீட்டுக்கு அவளை இட்டுச் சென்றார். குழந்தைக்கு எல்லாம் புதுமையாகவே இருந்தது. அவள் சந்தோஷத்தால் அழுதுவிட்டாள். "நீ இனிமேல் பிச்சைக்குப் போகவே கூடாது. என்ன வேணுமானாலும் நான் தருகிறேன். ஏனம்மா?" என்று அவர் கேட்டபோது சாந்தி சந்தோஷத்தோடு தலையை ஆட்டினாள். கொஞ்ச ரூபாய்களை அவளது துணியிலே முடிந்து துணைக்கு ஓர் ஆளையும் அனுப்பிவைத்தார். திடீரென்று ஏற்பட்ட பாசம் அந்தக் குழந்தையைப் பிரிய விடாமல் இழுத்தது.

சாந்தி தங்கள் குடிசையைக் கண்டதும் மான்போலக் குதித்துக்கொண்டு உடன்வந்த மனிதனையும் கவனிக்காமல் உள்ளே ஓடிவிட்டாள். மனமுடைந்து நோயோடு கிடந்த அந்த ஏழைத் தாயின் முகம் அவளைக் கண்டதும் மலர்ந்தது. தன் பலமற்ற கைகளைத் தூக்கி, "வா என் செல்வமே! இத்தனை நேரம் எங்கே போனாய்?" என்று கேட்டாள். குழந்தை ஒன்றும் பேசவில்லை. துணியில் இருந்த முடிப்பை அவிழ்த்து அம்மாவிடம் கொடுத்தாள். "அம்மா! விதி நம்மைக் கொன்றுவிடும் என்றாயே? இன்று பார்த்தாயா?" என்று நடந்த எல்லாவற்றையும் சொன்னாள். அந்தப்

பிச்சைக்காரக் குடிசையில் ஈசுவரனது கருணையைப் பற்றிய பேச்சுக்களை அன்றைக்கு முழுவதும் கேட்டுக்கொண்டிருந்தன.

## 2

ஒன்பது அல்லது பத்து வருஷங்களுக்கு முந்தி இருந்தால்: இன்றைக்கு எல்லோராலும் பிச்சைக்காரி யென்று கருதப்படுகிறவள் அளவில்லாத செல்வத்தில் பிறந்துகொண்டிருந்தாள். அவளிருந்த வீடு இன்றைக்கும் நகரத்தின் மத்தியிலே கம்பீரமாக விளங்கிக்கொண்டிருக்கிறது. அப்போது உடம்பில் ஏதாவது சிறிய கோளாறு ஏற்பட்டாலும் டாக்டர்கள், "நான்", "நீ" என்று வந்து குவிந்துவிடுவார்கள். "உடம்பு எப்படியம்மா?" என்று தினமும் நாலுதடவை கேட்டுப்போவதற்கும் அநேகர் இருந்தார்கள். ஆனால் இன்றைக்கு?......"இது என் விதி. யாரையும் குறை சொல்வதற்கில்லை" என்று அவள் தானே அடிக்கடி சொல்லிக்கொள்வாள். பதினைந்து வயசாக இருக்கும் போதும் அவளுடைய தாய், "பிரபா! என் செல்வமே!" என்று அவளைத் தன் மடிமீது எடுத்து அணைத்துக்கொண்டு தாலாட்டியது உண்டு. "கோமளமே", "குலவிளக்கே" என்று கொண்டாடின தாய் எங்கே? அந்த மாளிகையிலே அழியாத சோகத் திரைக்குள்ளே மயங்கிக் கிடந்து தவிக்கின்றாளோ? யார் அறிவார்? இவற்றை யெல்லாம் நினைக்க நினைக்கப் பிரபாவதியின் உள்ளம் சோர்ந்து கண்களில் நீர் நிறைந்துவிடும். அப்பொழுதெல்லாம், "விதி செய்விக்கிறது" என்ற வார்த்தைகள் மட்டும் மெல்லப் பிறந்து அவளது வாய்க்கருகிலேயே தேய்ந்து சூன்யமாகி விடும். இதைக் கேட்டுப் பழகினதாலேதான் குழந்தையும்,

பிச்சைக்காரர்களை ஜனங்கள் வெளித் துரத்தியபோது, "விதி செய்விக்கிறது" என்று சொல்லிக்கொண்டு நின்றாள்.

பிரபாவதி சிறு பெண்ணாக இருந்தபோது உலகம் அவளைக் கண்போலக் கருதி வளர்த்தது. எல்லோருக்கும் அவள் உயிர். பெரிய இடத்துக் குழந்தை அல்லவா? ஆனால் அவளுக்கு உயிர்போன்ற வேறு ஆசையும் இருந்தது. அந்த ஹரிஹரன் இப்பொழுது எங்கே என்பதும் அவளுக்குத் தெரியாது. தான் இத்தனை இழிந்த நிலைக்கு வந்ததும் மாசற்ற அந்த மனிதனாலேதான் என்பதாக அவள் நினைத்துப் பார்ப்பதே இல்லை. இளமையில் எப்படி எல்லாம் கலந்து விளையாடினார்கள்! பக்ஷிகள் போலக் கவலையின்றிப் பறந்தார்கள். அப்போது குழந்தைகளின் சிநேகந்தானே என்று எல்லோரும் கருதியிருந்தார்கள். புஷ்பங்களைப்போல அவர்களையும் பருவம் வந்து அணைத்துவிட்டது. பிறகும் அவர்களது பாந்தவ்யத்தை வெட்டிவிட ஒருவரும் நினைக்கவில்லை. அவள் பெரியவளான புதிதில், "பிரபா! இப்பொழுதெல்லாம் ஏனோ ஒதுக்கத்திலே போய்விட்டாய்?" என்று அவன் கேட்டதும், தான் மௌனமாக நின்றதும், தன் மௌனத்தில் எழுந்த புதிய உணர்ச்சிகளும், அவன் தன் கைகளைப் பிடித்துக்கொண்டு, "நீ எப்படி மாறினாலும் நான் உன்னைவிட்டுத் தூரத்திலே இருக்கமாட்டேன்" என்றதும் நேற்று நடந்ததைப்போலவே அவள் உள்ளத்திலே ஊறியிருந்தன.

"ஹரி! இப்படி ஏன் செய்கிறாய்?" என்பதை விட்டு, "நீங்கள் இப்படிச் செய்யலாமா?" என்று அவள் பேசத் தொடங்கிய காலம் அது. அவளுடைய எண்ணங்களிலும் செய்கைகளிலுமே பழைய இயல்பு இருந்தது. வார்த்தைகள் மாத்திரம் மாறின. இம் மாறுதல் அவனுக்குப் பிடிக்கவில்லை. "பிரபா! நான் என்ன பெரிய மனுஷனா? அதிக மரியாதை

செய்கிறாயே? எனக்கு இது வேண்டாம். முன்போலவே பேசு; விளையாடு. அதையே நான் விரும்புகிறேன்" என்றான். "போங்கள்; நாம் இன்னும் குழந்தைகளா? பார்த்தவர்கள் என்ன சொல்லுவார்கள்? அப்படியானால் உங்களோடு நான் பேசமாட்டேன்" என்று அவள் பிடிவாதம் செய்தாள். இந்த நாட்களில் அவர்களுடைய வாழ்விலே ஏதோ ஒன்று சூக்ஷ்மமாக அமைந்திருந்தது. அதனால் எல்லாவற்றிலும் ஓர் உற்சாகம் பிறந்ததேயன்றிச் சலனம் ஏற்படவில்லை. இப்படியே இரண்டு வருஷங்கள் கழிந்துவிட்டன.

## 3

பிரபாவதிக்குப் பதினாறு வயசுதான் இருக்கும்; ஹரிஹரனின் தகப்பனார் கல்கத்தாவிலே இறந்துவிட்டாரென்று செய்தி வந்தது. அங்கே அவருடைய சொத்துக்களின் மேல் வியாஜ்யங்களும் நடந்துகொண்டிருந்தன. எல்லாவற்றிற்கும் ஹரிஹரனே கல்கத்தாவுக்குப் போகவேண்டியிருந்தது. 'இந்தப் பொருளுக்காக இவளைப் பிரிந்து போக வேண்டியிருக்கிறதே!' என்று அவன் முதலில் வருந்தப்பட்டான். மற்றவர்களும் 'போ போ' என்று தொந்தரவு செய்தார்கள். எப்படியும் சீக்கிரம் வந்துவிடுவோம் என்று முடிவு செய்துகொண்டு புறப்பட்டான். போகும்போது, "பிரபா! நான் போகவேண்டியிருக்கிறதே! உடனே வந்துவிடுகிறேன். நீ சந்தோஷமாகப் போகச் சொல்லு" என்று அவளைக் கேட்டான். அவள் தலையை அசைத்தாள். அந்த அசைப்பு 'நீ போகவேண்டாம்' என்று சொல்லுவதுபோலவே அவனுக்குப் பட்டது. உயிரைப் பறித்துச் செல்லும் யமனது குரல்போலக் கல்கத்தா வண்டி கூவிய சத்தம் பிரபாவதியின்

ஹரிஹரன் கல்கத்தாவுக்குப் போய் ஒரு மாதகாலமாகி விட்டது. அப்போதுதான் பிரிவின் பயங்கரம் அவளுக்குத் தெரியவந்தது. தனது சரித்திரம் வசையாக எழுதப்படப் போகிறதே என்று கலங்கினாள். 'ஐயோ! அவர் வந்துவிட வேண்டுமே' என்று கவலையோடு பார்த்திருந்தாள். ஒவ்வொன்றாக மாதங்கள் ஐந்தும் கழிந்துவிட்டன. 'இனிக் கைகொடுத்து எனக்கு முன்பு நின்று பேச அவர் வரவேண்டும். இல்லாவிட்டால் நம் குலமே மானக்கேட்டால் அழிந்துவிடும். இதை அம்மா அறிந்தால்...' என்றெல்லாம் நினைக்கும்போது, தான் செத்துவிட்டதாகவே எண்ணிக்கொண்டாள். எல்லாவற்றையும் எழுதி உடனே வரும்படி ஹரிஹரனை வேண்டிக்கொண்டாள். பிறகும் ஒருமாதம் கழிந்துவிட்டது. அவனிடமிருந்து பதில்கூட வரவில்லை. கல்கத்தாவில் அவன் இருந்தால்தானே? விதி அவனை எங்கோ மறைவிலே ஒளித்து வைத்துவிட்டது. 'வாழ்வின் கடைசிக் கோட்டிலே உலகம் சொல்லும் வசை யென்னுஞ் சுழல்காற்றின் நடுவிலே நிற்கிறோம்' என்பதை மட்டும் அவள் பிரத்தியக்ஷமாகக் கண்டாள். வர வர மனத்திலும் உறுதி பிறந்தது. 'அம்மாவை விட்டுப் போவதை நினைக்க முடியவில்லையே! ஆனாலும் அவர்களுக்குக் கெட்ட பெயர் வராதபடி காக்க வேண்டும்' என்று சங்கல்பம் செய்துகொண்டிருந்தாள்.

ஒரு நாள் நடுநிசி. வானம் மழை முகில்களாற் போர்த்தப்பட்டிருந்தது. மரங்களும், கட்டடங்களும், பாதைகளும், வெறும் வெளியும் ஒன்றாக மயங்கிக் கிடந்தன. கண்களை இறுக மூடிக்கொண்டு பார்த்தாலும், மலர விழித்துப் பார்த்தாலும் உலகம் ஒரு மாதிரியாகவே தெரிந்தது. அடி வானத்தின் வடகோடியில் மட்டும் ஒரு நக்ஷத்திரம் மங்கலாகத் தெரிந்தது. தூரத்திலே சில நாய்கள் ஊளையிட்டுக்கொண்

டிருந்தன. மௌனமான இருளிலே அந்தச் சத்தம் பேய்களின் நினைவுகளைக் கொண்டுவந்தது. மரணத்தைத் தேடிக்கொண்டு அவள் போனபோதிலும் ஏங்கிக் கலங்கினாள். 'எப்படியானாலும் சாவு வரட்டும். ஆனால் இறந்த எனது தேகத்தைக்கூட இந்த உலகம் கண்டுவிடக் கூடாது' என்று நினைத்துக்கொண்டு இருளோடு ஐக்கியப்பட்டு நடந்தாள்.

மனத்தின் வேகம்போல நாழிகைகளும் கழிந்துகொண்டிருந்தன. நதிக் கரைக்கு வந்துவிட்டாள். மனமோ வர வரத் திடமற்றுத் தடுமாறியது. மறுபடியும் திடப்படுத்திக்கொண்டு தண்ணீருக்குள்ளே காலை வைத்தாள். முன்னால் ஏதோ ஒன்று மங்கலாகத் தெரிந்தது. உற்றுப் பார்த்தாள். அது ஒரு சிறிய படகு. எல்லா நினைவுகளும் ஒருமுறை சுழன்று தடுமாறின. 'தன்னைத்தான் கொன்றுகொள்வது மகா பாபம்; இதிலே சிசுஹத்தியும் ஏற்படுகிறது. எப்படியோ என் உடம்பு கண்டு பிடிக்கப்பட்டால் எல்லாம் தெரிந்துவிடும். கடவுளே தடுத்துப் புதுவழியைக் காட்டுகிறார்' என்று நினைத்துப் படகை அவிழ்த்து அதிலே ஏறிக்கொண்டாள். படகு தன் இஷ்டப்படியே சிலசமயம் வேகமாகவும் சிலசமயம் மெதுவாகவும் ஆற்றோடு சென்றது. அப்பொழுது தான் தனது வாழ்க்கைப் படகும் ஏதோ ஒரு திசையில் ஓடிக்கொண்டிருக்கிற தென்பதைப் பிரபாவதி உணர்ந்தாள். தான் இருக்கும் படகும், நீண்டு சலசலத்தோடும் நதியும், இருண்ட மரத்தோப்புக்களும் தனிமையிலே அவளைக் கலங்கச் செய்தன. மனம் நடுங்க உடம்பும் வேர்த்து நனைந்துவிட்டது. கண்களை இறுக மூடிக் கொண்டாள். படகு நீரைக் கிழித்துக் கொண்டு ஓடும் சத்தமொன்றே அப்போது கேட்டுக்கொண்டிருந்தது.

மெல்ல மெல்ல வானத்தில் முகில்கள் கலைந்தன. அங்கும் இங்குமாகச் சில நக்ஷத்திரங்கள் கண்சிமிட்டத் தொடங்

கின. அந்த நக்ஷத்திரங்களின் மங்கிய ஒளியிலும் அவளு டைய தேகம் பிரகாசித்தது. அப்போது நீர மங்கைபோல நதியின் நடுவிலே அவள் சென்றுகொண் டிருந்தாள். பட கும் தடுமாறிக்கொண்டே ஒரு கரையை அடைந்து நின்றது. பக்கத்திலே மணல் பரந்த நெடிய கரையைக் கண்டாள். நெருப்புப் போல ஒரு மூச்சு வந்தது. அதைத் தொடர்ந்து வந்த கண்ணீர்த் துளிகள் நதியின் பிரவாகத்திலே விழுந்து கலந்துவிட்டன. கரையில் வந்து பார்த்தபோது வழி துறை யொன்றும் தெரியவில்லை. சிறிது நேரம்வரை மண லில் இருந்தாள். "வாழ்வு என்ற குரூரமான பாதையிலே முள்ளால் குத்துப்பட்ட புஷ்பம்போல் ஆகிவிட்டாய். விதியோ கோரப் பற்களைக் காட்டிக்கொண்டு பயங்கரமாகச் சிரித்தா லும் உன் மானம் அழிந்துவிடப் போவதில்லை" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டாள். அப்பொழுது வைகறையும் வந்துகொண் டிருந்தது. உற்றுப் பார்த்த போது மனிதர் நடமாடிய ஒரு சிறிய பாதை மட்டும் தெரிந் தது. அது போனவழியே தானும் யோசிக்காமல் நடந்தாள்.

## 4

பிரபாவதி முழுதும் வேறான ஓர் உலகத்தை இப் போது கண்டாள். ஆழத்தில் மறைத்து வைத்திருந்த இரகசி யங்களைக் கூடச் சொல்லக்கூடிய மனிதர்கள் அங்கே அகப் பட்டார்கள். ஆனால் தன் பதி, தங்களது உயர்ந்த அந்தஸ்து என்பவற்றைப்பற்றி மட்டும் ஒன்றும் சொல்லவில்லை. அறிந்த வற்றையும் பூட்டகமாக வைத்துக்கொள்ளும்படி அவர்களை வேண்டிக்கொண்டாள். அவளுடைய பரிதாபமான நிலை மைக்காக எல்லோரும் கண்ணீர் வடித்தார்கள். தாயின் அன் பும், தோழிகளின் உருக்கமும் அங்கும் காணக்கூடியனவாக இருந்தன. அலட்சியமும் அதிகாரமும் யாரிடமும் இல்லை.

'எல்லோரும் ஒரே குலத்தவர்கள், சமதையானவர்கள் என்று வாழ்ந்தார்கள். ஒருகால் சச்சரவுகள் ஏற்பட்டாலும் அடுத்த நிமிஷம் அவர்களிடம் அன்பு பெருகி ஓடுவதைக் காணலாம். ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் பிச்சைக்குப் போய்விடுவார்கள். பிரபாவதி நேற்று வாழ்ந்த வீட்டிற்கும் அவளுக்கு இன்று கிடைத்திருக்கிற குடிசைக்கும் எவ்வளவு வித்தியாசமோ, அதைவிட மேலாகவே அந்தச் சுற்றத்திற் கிடையிலும் வித்தியாசம் இருந்தது.

வர வர அவள் உடம்பில் நோவும் இளைப்பும் ஏற்பட்டன. படிப்பில்லாதவர்களானாலும் அன்போடு அநேக தாதியர்கள் உதவிக்கு வந்தார்கள். அவர்கள் காட்டிய அன்பே பிரபாவின் வருத்தத்தை யெல்லாம் பறந்துவிடச் செய்தது. ஒருநாள் தன் துன்பத்துக் கெல்லாம் எல்லை போன்ற ஒரு செல்வக் குழந்தையைப் பெற்றெடுத்தாள். பட்டின்மேல், டாக்டர்களின் மத்தியிலே பிறக்கா விட்டாலும் அழகின் ஜீவன் அந்தச் சிசுவிடம் பரிமளித்தது. குழந்தையைப் பார்த்தபோது தாயின் மனத்தில் பெரிய சாந்தி பிறந்தது. அதற்காகவே தன் பெண்ணை, "சாந்தி" என்று கூப்பிடச் சொன்னாள். நாட்கள் கழிந்துகொண்டிருந்தன. இரண்டு வருஷத்துக்குமேல் இந்தப் புதிய வாழ்விலே அவளது தேகம் பழகிவிட்டது. சாந்தியும் தட்டுத் தடுமாறி நடக்கத் தெரிந்த குழந்தையாகிவிட்டாள்.

## 5

நதியில் ஜலம் நிறைந்து ஸ்படிகம் போல ஓடிக்கொண்டிருந்தது. மரஞ் செடிகொடிகள் தளிர்த்துப் பிரகிருதியின் யௌவனம் போலப் பொலிந்து விளங்கின. இளங்காற்று அவற்றிலே பட்டுச் சலசலப்பது மாயாரூபிணிகளான தேவமங்கையர்கள் லதாக்கிருகத்தின் மறைவிலே நர்த்தனஞ்

செய்வதுபோலக் கேட்டது. பிரபா வறண்டு போய்விட்டாள். அவளிடம் இளமையின் மோகன நாதத்தை எழுப்புகின்ற நரம்புகள் இன்னும் அறுந்துவிடவில்லை. தேவகானத்தை இசைக்கக்கூடிய பொன் யாழொன்று, மீட்டுகின்ற வைணிகன் இல்லாமையால் தூசுப்பிடித்துக் கிடப்பது போலவே அவள் இருந்தாள். எத்தனையோ வருஷங்களுக்கு முன் அந்த யாழிலிருந்து இன்னிசையை ஒருவன் எழுப்பினான். அது உலகத்தின் மறைவிலேதான் நடந்தது. பிறகு நீண்ட தனிமையிலே அவள் அயர்ந்து போனாள். அன்று பிரகிருதியின் மாதுர்யம் அவளை அணைப்பதுபோல இழுத்து மிதித்துக் கசக்கியது. எல்லாப் பக்கத்தையும் திரும்பிப் பார்த்தாள். அங்கங்கள் ஒரு முறை பொங்கி மெலிவடைந்தன. "ஒருவருக்கும் தெரியாமலே தொடச் சொல்லி ஜாடை செய்தேன்; அவர் தொட்டார். பகவான் மட்டும் பார்த்துக் கொண்டிருந்தார். என்னுடையது என்று இறுமாப்படைந்து கொண்டிருந்த திரவியத்துக்குமுன் ஒரு மலை வளர்ந்துவிட்டது. கூப்பிட்டேன், அழுதேன்; அவருக்குக் கேட்கவில்லை" என்று வாய்விட்டுச் சொல்லிப் புலம்பினாள். பழைய சம்பவங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வந்து வேதனை செய்தன. உடம்பு சோர மணலிலே சாய்ந்துவிட்டாள்.

எத்தனையோ வருஷங்கள் கழிந்துவிட்டன. ஹரிஹரன் இளமையும் அழிந்துகொண்டிருந்தது. அவனுக்கு மணஞ் செய்துவைத்து விடவேண்டுமென்று பிரயத்தனப்பட்டவர்கள், "பாவம்! அவனுடைய ஜீவன் துன்பப்படுகிறது. நாம் ஏன் இந்தக் கதைகளை எடுக்கவேண்டும்?" என்று மௌனமாக இருந்துவிட்டார்கள். அவனுக்கோ மங்கிக்கொண்டே போகிற இளமையைப்பற்றிய கவலையில்லை. விரைவிலே மரணம் வந்துவிடப் போகிறதே யென்ற பயமுமில்லை. எல்லாம் அநித்தியமாக இருந்தாலும் அவளைக் கண்டுவிடலா

மென்று மாத்திரம் கனவு கண்டுகொண்டிருந்தான். கல்கத்தாவில் இருக்கும்போது பிரபா அனுப்பிய கடிதம் இன்னும் பத்திரமாகவே அவன் பீரோவில் இருந்தது. அதைப் பார்க்கும்போதெல்லாம், 'இது அவள் கைபட்ட கடிதமல்லவா? அப்போது எவ்வளவு சஞ்சலப்பட்டுக்கொண்டிருந்தாளோ?' என்று எண்ணங்களை வளர்த்துக்கொண்டே போவான். சில சமயங்களில் அந்தக் கடிதத்தை எரித்துவிடவும் நினைப்பான். பிறகு, 'அது அவளைச் சுடுவதுபோ லாகும்' என்று அஞ்சுவான்.

அவனுடைய முகத்திலே சந்தோஷத்தின் குறிகள் தோன்றியதைப் பல வருஷங்களாக ஒருவரும் காணவில்லை. அர்த்தமில்லாமலே பார்த்துப் பழகின அவன் கண்களிலே தான் அன்றைக்குச் சாந்தி அகப்பட்டாள். அந்தக் குழந்தையின் முகத்திலே அவனை ஆறுதல் செய்கிற ஒரு மாய மந்திரம் எழுதியிருந்தது. வாய், கண், முகம், நடை எல்லாம் தன் உள்ளத்தை வாடவிட்டு மறைந்துபோன பிரபாவின் ஜாடையாகவே இருக்கக் கண்டான். பிறகு குழந்தையை அவள் வீட்டுக்கு அனுப்பியபோது, தற்செயலாகக் கிடைத்த ஒரு வஸ்துவை இழந்துவிட்டது போலவே துடிதுடித்து அயர்ந்து போனான். துணைக்கு அனுப்பிய மனிதன் திரும்பி வந்தவுடனே, "அவளை ஜாக்கிரதையாகக் கொண்டுபோய் விட்டாயா? குழந்தை என்ன சொன்னாள்?" என்று நெடுகக் கேட்டான். அந்த வேலைக்காரனுக்கு இது பெரிய துன்பமாக இருந்தது. "அப்பா! உனக்கு அவள் வீடு தெரியுமல்லவா? விடிந்தவுடன் கூட்டிக்கொண்டு வந்துவிடு" என்று சொல்லிவிட்டுப் படுக்கைக்கு ஹரிஹரன் போனான். அங்கே காதலின் சோகம், மரணத்தின் பயம் என்ற எல்லாமாகப் படுக்கையிலிருந்து அவனைத் துடிக்கச் செய்தன. நாழிகை செல்லச் செல்ல மயக்கங்கூட வந்து

பிதற்றினன். அப்பொழுது வேலைக்காரனைக் கூப்பிட்டு, "இப்பொழுதே வண்டியோடு போ; குழந்தையை அழைத்து வா; ஓடு" என்று அவசரமாக அவனை அனுப்பினன்.

வேலைக்காரன் வண்டியோடு உடனே கிளம்பிவிட்டான். பொழுது புலருமுன் அந்த ஏழைகள் வசித்த கிராமத்திற் குள்ளே வண்டி போயிற்று. கிழக்கு வெளுப்பதற்குமுன், மங்கலான இருள் உலகத்தை மூடியிருந்த பொழுதே, குடிசையின் வாசலில் வண்டிபோய் நின்றது. "அம்மா!" என்று வண்டிக்காரன் கூப்பிட்டான். "யாரது?" என்று ஒரு குரல் கேட்டது. பிறகு சாந்தியும் அவள் தாயும் வெளியே வந்தார்கள். "குழந்தையை எஜமான் கூட்டிவரச் சொன்னார். பிறகு கொண்டுவந்து விடுகிறேன்" என்றன் அந்த வண்டிக்காரன். பிறகு, "அம்மா! இவளை எஜமா னுக்கே கொடுப்பீர்களா? எவ்வளவு வேண்டுமானலும் தந்து விடுவார்" என்று தொடர்ந்து சொன்னன். இதைக் கேட்டுப் பிரபாவதி ஆத்திரப்பட்டாள். அதனல், "சாந்தி! நீ போக வேண்டாம்" என்று ஒரே யடியாகத் தடுத்துவிட்டாள். அப்போது வண்டிக்காரன் மன்றடினன். "அம்மா! எஜ மானைப் பார்த்தால் அழுகை வருகிறது. நேற்று இந்தக் குழந்தையோடுதான் பல வருஷங்களாகச் சிரிக்காத அவர், சிரித்ததைக் கண்டேன். ராத்திரியெல்லாம் அவருக்குத் தூக்கமில்லை. 'சாந்தி! எப்படியோ நீ என் பிரபாவைப் போலப் பிறந்துவிட்டாய். ஞாபகத்துக்காக உன்னையாவது உன் அம்மா எனக்கென்றே தரமாட்டாளா? அதற்காக என் செல்வம் முழுவதையுமே அவளுக்குக் கொடுக்கிறேன்' என்று சொல்லி அழுதார்" என்றன். பிரபாவின் தலை சுழன்றது; அப்படியே ஸ்தம்பித்துவிட்டாள்.

# 6

உலகம் சூரிய காந்தியால் மலர்ந்துவிட்டது. வண்டியும் மேடு பள்ளமான இடங்களைக் கடந்து ஒழுங்கான ஒரு பாதையிலே போய்க்கொண்டிருந்தது. வண்டிக்காரனுக்குப் பக்கத்திலே சாந்தி இருந்தாள். "அம்மா! அழாதீர்கள்; எல்லாம் விதியின்படி நடக்கிறது" என்ற வண்டிக்காரனது குரல் அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தது.

# வாழ்க்கையின் கனவு

[அ. கி. ஜயராமன்]

அந்தக் காலத்தில் அது சோழ அரசனின் தலைநகரம். இதரதேசங்களில் அடைந்த வெற்றியின் அறிகுறியாக அந்த நகரை நிர்மாணித்தான் அவன். இன்றளவும் உலகம் கண்டு வியக்கும் சிற்பங்களைத் தன் ஆபரணங்களாக அணிந்து வானத்தைத் தாவி முத்தமிடும் கோபுரங்களே அதற்கு அத்தாட்சி.

இரு கரைகளிலும் உள்ள பசுஞ்சோலைகளை மேகலையாக அணிந்து பொன்மயமாகத் தவழ்ந்து விளையாடும் காவேரி; தூரத்தில் கண்ணுக்கு எட்டியவரையில் ஒரே பசுமை; அந்த இயற்கையின் சௌந்தர்யத்தில் லயித்துத்தான் அவன் தன் தலைநகரை அங்கே நிர்மாணித்தான்.

ஆனால் இன்று அது ஒரு பட்டிக்காடு. மனிதன் இயற்கையை வென்றுவிடுகிறான். ஆனால் இயற்கையும் மனித முயற்சியை அழித்துவிடுகிறது.

காவேரி ஓடுகிறாள். அவளுக்கு அன்றைச் சௌந்தரியம் இல்லை. அவளுடைய பசுமையான மேகலைகளெல்லாம் மறைந்து அவற்றிற்குப் பதில் சிமிட்டியினாலும் சல்லிக் கற்களாலும் ஆன லயன்கரைகள் அவளைப் பிணித்துக்கொண்

டிருக்கின்றன. இயற்கையைத் தாவி அணைக்கும் அவள் கரங்கள், சுண்ணாம்புக் கற்களில் மோதிப் பொலிவிழந்து திரும்புகின்றன.

ஆனால் சோழ ராஜன் விட்டுச் சென்ற அந்தக் கலைச் செல்வம் மாத்திரம் அப்படியே இருந்துவருகிறது. அது இயற்கையை வென்று, சாவாவரம் பெற்றதுபோல் தலை நிமிர்ந்து நிற்கிறது. சுவர்களிலும் கோபுரங்களிலும் நடுநடுவே அரசங் கன்றுகள் முளைத்திருந்தாலும் அந்தச் சௌந்தர்யம் மட்டும் குன்றாமல் இன்று செதுக்கியதைப்போல் ஜீவ களையுடன் உலகின் பல பாகத்திலிருந்து வரும் ரஸிகர்களையும் திருப்தி செய்துவருகிறது.

* * *

அன்று யாரோ விசேஷமாக அதைப் பார்வையிட வருவதாக எனக்குச் செய்தி கிடைத்தது. நான் அந்தக் கோயில் அதிகாரியாக இருந்தேன். காலையிலேயே ஸ்நானத்தை முடித்துக்கொண்டு தயாராக இருந்தேன்.

மணி எட்டரை இருக்கும். மோட்டார் ஒன்று வந்து நின்றது. வந்தவர்களை வரவேற்க முன்னே சென்றேன். மோட்டாரிலிருந்து ஒரு ஸ்திரீயும் ஒரு புருஷனும் இறங்கினார்கள்.

நான் சற்று அருகில் சென்றேன். அப்படியே திடுக்கிட்டு நின்றுவிட்டேன். ஒரு நிமிஷம் வந்தவளைப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவள் என்னைத் தெரிந்துகொண்டு, “தாங்கள் இங்கேதான் இருக்கிறீர்களா?” என்றாள். பல வருஷங்களுக்குப் பின் கேட்ட அந்தக் குரல் என் ஹ்ருதயத்தில் அமிர்தத்தை வர்ஷித்தது.

“யார்? நமது பழைய சேகரனா?” என்றார் வந்தவரும். அவள் சிரித்துக்கொண்டே, “தெரியவில்லையா?” என்றாள்.

நான் மெல்லச் சமாளித்துக்கொண்டு, “ தங்கள் வருகையினால் சந்தோஷமடைகிறேன். எதிர்பாராத வருகை எனக்கு மிகவும் திருப்தி அளிக்கிறது ” என்றேன்.

“ சரி வாருங்கள்; கோயிலுக்குச் செல்லலாம் ” என்றாள் அவள். மூவரும் கோயிலுக்குச் செல்லலானோம்.

* * *

**ம**னிதன் வாழ்க்கைப் பாதையில் செல்லும்போது எத்தனையோ கனவுகள் வழித்துணையைப்போல் அவனைச் சூழ்ந்துகொள்கின்றன. சில சமயம் அவை உண்மையாக மலர்கின்றன; சில சமயம் வெறும் பிரமையாகக் காய்ந்து வாடி உதிர்ந்துவிடுகின்றன. அவனும் அதை மறக்க முயல்கிறான்; நாளடைவில் மறந்தும் விடுகிறான். வாழ்க்கை அதன் பாதையில் அவனை இழுத்துச் செல்கிறது.

இவள் அதே லீலாதான். அன்று நான் அவளை வழியில் சந்தித்தேன்; வழியிலேயே இழந்துவிட்டேன். என் கனவு சிதைந்து மண்ணோடு மண்ணாயிற்று. இருவரையும் வேறு வேறு பாதையில் இழுத்துச் சென்றது வாழ்க்கை.

அப்பொழுது நான் காலேஜில் படித்துக்கொண்டிருந்தேன். ஒரு வாடகை வீட்டில் ஓர் அறையில் இருந்து வந்தேன். அந்த வீட்டில்தான் அவளும் அவள் தந்தையும் குடியிருந்து வந்தார்கள். இவர்கள் யாரென்றுகூட எனக்கு அப்பொழுது தெரியாது.

அப்பொழுது அவளுக்குப் பதினைந்து வயதிருக்கும். மெல்லிய சரீரம், சற்று உயரமாக இருப்பாள். நல்ல சிவப்பு. தலைமயிரைத் தன் கையாலேயே தள தள வென்று பின்னித் தொங்கவிட்டுக்கொண்டிருப்பாள். தலையில் ஒரு கொத்துக் கனகாம்பரம் கீழே விழுகிறாற்போல் தொத்திக்கொண்டிருக்கும்.

கையில் மெல்லியதாக இரண்டு வளையல்; காதில் சிறிய வெள்ளைத்தோடு; நெற்றியில் வெள்ளிக் கால் ரூபாயளவு குங்குமப் பொட்டு; முத்துப் போன்ற வெண்மையான பல் வரிசை; நிமிஷத்திற்கு ஒருதரம் மலரும் புன்னகை; மெல்லிய வர்ணப் புடைவை அணிந்து கையில் ஒரு பத்துப் புஸ்தகங்கள், ஓர் அட்டை சோப்புப்பெட்டி இவைகளுடன் காலையில் போவாள்; மாலையில் திரும்பி வருவாள்.

இதுதான் அவளைப்பற்றி எனக்கு அப்பொழுது தெரியும். தினம் என் அறையிலிருந்து நான் அவளைப் பார்ப்பேன். அவள் என்னைப் பார்ப்பாள். கள்ளங் கபடற்ற அந்த முகத்தைக் காண்பதிலேயே எனக்கு ஓர் ஆனந்தம். உள்ளத்திற்கு ஒரு சாந்தி!

அன்று காந்தியடிகள் சென்னைக்கு வந்திருந்தார். ரோட்டில் ஏகக் கூட்டம். ஊர்வலத்திற்குப்பின் ஊர்வலமாக ஜனங்கள் சென்றுகொண்டிருந்தனர். நானும் ஓர் ஓரமாய்ச் சென்றுகொண்டிருந்தேன். திடீரென்று ஒரே இரைச்சல்; போலீஸ் தடியடி. ஜனங்கள் இங்குமங்கும் சிதறி ஓடினர்.

ஓரத்தில் கையில் கட்டுப் புஸ்தகங்களுடன் நின்று எந்தப் பக்கமாய்ப் போவதென்று புரியாமல் திகைத்து நின்றுகொண்டிருந்தாள் அவள்.

அவளைக் கண்டதும் என் மனத்தில் என்னை அறியாமல் ஓர் உணர்ச்சியும், குதூகலமும் உண்டாயின. மெள்ளச் சிரித்துக்கொண்டே அவளருகில் சென்று நின்றேன்.

அவள் ஒரு முறை என்னை நிமிர்ந்து பார்த்தாள். ஒன்றும் பேசவில்லை. சிறு புன்னகை அரும்பியது அவள் முகத்தில்.

“நமஸ்காரம். என்னைத் தெரிந்திருக்குமே” என்றேன்.

வெட்கத்தால் அவள் முகம் சிவந்தது. சிரித்துக் கொண்டே, "ஏன் தெரியாமல் என்ன? மாடி அறையில் இருக்கிறீர்களே அவர்கள்தானே! தெரியாதா?" என்றாள்.

என் மனத்தில் ஒரு புதிய இன்ப ஊற்றுச் சுரந்தது. "ஏன் இங்கே நிற்கிறீர்கள்? வாருங்கள், கூட்டத்தைத் தாண்டிக் கொண்டுபோய் விடுகிறேன்" என்றேன்.

அவள் எதிர்பார்த்ததை அவள் சொல்லாமலே நான் அறிந்துகொண்டதை எண்ணிச் சிரித்துக்கொண்டாள்.

மெள்ளக் கூட்டத்தை விட்டு விலகி இருவரும் நடந்தோம். நிமிஷத்திற்கு ஒருதரம் அவள் என்னைக் கடைக்கண்களால் பார்த்துத் தலையைக் குனிந்துகொண்டாள். அந்தப் பார்வையால் அவள் எனக்கு நன்றி செலுத்தினளா!

ஏதாவது பேசவேண்டுமென்ற ஆவல் எனக்கு. ஆனல் என்ன பேசுவதென்று தோன்றவில்லை. மனம் உற்சாகத்தால் கட்டுக்கடங்காமல் ஓடிக்கொண்டிருந்தது. "இவெதல்லாம் என்ன புஸ்தகம்?" என்றேன் நான்.

"எல்லாம் பள்ளிக்கூடப் புஸ்தகங்கள். அதோ அந்தப் பள்ளிக்கூடத்தில் ஆறுவது பாரம் படிக்கிறேன்" என்றாள்.

நான் சிரித்துக்கொண்டே, "வீட்டில் இருக்கிறாரே ஒரு பெரியவர்; அவர் யார்?" என்றேன்.

"அவர் என் தகப்பனர்" என்றாள்.

"உங்கள் தகப்பனரா? உங்கள் பெயர்?"

அவள் சற்றுச் சங்கோசத்துடன் ஒரு புன்சிரிப்புச் சிரித்துவிட்டு நிமிர்ந்து என் முகத்தைப் பார்த்து, "ஏன்? என் பெயர் லீலா" என்றாள்.

வேறு நாங்கள் ஒன்றும் பேசவில்லை. வீடு வந்து சேர்ந்தோம். அவள் அவளுடைய அறைக்குச் சென்றாள். நான் என் அறைக்குச் சென்றேன். இதன்பின் அடிக்கடி இருவரும் பேசுவோம். நான் பல புஸ்தகங்களை அவளுக்குக்

கொடுப்பேன். அவள் பல புஸ்தகங்களை எனக்குத் தருவாள்.

நாளுக்கு நாள் என் உள்ளத்தில் ஏதோ ஒரு மாறுதல் உண்டாகிக்கொண்டே வந்தது. அவளிடம் எனக்கென்னவோ ஒரு சொந்தம் இருப்பதாகவே என் மனம் எண்ணியது. தினம் ஒரு தடவையாவது அவளைக் காணாவிட்டால் நிம்மதியே ஏற்படுவதில்லை. அவளும் தினம் என்னிடம் பேசாமல் இருக்க மாட்டாள். விசேஷமாக நான்தான் அவர்கள் அறைக்குச் செல்வேன். அவள் தந்தையும் உடன் இருப்பார். கேட்கும் கேள்விகளுக்கு அவள் ஒரு சிரிப்புடன் பதில் சொல்வாள். பதில் சொல்ல முடியாத கேள்விகளுக்கு ஒரு முறை என்னை ஏங்கிப் பார்ப்பாள். அந்தப் பார்வைதான் அதற்குப் பதில். நான் மேற்கொண்டு ஒன்றும் கேட்க முடியாதபடி அது செய்து விடும். அதில் அவ்வளவு அர்த்தம் நிறைந்திருக்கும்.

* * *

அன்று ஞாயிற்றுக் கிழமை. வீட்டில் அவள் தந்தை இல்லை. அவள் மாத்திரம் தனியாகத் தன் அறையில் ஏதோ புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள்.

அவிழ்த்து விடப்பட்ட தலைமயிர் காற்றில் பறந்து கொண்டிருந்தது. புடைவைத் தலைப்பு நாற்காலியின்மேல் விழுந்து தொங்கிக்கொண் டிருந்தது. நான் வந்ததைத அவள் பார்க்கவே இல்லை. புஸ்தகத்திலேயே லயித்திருந்தாள். அன்று அவள் உட்கார்ந்திருந்த காட்சி இன்னும் என் கண்களை விட்டு அகலவே இல்லை. சிறிது நேரம் அப்படியே நின்று அவள் சௌந்தர்யத்தில் ஆழ்ந்திருந்தேன்.

இதற்குள் அவள் திரும்பினாள். சட்டென்று எழுந்திருந்து, "வாருங்கள்! வந்து வெகு நேரமாகிறதா?" என்றாள், தன் ஆடையைச் சரிப்படுத்திக்கொண்டே.

"இல்லை. இப்பொழுதுதான் வந்தேன்" என்றேன்.

"ஏன், நிற்பானேன்? உட்காருங்கள்" என்று நாற்காலியைக் காட்டினாள். நாற்காலியில் உட்கார்ந்தேன். என்ன பேசுவதென்று எனக்குப் புரியவில்லை. என் உள்ளம் எதையோ அறிய ஆவலாய்த் துடித்துக் கொண்டிருந்தது. சில நிமிஷம் இருவரும் மௌனமாக இருந்தோம்.

என்னுடைய நிலைமையைக் கண்டு அவள் என்ன நினைத்தாளோ என்னவோ? "ஏன்? உடம்பு ஏதாவது அசௌக்கியமா?" என்றாள்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை" என்றேன் நான் அசிரத்தையாக.

"பின்னே ஒரு மாதிரியாக இருக்கிறீர்களே?" என்றாள். அந்தக் குரலில் ஓர் அன்பும் ஆர்வமும் நிறைந்திருந்தன.

நான் மௌனமாக இருந்தேன்.

"ஏன், சொல்லமாட்டீர்களா?" என்றாள். அவள் முகத்தைப் பார்த்தேன். அவள் முகத்தில் நான் எதைக் கண்டேன்? என்னால் அதற்குமேல் பொறுக்க முடியவில்லை. "அதெல்லாம் இருக்கட்டும். லீலா, உன்னிடம் இன்று ஒரு சமாசாரம் கேட்க வந்திருக்கிறேன்" என்றேன்.

அவள் ஒரு சிரிப்புச் சிரித்தாள். எனக்கு அதன் அர்த்தம் விளங்கவில்லை. என் உடல் ஏதோ ஒரு பயத்தால் நடுங்கியது. உள்ளிருந்து ஒரு சக்தி என்னைத் தூண்டியது. "லீலா!" என்று அவள் கைகளைப் பற்றினேன். அதற்கு மேல் என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. என் மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது.

அவள் கையை உதற முயலவே இல்லை. மௌனமாக என் முகத்தை ஒரு முறை பார்த்தாள்.

எனக்கு இந்த உலகமே சுற்றுவதுபோல் இருந்தது. "நான் கேட்பது தெரிந்ததா?" என்றேன்.

"என்ன கேட்கிறீர்கள்?"

"நம்முடைய எதிர் காலம் நம்மை இம்மாதிரி வெறும் மித்திரர்களாகவே வைத்திருக்குமா?"

அவள் பதில் சொல்லவில்லை. அவள் முகம் வாடியது. உள்ளிருந்து புகைந்து எழும் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"என்ன, பதில் சொல்லமாட்டாயா?" என்றேன்.

அவள் பதில் சொல்லவில்லை. என்னை நிமிர்ந்து பார்த்துத் தலையைக் குனிந்துகொண்டாள். அவள் கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் என் கைகளில் விழுந்தன. என்னால் அவளுடைய கஷ்டத்தைப் பொறுக்க முடியவில்லை. 'ஆகா! நாம் என்ன தவறான காரியத்தைச் செய்துவிட்டோம்! சீச்சீ! என்ன பதற்றம்! நம்மைப்பற்றி அவள் என்ன நினைப்பாள்?' என்று என் மனம் பயந்தது. அவளுடைய கைகளை விட்டுவிட்டு, "லீலா! உன் மனத்திற்குக் கஷ்டத்தைக் கொடுத்துவிட்டேன்; மன்னித்துக்கொள். சென்று வருகிறேன்" என்று எழுந்தேன்.

அவள் என் முகத்தைப் பார்த்து எதையோ சொல்ல விரும்பினாள். வார்த்தைகள் உதடுகளில் தங்கி வெளிவரவில்லை. வாசற்படியருகில் வந்து திரும்பிப் பார்த்தேன். அவள் கண்ணீர் விட்டுக்கொண்டே நான் செல்வதைப் பார்த்து மேஜையின்மேல் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள்.

* * *

இரண்டு மூன்று தினங்கள் சென்றன. அவள் தகப்பனார் என்னைக் கூப்பிட்டனுப்பினார். என் மனம் பக்கென்றது. எங்கே லீலாவிடம் நாம் நடந்துகொண்ட விதத்தைக் குறித்துக் கேட்கப்போகிறாரோ என்று என் மனத்தில் ஒரு

பயம் உண்டாயிற்று. 'கேட்டால்தான் என்ன? உள்ளதைச் சொல்லிவிடுவோமே' என்ற ஓர் அசட்டுத் தைரியமும் கூடவே வந்தது. தயக்கத்துடன் அவர்கள் அறைக்குச் சென்றேன்.

அவர் படுத்த படுக்கையாக இருந்தார். நிமிஷத்திற்கு ஒருதரம் இருமிக்கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் கையைக் காட்டி அருகில் அழைத்தார். நான் சென்று அவரருகில் உட்கார்ந்தேன். லீலாவும் ஒரு தம்ளரில் கஞ்சியுடன் வந்து உட்கார்ந்தாள்.

எனக்கு என்னவோ வேதனையாக இருந்தது. ஒரு பக்கம் லீலாவையும் ஒருபக்கம் அவள் தந்தையின் நிலைமையையும் கண்டு என் உள்ளம் உணர்ச்சி வசத்தால் பதறியது. அவரைப் பார்த்து, "என்ன உடம்பு?" என்றேன்.

அவர் என்னைப் பார்த்து, "என்ன உடம்பா? வயதாகி விட்டதல்லவா?" என்றார். அந்த வார்த்தையில் ஜீவனில்லை.

"யாராவது டாக்டரை அழைத்து வரட்டுமா?" என்றேன் நான்.

"அதெல்லாம் வேண்டாம். எல்லா டாக்டரும் பார்த்தாகிவிட்டது. இனி யமன்தான் வைத்தியம் செய்ய வேண்டும். அதெல்லாம் இருக்கட்டும்; உன்னால் எனக்கு ஓர் உபகாரம் ஆகவேண்டும்" என்றார்.

"என்னால் தங்களுக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமானால் எனக்குச் சந்தோஷந்தான்" என்றேன்.

அவர் என் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு, "உன்னிடம் நான் அதிகமாகப் பேசிப் பழகச் சந்தர்ப்பம் இல்லாமல் போய்விட்டது. உன்னைப்பற்றி லீலா என்னிடம் நிரம்பச் சொல்லி இருக்கிறாள். நீ எனக்கு இந்த உபகாரம் செய்வாயென்றே நம்புகிறேன். இதோ இருக்கும் லீலா என் பெண். இவளை மூன்று வயதில் இவள் தாய் விட்டுவிட்டுப் போனாள்.

இன்றுவரை இவளைக் காப்பாற்றிவிட்டேன். இனி என் சரீரத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை. அப்படி ஏதாவது நேர்ந்தால் நீ இவளைக் காப்பாற்றி இவள் புருஷனிடம் சேர்த்துவிடு. இன்று முதல் இவளுக்கு நீதான் தந்தை, தாய், சகோதரன் எல்லாம்" என்று சொல்லும்போதே அவருடைய இரு கண்களிலும் நீர் வந்துவிட்டது.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. லீலா கல்யாண மானவளென்று அப்போதுதான் எனக்குத் தெரியவந்தது. என் செய்கைக்காக என் ஹ்ருதயம் துடித்தது. அவள் அன்று பதில் சொல்லாமல் வருந்தினதன் காரணம் அப்பொழுது தான் எனக்குப் புலப்பட்டது. 'என்ன முட்டாள்தனம் செய்துவிட்டோம்!' என்று எண்ணி அவரைப் பார்த் தேன்.

"என்ன யோசனை செய்கிறாய்?" என்றார் அவர்.

அந்தக் குரலில் துக்கமும் ஆவலும் பின்னிக்கொண் டிருந்தன. என்னால் பொறுக்க முடியவில்லை. என்னை அறி யாமல் என் கண்களிலும் நீர் வந்துவிட்டது; "அப்படியே செய்கிறேன்" என்றேன்.

கொந்தளித்தெழும் கவலைகளின் மத்தியில் ஒரு சாந்தி தென்பட்டது அவர் முகத்தில். லீலா எங்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். பொங்கிவரும் துக்கத்தைத் தடை செய்ய முடியாமல் பலபலவென்று உதிரும் கண்ணீருடன், "அப்பா" என்று அவர் மார்பின்மீது முகத்தைப் புதைத்துக்கொண்டாள்.

அவள் புருஷன் உடனே வந்து அவளை அழைத்துச் சென்றுவிட்டான். பிறகு எனக்கு அங்கே இருக்கப் பிடிக்க வில்லை. நானும் கிளம்பினேன்.

மீண்டும் எங்கிருந்தோ வந்து என்முன் தோன்றி அந்தக் கனவை அவள் ஞாபகப்படுத்தினாள்.

இருவரும் கோயிலைப் பார்த்துவிட்டு ஒருநாள் தங்கி விட்டு ஊருக்குப் போனார்கள். மறுபடியும் நான் அவளை மறக்க ஆரம்பித்தேன்.

அலையற்றுப் போன எனது உள்ளத்தில் அந்த மறு சந்திப்பு ஒரு கல்போல் வந்து விழுந்து சிறிது தெளிவைக் கலக்கிற்று. மறுபடியும் மெதுவாகக் கல் விழுந்த அடையாளம் அடங்கிவிட்டது, அவள் போனதும்.

# வாயாடி ராமு

[ஆர். நாராயணையங்கார், பி. ஏ., பி. எல்.]

## 1

ராமுவை 'வாயாடி ராமு' என்று நான் நாமகரணம் செய்ததிலிருந்து அந்தப் பெயர் அவனுக்கு நிலைத்துவிட்டது. அவன் பி. ஏ. பரீட்சையில் தேறிவிட்டு வக்கீலுக்குப் படித்தான். இப்பொழுது அவன் வக்கீலாக இருக்கிறான். அவன் அந்தத் தொழிலில் பேர் வாங்கவில்லை. வக்கீலாக வந்து சில வருஷங்கள் நான் அவனைப் பார்க்கவில்லை. நானும் அவனும் ஒருவரை ஒருவர் சந்திக்காம லிருந்த நாட்களில் அவன் 'படே' வக்கீலா யிருப்பான் என்று நினைத்தேன்.

ஒரு நாள் அவன் வீட்டிற்குச் சென்று, "கட்சிக்காரர் கள் வரும் சமயமா யிருக்கலாம்; நான் உன்னைத் தொந்தரவு செய்கிறேனே......" என்று சம்பிரதாயமாகச் சொல்லிக் கொண்டு உள்ளே நுழைந்தேன்.

"என்னுடைய ஆபீஸில் அப்படிப்பட்ட அதிசயங்கள் நிகழ்வதில்லை; கவலைப்படாதே" என்றான் ராமு. இந்த வார்த்தைகளை அவன் சொல்லிக் கேட்கும்பொழுது என்னை அறியாமல் எனக்குத் துக்கம் வந்தது.

பள்ளிக்கூடத்தில் எல்லாப் பாடங்களிலும் முதல்தர மார்க்கு வாங்குவான் ராமு. எங்கள் தர்க்க சபைப் பேச்சுப்

போட்டியில் அவனுக்கு முதல் பரிசு. அரட்டை யடித்துப் பொழுதுபோக்க வேண்டுமானால் ராமுவுடன் சேர்ந்தால் போதும்; அவ்வளவு சுவை நிறைந்த, ரஸம்பொருந்திய பேச்சு. ஒரு புஸ்தகம் நன்றாயிருக்கிறது என்று உபாத்தி யாயர் சொல்லிவிட்டால் அதை அன்றைக்கே வாங்கிப் படித்துவிடுவான். புஸ்தகம் படிப்பதென்றால் பேருக்குப் படித்து முடித்துவிடும் பேர்வழியல்ல ராமு. படித்த விஷ யங்களை ரஸம் குறையாமல் பிறருக்குச் சொல்லும் திறமை ராமுவுக்கு இருப்பதுபோல் யாரிடமும் காண்பதரிது.

எங்கள் வகுப்பிலே ராமுதான் பேச்சுக்குப் பேர் போனவன். வக்கீல் தொழிலில் 'பிளாங்கி' யானாலும், ஜட்ஜி முன் தன் வாக்குச் சாதுர்யத்தைக் காட்ட அவனுக்குச் சந் தர்ப்பம் கிடைக்காவிட்டாலும், அவனுடைய தர்க்கத்திறமை இன்னும் அவனை விட்டுப் போகவில்லை. எந்தக் கட்சியிலும் சோர்வின்றிப் பேசுவான். வாழ்வில் சோடை போய்விட் டோம் என்னும் கவலை அவனைத் தின்றுவிடவில்லை.

அவனுடன் எதைப்பற்றிப் பேசினாலும் அந்த விஷ யத்தைப்பற்றி நீங்கள் இதுவரை கேட்டிராத ஒரு புதிய சமாசாரத்தை எடுத்து அவன் கூறுவான். அவன் சொல்லு வதைக் கட்டுக்கதை என்று சொன்னீர்களோ தப்பமுடியாது. உடனே அதற்கு மேற்கோள்கள் காட்டிவிடுவான்.

ஆரியர் என்று பேச ஆரம்பித்தால் உடனே ஆரியர்கள் வட ஆசியாவிலிருந்து இந்தியாவிற்குள் வந்தார்கள் என்பது சரித்திரக்காரர்கள் புரட்டு என்று சொல்லி, இவ்விஷயத்தைப் பற்றிப் பழைய காலத்துச் சரித்திரக்காரர்களிலிருந்து ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாஸையங்கார் வரையில் எல்லோரும் எழுதிய வைகளை யெல்லாம் சவிஸ்தாரமாக எடுத்து அலசிவிடுவான்.

கோயில்களைப்பற்றிப் பேச்சு வந்தால், அவைகளுடைய புராதனத்தன்மை, அவற்றின் அமைப்பில் காணப்படும்

சிற்பங்களின் பெருமை - இவைகளைப்பற்றி ஓயாமல் பேசு வான். அவனுடன் பேசும்பொழுது எனக்கு, "கற்றது கைம் மண்ணளவு" என்னும் முதுமொழி ஞாபகத்திற்கு வந்துவிடும். ஜாஸ்தி சொல்லுவானேன்? ராமுவுடன் சேர்ந் தவர்கள் அவனிடமிருந்து விஷயங்களைக் கிரகித்துக்கொண்டு அவைகளையே சொந்தச் சரக்காக விக்கிரயம் செய்து பிழைப் பது வழக்கம்.

அவன் பேசுவதும் நான் மௌனமாய்க் கேட்பதும் விதியாகப் போய்விட்டன. அவனை இடைமறித்துப் பேசி விட்டால் பிரசங்கம் நீண்டுவிடும் என்று அவன் பேசும் பொழுது நான் குறுக்கிடுவதில்லை.

ஒரு நாள் நண்பர் ஒருவர் ராமுவின் வீட்டுக்கு வந்திருந்தார். அவர் ஒரு தீவிரமான சீர்திருத்த வாதி. பேச்சு வாக்கில் தீண்டாமை வழக்கத்தைக் கண்டித்து ஏதோ கூறினார். ராமு உடனே சாஸ்திரங்களிலிருந்து ஆதாரங்களை எடுத்துச் சரமாரியாக வீசி, தீண்டாமை யென்பது ஒரு தர்ம சம்மதமான இன்றியமையாத வழக்கமென்று நிரூ பிக்கத் தொடங்கிவிட்டான்.

ராமுவின் பேச்சில் நான்கூட ஏமாந்து போனேன். நண்பர் போன பிறகு அவனைப் பிடித்துக்கொண்டு, "வழக்குச் சொத்தையானால் எதிரி வக்கீலைத் திட்டு" என்னும் முறையைக் கையாண்டேன்.

பிராமணனா யிருந்தாலும் ராமு கட்டுமீசை யுள்ளவன். ஆசாரம் முழுப்பூஜ்யம். ஆகவே, "நீ என்னடா, பிராம்மணன் தட்டுக்கெட்டுப் போகிறது, சாஸ்திரத்தைப்பற்றிப் பேச வந்துவிட்டாய்!" என்றேன். அப்படிச் சொன்னதுதான் தாமதம். "நான் எப்படிப் பிராமணனென்று கேட்கிறாயா? சொல்கிறேன், கேள்" என்று கதையை ஆரம்பித்தான்.

## 2

என் தகப்பனுருக்குச் சர்க்காரில் பெரிய உத்தியோகம். அப்பொழுது மோட்டார் ஜாஸ்தி இல்லையாதலால் ஒரு கோச்சு வண்டி வைத்திருந்தார். கோச்சு வண்டிக்காரன் விசுவாசமாக வேலை செய்துவந்தான். வண்டிக்காரன் மகன் அவனுடனேயே இருந்து குதிரை தேய்ப்பது, புல் போடுவது, லாயத்தைச் சுத்தி செய்வது இவைகளைக் கவனித்து வந்தான். அப்பனுக்குத் தெரியாமல் மகன் ஒரு பெண்ணைக் காதலித்து வந்தான். இந்தக் காதல் நாடகம் வெகு நாளாக நடந்துவந்தது.

ஒரு நாள் ராத்திரி. நடுநிசி. வீட்டில் எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். திடீரென லாயத்தில் ஏதோ முனகும் சப்தம் கேட்டது. இதைக் கேட்டு அம்மா விழித்துக் கொண்டாள். எழுந்தவுடன் ஒரு விளக்கை எடுத்துக்கொண்டு சந்தடி செய்யாமல் லாயத்திற்குச் சென்று பார்த்தாள். அங்கே ஒரு பெண் பிராணாவஸ்தையில் இருப்பவள்போல் காணப்பட்டாள். என்ன செய்வது என்று அம்மாவுக்குத் தெரியவில்லை. அந்தப் பெண்ணின் சமீபத்தில் சென்று, "அம்மா, நீ யார்? எப்படி, எதற்காக இங்கே வந்தாய்?" என்று தணிந்த குரலில் கேட்டாள்.

அந்தப் பெண் முக்கி முனகிக் கொண்டு பேசினாள். லஜ்ஜை கலந்த அவள் சொற்களிலிருந்து, அவள் தீண்டாத ஜாதியைச் சேர்ந்தவள் என்றும், அவள்தான் எங்கள் வீட்டு வண்டிக்காரன் காதலித்த பெண் என்றும், அப்போது அவள் கர்ப்பம் தரித்துப் பிரசவிக்குந் தறுவாயில் இருக்கிறாள் என்றும், அவளுடைய ஜாதியினர் அவளைத் தள்ளி வைத்துவிட்டதால் அவள் பிரசவிக்க இடமின்றி அங்கே வந்தாளென்றும் தெரியவந்தது.

இதைக் கேட்டவுடன் அம்மாவுக்குத் தன் ஜாதி, மதம் எல்லாம் மறந்து போய்விட்டன. தான் ஸ்திரீ என்பதும், மற்றொரு ஸ்திரீ கஷ்டப்படுகிறாள் என்பதும் மாத்திரந் தான் அவளுக்கு ஞாபகம் இருந்தது. உலகமே புறக்கணித்த அப் பெண்ணுக்கு என் தாய் உலகமாக விளங்கினாள். லாயத்தைக் காலி செய்து அப் பெண்ணுக்கு நல்ல படுக்கை தயார்செய்து, தான் மருத்துவச்சிவேலை செய்தாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் அப் பெண்ணுக்கு ஆண் குழந்தை பிறந்தது. பொழுது விடிவதற்குள் யாருக்கும் தெரியாமல் வண்டிக் காரனுக்குச் சொல்லி அனுப்பி, அவனிடம் நடந்ததைச் சொல்லி, அந்தப் பெண்ணை அவன் மருமகளாகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கூறி, அம்மா தன் கை வளையல் களில் நாலைக் கழற்றி அவனிடம் செலவிற்காகக் கொடுத்தாள். அந்த உத்தம ஸ்திரீ ரத்தினத்தின் பிள்ளை நான்.

இந்தச் சம்பவம் நடந்து சில மாதங்களாயின. ஆனால், அப்பாவுக்கு நடந்த விஷயம் ஒன்றும் தெரியாது. ஒருநாள் அம்மா கையில் வழக்கம்போல் உள்ள வளையல்களைக் காணோம் என்பதை அப்பா பார்த்தார்.

"உன் கையில் வளையல்கள் குறைந்திருக்கின்றனவே. வயதாகிவிட்டதென்று கழற்றி வைத்துவிட்டாயா?" என்று கேட்டார் அப்பா. சற்று நிதானித்துக்கொண்டு வளை மறைந்த கதையைக் கேட்போர் மனமுருகுமாறு அம்மா சொன்னாள்.

இந்தச் சமயத்தில் அம்மாவுக்கு வயது ஐம்பது. இந்தக் கதையைக் கேட்டவுடன், அதுவரையில் அம்மா விடம் அவருக்கு இருந்த பிரியம் பன்மடங்கு அதிகரித்தது. உடனே அம்மாவைப் பார்த்து, "நீதான் உத்தம ஸ்திரீ. ஜாதி யென்றும் ஆசார மென்றும் கவனியாமல் அந்த

அநாதைக்கு உதவின உன்னைப் புகழ்வதென்பது சாத்திய மல்ல; இதை ஏன் என்னிடம் அப்பொழுதே சொல்லவில்லை?" என்று சொல்லி அன்றுதான் புதிதாக விவாகமானவர் மாதிரி அம்மாவை ஆலிங்கனம் செய்துகொண்டார்.

இந்தத் தர்மபுத்திரனின் குமாரன் நான். நான் ஏன் பிராம்மணன் என்பது இப்பொழுது தெரிகிறதா?

* * *

இந்தக் கதையைச் சொல்லும்பொழுது ராமு ஏதோ ஆவேசம் வந்தவன்போல் பேசினன். கேட்டுக்கொண்டிருந்த எனக்குக் கண்களில் நீர் ததும்பியது.

அன்றிருந்து ஒரு விஷயம் தெரிந்துகொண்டேன். அதென்னவெனில் ஏதாவது ஒரு கட்சி பேசுவதற்கு ஆதாரங்கள் தேவையாயிருந்தால், ராமுவிடம் சென்று அதற்கு எதிர்க்கட்சியை எடுத்துப் பேசவேண்டுமென்பதுதான்.

# அழியாச் சுடர்

["மௌனி"]

வழக்கமாகக் காலையில் அவனைப் பார்க்கப் போவது போல நான் அன்று செல்லவில்லை. உதயத்திலிருந்தே உக்கிரமாக வெயில் அடித்தது. தெளிவுற விளங்காத ஒருவித அலுப்பு மேலிட்டதனால் நான் வீட்டை விட்டே வெளிக் கிளம்பவில்லை. மாலையில் சென்று அவனைப் பார்த்துக்கொள்ளலாம் என்று எண்ணி, மிக உஷ்ணமான அன்று பகலை, என் வீட்டிலேயே கழித்தேன்.

நேற்று முன் தினம் இது நிகழ்ந்தது. மாலை நாலரை மணி சுமாருக்கு நான் அவன் வீட்டை அடைந்தேன். அவன் என் பாலிய சிநேகிதன். நான் சென்றபோது, தன் வீட்டின் முன் அறையில், அவன் வழக்கம்போல ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தான். திறந்த ஜன்னலுக்கு எதிரே உட்கார்ந்து இருந்த அவன் எதோ ஆழ்ந்த யோசனையில் இருப்பதாக எண்ணித் திடீரென உட்புகச் சிறிது தயங்கினபடியே ரேழியில் நின்றேன். என் பக்கம் பாராமலே, என்னை அவன் உள்ளே அழைத்தது திடுக்கிடத்தான் செய்தது. அவனுடைய அப்போதைத் தோற்றமும் கொஞ்சம் ஆச்சரிய மளிப்பதாகவே இருந்தது. உள்ளே ஒரே நாற்காலியும் அதன் அருகில் ஒரு

மேஜையும் இருந்தன. மற்றும் எதிரில் வீதிப்பக்கம் பார்த்த ஜன்னல் திறந்திருந்தது.

“காப்பி சாப்பிட்டாகிவிட்டதா?” என்று கேட்டுக் கொண்டே நான் உள்ளே நுழைந்தேன்.

“இல்லை” என்றான்.

“என்ன ?”

“ஆமாம். காலை முதல் இங்கே உட்கார்ந்தபடிதான் இருக்கிறேன் - யோசனையாக -” எனக் கொஞ்சம் சிரித்தபடி கூறினான்.

என் நண்பன் சிரிப்பதை மறந்துவிட்டான் என்பதும், எனக்குத் தெரிந்து சமீப காலத்தில் சிரித்ததே இல்லை என்பதும் உண்மை. அப்போது அவன் சிரித்ததும் உணர்ச்சி இழந்த நகைப்பின் ஒலியாகத்தான் கேட்டது. அவன் பேசின தொனியும், என்னைப் பாராது வெளியே வெறித்துப் பார்க்கும் பார்வையும் எனக்கு என்னவோபோல் இருந்தன. மேலே நான் யோசிக்க ஆரம்பிக்குமுன் அவன் பேச ஆரம்பித்தான். அவன் சமீப காலமாக ஒருவித மனிதனாக மாறிவிட்டான்.

“இங்கே வாப்பா ; இங்கே இப்படி உட்காரு ; எதிரிலே பார்” என்று சொல்லிக்கொண்டே எழுந்து மேஜையின் மீது அவன் உட்கார்ந்துகொண்டான் ; நான் நாற்காலியில் அமர்ந்தேன்.

“நான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அதோ, அங்கே என்ன தெரிகிறது பார்” என்றான்.

இலையுதிர்ந்து நின்ற ஒரு பெரிய மரம், பட்ட மரம் போன்ற தோற்றத்தை அளித்துக்கொண்டு எனக்கு எதிரே இருந்தது. வேறு ஒன்றும் திடீரென என் பார்வையில் படவில்லை. தனிப்பட்டு, தலைவிரிகோலத்தில் நின்று, மௌனமாகப் புலம்புவது போன்று அம்மரம் எனக்குத் தோன்றி

யது. ஆகாயத்தில் பறந்து திடீரென அம்மரக் கிளைகளில் உட்காரும் பக்ஷிகள், உயிர் நீத்தவையேபோல் கிளைகளில் அமைந்து ஒன்றுகும். அவற்றின் குரல்கள் மரண ஒலியாக விட்டுவிட்டுக் கேட்டுக்கொண்டிருந்தன. சிறிதுசென்று, ஒன்றிரண்டாகப் புத்துயிர் பெற்றுக் கிளைகளை விட்டு ஜிவ்வெனப் பறந்து சென்றன. அதிக நேரம் அம்மரத்தின் தோற்றத்தைப்பற்றி நான் யோசித்துக் கொண்டிருக்கவில்லை. காலையிலிருந்து உக்கிரமான வெயிலில் பாதி மூடிய கண்களுடனும், வெற்று வெளிப்பார்வையுடனும் கண்ட தோற்றங்கள் என் நண்பனுக்கு எவ்வெவ்வகை மனக் கிளர்ச்சிக்குக் காரணமாயினவோ என்பதை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.

"என்ன?" என்று அவன் கேட்டது என்னைத் தூக்கி வாரிப்போடும்படி இருந்தது.

"அதோ, அந்த மரந்தான்" என்றேன்.

"என்ன? மரமா? சரி" என்று சொல்லிக்கொண்டே உட்கார்ந்தபடியே சிறிது குனிந்து அதைப் பார்த்துவிட்டு அவன் பேசலானான்.

"ஆமாம்; அதுதான்; ஆகாயத்தில் இல்லாத பொருளைக் கண்மூடிக் கை விரித்து தேடத் துழாவுவதைப் பார்த்தாயா? ஆடி அசைந்து நிற்கிறது அது; ஆட்டம் ஓய்ந்து நிற்கவில்லை......மெல்லெனக் காற்று மேற்கிலிருந்து அடிக்கும். காதல் முகந்த மேகங்கள், கனத்து மிதந்துவந்து அதன் மேல் தங்கும்......தாங்காது தளர்ந்து ஆடும்...விரிக்கப்பட்ட சாமரம் போன்று ஆகாய வீதியை மேகங்களிலிருந்து சுத்தப்படுத்துவதா அது...? அல்லது தளிர்க்கும் பொருட்டு மழைத்துளிகளுக்கு ஏங்கியா நிற்கிறது...? எதற்காக...?"

"என்ன நீ பெரிய கவியாகிவிட்டாயே! ஏன் உனக்கு இவ்வளவு வேகமும் வெறுப்பும்......!" என்றேன். அவன்

"சொல்லுகிறேன் கேள்: நேற்று நேற்று என்று காலத்தைப் பின்கடத்தி மனம் ஒன்பது வருஷத்திற்கு முன்பு நடந்த ஒரு சம்பவத்திற்குச் சென்று நின்றது. அந்த நிகழ்ச்சியை நினைப்பூட்டிக் கொண்டபிறகு என் நிலை தடுமாறிப் போய்விட்டது. என்னவெல்லாமோ என்மனம் சொல்ல முடியாத வகையில் அடித்துக்கொள்ளுகிறது. அவ்வளவுதான்..." எனச் சொல்லி நிறுத்தினான். அவன் கண்கள், காண முடியாத அசரீரியான ஏதோ வஸ்துவைப் பார்க்கத் துடிப்பதுபோல என்றுமில்லாதபடி ஜொலித்தன. என்னிடம் சொல்லுவதற்கு அல்ல என்பதை அவன் பேசும் வகை உணர்த்தியது.

" ஆம், ஒன்பது வருஷத்துக்கு முன்பு நான் கல்லூரி மாணவன். எனக்கு அப்போது வயது பதினெட்டு. அக்கால நிகழ்ச்சி ஒன்றே இன்று காலை முதல், பல்லவியாகப் பலவிதமான கற்பனையில் தோன்றுகிறது. அப்போது நான் பார்ப்பதற்கு எப்படி இருப்பேன் என்பது உனக்கு ஞாபகம் இருக்கலாம்..."

" நன்றாக... நீ..."

" சரி, சரி, என் நீண்ட மூக்கு, முகத்திற்கு வெகு முன்பாக நீண்டு முன் செல்லுபவர்களைத் திருப்பி இழுப்பது போல வளைந்திருக்கும். அதன்கீழ் மெல்லிய உதடுகள் மிருதுவாகிப் பளீரென்ற பல் வரிசைகளைப் பிறர் கண்கூசச் சிறிது காண்பிக்கும். அப்போதுதான் நான் கிராப் புதிதாகச் செய்து கொண்டேன். நீண்டு கறுத்துத் தழைத்திருந்த என் கூந்தலைப் பறிகொடுத்ததாகவே பிறர் நினைக்கும்படி, படியாத என் முன்குடுமியை, என் கையால் நான் அடிக்கடி தடவிக் கொள்ளுவேன். குறு குறு வென்ற கண்களோடு என் அழகிலேயே நான் ஈடுபட்டு மதிப்பும் கொண்டிருந்தேன். அப்போது என்னை அநேகர் பார்த்திருக்கலாம். என்னைப் பற்றிய அவர்களுடைய எண்ணங்களை நான் கண்டுகொள்ள

வில்லை. இப்போதோ வெனின் நான் பார்ப்பது வறட்டுப் பார்வைதான். என்னுடைய கண்கள் வறண்டவை தாமே! என் அழகு இளமையிலேயே முடிவடைந்து விட்டது போலும். ஆனால், என் வாழ்க்கை இளமையில் முடிய வில்லையே. அவளும் என்னைப் பார்த்தது உண்டு.''

"அவள் யார்?'' என்றேன் நான்.

"ஆமாம், அவளும்; சொல்லுவதைக் கேள். நான் கோவிலுக்குப் போய் எத்தனை வருஷமாகிறது? அந்தத் தினத் திற்குப் பின்பு, நேற்று வரையில் நான் கோவிலுக்குப் போனதில்லை. அதற்கு முன் அடிக்கடி போய்க்கொண் டிருந்தேன். நீயும் என்னோடு வருவதுண்டே. நான் சொல்லும் அன்றிரவிலும் நீ என் பக்கத்தில் இருந்தாய்.

"அது திருவிழா நாள் அல்ல... அவளும் வந்திருந் தாள். அவள் வருவது எனக்குத் தெரியாது. நாம் கோவிலை விட்டு வெளி வந்தபோது உள்ளே போய்க் கொண்டிருந்த அவளை இருவரும் கோவில் வாயிலில் சந்தித் தோம். அவளுக்கு அப்போது வயது பதின்மூன்று இருக் கலாம். அவள் சட்டென்று என்னைத் திரும்பிப் பார்த்தாள். அவள் பார்வையைத் திருப்பியது நானாக இருக்கலாம். ஆனால் திரும்பி, உன்னையும் கூட்டிக்கொண்டு அவள் பின்னோடு உள் செல்ல என்னை இழுத்தது எது? எனக்குத் தெரியவில்லை. அப்போதைய சிறு பிள்ளைத்தனமாக இருக்கலாம். காதல், அது, இது என்று காரணம் காட்டாதே. காரணமற்றது என்றாலும் மனக்குறைவு உண்டாகிறது. காலந்தான் காரணம் என்று வைத்துக்கொள்.

"அவள் பின்னோடு நான் சென்றேன். அநேகந்தரம் அவளைத் தொடக் கூடிய அளவு அவ்வளவு சமீபம் நான் நெருங்கியதும் உண்டு. என் வாய் அடிக்கடி ஏதோ முணு முணுக்கதும் உண்டு. அது எதையும் சொல்வதற்கல்ல

என்பது எனக்குத் தெரியும். ஏனெனில் சொல்லுவதற்கு ஒன்றும் இல்லை.

"ஈசுவர சந்நிதியில் நின்று தலைகுனிந்து அவள் தியானத்தில் இருந்தாள். அவளுக்குப்பின் வெகு சமீபத்தில் நான் நின்றிருந்தேன். அவளுடைய கூப்பிய கரங்களின் இடை வழியாகக் கர்ப்பக்கிருகச் சரவிளக்குகள் மங்கி வெகுதூரத்திற்கு அப்பாலே பிரகாசிப்பதாகக் கண்டேன். அவள் கண்கள், விக்கிரகத்திற்குப்பின் சென்று வாழ்க்கையின் ஆரம்ப இறுதி எல்லைகளைத் தாண்டி இன்பமயத்தைக் கண்டு களித்தனபோலும்! எவ்வளவுநேரம் அப்படி இருந்தனவோ தெரியாது. 'காலம்' அவள் உருவில், அந்தச் சந்நிதியில் ஓடாமல் சமைந்து நின்றுவிட்டது.

"தியானத்தினின்றும் விடுபட்டு என் பக்கம் அவள் திரும்பியபோது ஒரு பரவசம் கொண்டவனைபோல என்னையும் அறியாதே 'உனக்காக நான் எது செய்யவும் காத்து இருக்கிறேன்; எதையும் செய்யமுடியும்' என்று சொல்லி விட்டேன்! நீயும், அவளுடன் வந்தவர்களும் சிறிது எட்டி நின்றிருந்தீர்கள். உங்கள் காதுகளில் அவ் வார்த்தைகள் விழவில்லை. ஆனால் அவள் காதில் விழுந்தன என்பது நிச்சயம், அவள் சிரித்தாள்.

"அவளுக்கு மட்டுந்தானா நான் சொன்னது கேட்டது என்பதில் எனக்கு அப்போதே சந்தேகம். உள்ளிருந்த விக்கிரகம் எதிர்த்தூணில் ஒன்றிநின்ற யாளி அவையும் கேட்டு நின்றன என்று எண்ணினேன். எதிரே லிங்கத்தைப் பார்த்தபோது நெற்றுக்குமேலே சந்தனப் பொட்டுடன் விபூதி அணிந்த அந்த விக்கிரகம், உருக்கொண்டு புருவஞ் சுழித்துச் சினங்கொண்டது. தூணில் ஒன்றிநின்ற யாளியும் மிகமருண்டு பயந்து கோபித்து முகம் சுழித்தது; பின் கால்களில் எழுந்து நின்று பயமூட்டியது. அவளைப் பார்த்

தேன். அவள் மறுபக்கம் திரும்பி இருந்தாள். பின்னிய ஜடை பின்தொங்க, மெதுவாகத் தன்னோடு வந்தவர்களுடன் சென்றாள். நான் அவளைச் சிறிது தொடர்ந்து நோக்கி நின்றேன். ஆழ்ந்து அமுங்கிய உலக நிசப்தத்தைக் குலைக்க அவளுடைய சதங்கைகள் ஒலிக்கும் ஒலி அவசியம் போலும்! வந்தவர்களுடன் குதூகலமாகப் பேசி, வார்த்தைகளாடிக்கொண்டே கால் சதங்கைகள் கணீரென்று ஒலிக்கப் போய்விட்டாள். சந்நிதியின் மௌனம் அவளால் உண்டான சப்தத்தின் எதிரொலியில் சிதைவுற்றது. வௌவால்கள் கிரீச்சிட்டுக்கொண்டு குறுக்கும் நெடுக்குமாகப் பறந்தன.”

என் நண்பன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே என் மனம் ஓடியது. அது கட்டுக்கடங்காமல் சித்திரம் வரைய ஆரம்பித்தது - கோவில், சந்நிதானம், ஆம். பகலிலும் பறக்கும் வௌவால்கள் பகலென்பதையே அறியாதுதான் கோவிலில் உலாவுகின்றன.

பகல் ஒளி பாதிக்குமேல் உட்புகத் தயங்கும். உள்ளே, இரவின் மங்கிய வெளிச்சத்தில் சிலைகள் ஜீவகளை கொண்டு நிற்கின்றன. ஆழ்ந்த அனுபவத்திலும் அந்தரங்கத்திலும் மௌனமாகக் கொள்ளும் கூடமான பேரின்ப உணர்ச்சியை வளர்க்கச் சிறப்பித்ததுதானா கோவில்? கொத்து விளக்குகள் எரிந்துகொண்டிருக்கும். அதன் பிரகாசத்தில் நடமாடும் பக்தர்களுக்கும், அவர்கள் நிழலுக்கும் வித்தியாசம் காணக்கூடாத திகைப்பைக் கொடுக்கும். அச் சந்நிதானம் எந்த உண்மையை உணர்த்த ஏற்பட்டது? நாம் சாயைகள்தாமா......? எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம்? - என்பனபோன்ற பிரச்னைகளை என்மனம் எழுப்பிய போது, ஒருதரம் என் தேகம் முழுவதும் மயிர்க்கூச் செறிந்தது.

என் நண்பனின் பார்வை மகத்தானதாக இருந்தது. ஏதோ ஒருவகையில், ஒரு ரகசியத்தை உணர்ந்த அவன் பேச்சுகள் உன்னதமாக என்காதில் ஒலித்துக்கொண்டிருந்தன. பேச்சினால் தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்த முடியாது என நினைக்கும்போது அவன் சிறிது தயங்கி நிற்பான். அப்போது அவன் கண்கள் பிரகாசத்தோடு ஜொலிக்கும்.

"அவள் சென்றாள், பிராகாரத்தைச் சுற்றிவர. பின்னப்பட்டிருந்த அவள் கூந்தல் மெதுவாக அசைந்து ஆடியது. அவள் நடை அழுத்தலாக அவளை முன் செலுத்தியது. 'பின்தொடர் பின்தொடர்' என என் மனத்தில் மறுக்க முடியாதபடி ஓர் எண்ணம் தோன்றியது. வெளியில் நான் வாய் விட்டுச் சொல்லவில்லை. பிராகார ஆரம்பத்தில் ஒரு வில்வ மரம் இருந்தது. அதன் இலைகளின் ஊடே நிலவு தெளிக்கப்பட்டு வெண்மைத் திட்டுகளாகப் படிந்து தெரிந்தது. 'பிரியமானவளே என்னைப் பார்' என்று மனத்தில் நான் சொல்லிக்கொண்டேன். அவள் என்னைத் திரும்பிப் பார்த்தாள். அவளும் 'பின்தொடர்' என்று சொல்லுவதைத்தான் அவள் பார்வையில் கண்டேன். ஏதோ ஒரு சப்தம் கேட்டது. அது தலைகீழாகத் தொங்கும் ஒரு வௌவாலின் சப்தம்; காதில் சிரித்து மனத்தில் மரணபயத்தைக் கொடுக்கும் சப்தம். வில்வ மரத்தடியிலிருந்து அவளைத் தொடர்ந்து நோக்கி நின்றேன். பிறகு அவள் பின்தொடரச் சென்றுகொண்டு இருந்தேன்.

"பகல் போன்று நிலவு காய்ந்தது. பின் நீண்டு தொடர்ந்த அவள் நிழலைபோன்று நானும் அவளைத் தொடர்ந்தேன். மூலைத் திருப்பத்திற்குச் சிறிது முன்பு அவள் என்னைப் பார்க்கத் திரும்பினாள். நான் சொன்ன வார்த்தைகளைத் திருப்பிக்கொள்ளும்படி கேட்டுக் கெஞ்சுவது போல அவள் பார்வை இருந்தது. அவள் வருத்தத்திலும்

வசீகரமாகத் தோன்றினாள். அருகில் நெருங்கிய நான் மறுபடியும் ஒருதரம் 'என்ன வேண்டுமானாலும் உனக்காக—' என்று ஆரம்பித்தவன் முழுவதும் சொல்லி முடிக்கவில்லை. நான் திரும்பி வேகமாக வந்துவிட்டேன். அவளும் கீழ்ப் பிராகாரத்திற்குச் சென்றுவிட்டாள். வில்வ மரத்தடியில் நின்றிருந்த உன்னை அடைந்தேன். இருவரும் பேசாது வீடு சேர்ந்தோம்."

அவன் பேச்சைக் கொஞ்சம் நிறுத்தியபோது, "யார் அவள்? எனக்கு ஞாபகமில்லையே?" என்று கேட்டேன். என்னுடைய கேள்வி அவன் மனத்திலே படவில்லை. அவன் மேலே பேச ஆரம்பித்தான். எனக்கு ஆத்திரம் மூண்டது.

"அன்று முதல் நான் கோவிலுக்குப் போவதை நிறுத்திவிட்டேன். எதற்காக நின்றேன் என்பது எனக்குத் தெரியாது. சுபாவமாகத்தான் போவது நின்றுவிட்டது என்று நினைத்தேன்.

"நேற்று இரவு என் மனம் நிம்மதி கொண்டு இருக்கவில்லை. எங்கேயோ அலையத் தொடங்கியது. கோவிலுக்குச் சென்று ஈசுவர தரிசனம் செய்துவரலாமெனப் புறப்பட்டேன். இரவில் நாழிகை கழித்தே சென்றேன். அதிகக் கூட்டமில்லாமல் இருக்க வேண்டுமென்பதுதான் என்னுடைய எண்ணம். பெரிய கோபுர வாயிலைக் கடக்கும் போதே, சுவாமியின் கர்ப்பக்கிருஹம் தெரியும்.

"வெகு காலமாக, ஜோதி கொண்டு ஜொலிப்பது போன்று நிசப்தத்தில் தனிமையாக ஒரு பெரிய சுடர் விளக்கு லிங்கத்தருகில் எரிந்து கொண்டிருக்கும். அது திடீரெனச் சிறிது மறைந்து பழையபடியே அமைதியில் தெரிந்தது. யாரோ ஒரு பக்தன் கடவுளை வழிபட உள்ளே சென்றான் போலும். நான் மெதுவாகப் போய்க்கொண்டிருந்

தேன். உலகின் கடைசி மனிதன் வழிபாட்டை முடித்துக் கொண்டு, அநந்தத்திலும் அவியாத ஒளியை உலகில் விட்டுச் சென்றதுபோலத் தோன்றின அந்தத் தீபத்தின் மறைவும் தோற்றமும். தூண்டப்படாது என்னுள் எரிந்த ஒளி நிமிர்ந்து ஜொலிக்கத்தான் நேற்று இது நிகழ்ந்தது. கோவிலில் நான் நினைத்தபடி ஒருவரும் இல்லாமல் இல்லை.

"அவளுக்கு இப்போது இருபத்திரண்டு வயது இருக்கலாம். நாகரிகப் பாங்கில் அவள் இருந்தாள். அவளை இப்போது கோவிலில் கண்டதும், என் மனம் வேதனை கொண்டது. எதிர்பாராது நேர்ந்த இந்தச் சந்திப்பினால் அவளிடம் நான் ஒருவகை வெறுப்புக் கொள்ளலானேன். அவள் என்னைத் தெரிந்துகொள்ளவில்லை என்று நினைத்தேன். இப்போது என்னுடைய நாகரிகப்போக்கு எண்ணங்கள் தடுமாறி, மனமாற்றம் கொள்ளும் நிலையில் இருப்பதால், அவளுடைய அழுத்தலும் நாகரிக நாஸூக்கும் எனக்குச் சிறிது ஆறுதலைக்கொடுத்தன. நான், முன்பு அவள் காது கேட்கச் சொன்னவற்றை நினைத்துக் கொண்டபோது, என்னையே நான் வெறுத்துக் கொள்ளாதபடி, அவள் புறத் தோற்றம் ஆறுதல் கொடுத்தது. முழுவேகத்தோடு அவளை வெறுத்தேன். ஆனால் அவள் கடவுளின் முன்பு தியானத்தில் நிற்கும்போது தன்னுடைய மேற்பூச்சை அறவே அழித்துவிட்டாள். கடவுளின் முன்பு மனிதர்கள் எவ்வளவு எழில் கொள்ள முடிகிறது, எத்தகைய மனக் கிளர்ச்சிக்கு உடன்படுதல் முடிகிறது, என்பதை அப்போது நான் உணர்ந்தேன்.

"அவள் தியானத்தின் மகிமை என்னைப் பைத்தியமாக்கிவிட்டது. வெறித்து வெறுமனே நிற்கச் செய்தது; ஓர் இன்பமயம், ஒரு பரவசம். திரும்பிய அவள் என்னைக் கண்டுகொண்டுவிட்டாள். எதிரில் நின்ற தூணை அவள்

சிறிது நேரம் ஊன்றிப் பார்த்தாள். என் வாக்கின் அழியாத சாக்ஷியாக அமைந்து நின்ற அந்த யாளியும் எழுந்து நின்று கூத்தாடியதைத்தான் நான் பார்த்தேன். மேலே உற்று நோக்கியபோது ஐயோ! மற்றொரு யாளி வெகுண்டு குனிந்து என்னைப் பார்த்துக்கொண் டிருந்தது. அவள் பார்க்குமிடத்தைப் பார்த்து நின்ற என் மனம் பதைத்துவிட்டது. என்னை நோக்கி ஆணை இடுபவளாகத் தோன்றினாள். அவள் பார்வை என்னை ஊடுருவித் துளைத்துச் சென்றது. ஒருவன், தன் உள்ளூற உறைந்த ரகசியத்தை, ஒரு வைத்தியத்தின் பகற் கனவில் பாதி சொல்லிவிட்டு மறைவதுபோல அவள் பார்வை என்னை விட்டு அகன்றது. உணர்ச்சிகள் எண்ணங்களாக மாறுமுன், அவள் சொன்னது என்ன என்பதை மனம் புரிந்து கொள்ளுமுன், அவள் போய்விட்டாள். குனிந்த என் தலை நிமிர்ந்தபோது அவள் மறுபடியும் என் பக்கம் திரும்பியதை நான் பார்த்தேன். ஆழமான இருண்ட சுரங்கத்தினின்றும் இருமணிகள் மின்னுவதுபோல இரு சொட்டுக் கண்ணீர் அவள் கண்களினின்றும் உதிர்ந்தது.

'நான் விதியின் நிழல். என்னிடம் காதலின் மோழு வசீகரக் கடுமையை நீ காணப்போகிறாய்.'

"அவள் என்ன சொன்னாள்? அவள் என்ன செய்யச் சொன்னாள்? நான் என்ன செய்ய இருக்கிறது? எல்லாம் ஒரு கனவுதானா? அவள் பேசவில்லை. சத்தத்தில் என்ன இருக்கிறது; பேச்சில்? உருவில் - சீ சீ! எல்லாம் அர்த்த மற்றவை - உண்மையை உணர்த்த முடியாதவை; எல்லாம் இருளடைகின்றன. இறுகிய பிடிப்பிலும் துவண்டு புகை போன்று நழுவுகின்றன. ஆனால் எல்லாம் மாயை என்பதை மட்டும் உணர்த்தாது 'மேலே அதோ' என்று காட்டியும் நாம் பார்த்து அதன் வழியே போகத் தெரிந்துகொள்ளு

மூன் மறையவுந்தான் இந்தச் சுட்டு விரல்கள் இருக்கின்றன. இருண்ட வழியில் அடையும் தடுமாற்றத்தில் அகஸ்மாத்தாகத் தாண்டிக் குதித்தாவது சரியான வழியை அடையமாட்டோமா என்ற நம்பிக்கைதான் நமக்கு இருப்பது.

"அதோ மரத்தைப் பார். அதன் விரிக்கப்பட்ட கோடுகள், அதன் ஒவ்வொரு ஜீவ அணுவும் வான நிறத்தில் கலப்பது தெரியவில்லையா? மெல்லென ஆடும்போது அது வான வெளியில் தேடுகிறது. அது குருட்டுத்தனமாகத்தானே அங்கே தேடுகிறது......?"

நன்றாக இருட்டிவிட்டது. அவன் வெளியில் வெறித்துப் பார்த்துக்கொண்டு இருக்கும்போது, நான் சொல்லிக்கொள்ளாமலே வெளிக்கிளம்பிவிட்டேன்.

வீதியில் வந்ததும் உயரே உற்று நோக்கினேன். இரவின் வளைந்த வானத்திலே கற்பலகையில் குழந்தைகள் புள்ளியிட்டதுபோல எண்ணிலா நக்ஷத்திரங்கள் தெரிந்தன. தத்தம் பிரகாசத்தை மினுக்கி மினுக்கி எவ்வளவுதான் கொட்டிடினும், உருகி மடிந்துபடும் அழிவே கிடையாது போல அவைகள் ஜொலித்தன. மேலே இருப்பதை அறிய முடியாத தளர்ச்சியுடன் ஒரு பெருமூச் செறிந்தேன். நடந்து நடந்து வீட்டை அடைந்தேன்.

இன்று காலையில் அவனை வீட்டில் காணோம். அவன் எங்கே எதற்காகச் சென்றானோ எனக்குத் தெரியாது. அவனுக்குத் தெரியுமோ என்பதும் தெரியாது. எல்லாம் 'அவனுக்கு'த் தெரியும் என்ற எண்ணந்தான் - அவன் என்பது இருந்தால்.




# கல்லினுள் தேரை

[ஆர். ஷண்முகசுந்தரம்]

நதி எங்கள் ஊரடியில் இரு கிளையாகப் பிரிகிறது. கம்பீரமாக அலை வீசிக்கொண்டு வந்த நீரின் வேகம் சற்றுத் தணிந்து, நாணிக் கோணி ஒதுங்கும் கன்னிப் பெண்போல் இரண்டு புறமும் பாய்ந்து வழியும் வெள்ளத்தின் காட்சியே காட்சி! அதைப் பார்க்கப் பார்க்க ஆனந்தம் பொங்கிக் கொண்டுதான் இருக்கும். கிழக்கே வெகு தொலைவில் மறுபடியும் இரு கிளையும் ஒன்று சேர்ந்து மீண்டும் ஐக்கியமாகிப் போவதைப் பார்த்தால், ஒவ்வொரு மனத்திற்கும் தகுந்தபடி எத்தனையோ தத்துவங்களை அதில் காணலாம்.

எனக்கு இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருப்பதிலே பேரானந்தம்; திருப்தி. சுகமாக மணல் பரப்பின்மீது படுத்துக்கொண்டு நீரின் ஓசையிலே நெஞ்சைச் செலுத்தி, 'தன்னை மறந்த லயம் தன்னில்' ஆழ்ந்துவிடுகிறது உண்டு. இப்படி ஒருநாள் மிகவும் பரவசத்துடன் வழக்கமாக உட்காரும் இடத்தைத் தாண்டிக் கொஞ்சதூரம் கரையோரமாக நடந்து சென்று ஓரிடத்தில் உட்கார்ந்தேன்.

அங்கொரு கற்சிலை கிடப்பது தெரிந்தது. சுமார் மூன்று மூன்றரை அடி உயரம் இருக்கும். வெயிலாலும், மழையாலும் சற்று மங்கிப்போயிருந்தாலும் அதிகக் களையுடன்தான் இருந்தது. இடது பக்கத்து இடுப்பருகே ஒரு

வெட்டுக் காணப்பட்டது. அநேகமாக அது உருக் குலைந்து தான் போயிருந்தது. இடுப்பளவு கீழே புதைந்த வண்ணம், ஊஞ்சல் மரத்தடியில் கன்னிமார் சாய்ந்திருக்கிற மாதிரி காட்சி அளித்துக்கொண்டிருந்தது அந்தச் சிலை.

வெகு நேரம் அச்சிலையையே பார்த்துக்கொண்டு அக்கதி அடைவதற்குமுன் அது இருந்த கோலத்தையும், அதைச் செய்த சிற்பியைப்பற்றியும் யோசித்துக்கொண் டிருந்தேன். பொதுவாகச் சிற்பம், சித்திரம் முதலிய கலைகளைப்பற்றி நண்பர்களுடன் பேசிக்கொண் டிருந்தாலே ரவிவர்மாவின் அழகிய படம் எப்போதும் என் மனத்திரையில் தோன்று மல் இருக்காது. அந்தச் சிலையைப் பார்த்தபோதும் அந்தச் சித்திரம் ஞாபகத்திற்கு வந்தது.

அஜ மகாராஜா இந்துமதியோடு முன் இரவில் உல்லாச மாகப் பூஞ்சோலையில் மேடை மீது உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறான். முன்னர் இந்துமதிக்கு ஏற்பட்ட சாபத் திற் கேற்பத் தேவலோகத்திலிருந்து பூமாலை ஒன்று மார்பின்மீது வந்து விழ, மாலையில் மடியும் ரோஜாவைப் போல் அப்போது அங்கு உயிர் துறக்கிறாள். பசுமரம் போன்று தன் அருகே இருந்த இந்துமதி திடீரென்று உயிர் நீத்ததை மன்னன் கண்டு பிரலாபிக்கிறான். அஜ மகாராஜா அந்த உயிரற்ற பிரேதத்தைத் தன் மடிமீது வைத்துக் கொண்டு இரண்டு கைகளையும் விரித்து வானத்தைப் பார்த் துக்கொண்டு கண்ணீர் வடிக்கிறான். இவ்வளவு விஷயங்களும் நேரில் நடப்பதுபோல் அப்படியே சித்திரித்திருக்கிறார் ரவிவர்மா.

“இம்மாதிரி ஏதாவது நல்ல காட்சியைக் கண்டுதான் ரவிவர்மாவுக்கு அதை எழுதத்தோன்றியிருக்குமோ? ஆம், அப்படித்தான் இருக்கும்” என்று நான் வாய்விட்டுச் சொன்னேன்.

“அதில் சந்தேகமே இல்லை” என்று சொல்லிக் கொண்டே என் அத்தை மகள் சித்ரா அங்கே வந்தாள்.

நான் தனியாகப் பேசிக்கொண்டிருந்தது கூட எனக்கு ஒரு மாதிரியாகப் படவில்லை; சித்ரா என்னைக் கேலி பண்ணுவதுதான் அவமானமாயிருந்தது.

“நீ வருவாய் என்று எனக்குத் தெரியுமே” என்று சிரித்துக்கொண்டே சொன்னேன்.

“அது இருக்கட்டும்; இது எத்தனை நாளாக?” என்றாள்.

“என்ன?”

“பைத்தியந்தான்.”

“சரி, எனக்குத்தான் பைத்திய மாச்சே? ஒரு பித்துக் கொளியுடன் பேச்சென்ன வேண்டியிருக்கு? எழுந்துபோய் விடுகிறதுதானே?” என்று கொஞ்சம் கோபத்துடன் சொல்லி விட்டு வேறு பக்கம் திரும்பிக்கொண்டேன்.

“சரி, சரி, அந்தப் பக்கத்தில்தான்; அதோ போகிறாளே அந்தப் பெண்ணைத் தெரியுமா?” என்று கேட்டாள்.

கொஞ்ச தூரத்தில் நிஜமாகவே ஒரு பெண் போய்க் கொண்டிருந்தாள். சித்ரா விளையாட்டுக்காகச் சொல்லவில்லை. தவிர, அந்தப் பெண்ணை நான் பல தடவைகள் மாலை வேளையில் கரைப் பக்கம் பார்த்திருக்கிறேன். சித்ராவைக் கேட்டு அவள் யார் என்பதைத் தெரிந்துகொள்ள நினைத்தேன். என் கோபம் கணத்தில் மறைந்தது.

“இதோ” என்று பக்கத்தில் இருந்த அந்தச் சிலையைக் காட்டி, “இதைச்சிருஷ்டித்த மஹானின் மகள்தான்” என்றாள்.

“என்ன, என்ன? இந்தச் சிலையைச் செய்தவன் மகளா?” என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

“ஆமாம். இந்த அற்புதச் சிலையைச் செய்தவனுடைய மகள்தான். அவள், தன் தந்தை விட்டுப்போன இந்த ஞாபகச் சின்னத்தைக் காணத் தினம் ஒரு முறையாவது

இந்தப் பக்கம் வருவாள். ஆனால் யாராவது இங்கே உட்கார்ந்து கொண்டிருந்தால் பேசாமல் திரும்பிப் போய் விடுவாள். கல்யாணமாகாத வயது வந்த பெண் இப்படி உங்களைப் போன்றவர் எதிரில் வரலாமோ ?" என்றாள்.

" நாம் இங்கே உட்கார்ந்து கொண்டிருப்பதால், இப்பொழுதுகூட அவளுக்குச் சிரமம் ஏற்பட்டிருக்கலாம். அட, பாவமே!" என்றேன்.

" இதில் ஒன்றும் பாவம் இல்லை. இப்போது அவளும் தாயும் படுகிற கஷ்டத்தைப் பார்த்தால்தான் பரிதாபமாய் இருக்கிறது. என்ன பண்ணுகிறது ? அன்று எழுதியவன் அழிச்சா எழுதப்போகிறான் ?" என்று சொல்லிவிட்டுச் சித்ரா முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டாள்.

"ஏன், யாராவது சொந்தக்காரர் இல்லையா ?" என்று மெதுவாகக் கேட்டேன்.

"சொந்தக்காரர் இருந்து நாசமாப் போச்சு! இப்பொழுது நம் சங்கதியை எடுத்துக்கொள்வோம். என்னவோ, ஆண்டவன் புண்ணியத்தில் எங்களுக்குச் சொத்து இருக்கத் தானே என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள நீங்கள் சம்மதித்தீர்கள் ? இல்லாவிட்டால் என் மீதுள்ள காதல் உங்கள் உள்ளத்திலே பொங்கிப் பிரவகித்ததனால்தான் மணம் செய்துகொள்ள ஒப்புக்கொண்டீர்களோ ?" என்றாள். சித்ராவின் குறும்புத்தனமெல்லாம் எனக்குத் தெரியுமாகை யால் விவாதத்திற்கு இடம் கொடுக்காமல், "ஏதாவது கொஞ்ச நஞ்சம் கொடுத்து உதவக்கூட யாரும் இல்லையோ ?" என்றேன்.

" இல்லாமல் என்ன ? அதுதான் சொன்னேனே. பழைய புராணத்தையே திருப்பித் திருப்பி ஒப்பிப்பதில் லாபம் என்ன ? அவளுடைய தகப்பனைப்பற்றிக் கேட்டால் நீங்கள் கண்ணீர் வடிப்பீர்கள் " என்றாள்.

மகளைப்பற்றிக் கேட்டதே வருத்தமாக இருக்கிறது. இனி, கண்ணீர் வடிக்க வேண்டியிருக்கும் என்று நினைத்து ஒன்றும் பேசத் தோன்றவில்லை.

“சுருக்கமாகச் சொல்லி முடிக்கிறேன்” என்று சித்ரா தொடங்கினாள்.

* * * *

“அவனுடைய தகப்பன் கை பட்டால் எதுவும் கண்ணாடிதான்; ரொம்ப ரொம்ப அபூர்வ வேலைப்பாடுடன் சிலைகள் செய்வதிலே பெரும் புகழும் பெற்றவன். இதோ, இங்கிருக்கும் சிலையைச் செய்துமுடித்துத் தந்தபின் ஏராளமான சம்மானம் பெற்றிருப்பான். ஆனால் அதற்குள்ளே வந்தது ஒரு தடங்கல்.

“இந்தச் சிலைவேலை ஏறக்குறையப் பூர்த்தியானதும், இதைச் செய்யச் சொல்லியிருந்த பிரபுவை அழைத்து வந்து காட்டிக்கொண்டிருந்தான். அதற்கு நாலு நாளைக்கு முந்தி இந்த ஊருக்கு வந்த ஓர் இளைஞனைப்பற்றி இரண்டு வார்த்தை சொல்லியாக வேண்டும். அவன் எங்கிருந்தோ வந்தான். அந்தத் ‘தறிதலை’ இங்கு வந்தவுடன் அரை க்ஷணம் கூடச் சும்மா இருக்கவில்லை. சிற்பத்தைப்பற்றித் தனக்கு அபாரமாகத் தெரியும் என்று எல்லோரிடமும் சென்று தமுக்குப் போட்டுக்கொண்டிருந்தான். அஜந்தா, எல்லோரா முதலிய இடங்களுக்கு நேரில் சென்று தான் எல்லாச் சிற்ப வேலைகளையும் கண்டுவந்ததாகச் சொன்னான். ஆனால் அவன் மஹாபலிபுரம் போயிருப்பானு என்பதுகூட எனக்குச் சந்தேகமா யிருந்தது. இந்த விஷயம் ஒரு புறம் இருக்கட்டும். கடைசியில் அவன் ‘தலைக்குக் கல்’ கொண்டு வந்ததை நினைத்தால்தான் ஒருவேளை அவன் சொல்லியதெல்

"எப்படி?" என்றேன்.

"இந்தச் சிலையைப் பார்த்ததும், 'யாரையா இதைச் செய்தது? உள்ளே தேரை இருக்கிறதே! இது தெரிய வில்லையா?' என்றான் அவன்."

"அங்கே கூடியிருந்தவர்களுக்கு, அந்தப் பெண்ணின் தகப்பன் முதற்கொண்டு எல்லோருக்கும், அது விவரிக்க முடியாத ஆச்சரியமா யிருந்தது. கல்லினுள் தேரை இருக்குமென்று கேட்டிருந்தாலும் இந்தச் சிலைக்குள் தேரை புகுந்துகொண் டிருக்கிறது என்பதை யாரும் நம்பமுடிய வில்லை. 'எங்கே காட்டு பார்ப்போம். அப்படி இல்லாது போனால் உன் மண்டையை உடைத்துப் பார்த்து விடு வோம்' என்று பலரும் ஆர்ப்பரித்தார்கள்.

"சிலையைச் செய்யச் சொல்லியிருந்த ரசிகருக்கு அபார மான கோபம் வந்துவிட்டது, எல்லோரையும் சாந்தமாக இருக்கும்படி சிற்பி கேட்டுக்கொண்டான். அப்புறம் அந்த இளைஞனை, 'தம்பி, இப்படி வா' என்று கூப்பிட்டான்.

"எல்லோரும் இனி என்ன நடக்குமோ என்று உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். இளைஞன் கம்பீரமாக முன் வந்து நின்றான்.

'ஏனப்பா, இந்தச் சிலையில் தேரை இருக்கிறதெனச் சொல்லுகிறாயா? என்ன ஆதாரத்துடன் சொல்கிறாய்? உனக்கு எப்படித் தெரிந்தது?'

'இது என்ன கேள்வி? ஒரு நல்ல சிற்ப சாஸ்திர ஞானமுடைய சிற்பியின் கண்களுக்குக் கல்லினுள் தேரை இருப்பது தெரியாமலா போய்விடும்? அப்பொழுது அவன் கலைஞனல்ல' என்று வாலிபன் துடுக்காகப் பதில் சொன் னான்.

"அப்போதும் சிற்பிக்குக் கோபம் வரவில்லை. 'இதைச் செய்து முடிப்பதில் எவ்வளவோ சிரமப்பட்டிருக்கிறேன்.

உன் பேச்சைக் கேட்டு வீணாக இது வியர்த்தமாகிவிடுமோ என்றுதான் பார்க்கிறேன். சிறுபிள்ளைத்தனமாக நீ சொல் வதை எப்படி நம்புவது?' என்று கேட்டான்.

'நம்பினால் நம்புங்கள். நம்பாவிட்டால் போங்கள். நான் பலவந்தம் செய்யவில்லை. காலம் அதைப் பகிரங்கமாக்கி விடும்' என்றான்.

'அப்படியானால் அதை இப்போதே சோதித்துவிட வேண்டும். நீ சொன்னதுமட்டும் பொய்யாயிருந்தாலோ?' என்று படபடப்பாகச் சிற்பி கேட்டான்.

'இக் கண்களைப் பிடுங்கிக் கொள்கிறேன்' என்று ரோஷத்துடன் இளைஞன் கூறிவிட்டு, 'நான் சொன்ன படியே தேரை உள்ளே இருந்தாலோ?' என்று கேள்வி போட்டான்.

'நான் இதைச் செய்த இந்தக் கைகளை வெட்டிக்கொள் கிறேன்' என்று சிற்பியும் சபதம் செய்தான்."

"கடைசியில் என்ன ஆச்சு?" என்று அவசரமாகக் கேட்டேன்.

"கடைசியாகச் சிலையின் இடதுபக்கம் செதுக்கிப் பார்த்தபோது அவன் சொல்லியபடியே சிலையிலிருந்து தேரை வெளியில் குதித்தது. நம் சிற்பிக்கு ஏற்பட்ட அவமானம் சொல்லிமுடியாது. அவன் தனது சபதத்தின் படியே கையை வெட்டிக்கொண்டான். அந்தச் சிலையுடன் தன் னையும் உருக்குலைத்துக்கொண்டான். அதோ அக்கரையில் தெரிகிறதே சுடுகாடு அதில் வெந்து சாம்பலும் ஆனான்."

"அட, பாவமே!" என்றேன்.

"பாவம் என்றும், புண்ணியமென்றும் சொல்லிக் கொண்டிருப்பதில் என்ன பிரயோஜனம்? நம் ஊரிலே முற்போக்குக் காரியங்களிலே முனைந்திருக்கிறதாகச் சொல் கிறார்களே வாலிபர்கள், இவர்களில் ஒருத்தனாவது இவளைக்

கல்யாணம் செய்துகொள்ள முற்படுகிருளு? சொல்லுங்கள், பார்க்கலாம்" என்றாள் சித்ரா.

* * * *

நான் கிலேசத்துடன் தூரத்திலே விறகுச் சுமையை ஊனுங்கொடியால் இழுத்துக் கட்டிக்கொண்டிருந்த அந்தப் பெண்ணைப் பார்த்தேன். என் மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் உருண்டு சென்றன.

"பார்ப்பதற்கு அவள் லக்ஷ்மிபோல் இல்லையா? அவளைப் போன்ற அழகி நம் ஊருக்குள்ளேயே ஏது?" என்று சித்ரா வேகமாகப் பேசினுள்.

அந்த வேகத்தில் தன் அழகைப் பற்றிக்கூட மறந்து விட்டாள்போல் இருக்கிறது! வேறு யாரிடமாவது பேசிக் கொண்டிருந்தால், "அவளை மணம் செய்துகொள்ள நான் தயார்" என்று தைரியமாகச் சொல்லியிருப்பேன். ஆனுல் சித்ராவிடம் எப்படிச் சொல்வது?

சித்ரா மேலும் அதே வேகத்தில், "இப்பொழுதுகூட நீங்கள் இஷ்டப்பட்டால் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதில் எனக்கு ஆக்ஷேபணை இல்லை" என்று சொல்லி நிறுத்தினுள்.

ஒருவேளை என் கருத்தைத்தான் தெரிந்துகொண் டாளோ? நான் அவள் முகத்தையே பார்த்தேன்.

"ஆனுல், அவள் புருஷன் என்ன சொல்வானே?" என்று சொல்லிச் சித்ரா சிரித்துவிட்டாள்.

நானும் சிரித்துக்கொண்டு, "என்னை ஏமாற்ற முடி யுமா? இருந்தாலும் கதை நன்றாயிருந்தது" என்றேன்.

"ஓஹோ, கதையா? அப்படியானுல் உங்கள் முகக் குறி ஏன் அப்படி மாறவேண்டும்? நெஞ்சு ஏன் அப்படி அடித்துக்கொள்ள வேண்டும்?" என்றாள்.

நேருக்கு நேராக, அதுவும் ஒரு பெண்ணிடம் நான் அசட்டுப் பட்டம் வாங்கிக்கொள்வேனு என்ன?

"இந்த மாலை நேரத்திலே, தனியாக ஒரு பெண் ஆற்றங்கரையிலே இப்படிப் பேசிக்கொண் டிருக்கலாமோ?" என்று பேச்சை மாற்றினேன்.

"அப்படியானுல் புறப்படுங்கள்; வீட்டுக்குப் போவோம்" என்று கையைப் பற்றினுள்.






# ஏழைக் குடும்பம்

[பி. வி. சுப்பிரமணியன், பி. ஏ.]

ஏழாவது பிறந்த நாள் கொண்டாடவேண்டிய தினத் தன்று ஹமீத் ஆலி மண்ணெண்ணெய்த் தகரத்தைத் தள் ளிக்கொண்டு வீதி வழியாக, "தீப்பெட்டி! மண்ணெண் ணெய்!" என்று விற்றுக்கொண்டு போனதுதான் அவனு டைய வாழ்க்கை நாடகத்தின் முதல் அங்கம். வீட்டிற்குப் போனதும், "இன்று வீட்டில் சமையலுக்கு ஒன்றும் இல் லையே. நேற்று வாங்கி வந்த அரிசியும் மாவும் தீர்ந்துபோய் விட்டன அப்பா! இன்றைக்கு...உம்..." என்ற வார்த்தைகள் அவனை எதிர்கொண்டு அழைக்கும் என்பது ஹமீதிற்குத் தெரியாமல் இல்லை. ஆனால் அன்று அவன் சாமான்களை ஒரு வரும் வாங்குவாரில்லை. எட்டாக்கையில் உள்ள பழத்தைப் பசியோடு பார்க்கும் குழந்தையை நாம் கற்பனை செய்து கொள்ள வேண்டியதுதான். அவன் குழந்தைமனத்தில் முதலில் தோன்றிய உருவம் களைத்த தாய்; பிறகு பசித்த தம்பி. வேண்டாவெறுப்போடு வீட்டிற்குத் திரும்பியதும் விலையாகாத சாமான்களை மூலையில் தள்ளிவிட்டு ஓடிவந்தான்.

"அம்மா! அம்மா!..."

மேலே பேச முடியவில்லை. நிறைந்த குடம் தளும்புமா?

இளையவன் அப்துலின் போக்கே தனி. கையில் காலணு கிடைத்தால் போதும். உடனே கோலி, பட்டத்திற்குக் காகிதம் வாங்கிவிடுவான். ஆனால், ஹமீதிற்கு அதற்கெல்லாம் பொழுதேது? அம்மா நிர்ப்பந்தத்தின்மேல் கொஞ்சம் விளையாடினால் உடனே, "தீப்பெட்டி! மண்ணெண்ணெய்!" என்று மறுபடியும் ஆரம்பிக்க வேண்டியதுதான்.

அதிர்ஷ்டம் தலைதூக்கிற்று. ஹமீதிற்குப் புதையல் அகப்பட்டது; அதாவது அன்று அவனுடைய வியாபாரத்தில் ஐந்து அணு லாபம் என்று அர்த்தம். அன்று கொட்டின மழையையும், தன் களியையும் பொருட்படுத்தாது தான் போராடிப் பெற்ற பணத்தில், தான் உரிமையுடனே கொஞ்சம் எடுத்துக் கொள்ளலாமா என்று யோசித்தான் ஹமீத். ஆனால் படித்த பாடத்தின் நீதியை நழுவவிடாத குழந்தை உள்ளம், நல்ல பிள்ளையின் வழி அதுவல்ல வென்று சொல்லிற்று; "அம்மாவைக் கேட்டுத்தான் வாங்கிக்கொள்ள வேண்டும்" என்றது.

சமையலறையை நோக்கி மெள்ள வந்தான் ஹமீத்; "அம்மா..." என்று கூப்பிட்டான்!

"ஏன்?" என்றாள் தாய்.

பதிலில்லை.

"ஏன் கூப்பிட்டாய் அப்பா?"

"எனக்கம்மா..." ஹமீது மெளனம் சாதித்தான். தயக்கம்; கேட்கப் பயம்.

"என்ன?" என்று மறுபடியும் கேட்டாள் தாய்.

"அரையணு..."

தாய் ஏனெனக் கேளாமலே கொடுத்துவிட்டாள் ஆறு காசு! டஜன் தீப்பெட்டி விற்ற லாபம்! ஆயினும் ஹமீத் தன் கையில் வாங்கியதும் தின்பண்டம் வாங்கவேண்டும் என்ற எண்ணத்தை மாற்றிவிட்டான். ஒரு மனிதனுக்கு

உணவில்லையெனின் ஜகத்தினை அழித்திடவே நியாயமிருக்கும் போது, ஏழைக் குடும்பத்திற்கு மீன்பிடித்தல் பாபமாகுமா, என்ன? ஹமீது விருவிருவென்று கடைக்குப் போனான். "ஒரு தூண்டில் கொடு" என்று கடைக்காரனைக் கேட்டான் குழந்தை.

"ஓர் அணா...ஊம்...10 தம்பிடி எடு" என்றான் கடைக்காரன்.

ஹமீத் ஏக்கத்தோடு நின்றான். திருப்பித் திருப்பிக் கையிலிருந்த காசை எண்ணினான். அம்மாவிடமிருந்து வாங்கிய அரையணாதான் சப்தித்தது. திருப்பித் திருப்பி எண்ணினாலும் ஆறு பத்தாகுமா? "பாஜி...ஆறு காசுதான் இருக்கிறது" என்றான்.

"போ, போ" என எரிந்துவிழுந்தான் கடைக்காரன். துக்கம் நிறைந்த உள்ளத்தோடு திரும்பினான் ஹமீத். தை மாதத்தின் அதிகாலையில் புல் நுனியி லிருக்கும் பனித் துளிகள் போல் அவனுடைய கண்களில் இரண்டு மூன்று நீர்த்துளிகள் ஜ்வலித்து நின்று பலபலவென்று கீழே உதிர்ந்தன. ஆம்! பணத்தால் நிர்மாணிக்கப்பட்ட சமூகத்தில் ஏழையின் ஜீவனற்ற குரலை எப்படிக் கேட்க முடியும்? அல்லது அங்கே உணர்ச்சிகளுக்குத்தான் இடமேது? ஆனால், மனிதனுக்கு மனிதன் ஏதோ ஒருவிதத்தில் பிணைக்கப்பட்டிருக்கிறான். அதுதான் ஜீவசக்தி. ஏனெனில் எவ்வளவு மனமுடைந்து குழந்தை திரும்பினானோ அவ்வளவு தூரம் கடைக்காரன் மனம் இளகிவிட்டது. "பச்சைக் குழந்தை! ஏழுவயதுப் பையனிடமா நமது பேரம்?" என்று நினைத்து ஹமீதைக் கூப்பிட்டான்; "இந்தா எடுத்துக்கொண்டு போ" என்று தூண்டிலைக் குழந்தையிடம் கொடுத்தான்.

ஹமீதின் சந்தோஷ சாகரத்திற்குக் கரையே காணப்படவில்லை. ஆற்றிற்கு ஓடினான். போட்ட தூண்டிலில்

அதிர்ஷ்டம் தேங்கியிருந்தது. எவ்வளவு மீன்கள்! திரட்டி எடுத்துக்கொண்டு குதித்தோடி வந்தான் அம்மாவிடம். ஒரு கையில் தூண்டில்; மற்றொரு கையில் மீன்கள். தாய் பார்த்தாள். "உனக்கில்லையா அந்தக் காசு? அதைக்கொண்டு தூண்டில் ஏன் வாங்கினுய்?" என்று கேட்டாள்.

ஹமீத் தளர்ந்த குரலில், "அம்மா, நாம் தினம் கஷ்டப் படுகிறோமே. சில நாள் பட்டினி கூடக் கிடக்கிறோமே. இனிமேல் தினம் ஏதாவது கொண்டு வரலாமல்லவா?" என்றான். தாய்க்குப் பேச முடியவில்லை, ஹமீதைக் கட்டிக் கொண்டாள். குரல் தழுதழுத்தது. "பைத்தியக்காரக் குழந்தை!" என்றாள்.

* * *

சளியோடு மழையில் அலைந்தது ஹமீதிற்கு அன்றிரவு ஜுரம் வந்துவிட்டது. அப்துல் மறுநாள் தன் அண்ணனைப் பார்த்தான். அந்தமாதிரி அவனை என்றும் கண்டதில்லை. படுத்துக்கொண்டிருந்தான் ஹமீத்; "அப்துல்! நீ இன்று மீன் பிடிக்கப் போகமாட்டாயா?" என்று அண்ணன் கேட்டான்.

கோலிகளை எல்லாம் பையில் போட்டுக்கொண்டு கிட்ட வந்தான் அப்துல். "தூண்டில் எனக்கு" என்றான். அண்ணன் தூண்டில் வாங்கியதுமுதல் தம்பிக்கு அதிலேயே கவனம். தனக்குக் கொடுத்தாலொழியத் தான் மீன் பிடிக்கப் போகமுடியாது என்று இப்போது சத்தியாக்கிரகம் செய்தால் எதிரி இணங்கிவிடுவான் என்பதும் அப்துலின் கருத்து.

"யாருடையதாயிருந்தாலென்ன? வீட்டு வேலை தடங்கலில்லாமல் நடந்தால் சரி" என்பது ஹமீதிடம் நாம் எதிர்பார்க்க முடியாத வேதாந்தம். எனவே, "மீன் பிடிக்கப் போகமாட்டேன்" என்றான் அப்துலும். தூண்டிலில் ஆரம்பித்த சண்டை கடைசியில் கோலியில்போய் முடிந்தது.

அண்ணனுடைய கோலிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு ஓடிவிட்டான் அப்துல்.

ஹமீதுக்குப் படிப்படியாக ஜுரம் அதிகமாகிக் கொண்டே வந்தது. கஞ்சிக்குக் கஷ்டப்படும் அக் குடும்பத்தில் வைத்தியர்களுக்குக் கொடுக்கப் பணம் ஏது?

மறுநாள் சாயங்காலம் அப்துல் தன் அண்ணனிடம் வந்தான். ஹமீதின் அலங்கோலத்தைக் கண்டு ஏதோ சொல்லமுடியாத வேதனை அவனுக்கு உண்டாயிற்று. காரணமில்லாமல், "ஹமீத் அண்ணு" என்று மெதுவாகக் கூப்பிட்டான் அப்துல். ஹமீத் மெதுவாகக் கண்ணைத் திறந்தான்; "அம்மா கஷ்டப்படுகிருள். நீதான் மீன்பிடிக்கப் போகமாட்டேன் என்கிருயே! என் தூண்டிலையும் எடுத்துக் கொண்டாயே" என்ருன்.

"இல்லை! இல்லை!......இந்தா உன் தூண்டில்; பாவம். எனக்கென்னத்திற்குத் தூண்டில்...?" என்று சொல்லி அருகில் உட்கார்ந்து அண்ணனுடைய கன்னத்தைத் தடவிக் கொடுத்தான் அப்துல். ஹமீத் களைப்பில் கண்களை மூடிக் கொண்டிருந்தான். அப்போதுதான் தன் நிலைமை ஒருவாறு உணர்ந்தான் அப்துல். அவன் மனம் 'படக் படக்' கென்று அடித்துக் கொண்டது. "ஐயோ! பயமாக இருக்கிறது" என்று அண்ணனை இறுகக் கட்டிக்கொண்டு படுத்துக்கொண்டான். சில நாழிகை கழித்து ஹமீத் கண்ணைத் திறந்தான்.

"அப்துல்!"

சடக்கென அப்துல் எழுந்திருந்தான்.

"ஏன்...ஹமீத்!"

"நாளைக்கு மீன் பிடிக்கப் போகிருயா?...அம்மாவைத் திண்டாட விட்டுவிடாதே!"

அதற்குப் பதில் வருவதற்குள் ஹமீத் மயங்கிவிட்டான். அப்துல் சுற்றுமுற்றும் பார்த்தான்.

மூலையில் புகைந்துகொண்டிருந்த சிமிணியின் மங்கிய ஒளி எப்படியோ கடவுளை ஞாபகப்படுத்திற்று. ஹமீதின் கைகளைத் தன் கையில் பிடித்துக்கொண்டு மண்டியிட்டான்.

அவன் தொட்டுக்கொண்டிருந்த உஷ்ண சரீரம் திடீரென ஜில்லிட்டது. அந்தக் குளிர்ச்சி அப்துலின் ஹ்ருதயம் வரையில் பாய்ந்தது. பிரார்த்தனையைப் பாதியில் நிறுத்தினான்.






# தேவகி

["குகப்ரியை"]

எனக்கு அப்போழுது வயது இருபது. பெண்கள் கலா சாலையில் பி. ஏ. வகுப்பில் படித்துக்கொண் டிருந்தேன். ஹாஸ்டலில் என்னுடன் இருந்த பெண்களில் தேவகி எனக்கு உயிர்த்தோழி. சுபாவத்திலேயே சங்கோசமுள்ள எனக்கு ஹாஸ்டலில் வெகு பெயர்கள் சிநேகிதம் இல்லாத தில் என்ன ஆச்சரியம்?

வகுப்பில் பாடங்கள் முடிந்ததும் நேரே மாடிக்குப் போய்விடுவேன். கீழே வகுப்புகளும் மாடியில் ஹாஸ்ட லும் இருந்தன. சில சமயங்களில் அன்று நடந்த பாடங் களைப் பற்றி மாணவிகள் ஏதேனும் கேட்டால், கேட்டதற்கு மட்டும் பதில் சொல்லிவிட்டு நேரே வந்து விடுவேன். மாலை ஆகாரம் ஏதாவது சாப்பிட்டுவிட்டுத் தோட்டத்தைச் சில சமயம் சுற்றுவேன். சில சமயம் மாடித் தாழ்வாரத்திலேயே உலவிப் பொழுதைக் கழிப்பேன். மறுபடியும் அறையுள் புகுந்தால் பாடக் குவியல்களுக்கு இடையில்தான் மூழ்கிக் கிடப்பேன்.

விளையாட்டு ஒவ்வொருவருக்கும் கட்டாயம் என்று ஏற்பட்டது. எனக்கோ விளையாட்டென்றால் அவ்வளவாகப்

பிடிக்காது. அப்படியே பிறர்பொருட்டு ஆடினாலும் தோற்று விடுவேன். அவ்வளவுதான். விளையாட்டுகளிலும் உலவுவதிலும் செலவு செய்யும் நேரம் வீண்பொழுது என்று எனக்குத் தோன்றும். இந்த ஒரு விஷயத்தில் மட்டும் தேவகி எனக்கு நேர் விரோதம். விளையாட்டுகளைப்பற்றி ஓயாமல் 'சௌள சௌள' வென்று பேசுவாள். கேலியும் சிரிப்புந்தான் எப்பொழுதும். நான் எவ்வளவுக்கு எவ்வளவு நிசப்தமாயிருந்தேனோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவளைச் சுற்றிலும் எப்பொழுதும் பேச்சும் சிரிப்பும். தோட்டத்தின் எந்தக் கோடியிலாவது கலகலவென்று சிரிப்புச் சத்தம் கேட்டால் தேவகி அங்கேதான் இருப்பாள்.

விளையாட்டில் சதுரங்கம், கேரம் முதல் எல்லாவற்றிலும் வருஷத்தில் ஒரு வெள்ளிக் கிண்ணம் அவளுக்கு நிச்சயம் கிடைக்கும். எல்லாக் கிண்ணங்களையும் அழகாய்த் துடைத்து மேஜையின்மேல் வைத்திருப்பாள். வழக்கமாய் எங்கள் அறைகளில் மூவருக்கு ஓர் அறை என்பது ஏற்பாடு. தற்செயலாய் அந்த வருஷம் நாங்கள் இருவர் மட்டுமே ஓர் அறையில் இருந்தோம்.

நல்ல நிலா. நிலவொளியினால் உலகமே மயங்கிக் கிடப்பதுபோல் தோன்றிற்று. சந்திரிகையை வாவென்று கூவியழைப்பதுபோல் அலைகள் ஆரவாரித்துக்கொண்டிருந்தன. அன்று நாங்கள் ஒன்பதரை மணிக்கே பாடங்களை முடித்து விளக்கை அணைத்துவிட்டோம்.

"ஒரு காரணமும் இல்லாமல் இன்று ஏன் இவ்வளவு சீக்கிரமே கடையைக் கட்டி விட்டோம், தேவகி?" என்றேன்.

"முத்துச் சுடர்போலே—நிலவொளி
முன்பு வரவேணும்"

என்று பாடியவளாய் விஷமச் சிரிப்புடன் அவள் என்னைப் பார்த்தாள். "ஏதாவது காரணம் இல்லாமல் உலகத்தில் ஒரு காரியமும் நடப்பதில்லை, என்கிற வேதாந்தம் உனக்குத் தெரியாதா?" என்றாள்.

"நீதான் எனக்குப் புஸ்தகப் புழு என்று பெயர் வைத்திருக்கிறாயே; எனக்கு வேதாந்தம் எப்படித் தெரியும்?"

"சரி கிடக்கட்டும், நிலா என்ன ஆனந்தமாயிருக்கிறது! நீள உலவப் போகலாமா?"

"நமக்குத்தான் அதற்கெல்லாம் சுதந்திரம் இல்லையே?" என்றேன்.

" வீர சுதந்திரம் வேண்டி நின்றார் பின்னர் "

என்று பாடத் தொடங்கியவள், "ஹூம்.........சரி, கிடக்கட்டும். தாழ்வாரத்திலிருந்தாவது நிலவையும் கடலையும் பார்க்கலாமோ, கூடாதோ? அதற்கு ஒருவரும் தடை சொல்ல மாட்டார்களே!" என்று கூறியவளாய் இரண்டு கைகளிலும் இரண்டு நாற்காலிகளைத் தூக்கித் தாழ்வாரத்தின் சுவர் ஓரம் போட்டாள். இருவரும் உட்கார்ந்தோம்.

சற்று நேரம் நாங்கள் பேசவில்லை. அலைகளின் பேரிரைச்சலை ஏதோ இனிய கானம்போல் கேட்டுக்கொண்டு சிந்தையில் ஆழ்ந்திருந்தாள் தேவகி. சற்று நேரத்திற்கு ஒருமுறை சென்றுகொண் டிருந்த விதவிதமான மோட்டார் ஊது குழல்களின் சத்தமும் அடங்கி விட்டது. அப்போது எங்கிருந்தோ புல்லாங்குழலின் இனிய கானம் கிளம்பிக் காற்றில் தவழ்ந்து வந்து எங்கள் செவிகளில் வீழ்ந்தது. ஆனந்தத்துடன் கண்களை மலர விழித்தவளாய் என்னைப் பார்த்தாள் தேவகி.

நானும் உற்றுக் கேட்டேன். "எங்கேயாவது இசைத் தட்டு வைத்திருக்கிறார்களோ?" என்றேன். இல்லை என்ப

தற்கு அடையாளமாய்த் தலையை அசைத்தாள். அவ்வளவு தான், அந்த இன்னிசையில் ஆழ்ந்துவிட்டாள் தேவகி. அவளைச் சொல்லுவானேன்? நானும் ஆனந்தவாரிதியில் ஆழ்ந்தேன்.

"அடாடாடா என்ன இனிமை! இதை எப்படிப் பிற ருக்கு விவரிக்க முடியும், தங்கு?" என்றாள் தேவகி.

அதிக ஆனந்தமிருந்து பேசும் பொழுதுதான் அவள் என்னைக் கொஞ்சலாய்த் 'தங்கு' என்று கூப்பிடுவாள். "எப்படி விவரிக்க முடியும்?" என்று சொல்லிவிட்டுக் கானம் எங்கிருந்து வருகிறதென்பதை ஆராயலானேன்.

"அதோ" என்று தென்புறம் சுட்டிக்காட்டினாள் தேவகி.

அப் பரந்த மணல் வெளியில் இருவர் உட்கார்ந்திருந் தனர். அவர்களுள் ஒருவன்தான் குழல் வாசிப்பவன். தேவகி மந்திரத்தாற் கட்டுண்டவள்போல் மயங்கிக் கிடந் தாள். நானும் அப்படியேதான் இருந்தேன். கானம் முடிந் தது. அவர்கள் எழுந்து செல்ல, நாங்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டோம். தேவகியின் முகத்தில் இளமுறுவல் தோன்றிற்று.

"தங்கம்! டாக்டர் கானண்டாயிலின் கொள்கையைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?" என்றாள்.

"நீ கேட்டது எனக்குப் புரியவில்லையே" என்றேன்.

* * *

**சா**யங்காலம் ஐந்து மணி இருக்கும். வகுப்பு முடியு முன்பே எழுந்து போய்விட்டாள் தேவகி. எனக்கும் எழுந்து செல்ல ஆவல் துடி துடித்தது. லலி என்ற ஒரு மாணவி, "என்ன தங்கம்? தேவகிக்கு என்ன, உடம்பு சரியா யில்லையா? காலைமுதல் ஏதோ ஒரு மாதிரியா யிருக்கிறாள்.

நானும் என்ன என்னவோ பேசினேன். வழக்கம்போல் சிரிப்பு வரவேயில்லை; ஏன்?" என்றாள்.

"நான் கவனிக்கவில்லையே" என்று சொல்லியவளாய் நானும் எழுந்தேன். மனத்தில் சிறிது குழப்பம். டாக்டர் கானண்டாயிலின் கொள்கைகளைப்பற்றி நேற்று அவள் கேட்டது எனக்கு ஏதோ ஒரு விபரீதமான எண்ணத்தை உண்டாக்கிற்று. என் குழப்பத்தைக் கண்ட லலி, "என்ன, தங்கம், என்ன யோசிக்கிறாய்?" என்றாள்.

"இல்லை; நேற்றிரவு வெகு நேரம் வரையில் டாக்டர் கானண்டாயிலின் ஆவி உலக ஆராய்ச்சிகளைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தாள். அவர் சொல்லுவதைப்பற்றி என் அபிப்பிராயம் என்னவென்று கேட்டாள். எதற்காகக் கேட்டாளோ?" என்றேன்.

"அவளுக்குப் பேய், பிசாசு, மரித்தோரின் ஆவி இவற்றிலெல்லாம் நம்பிக்கையே கிடையாதே. அது சம்பந்தமாய் உன்னை ஏதாவது வாயைக் கிளறி, நீ உளறுகிறதை யெல்லாம் ஆதாரமாய் வைத்துக்கொண்டு நாளைய கூட்டத்தில் பிரசங்கம் செய்வாள்" என்று சிரித்தாள் லலி. இதற்குள் லலியை வேறொருத்தி கூப்பிட அவள் கூட்டத்தில் கலந்தாள். நான் வேகமாய் என் அறைக்குச் சென்றேன்.

தேவகி மேஜையின்மேல் கவிழ்ந்துகொண் டிருந்தாள். அவளது நீண்ட பின்னலும் தாவணியும் இடதுபுறத் தோளின்மேல் தொங்கித் தரையில் புரண்டுகொண்டிருந்தன. "தேவகி, தேவகி" என்று மெதுவாய்த் தட்டினேன். நிமிர்ந்தாள். கண்கள் கலங்கி யிருந்தன. "அசாத்திய தலை வலி; நல்ல சூடாய் ஒரு கப் காப்பி வேண்டும்" என்றாள்.

நானும் காப்பி சாப்பிடவில்லை. உடனே கீழே இறங்கிச் சமையற் கட்டிற்கு ஓடிக் காப்பி கொண்டுவந்தேன். காப்பியைச் சாப்பிட்டாள். பிறகு எழுந்து படுக்கையில் படுத்தாள்.

"கொஞ்ச நேரம் அமைதியாய்ப் படுத்திரு" என்று சொல்லிவிட்டு நான் தாழ்வாரத்தில் உலாவலானேன்.

சற்று நேரத்திற்கெல்லாம் தேவகியும் எழுந்து தாழ்வாரத்திற்கு வந்தாள். பேசாமல் இருவரும் சுவர் ஓரம் இருந்த நாற்காலிகளில் உட்கார்ந்தோம். வெகு நேரம் இருவரும் பேசவேயில்லை.

"தங்கு! அந்த மனிதர்கள் யாரென்பதை நாம் தெரிந்துகொள்ள முடியுமா?" என்றாள்.

நான் பதில் சொல்லுமுன் எனக்கும் அதேவிதமான ஆவல் உண்டென்பதை அவள் கண்டுகொண்டாள். "அதையேதான் நானும் சிந்தித்தேன்" என்றேன்.

"நான் ஒரு சின்ன யுக்தி சொல்லுகிறேன்; உனக்குச் சம்மதமா?"

"சொல்லேன்."

"இன்று வந்தால்......ஒருவேளை வராவிட்டால்" என்று அவளே மறுக்க, "வந்தால் என்ன செய்யவேண்டுமென்பதைச் சொல்லேன்" என்றேன்.

கொஞ்சும் பார்வையாய், "வரட்டும் சொல்லுகிறேன்" என்றாள் தேவகி.

* * * *

இரவு. சந்திரன் கடலை ஒரே வெள்ளி மயமாக்கி விளையாடிக்கொண் டிருக்கிறான். முன்பு கேட்ட அதே தேவகானம் காற்றில் மிதந்துவந்து எங்கள் செவிகளில் வீழ்ந்தது. இருவரும் பரவச மடைந்தோம். "தங்கு!" என்று தேவகி என் தோள்களின்மேல் கையை வைத்தாள். என் செவிக்கருகில் குனிந்து," 'பைனுக்குலர்' எடுத்துயார் என்று பார்" என்றாள்.

" நிலவில் என்ன புரியும் ?" என்று சொல்லிக்கொண்டே பார்த்தேன். ஏதோ மொத்தமாய்த் தெரிந்ததே யொழிய வேறொன்றும் தெரியவில்லை. தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் கடைசிவரையில் பார்ப்பது என்று தீர்மானித்தேன். கானம் கொஞ்சங் கொஞ்சமாய்க் கேட்டு நின்றுபோயிற்று. இருவரும் எழுந்து ரஸ்தாவை அடைந்து அங்கு நின்றிருந்த காரில் ஏறினார்கள். அப்பொழுது ஒரு நல்ல யோசனை பளிச்சென்று தோன்றிற்று. காரின் எண்ணைக் குறித்துக் கொள்ளலாம் அல்லவா ? தெரிந்துகொண்டேன். சட்டென்று கண்ணாடியைத் தேவகியின் மடியில் எறிந்தேன். அவள் முகத்திலும் வெற்றியின் அறிகுறி தோன்றியது. அதே சமயத்தில் ஹாஸ்டல் வார்டன் அம்மாள் அங்கே வந்தாள். நான் ஒரு க்ஷணம் திகைத்தேன். முகம் அசடு தட்டிற்று.

தேவகி அவளுக்கு வந்தனஞ் சொல்லி, "அம்மா ! வான சாஸ்திரம் கற்பதைப்பற்றி உங்களைக் கேட்கலாமென்றிருந்தேன். உங்களுக்குப் பரிசயமுண்டல்லவா ?" என்றாள்.

அதை உண்மை யென்று எண்ணிய அந்த அம்மணி, " ஜோதிர் மண்டலம் என்ற பெயருடன் ஒரு புஸ்தகம் வெளியிடப்போகிறேன். அதில் இவற்றைப்பற்றி வெகு அருமையாய் எழுதியிருக்கிறேன். உனக்கு அதில் ஆவலுண்டு என்று எனக்குத் தெரியாதே " என்றாள்.

" நக்ஷத்திரங்கள், கிரகங்கள் இவற்றின் கதி பேதங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டுமென்று ஆவல்தான். பொழுது எங்கே மிஞ்சுகிறது ?" என்று தொடங்கிவிட்டாள் தேவகி.

" இதேதடா வம்பு வியாபாரம் ? இந்தத் தேவகிக்கு என்ன, வேறு வேலை இல்லையா ?" என்று எண்ணிக் கொண்டே அறைக்குள் சென்று தொப்பென்று படுக்கையில் விழுந்தேன்.

கார்த்திகைக் கூட்டம், மகரம், மீனம் என்று தேவகி கதை சொல்லிக்கொண்டிருந்தாள். வான சாஸ்திரத்தில் அவளுக்குச் சூரியன் சந்திரன் நீங்கலாக வேறொன்றும் தெரியாது என்று நான் நினைத்திருந்தேன்.

* * * *

நானும் தேவகியும் கடற்கரையில் உலவும்பொருட்டுச் சென்றோம். தற்செயலாய் நாங்கள் எண்ணைக் குறித்திருந்த அதே வண்டி அங்கே நின்றுகொண்டிருந்தது. அதைப் பார்த்துவிட்டு நான் தேவகியைப் பார்த்தேன். அவளும் புரிந்துகொண்டாள். ஒவ்வொருவரையும் பார்த்தும் பார்க்காததுபோல் நாங்கள் தாண்டிச் சென்று சற்றுத் தொலைவில் உட்கார்ந்தோம்.

கீழ் வகுப்புகளில் எங்களுடன் படித்த குமுதாபாய் என்பவள் தோளில் தன் குழந்தையைச் சார்த்தியவண்ணம் எங்களைத் தாண்டிப் போனவள், "தங்கமா?" என்று கேட்டுக்கொண்டே என் அருகில் உட்கார்ந்தாள். அவளுடன் துணைவந்த அவள் தம்பி, "என் சிநேகித முகுந்த ராவ் அதோ வந்திருக்கிறான்போல் இருக்கிறது. கார் அதோ நிற்கிறதே" என்று, நாங்கள் குறித்த அதே வண்டியைக் காட்டினான். இவளுக்குத் தெரியுமோ வென்று, "அவர் யார்?" என்றேன்.

"ஓ! அவரா; எங்களுக்குத் தூரத்து உறவு; கொழுத்த பணக்காரர்."

"என்ன வேலையோ" என்றேன்.

"ரைஸ் கில்லிங் டிபார்ட்மெண்ட் (சாப்பாட்டு வேலை) தான்" என்று சொல்லிச் சிரித்தாள்.

தேவகி, "ஓகோ! அதுதானா?" என்று தானும் சிரித்தாள்.

பிறகு மேலே போனால் ஏதாவது எண்ணுவாளோ வென்று பேச்சை நான் வேறு விஷயங்களுக்கு மாற்றி விட்டேன்.

திரும்பும்பொழுது நாங்கள் அவளுக்கு முன்பே எழுந்து, அவளைத் தம்பியுடன் விட்டுப்போவதுபோல் அங்கு உட்கார்ந்திருக்கும் மனிதர்களைக் கவனிப்பதென்று சங்கேதம் செய்துகொண்டோம். 'ஆனால் ஒரே வீட்டில் பலர் இருக்கலாம் அல்லவா? குழல் ஊதுபவரை எப்படிக் கண்டு பிடிப்பாய்?' என்று என்னைக் கேட்பவள்போல் கூர்ந்து நோக்கினாள் தேவகி.

மூவரும் மிகுந்த உற்சாகத்துடன் பேசிக்கொண்டிருந்தனர். குமுதாவின் தம்பியிடம் நாங்கள் விடைபெறும் பொழுது, அவன் எங்கள் பெயரைச் சொல்லி அவ்விருவருக்கும் பழக்கம் செய்வித்தான். அவர்களும் எங்களுடன் எழுந்தார்கள். நாங்கள் கும்பிட்டோம்.

அவர்களுள் ஒருவர் கையில் குழல் இருப்பதைக் கண்டோம். அவர் கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தார். முழந்தாள்வரை தொங்கும் நீண்ட கதர் ஜிப்பாவும், வங்காளிகள் கட்டுவது போன்ற வேஷ்டியும், தாவணி போலிருந்த உத்தரீயமும் வடநாட்டார்போல அணிந்திருந்தார். வேண்டுமென்றே நாங்கள் பின்தங்கி மெதுவாய்ச் செல்லலானோம். தேவகியின் முகத்தில் ஆனந்தம் தாண்டவமாடிற்று.

என் முகத்தில் - ? எனக்குத் தெரியாது. ஆயினும் தேவகி என் பக்கம் பார்க்கும்போது நான் முகத்தைத் திருப்பிக்கொண்டேன். அவள் உடனே விஷமத்துக்கு ஆரம்பித்தாள். என் கையைக் கிள்ளிக் கால் விரலையும் மிதித்தாள். நான் ஓர் உணர்ச்சியும் இல்லாதவளைப் போலப் பாசாங்கு செய்யப் பார்த்தேன். ஆயினும் எனக்கு

நம்பிக்கை இல்லை. என் மனமும் அச்சுழலிலேயே சென்று கொண்டிருக்கிறதைத் தெரிந்து கொண்டாளோ என்று என்னையே கேட்டுக்கொண்டேன்.

இரவு ஒன்பது மணி. ஏதோ ஒரு மாதப்பத்திரிகையை வைத்துப் புரட்டிக்கொண்டிருந்தேன். தேவகி பின்னால் நின்றுகொண்டு என் செயல்களைக் கண்டு சிரித்தவளாய், "தங்கு, நீ என்ன நினைக்கிறாய்? கீதாமிருதம் உண்டோ? இல்லையோ?" என்று கேட்டாள்.

"எனக்கென்ன தெரியும்? உண்டானால் உண்டு; இல்லையானால் இல்லை."

"அடாடா! என்ன உயர்ந்த ஜோஸ்யம்!"

"ஆமாம். நிஜந்தான். உனக்குத் தெரிந்த வான சாஸ்திரத்தளவு தெரியாது" என்றேன்.

என் செவியருகில் குனிந்து, "என்ன வசீகரமுள்ள சிரிப்பு, என்ன விநயம், கவனித்தாயா?" என்றாள். என் மனம் குழம்பத் தொடங்கிற்று. நானும் அதையேதான் பன்னிப் பன்னிச் சிந்தித்துக்கொண் டிருந்தேன். ஆனால் அவளைப்போல வெளிப்படையாய்ப் பேச அஞ்சினேன்.

"நீல மூக்குக் கண்ணாடி எதற்கு?" என்றேன்.

"அவருடைய கண்களை நீயும் நானும் பார்த்துப் பேசாமல் இருப்பதற்கு" என்றாள்.

"நீயும் நானும் என்பானேன்?"

"தங்கு! நீ இதுவரையில் என்னிடம் பொய் சொன்னதில்லை. இந்தச் சிறு விஷயத்தில் பொய் என்ன? உன்னுடன் தொந்த யுத்தம் செய்வேனென்று எண்ணமா?" என்று குழந்தைக் குரலில் அன்பு ததும்பக் கேட்டாள் தேவகி.

பளிச்சென்று தெரிந்துவிட்டது, என் நெஞ்சம் அவரைத் தொடர்ந்து போயிருக்கிறதென்று. என்ன பதில்

சொல்லுவது என்று தெரியவில்லை. இந்த நிலைமையில், அந்த வேணுகானம் மறுபடி கேட்கத் தொடங்கிற்று. "தங்கு ?..." அதற்குமேல் பேசவில்லை.

* * *

மறுநாள் குமுதம் உள்பட முகுந்த ராவ் எங்கள் அறைக்கு டீ சாப்பிட வந்தார். நல்ல படிப்பாளி; அருமையான ஞானம். எல்லோரும் சற்று நேரம் பேசிக்கொண்டிருந்தோம். தேவகி குழந்தைப்பருவத்து நிகழ்ச்சிகளை ஒவ்வொன்றாகச் சொல்லிச் சொல்லிக் குமுதத்தைப் பரிகசித்துக்கொண் டிருந்தாள். அவர்கள் வீட்டிற்குப் புறப்படும் பொழுது அடிக்கடி வந்துபோகும்படி தேவகி வேண்டிக் கொண்டாள். அவர்கள் சென்று சற்று நேரத்திற்கெல்லாம் வழக்கம்போல் படிக்க உட்கார்ந்தோம். படிப்பில் மனம் சென்றால்தானே? சுமார் பதினைந்து நிமிஷம் புஸ்தகத்தைப் புரட்டியிருப்பேன். "தங்கு!" என்ற குரல் கேட்டு, தூங்கி விழிக்கிறவள்போல் திடுக்கிட்டேன். "தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவ தெக்காலம்" என்று பாடியவளாய் விஷமச் சிரிப்புடன் தேவகி என் நாற்காலியின் கையின்மேல் உட்கார்ந்து, "விஷயம் தெரிந்ததா?" என்றாள்.

என்னவென்று விளங்காமல் விழித்தேன். என் மனம் குழம்பத் தொடங்கிற்று. முகம் சூடேறிச் சிவக்கலாயிற்று.

"தங்கு! நான் சொல்லுவதைப்பற்றி வருந்துவதில்லை என்று வாக்களிப்பாயா?" என்றாள்.

"ஆகா!"

"அவர்—முகுந்த ராவ், குருடர்" என்று சொல்லுகையில் அவள் குரல் கம்மிப்போயிற்று.

"அப்படியா?" என்று திடுக்கிட்டுப் போனேன். "ஆனல்...ஆனல்...டீ சாப்பிடும்பொழுதும், ஒவ்வொருவர்

பேசும்பொழுதும் அவரவரைப் பார்த்துப் புன்னகை செய்தது, அந்த முகதேஜஸ்" என்று ஆச்சர்ய மிகுதியினால் கூவினேன்.

மிகவும் தணிந்த குரலில், "தங்கு! சிருஷ்டியில் ஐம் புலன்களில் ஒன்றின் உணர்ச்சி குன்றிவிட்டால் மற்றவற்றின் சக்தி அதிகரித்துவிடும் என்று கேள்விப்பட்டிருக்கிறாயா? அதையேதான் நேரில் காண்கிறோம்" என்று சற்றே நிறுத்தினாள்.

எனக்கு என்ன சொல்லுவதென்றே விளங்கவில்லை.

"என்ன, தங்கு, பொய்யென்று எண்ணுகிறாயா? உன்னிடம் நான் எதையாவது ஒளித்ததுண்டா? பொய்சொன்னதுண்டா?" என்று கொஞ்சலாய்க் கேட்டாள் தேவகி.

என் இதயம் படபடவென்று அடித்துக்கொண்டது. "எனக்கு ஒன்றுமே சொல்லத் தெரியவில்லையே" என்றேன்.

"அடி, அசடே! உனக்கு என்ன தெரியும்? அவர் உன்னை நேசிக்கிறார்; அதை நான் கண்டுபிடித்துவிட்டேன்" என்று பெருமிதத்துடன் சொன்னாள். அவள் குரல் சற்றுக் கரகரத்தது.

"எப்படி?"

"டீ கொணர்ந்து வைக்கும்பொழுது நீ வருவதையும் போவதையும் அவர் தெரிந்துகொண்டுதான் இருந்தார். நீ பேசும்பொழுது அவர் முகத்தில் தோன்றிய ஆர்வத்தையும் ஆனந்தத்தையும் நான் கணக்கெடுத்து விட்டேன். அவரது கீதத்தை நாம் தேவகானம் என்கிறோம். உன் குரலொலியை அவர் அதனிலும் அதிகமாய் மதிக்கிறாரென்று தெரியுமோ?"

ஆச்சர்ய மிகுதியினால், "உண்மையாகவா?" என்றேன்.

"தங்கு, நீ முழு அசடு. இவ்வளவு சூக்ஷ்மமாய் உன்னைவிட நான் தெரிந்துகொண்ட காரணம் என்ன சொல், பார்க்கலாம்!"

நான் தயங்கினேன். இன்னதென்று சொல்ல முடியாத வேதனையினால் தவிக்கலானேன்.

" நான் உன்னிலும் அதிகமாய் அவரை... அவரைக் காதலிப்பதனாலேயே, அவருடைய ஒவ்வொரு சிறு மாறுதல்களையும் உணர்ச்சிகளையும் நான் அறிந்து கொள்ளுகிறேன் " என்று சொல்லுகையில் அவள் கண்களில் கண்ணீர் துளித்தது. குரல் கம்மிப்போயிற்று.

" ஆனால் என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய் ?" என்றேன்.

" உன்னையா ?" என்று அதிருப்தியும் வெறுப்பும் கலந்த குரலில் கூறிப் பித்துப் பிடித்தவள்போல் கலகல வென்று சிரித்தாள் தேவகி.

* * * *

அன்று வஸந்த பஞ்சமி. வடநாட்டு மாணவிகள் சந்தோஷமாய்ப் பாடிக்கொண்டும் பேசிக்கொண்டும் இருந்தனர். மணி 11 அடித்து வெகுநேரம் இருக்கும். எனக்குத் தூக்கமே வரவில்லை. கண்களை மூடியவண்ணம் சிந்தையில் ஆழ்ந்திருந்தேன். " எல்லாம் சரிதான். ஒரு வேளை ஏற்கெனவே அவருக்குக் கல்யாணமாகி இதே இரவில் அவர் தம் வீட்டில் குழந்தைக்குத் தொட்டில் ஆட்டிக்கொண்டிருந்தால் " என்று கற்பனை செய்து பார்த்தேன். என்னையும் மீறிக் 'களுக்'கென்று சிரித்துவிட்டேன். சிரித்த சத்தத்தினால் தேவகியின் தூக்கம் கலைந்திருக்குமோவென்று எண்ணிச் சுற்றிப்பார்க்கத் தலையைத் தூக்கினேன்.

எதிரில் மேஜையின்மேல் ஓர் 'அவுன்ஸ் கிளாஸில்' எதையோ கரைத்துக்கொண்டிருந்தாள் தேவகி.

ஒரு கணம் திகைத்தேன். பகலில் பரிசோதனை வகுப்பில் பொடாஸியம் ஸயனைட் எடுத்தது நினைவு வந்தது.

அடாடா! மோசம்! - "அடி பாவி! கெடுத்தாயே!" என்ற வார்த்தைகள் உரத்த குரலில் என் வாயினின்றும் எழுந்தன. தேவகி திடுக்கிட்டாள்; ஒரு க்ஷணம்...கையிலிருந்ததை மடக்கென்று குடித்துவிட்டாள்.

மணியை அடித்தேன். மற்றவர்களும் வந்தனர். டாக்டர் வருமுன் எனக்குத் தெரிந்த சிகிச்சைகளைச் செய்து தேவகிக்கு வாயிலெடுக்கச் செய்தேன். தலைமை ஆசிரியையும் டாக்டரும் வந்துவிட்டனர்.

மயங்கிக் கிடந்தாள் தேவகி. பிராண பயமில்லை என்றும், உதடும் வாயும் வெந்துவிட்டன வென்றும் சொன்னார் டாக்டர். என் விலாசமிட்ட கடிதம் மேஜையின்மேல் கிடந்தது. பிறர் கண்களில் படுவானேன் என்று எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்தேன்.

பகல் மூன்று மணி. தேவகியின் தகப்பனார் அவள் படுக்கையருகில் உட்கார்ந்திருந்தார். தாதி ஒருத்தி பக்கத்திலேயே இருக்கும்படி நியமிக்கப்பட்டிருந்தாள். நானோ ஒன்றுமே புரியாதவளாய் இங்கும் அங்குமாய் உலாவிக் கொண்டிருந்தேன்.

குமுதமும், அவள் பின்னால் முகுந்தராவும், அவர் நண்பர் தத்தோஜியும் வந்துகொண்டிருந்தார்கள். அவர்... அவர் முகத்தில் ஒரே கலவரம். சத்தப்படாமல் அடிமேல் அடி வைத்து வந்து, "என்ன?" என்று கைகளை அசைத்துக் கேட்டாள் குமுதம். போகலாமென்று தலையை அசைத்தேன்.

அவர் தயங்கினவராய் வாசற்படியை இரு கரங்களாலும் பற்றிப் பாதங்கள் மட்டும் வெளியிலும், உடல் உள்ளேயும் இருப்பதுபோல் எட்டிப்பார்த்தார். காற்றின் வேகத்தால்

அவர் அணிந்திருந்த உத்தரீயம் என்மேற் பட்டது. என் உடல் நடுங்கிற்று.

" தங்கம்! நானும் போகலாமா? கூட்டம் என்று ஏதாவது ஆக்ஷேபமுண்டோ?" என்றார்.

" போகலாம் " என்ற சொற்களை வெகு சிரமத்துடன் சொல்லவேண்டி வந்தது; என் குரல் கம்மிப் போயிற்று.

எங்கும் ஒரே அமைதி. ஒருவரும் பேசவில்லை. கடலின் பேரொலியைத் தவிர வேறொரு சத்தமும் இல்லை. இது வரையில் தேவகியையே பார்த்துக்கொண்டிருந்த அவள் தகப்பனார் ஒரு சிறு பெருமூச்சுடன் நிமிர்ந்தார். மூவரையும் பார்த்தார். முகத்தில் ஒருவகைக் குழப்பமும் வியப்பும் தோன்ற முகுந்தரானவைக் கூர்ந்து நோக்கினார்.

" தங்கம்! இவர்கள் யாரென்று நீ அறிமுகப்படுத்தவில்லையே?" என்றார்.

" பவானி ஞானசாகரராவின் பிள்ளை. முகுந்தன் என்று பெயர்."

" அடாடா!......முகுந்துவா? தெய்வமே, இந்தச் சந்தர்ப்பத்திலா வந்து சேர்ந்தாய்? எத்தனை வருஷங்களாயின? சரியாய்ப் பத்து வருஷகாலமாயிற்றே! பகவானே!" என்று பெருமூச்செறிந்தார் தேவகியின் தந்தை.

முகுந்து சற்றே திகைத்தார்; " ஆனால்—இவள்—உங்கள் குமாரியோ?"

" இன்னும் சந்தேகமா? அட பாவமே, எட்டு வயதுக் குழந்தையில் பார்த்தாய்; உனக்கு எப்படித் தெரியும்?" என்று உரத்த குரலில் கூவினார் பெரியவர்.

சட்டென்று எழுந்த முகுந்து அவரருகில் நெருங்கி, " மன்னிக்கவேண்டும், மன்னிக்கவேண்டும் " என்று கதறிவிட்டார். நர்ஸ் வாயின்மேல் கையைவைத்துப் பேசாமல்

இருக்கவேண்டுமென்று சமிக்ஞை செய்தாள். எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை.

தேவகி சற்றே கண்ணைத் திறந்தாள். எங்களைப் பார்த்துத் திகைத்தாள். தன் தகப்பனுரையும் முகுந்த ராவையும் ஒருங்கே கண்ட அவள் முகம் ஆனந்த மிகுதியால் மலர்ந்தது.

முகுந்தராவ் கட்டிலருகே சென்று குனிந்து நோக்கினூர். "எதன்பொருட்டு நீ வீட்டை விட்டு ஓடினாய்?" என்றார் பெரியவர், முகுந்தனை நோக்கி. அவர் குரலில் கோபமும் வெறுப்பும் கலந்தன. நர்ஸ் மறுபடியும் சமிக்ஞை செய்தாள்.

முகுந்து திரும்பி வந்து கம்மிய குரலில் கூறலானார்: "திடீரென்று ஒருநாள் மின்னல் ஒளியினால் தாழ்வாரத்தில் படுத்திருந்த நான் கண்களைப் பறிகொடுத்துவிட்டேன். குருடனுக்கு வாழ்க்கைப் பட்டவள் என்ன இன்பங்களை அடையமுடியும்? நான் துன்பப்படுவது போதாதென்று பேதைப் பெண்ணையும் துன்புறுத்துவானேன்? அதைவிட நான் ஓடிவிட்டேனென்று எண்ணியிருக்கட்டுமே. அறியாப் பருவத்தில் என் கைகளைப் பற்றியதன் பொருட்டு ஆயுள் முழுவதும் ஒரு பெண்ணை வருத்துவது நியாயமா?" என்று சற்றே நிறுத்தினார்.

பெரியவர் பேச நாவெழாமல் பிரமித்து நின்றார்.

"தேவகி உன் மனைவியா?" என்று கூவினாள் குமுதம்.

என் நெஞ்சின்மேல் பெரிய பாறாங்கல் விழுந்தது. இதயம் வெடித்துவிடும்போல் இருந்தது. கண்களினின்று கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று.




# தந்தை மனம்

["இலங்கையர்கோன்"]

"சரி, உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. என்ன சம்பளம் கேட்கிறாய்?" என்று நான் கேட்டேன்.

"என்னவோ உங்கள் விருப்பம். ஜில்லா எஞ்ஜினீர் எனக்கு மாதம் நாற்பது ரூபாய் கொடுத்தார். நீங்களும் அப்படி ஏதாவது பார்த்துக் கொடுத்தால்......" என்று, என்னிடம் மோட்டார் டிரைவர் வேலை தேடி வந்த சிவராசன் இழுத்தான். சிவராசனை எனக்குப் பிடித்திருந்தது. அவனுக்கு வயது இருபத்து மூன்று; கொஞ்சம் ஷோக்குப் பேர் வழி என்பது அவன் அணிந்திருந்த பட்டு வேஷ்டி, போலோ காலர் வைத்த ஷர்ட், பிளேஸர் கோட் முதலியவற்றில் இருந்து எனக்குப் புலப்பட்டது. ஆனால் என் மனத்தைக் கவர்ந்தவை இவைகளல்ல. அவனுடைய முழுத் தோற்றத்திலும் பொலிந்துகொண்டிருந்த ஒரு சிறு பிள்ளைத்தனம், யௌவனம், சிட்டுக்குருவியிடத்தில் காணப் படுவது போன்ற ஒரு கவலையற்ற குறுகுறுப்பு, இவைகள் தாம் என்னைக் கவர்ந்தன. என் வயோதிகம் அந்த இளமையைக் கண்டு மோகித்து விட்டது. அவ்வளவுதான். அதோடு, அவன் நேர்மையான நடத்தை உள்ளவனென்றும் எனக்குப் புலப்பட்டது.

"அப்படியானால் நான் உனக்கு மாதம் முப்பது ரூபாய் கொடுக்கிறேன். வேண்டுமானால் உன் சாப்பாட்டையும் படுக்கையையும் என் வீட்டிலேயே வைத்துக்கொள்ளலாம். உன்னைப்போல நானும் தன்னந் தனியாள்தான்......"

ஆமாம், நான் தன்னந் தனியாள்தான். எனக்கு இப்பொழுது நாற்பத்தெட்டு வயதாகிறது. என் உச்சந்தலையில் உள்ள மயிர்கள் உதிர்ந்து சிறிது வழுக்கை தட்ட ஆரம்பித்து விட்டது. என் காதோரமாகவும் பிடரியிலும் உள்ள மயிர்கள் இடையிடையே நரைத்துவிட்டன. உயிர் வாழ்வதற்காகச் செய்த போராட்டத்தில் எனக்கு வாழ்க்கையை வாழ்க்கையாக அனுபவிப்பதற்குரிய சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்வதிலேயே என் வயது போய்விட்டது. இப்பொழுதும் ஆயத்தம் செய்து கொண்டுதான் இருக்கிறேன். இனி ஒருவேளை, யமன் வந்து வாசலில் நிற்கும்பொழுதுதான் வாழ்வதற்குச் சமயம் ஏற்படும்போலும்! என் இளமை எப்படிக் கழிந்தது என்பது கூட எனக்குத் தெரியாது. குனிந்த தலை நிமிருவதன்முன் அது காரிருளில் தோன்றி மறையும் மின்னல் போல் காய்ந்து மறைந்துவிட்டது. போனது திரும்பி வருமா?

என் வீடு வளவுகளைப் பார்த்துக்கொள்வதற்கு ஓர் ஆளை நியமித்திருந்தேன். அவர் பெயர் கந்தையா. சுருக்கமாக, "கந்தர்" என்று அழைப்பார்கள். அவருக்கு என் வீட்டைச் சேர்ந்த நிலத்திலேயே ஒரு பகுதியைப் பிரித்து அடைத்து அதில் ஒரு சிறு வீடு கட்டிக்கொடுத்திருந்தேன்.

அதில் அவர் தம் ஒரே மகளோடும் விதவைத் தமக்கையோடும் கடந்த பத்துப்பதினைந்து வருஷங்களாக வசித்து வருகிறார். அவருடைய முயற்சியினால் பாலைவனம்போல் கிடந்த என் வளவு இப்பொழுது ஒரு 'தேம்பொழி பழன'

மாக விளங்குகிறது. கந்தர் தம் பாட்டுக்கு ஏதாவது கொஞ்சம் பயிர் செய்வதுண்டு. வாழை புகையிலை முதலியன நட்டு, அதில் வந்த வரும்படியில் வீட்டுச் செலவு போகத் தம் மகளின் கல்யாணத்துக்கென்றும் ஏதோ மிகுத்து வைத்திருந்தார்.

அவருடைய மகளுக்கு இப்பொழுது பதினேழு வயதாகிறது. அவள் பெயர் லட்சுமிப்பிள்ளை. ஆனால் எல்லாரும் செல்லமாக 'லச்சு' என்று அழைப்பார்கள். 'தாயைத் தின்னிப் பிள்ளை' என்று கந்தர் அவள்மேல் தம் உயிரையே வைத்திருந்தார். அவருடைய தமக்கை சின்னாச்சியும் அப்படியே. லச்சு சிறு பிள்ளையாக இருந்த பொழுது அடிக்கடி என் வீட்டிற்கு வந்து அங்குள்ள மேஜை நாற்காலி முதலியவற்றில் எல்லாம் ஏறி விளையாடுவாள். நான் அவளுக்குப் பழைய பத்திரிகை, கோட்புத்தகம், மிட்டாய் முதலியன கொடுப்பேன். என் பாழடைந்த இருதயத்தில் அவள் தனக்கென ஒரு சிறு இடத்தைப் பிடித்துக் கொண்டுவிட்டாள். நான் அவளை என் குழந்தை போலக் கருத ஆரம்பித்தேன்.

ஆனால் இப்பொழுது லச்சு என் வீட்டுக்கு வருவதில்லை. தான் பெரிய பெண் ஆகிவிட்டதாக நினைப்பு. நாணம் வேறே. ஆனால் அவள் என்னை மறந்துவிடவில்லை. அடிக்கடி எனக்குக் கைக்குட்டை, தலையணை உறை, நாற்காலி உறை ஏதாவது தைத்து அனுப்பிக்கொண்டேயிருப்பாள். சிலவேளை இரவிரவாகக் கண் விழித்துக் கொண்டிருந்து தைப்பாளாம். அதற்காகக் கந்தராவது சின்னாச்சியாவது அவளைக் கடிந்துகொண்டால், அவள் சொல்வாளாம்: "அப்பு, அவருக்கு ஆர் இருக்கிறார்கள் இதெல்லாம் தச்சுக் குடுக்கிறத்துக்கு? பாவம், தனி மரம். சில வேளை வீட்டு வாசலில் நின்றுகொண்டு அணிலை மரத்திலே ஏற விட்ட

நாய்மாதிரி வெகுநேரமாக வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருப்பார்; நீ கவனிச்சாயோ? ஐயோ, அப்பொழு தெல்லாம் அவரைப் பார்க்க எனக்கு அழுகை அழுகையாக வரும்......"

இதைக் கேட்டவுடன் எனக்கும் 'அழுகை அழுகை யாக' வரும்போல் தோன்றியது. என் முகத்தைப் பத்திரி கைக்குள் மறைத்துக் கொண்டேன். ஆ! எனக்காக இரங்கி இரண்டு துளி கண்ணீர் சிந்துவதற்கும் ஒரு ஜீவன் இருக்கிறது. நான் பண்ணின பாவக் குவியலுள் ஒரு புண்ணியம்!

நான்கூட ஒரு காரியம் கவனித்திருக்கிறேன். பகலும் இரவும் ஒன்றோடொன்று முயங்கி மயங்கும் மாலைவேளை களில், மனித பாஷையின் சொற்களை விழுங்கும் அதன் மோகன மையலிலே ஈடுபட்டு லச்சுவும் தன் வீட்டு வாசலில் உட்கார்ந்துகொண்டு, தாயின் மடியில் கவலையற்று அசைந் தாடும் குழந்தைபோலக் காற்றில் ஒய்யாரமாக ஆடும் பனை மரங்களின் தலைகளைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருப்பாள்.

நாட்கள் சென்றன. உத்தியோக ஸ்தலத்தையும் குடி யிருக்கும் வீட்டையும் ஒரே கண்களோடும் ஒரே உணர்ச்சி களோடும் பார்க்கும் எனக்குக்கூட நாட்கள் சென்றது அவ் வளவாகத் தெரியவில்லை. அதிக நாளாகப் பிற தேசம் போயிருந்த காதலனின் வருகையிலே காதலியின் மனம் பூரித்து அல்லோலகல்லோலப் படுவதுபோல, சித்திரை மாதத்துச் சோளம் வந்ததும் எங்கள் ஊரும் பெரிய அல் லோல கல்லோலப் பட்டது. மரங்களும் வேலிகளும் வீட்டுக் கூரைகளும் வாய்விட்டுக் கூவி ஆரவாரித்தன. அதன் பிறகு கோடைக்காலம். மரம் மட்டை, மனிதன் மாடு, என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லாவற்றையும் ஒரே

தகிப்பாகத் தகித்தது அந்த வெயில். காண்டாவனம் எரிகிற தென்று ஊரார் சொல்வார்கள். நிலமகள் கூடத் தன் புல்லாடையைக் களைந்துவிட்டு நாணமற்ற ஒரு வேசிபோலத் தன் நிர்வாணக் கோலத்தைப் பகலில் சூரியனுக்கும், இரவில் சந்திரனுக்கும் மாறி மாறிக் காட்டி அவர்களை மோகமூட்டிக் கேலி செய்துகொண்டிருந்தாள். கோடையின் பிறகு, குழந்தையின் கன்னத்தில் அடித்த இடத்தை வருட வரும் தாயின் குளிர்ந்த உதடுகள்போல் வாடைக் காற்றும் மாரிக் காலமும் வந்துசேர்ந்தன. மறுபடி எங்கும் ஒரே பச்சை நிறம்.

சிவராசன் ஒழுங்காக வேலை செய்துகொண்டிருந்தான். அவனிடம் பொய் புரட்டு எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. அவனுக்கு யாரும் 'காவாலிச்' சிநேகிதர்கள் இருந்ததாகவும் தெரியவில்லை. இரவில் என் வீட்டு வெளித் தாழ்வாரத்தில் படுத்துக்கொள்வான்.

ஒரு நாள் இரவு பன்னிரண்டு மணி இருக்கும். வீட்டு முற்றத்தில் நாயொன்று நெடு நேரமாக ஊளையிட்டுக் கொண்டிருந்தது. எனக்கு வந்த கோபத்தில் ஒரு கம்பைக் கையில் எடுத்துக்கொண்டு கதவைத் திறந்து வெளியே வந்து பார்த்தேன். நாய் சந்திரனைப் பார்த்தபடி தன்னை மறந்து ஊளையிட்டுக் கொண்டிருந்தது. நான் பின் புறமாகச் சென்று கையில் இருந்த கம்பால் நாயின் முதுகில் பலமாக ஒன்று வைத்தேன். அது 'வாள் வாள்' என்று கத்திக்கொண்டு வேலிக்குள் நுழைந்து ஓடியது. நான், 'இது ஏதடா, இவன் இப்படி மரக்கட்டைபோலத் தூங்குகிறானே' என்று நினைத்துக்கொண்டு சிவராசன் வழக்கமாகப் படுத்திருக்கும் இடத்தில் சென்று பார்த்தேன். சிவராசனைக் காணவில்லை. வெறும் கட்டில் கிடந்தது. அதற்குள் கந்தர் வீட்டுப் பக்கமாக இருந்த வேலியருகில் ஓர் அரவம். ஒரு சலசலப்பு. யாரோ வேகமாக ஓடிவரும்

காலடிகள் கேட்டன. நான் திரும்பிப் பார்த்தேன்; சிவ ராசன்! இளைக்க இளைக்க என் பின்னால் நின்றுகொண்டிருந் தான். "ஏதப்பா, இந்நேரத்தில் எங்கே சென்றாய்?" என்று கேட்டேன்.

"இல்லை ஐயா, நித்திரை வரவில்லை. சும்மா எழும்பி வெளியே போனேன். சும்மா...." என்று இழுத்தான் சிவ ராசன்.

"ஏன்? எங்கே?" என்று என் மனத்தில் கேள்விகள் எழுந்தன. அவைகளை என் மனத்திலேயே அடக்கிக்கொண்டு, "சரி, போய்ப் படுத்துக்கொள். நாய் கீய் ஏதாவது வந்து தொந்தரவு கொடுக்காமல் பார்த்துக்கொள்" என்று கூறி விட்டு நான் உள்ளேபோய்ப் படுத்துக்கொண்டேன்.

எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. இச்சம்பவம் என் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தது. நிச்சலனமாயிருந்த ஒரு தடாகத்தில் ஒரு கல்லைப் போட்டுக் குழப்பிவிட்டது போல் இருந்தது. என் நினைவுகள் அலைந்தன. அதன் பிறகு எனக்கு நித்திரையே வரவில்லை. எழுந்து விளக்கைப் பற்ற வைத்துக்கொண்டு பெர்னுட்ஷா எழுதிய நாடகங்களில் ஒன்றைப் படிக்க ஆரம்பித்தேன்.

அன்றுமுதல் நான் சிவராசனைக் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தேன். சதா புன்னகை நடமாடிக்கொண்டிருக் கும் அவன் முகத்தில் இப்பொழுது கவலைக்குறிகள் தலைகாட்ட ஆரம்பித்தன. இருந்த இருந்த இடத்தில் தன்னை மறந்து சிந்தனையில் ஆழ்ந்துவிடத் தலைப்பட்டான். நான் இரண்டொரு தடவை அவனை விசாரித்துப் பார்த்தேன். அவன், "ஒன்றும் இல்லை. தலை இடிக்குது; அதுதான்" என்று சொல்லி மழுப்பிவிட்டான்.

ஒரு நாள் அதிகாலையில் ஒரு விசாரணைக்காக நான் தொலைவிலுள்ள ஓர் ஊருக்குப் போகவேண்டி நேரிட்டது.

பாதி தூரம் போன பிறகுதான் சிவராசன் காரில் மேலதிகமான டயர் இல்லை என்று சொன்னான். இருந்த பெட்ரோலும் போதாது என்றான். பெட்ரோல் கூட இல்லை! எனக்கு அசாத்தியமான கோபம் வந்தது. "பெட்ரோல் கூடவா இல்லை? பாவம், நீ என்ன செய்வாய்? உனக்கு யோசனை அதிகமாய்ப் போய் விட்டது. இவைகளைக் கவனிக்க உனக்கு நேரம் இல்லை......சரி, காரைத் திருப்பிப் 'பசுபதி கராஜி'ற்கு ஓட்டு" என்றேன், கொஞ்சம் கடுமையாக. சிறிது நேரத்தில் கார் பசுபதி கராஜ் வாசலில் வந்து நின்றது. நான் சிவராசனை டயர் வாங்கிவரும்படி உள்ளே அனுப்பிவிட்டு, பெட்ரோல் கணக்குப் புஸ்தகத்தை எடுப்பதற்காகக் காரில் இருந்த ஒரு பைக்குள் என் கையை விட்டேன். மடிப்பு மடிப்பாக இருந்த சில காகிதத்துண்டுகள் என் கையில் தட்டுப்பட்டன. நான் அவற்றில் ஒன்றை வெளியே எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். அது ஒரு கடிதம் - காதல் கடிதம்! "என் துரையே...." என்று ஆரம்பித்தது; அப்பால் படிப்பதற்கு என் கண்கள் மறுத்தன. ஆனால் அந்தக் கடிதம் எழுதப்பட்டிருந்த கையெழுத்து என் முகத்தில் ஓங்கி அறைவதுபோல் இருந்தது.....லச்சுவா? இது லச்சுவின் கை எழுத்தா? என் தலை சுழன்றது. எனக்குள்ளே வளர்ந்துவந்த ஒரு பதுமை, ஒரு சிற்பம் திடீரென்று தகர்ந்து சுக்கு நூறாகிப் போனதுபோல் இருந்தது. என் அந்தரங்கப் பூங்காவில் மலர்ந்து நின்ற ஒரு மண மலர் ஒரு கணப் பொழுதில் கருகி உதிர்ந்துவிட்டது போன்ற ஓர் உணர்ச்சி என் இருதயத்தைக் கௌவியது. என் முகத்தில் வியர்வை கொட்டியது. கைக்குட்டை எடுப்பதற்காக என் கையை என் கிஸார் பையில் நுழைத்தேன். கைக்குட்டையைக் காணவில்லை. கைக்குட்டையின் ஞாபகம் வரவே, லச்சு கடந்த ஒருமாதமாக எனக்குக் கைக்குட்டை

எதுவும் தைத்து அனுப்பவில்லை என்பதும் ஞாபகத்திற்கு வந்தது. ஆ! காதல் கடிதம் எழுதும் முயற்சியில் கைக் குட்டை தைப்பதற்கு அவகாசம் வாய்க்கவில்லை போலும்! கடிதத்தை மடித்து அது கிடந்த இடத்திலேயே வைத்தேன்.

அதற்குள் சிவராசனும் திரும்பி வந்தான். பெட் ரோலை வாங்கிக்கொண்டு புறப்பட்டோம். வழியில் சிவராச னுக்கு நீண்ட ஒரு பிரசங்கம் செய்தேன், ஒன்றும் அறியாத வன்போல். "நீ ஓர் இளம் பிள்ளை; உனக்குப் புத்தி புகட்ட யாரும் இல்லை..." என்று ஆரம்பித்து ஏதேதோ புத்திமதி எல்லாம் கூறினேன். அவனும் கேட்டுக் கொண்டிருந்தான். இளமைக்குப் புத்தி கூறுவதன் பயனின்மையை நான் அப்பொழுது உணரவில்லை.

இரவு எட்டு மணிக்கு வீடு வந்து சேர்ந்தோம். "ரோட்டுப் புழுதி எல்லாம் காரில் படிந்துபோய்க் கிடக் கிறது. அதை ஒரு தரம் கழுவிவிட்டு ஷெட்டில் போடு" என்று சிவராசனிடம் கூறிவிட்டு நான் உள்ளே போய் ஸ்நானம் செய்து சாப்பிட்டுப் படுத்துக்கொண்டேன். பிரயா ணம் செய்த அலுப்பில் உடனே தூங்கிப்போய்விட்டேன்.

மூன்று மணி சமயம், யாரோ என் கொல்லைப்புறக் கதவைப் புடைத்து ஆரவாரம் செய்வதுபோல் கேட்டது. தூக்கக் கலக்கத்தோடு எழுந்து டார்ச் விளக்கைக் கையில் எடுத்துக்கொண்டு வெளியேபோய்க் கதவைத் திறந்தேன்.

வாசலில் தீவட்டிகளுடன் நாலைந்து மனிதர்கள் நின்று கொண்டிருந்தார்கள். கந்தர் தலைவிரி கோலமாக, நெருப்பின் மேல் நிற்பவர்போல் துடிதுடித்துக்கொண்டு கதவோரமாக நின்றார். என்னைக் கண்டதும், "தம்பி, தம்பி, லச்சுவைக் காணவில்லை. எங்கே போனாளோ! எந்தப் பாவி...."

"என்ன, லச்சுவைக் காணவில்லையா? எங்கே இன்னும் ஒருதரம் சொல்லும்" என்றேன் நான்.

“சொல்றத்துக்கு என்ன கிடக்குது, தம்பி! இந்த நாலுமணி காலமாய் நாங்களும் இந்தத் தேசமெல்லாம் தேடிப் பார்த்தோம். நாங்கள் தேடாத கிணறு குளம் ஒன்றுகூட இல்லை. தம்பி, நீர் ஒருதடவை உம்முடைய காரிலே போய்ப் போலீஸ் ஸ்டேஷனில் அறிவிச்சுவிட்டு வாரும் - ”

அதற்கிடையில் கந்தரின் தமக்கை தலைவிரி கோலமாக வந்து வாசற்படியில் விழுந்து, “ஐயோ, உனக்குப் போற வழிக்குப் புண்ணியம் கிடைக்கும்; ஒருதடவை போய்த் தேடேன். ஐயோ, என் கிளிக்குஞ்சை எந்தப் படுபாவிப் பிறந்து முஞ்சிக்கொண்டு போச்சோ! - ஐயோ” என்று அலறினள். அந்த முதியோளின் சோகம் என் நெஞ்சைக் கரைத்துவிட்டது. என் கண்கள் கலங்கின.

உலகத்திலே மனித அன்பிற்குக் காரணம் வயிற்றுப் பசி என்று ஒன்று இருப்பதுதான் என்பது எனக்கு இது காறும் எண்ணமாயிருந்தது. ‘தகப்பன் மகனை நேசிப்பதும், மகவு தாயை நேசிப்பதும், மனைவி கணவனை நேசிப்பதும் எல்லாம் இந்த வயிற்றுப்பசி ஒன்றிற்காகத்தான்; பசியை அகற்றிவிட்டால் அன்பு என்பது ஒன்று இராது’ என்று நம்பியிருந்தேன். ஆனால் என்னுடைய இந்த எண்ணம், அந்த முதியோளின் சோகத்தைக் கண்டதும் தகர்ந்து விடும் போல் தோன்றியது. இன்றைக்கோ நாளைக்கோ யமன் வாயில் அகப்படப் போகும் இந்தக் கிழட்டுப் பிணம் எதற்காக ஒருவரை நேசிக்கவேண்டும்?

போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவதற்குக் காரை ஆயத்தம் செய்யும்படி கூறுவதற்குச் சிவராசன் படுத்திருக்கும் முன் தாழ்வாரத்தில் போய்ப் பார்த்தேன். என் இருதயம் ‘பகீர்’ என்றது! சிவராசனை அங்கே காணவில்லை. அவனது படுக்கை விரிக்கப்படாமல் அப்படியே கிடந்தது. என் கால்கள்

தள்ளாடின. தட்டித் தடவி ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டேன். 'அட, உன்போலும் ஒரு மடையன் உலகில் உண்டா? குழந்தை கூட ஊகித்தறிந்து கொள்ளக் கூடிய இதை நீ அறியவில்லையே. எல்லாவற்றுக்கும் உன் ஆணவமும் தற்பெருமையுந்தான் காரணம்' என்று நான் எனக்குள்ளே ஒரு மௌனமான பிரசங்கத்தைச் செய்துகொண்டேன்.

கந்தர், "என்ன தம்பி?" என்று கூறிக்கொண்டே ஓடி வந்தார்; "என்ன சங்கதி?"

"உம் மகள் என் கார்க்காரனோடு ஓடிவிட்டாள். அதுதான் சங்கதி. விளங்குகிறதா? இனி அவர்களை என்னாலும் பிடிக்க முடியாது; உம்மாலும் பிடிக்க முடியாது. வேறு அலுவல் ஏதாவது இருந்தால் போய்ப் பாரும்; போம் போம்" என்று என் ஆத்திரத்தில் ஏதேதோ உளறிக் கொட்டினேன். கர்ண கடூரமான இந்த வார்த்தைகள் அந்தத் தந்தையின் மனத்தை அறுக்கும் என்பதைக் கூட நான் உணரவில்லை.

"கார்க்காரனு, தம்பி? - என் மகள் கார்க்காரனோடு... தம்பி" என்று முணகிக்கொண்டு கந்தர் தள்ளாடித் தள்ளாடி நடந்தார். அந்தக் காட்சி என் நெஞ்சைக் குலுக்கியது. ஒரு தந்தையின் உணர்ச்சிகள் எத்தன்மையன என்பதை நான் அறியேன். அந்தப் பாக்கியத்தை - அபாக்கியத்தைப் பெற நான் கொடுத்து வைக்கவில்லை. ஆனால் அந்த ஏழைத் தந்தையின் கடைசி வார்த்தைகளும் தளர்ந்த நடையும் என் மனத்தில் பசியிலும் பிணியிலும், செல்வத்தையும் புகழையும் பார்க்க மேலான பொருள் ஒன்று மனிதர்களிடையே உண்டு என்பதைப் பசுமரத்தாணிபோல் பதியச் செய்தன.

* * * *

இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு எனக்கு லச்சுவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் தனக்கும் சிவராசனுக்கும் கல்யாணம் நடந்தேறிவிட்டதாகவும், தாங்கள் சுகமாக இருப்பதாகவும், தன் தகப்பனிடம் தன்னை மன்னித்துவிடும்படி கேட்கும்படியும் கண்டிருந்தது. என் மனம் இளகியது. "என்ன இருந்தாலும் லச்சு தமிழ்ப் பெண் தானே? பண்டைத் தமிழ்ப் பெண்கள் தம் காதலர் களுடன் தாய்தந்தையர் அறியாமல் வழி நடக்கவில்லையா? இதில் என்ன ஆச்சரியம்?" என்று நான் எனக்குள் கூறிக் கொண்டேன். இதெல்லாம் என் புஸ்தகப் படிப்பின் பயனே அன்றி லோகாசாரம் அல்ல வென்பது எனக்கு எப்படித் தெரியும்?

அன்று மத்தியான்னம் நான் கந்தர் வீட்டுக்குப் போனேன். இதற்குமுன் ஒருபொழுதும் நான் அங்கே போனதில்லை. நான் போன சமயம் கந்தர் வீட்டில் இல்லை. அவருடைய தமக்கை மட்டும் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அவள் எழுந்து, "தம்பி வரவேணும்" என்று உபசரித்தாள்.

"உபசாரம் எல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். கந்தர் எங்கே?" என்று கேட்டுக்கொண்டே நானும் திண்ணையில் உட்கார்ந்தேன்.

"அதை ஏன் கேட்கிறாய்? அந்தப் பெண் இந்த வீட்டை விட்டுப்போன நாள் முதற்கொண்டு அவன் முகத் திலே சனியன் பிடிச்சமாதிரி. சாப்பாடு அடியோடு இல்லை. இரவிலே நித்திரை இல்லை. பயித்தியம் பிடிச்சவன் மாதிரி இந்த வாசலில் இரவிரவாக் குந்திக்கொண்டு இருட்டை ஒரே பார்வையாய்ப் பார்த்தபடி இருக்கிறான். நானும் என்ன என்னவோ சொல்லிப் பார்த்தேன். அவன் கேட்டால்தானே?

அவனுடைய கோலத்தைப் பார்க்க என் வயிறு எறியுது..."
என்று சின்னுச்சி பொருமினுள்.

எனக்குப் பரம சங்கடமாய்ப் போய்விட்டது. அதற்குள் என் அதிர்ஷ்ட வசமாய்க் கந்தரும் வந்துசேர்ந்தனர். பழைய கந்தரா அவர்! எனக்கு அவரை அடையாளமே தெரியவில்லை; அவ்வளவு உருமாறிப் போய் இருந்தார். பச்சைப் பசேலென்று பார்ப்பவர் கண்களை வசியப்படுத்திக் கொண்டு ஒய்யாரமாகத் தலை தூக்கி நின்ற ஓர் இள வாழை மரத்தின்மேல் இடி விழுந்தால் அது எப்படிக் கருகி உருகி வாடிப்போய் விடுமோ, அப்படிக் கந்தரும் உருக்குலைந்து போயிருந்தார். மூன்று நாட்களுக்குள் அவர் ஒரு வயோதிகராகப் போய்விட்டார். அவர் என்னைக்கூடக் கவனிக்காமல் நிலத்தைப் பார்த்தபடி வீட்டிற்குள் நுழையப்போனுர். நான் அவரைத் தடுத்தேன். "கந்தரே, இப்படி உட்காரும். என்ன அவசரம்?" கந்தர் ஒரு சூத்திரப் பாவைபோல் திண்ணையில் உட்கார்ந்தார்.

நான் என் அவசரத்தில் லச்சுவின் கடிதத்தைப்பற்றிய சமாசாரத்தை உடனே கூறிவிட்டேன். ஏதோ பெரிய காரியம் செய்வதாக எனக்கு நினைப்பு; வாடி வதங்கும் பூங்கொடிக்கு நீர் ஊற்றி உயிர்ப்பிப்பது போல் பாவித்துக் கொண்டேன். ஆனுல்......

"அந்தக் கேடு கெட்ட பற நாய் எப்பிடிப் போனுல்தான் எனக்கென்ன? அல்லாத பிள்ளையை இல்லாததாய்க் கண்டு கொள்ளுறது......" என்று கந்தர் வெடுக்கென்று கூறினுர்.

நான் திடுக்கிட்டுவிட்டேன். என் செவிகளை நம்ப முடியவில்லை. அங்கம் எல்லாம் நோவச் சுமந்துபெற்ற தாயினும் மேலான தாயாக இருந்த இந்தத் தந்தையின் வாயிலிருந்து வருவனவா இந்தச் சகிக்க முடியாத வார்த்தைகள்! "ஐயையோ, என்னடா உனக்கு. சீ சீ! இதென்ன பேச்சு,

உன் வயித்துப் பிள்ளை இல்லை அவள்?" என்று சின்னாச்சி கூவினாள்.

"பிள்ளையுமாச்சு, சள்ளையுமாச்சு. அவள் போறாள் தேவடியாள்......"

கந்தருக்கு உண்மையில் மூளைக்கோளாறு ஏதாவது ஏற்பட்டிருக்குமோ என்றுகூட எனக்கு ஐயமாக இருந்தது. ஆனால் நான் விட்டுக்கொடுக்கவில்லை. "என்ன இருந்தாலும் அவள் உம் வயிற்றுப் பிள்ளைதானே? அப்படித்தான் அவள் என்ன கூடாத காரியத்தைச் செய்துவிட்டாள்? தான் விரும்பிய ஒரு மனிதனோடு போனாள்; அதுதானே? அதில் என்ன பிழை? அவள் இருதயத்தில் காதல் அரும்பி விட்டது. காதல், ஆசை, விதி! அதை யாராலே தடுக்க முடியும்? நீர் மட்டும் அவளை மன்னித்துவிட்டால் நாளைக்கே நான் அவர்கள் இரண்டு பேரையும் இங்கே அழைக்கிறேன்......"

"காதல் கத்தரிக்கா யெல்லாம் சும்மா புஸ்தகப் படிப்பு. அவள் ஆரோ துரையப்பனோ துரைசாமியோ எழுதின புஸ்தகங்களைப் படிச்சுப் படிச்சுத்தான் இந்த எண்ணமெல்லாம் வந்தது. இனிமேல், தம்பி, என்னுடைய கண் சத்தியமாய்ச் சொல்றேன், நான் அவள் முகத்திலே முழிக்கப் போவதில்லை...... தம்பி, வேறே என்ன வானாலும் கதை இருந்தால் பேசும்; இல்லாவிட்டால் எழும்பி நடவும்" என்றார் கந்தர் தீர்மானமாக.

நான் எழுந்து நடந்தேன். இப்படிப் பேசும் ஒரு மனிதனுடன் வேறு என்ன பேச்சு இருக்கிறது?

* * * *

**ப**த்து ஆண்டுகள் சென்றன. என் உச்சந்தலை இப்பொழுது முழு வழுக்கையாகி வழ வழ என்று பளிங்கு

போல் ஆகிவிட்டது. எஞ்சியிருந்த மயிர் எல்லாம் பஞ்சு போல் வெளுத்துவிட்டது. நான் கிழவன். கந்தரோ 'குடு குடு' கிழவர் ஆகி விட்டார். அவருக்கு உண்மையில் வயது அறுபத்தெட்டுத்தான். ஆனால் தொண்ணூறு வயதுக் கிழவன் போல் காணப்பட்டார் - கையிலே ஊன்றுகோல், கண்களிலே ஓர் உன்மத்த நோக்கு, தோற்றத்திலே மரணத்தின் கோர நிழல். அவர் இப்பொழுது ஒருவேலைக்கும் போவதில்லை. எந்நேரமும் வீட்டிற் குள்ளேயே அடைபட்டுக் கிடந்தார். நான் அவருக்கு நேரத்துக்கு நேரம் சாப்பாடு அனுப்பிவந்தேன்.

ஆ! ஒன்று கூற மறந்துவிட்டேன். கந்தருடைய தமக்கை இறந்து ஐந்து வருஷங்களுக்கு மேலாகிறது. ஒரு நாள் திடீரென்று மார்படைப்பு வந்து இறந்துபோனாள். இந்த விஷயத்தை நான் முதலில் கூறியிருக்கவேண்டும்.

ஒரு நாள் மாலை நாலரை மணியிருக்கும்; நான் என் வீட்டில் ஒரு சாய்மான நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு பத்திரிகை படித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது எங்கள் ஊர்க்கோவில் பூசகரான சின்னத்தம்பி ஐயர் உள்ளே நுழைந்தார். நான் எழுந்து, "ஐயா வாருங்க வாருங்க, இப்படி உட்காருங்க...... வெத்திலை போடுங்க" என்று அவரை உபசரித்தேன். அவருடைய சங்க இலக்கிய அறிவுக்காக அவரிடம் எனக்கு அபார மதிப்பு இருந்தது.

"தம்பி, உட்கார நேரமில்லை. உம்மிடம் அவசரமாக ஒரு காரியம் சொல்லவேண்டும் என்று வந்தேன். உம்முடைய வீட்டுக்குப் பக்கத்தில் இருக்கும் கந்தருடைய பெண் லச்சுமிப்பிள்ளை - பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் உம்முடைய கார்க்காரனோடு ஓடிப்போனாளே, அவள்தான். அவள் இன்று காலையில் எங்கள் கோவிலுக்கு வந்து அங்கே ஒரே பழியாய்க் கிடக்கிறாள்."

"என்ன என்ன! லச்சுவா? திரும்பி வந்துவிட்டாளா? இப்பொழுது எங்கே இருக்கிறாள்?" என்று நான் அதற்குள் அவசரப்பட்டேன்.

"ஏன் இப்படி அங்கலாய்க்கிறீர்? நான் சொல்வதைக் கேளும். அவள் இப்பொழுதும் கோவிலில்தான் இருக்கிறாள். அவளுடைய புருஷன் ஒரு வருஷத்துக்குமுன் இறந்துபோனான். அவனுடைய பந்துக்கள் அவளைத் தங்களோடு சேர்த்துக்கொள்ள மறுத்து அவளை வீட்டைவிட்டு வெளியே துரத்திவிட்டார்களாம். அதன் பிறகு அவள் தெருத் தெருவாக அலைந்து திரிகிறாளாம். சத்திரம் சாவடிகளில் தங்கியும், கூலிவேலை செய்தும் இதுகாறும் பிழைத்துவந்திருக்கிறாள். இனி - "

"ஐயா, அவளுக்குப் பிள்ளை ஒன்றும் இல்லையா?"

"இல்லை. அவள் தனியேதான் வந்திருக்கிறாள். ...அது சரி தம்பி; அவளை இப்பொழுது என்ன செய்வதென்பதுதான் கேள்வி. கந்தர் அவளைத் தம்மோடு அழைத்து வைத்துக்கொள்ளச் சம்மதிப்பார் என்றால், அவளுக்கு இன்னும் கொஞ்ச காலத்தில் வேறு எங்காவது பார்த்து ஒரு கல்யாணம் பண்ணி வைக்கலாம். அவளுக்கு என்ன வயசா ஆகிவிட்டது? ஆனால் கந்தர் சம்மதிப்பாரோ?"

"அதற்குத்தான் நானும் இவ்வளவுகாலமாய்ப் பிரயாசைப்படுகிறேன். எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்குபோல் ஆய்விட்டது. கந்தர் கல்போல் இருக்கிறார். ஒன்றிற்கும் அசைவதாகக் காணோம். என்றால் வேறு என்ன செய்ய முடியும்? ஒருவேளை, அவள் இங்கு வந்திருக்கிறாள் என்று அறிந்தால் கந்தரின் மனம் இளகினாலும் இளகும். எதற்கும் நீங்களும் என்னுடன் வாருங்கள். இப்பொழுதே இருவருமாகச் சென்று கந்தரைப் பார்ப்போம்."

வேலியில் உள்ள கடப்பைக் கடந்து உள்ளே சென்றதும் திண்ணையில் கந்தர் குப்புறப் படுத்துக்கொண்டிருப்பது எங்களுக்குப் புலப்பட்டது. திண்ணை அருகில் சென்று பார்த்ததும் எங்கள் கால்கள் தாமாகவே பின்வாங்கின. எங்கள் கண்களில் பட்ட காட்சி அப்படியே எங்களைப் பிரமிக்கச் செய்துவிட்டது. கந்தருடைய முதுகு மேலும் கீழும் அசைந்து உதறிக்கொண்டிருந்தது. அவருடைய தொண்டையிலிருந்து, காய்ந்து வறண்ட விக்கல் சப்தங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. கந்தர் அழுகிறார், மகளை நினைத்து! லச்சுவினுடைய பழைய தையல் பெட்டியும் அதற்குள் கிடந்த சீலைத் துண்டுகளும் கந்தருடைய தலைமாட்டில் சிதறுண்டு கிடந்தன.

எனக்கு உள்ளூறப் பரம சந்தோஷம், கடைசியில் கள்வனைப் பிடித்துவிட்டோம் என்று. கந்தர் எப்படித்தான் இவ்வளவு காலமும் லச்சுவை மறந்திருந்தாரோ!

நான் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, “கந்தரே” என்றேன். கந்தர் சடக்கென்று எழுந்திருந்தார். அவருடைய முகத்தில் கண்ணீர்க்குறி எதுவும் காணப்படவில்லை. கண்ணீர் இல்லாத எல்லை கடந்த சோகம் போலும்! “என்ன தம்பி, இப்பிடி இரும். இது ஆர் இது? ஐயாவே; இப்படி வந்து இருக்க” என்று கந்தர் எங்களை உபசரித்தார்.

“கந்தரே, ஒரு சமாசாரம் கேள்விப்பட்டீரோ? லச்சு கோவிலில் வந்திருக்கிறாளாம்.”

கந்தருடைய முகம் ஒரு கணம் இருளடைந்தது. மறுகணம், “அவள் எங்கேயாவது வந்திருந்திட்டுப் போகட்டும்; ஆருக்கென்ன? ஆனால் என் முகத்திலே முழிக்காமல் இருந்தால் போதும்!”

என் இருதயம் ஒரு குதி குதித்தது. இவர் என்ன மனிதனு மரக்கட்டையா என்று என்னைத்தானே கேட்டுக் கொண்டேன்.

அதற்கிடையில் சின்னத்தம்பி ஐயர் சொன்னுர்: "கந்தரே, என்னகாணும் நீர் சிறு பிள்ளைபோலப் பேசுகிறீர். உம் நெஞ்சிலே ஈரமில்லையா? நீரும் ஒரு தகப்பனு? உமக்குக் காடு வாவா என்கிறது, வீடு போ போ என்கிறது. அப்படி இருந்தும் இந்தக் குரங்குப் பிடி பிடித்துக் கொண்டிருக்கிறீரே. நாளைக்கு உம்மைப் பக்கத்திலே இருந்து காப்பாற்றுவதற்குக்கூட ஒருவரும் இல்லையே. அவள்தான் ஒருத்தி, உம் மகள்..."

"ஓய் பேய்ப்பிராமணரே, உமக்கு என்ன ஓய் தெரியும் இதெல்லாத்தையும் பற்றி? என் குலமானம் அழிந்து போனதைப்பற்றி உமக்கென்ன தெரியும்? இவ்வளவு காலமாச்சு, என் பரம்பரையில் இப்படியான ஒரு சங்கதி நடக்கவில்லை. இந்தத் தேவடியாள், நான் செய்த ஏதோ பாவம், எனக்குப் பிள்ளையாய் வந்து பிறந்தாள். அப்பா! அதுவும் ஒரு விடுகாலிக் கார்க்காரனேடு...ஓய், உமக்கு இதைப்பற்றி என்ன இவ்வளவு அக்கறை? போய் மணியைக் கிலுக்கி உம்முடைய வேலையைப் பாரும்..." என்று இரைந்தார் கந்தர்.

சின்னத்தம்பி ஐயர் கோபத்தோடு திரும்பிப் போய் விட்டார்; நானும் என் வீட்டிற்கு வந்துவிட்டேன். மறுநாள் நான் கோவிலுக்குச் சென்று லச்சுவைப் பார்த்தேன். ஐயையோ, என்ன பரிதாபகரமான காட்சி! லச்சுவா அல்லது லச்சுவின் ஆவியா என் எதிரில் நிலத்தைப் பார்த்துக் கொண்டு நிற்பது! அவள் தன்னுடைய சரித்திரம் எல்லாம் சொன்னுள். "லச்சு, நீ என் வீட்டில் வந்து இரேன். எனக்கும் பிள்ளை இல்லை...கந்தர் பிரமாத தகப்பன்!" என்று

நான் சொன்னேன். அவள் மறுத்துவிட்டாள். என் வேண்டுகோள் எல்லாவற்றையும் நிராகரித்துவிட்டாள். நான் ஒன்றும் செய்ய முடியாதவனாய் வீடு திரும்பினேன்.

அதன் பிறகு மூன்று நாட்கள் கழிந்தன. நாலாம் நாள் மாலையில் கந்தர் தட்டித் தடவிக்கொண்டு என் வீட்டிற்கு வந்தார். நான் அவர் வந்ததைக் கவனிக்காதவன்போல் பத்திரிகைக்குள் தலையைப் புதைத்துக் கொண்டேன். கந்தர் என் கவனத்தைக் கவர்வதற்காக இருமினார். நான் அப்பொழுதும் தலையை நிமிர்த்தவில்லை. பிறகு அவர் மெதுவாக, "தம்பி" என்று கூப்பிட்டார். நான் தலை நிமிர்ந்து பார்த்தேன். கந்தர் நிலத்தைப் பார்த்துக்கொண்டு நின்றார். எனக்கு என்ன செய்வது அல்லது என்ன சொல்வது என்று தோன்றவில்லை. நான் அவரைப் பார்த்தபடி அப்படியே உட்கார்ந்திருந்தேன். கந்தர் தலை நிமிராமல் முணுமுணுத்தார்: "அவள் - லச்சு, இந்த மூன்று நாளும் தன்னை வந்து பார்க்கும் படி ஆளுக்குமேல் ஆள் விட்டாள்; நான் போகவில்லை. என் கிறுக்கு என்னை விடவில்லை... இன்று காத்தாலேயும் ஓர் ஆள் வந்தது - இதுதான் கடைசித் தடவையாம்; என் காலிலே விழுந்து கும்பிடுவேனென்று சொன்னாளாம். அப்பவும் நான் போகவில்லை. அதுக்குப் பிறகு குந்திக் கொண்டு யோசிச்சுப் பார்த்தேன்... தம்பி, அவளை இப்போது ஒருமுறை போய்ப் பார்த்து வீட்டிற்குக் கூட்டிக்கொண்டு வரப் போறேன்..."

யாராவது சூரியன் இன்று மேற்குத் திசையில் உதிக்கும் என்று சொன்னால் எப்படி இருக்குமோ, அப்படி இருந்தது எனக்கு. இது தெய்வ சித்தமாக்கும் என்று எண்ணிக்கொண்டேன்.

"சரி, அதற்கென்ன போய்ப் பார்க்கிறதுதானே? என்னிடம் ஏன் சொல்லவேண்டும்?" என்றேன் நான்.

"இல்லை தம்பி. எனக்குத் தனியாகப் போகப் பயமா யிருக்கிறது, மனம் துணியவில்லை. அதுதான் நீரும் வருவீரோ என்று கேட்டேன்."

நான் ஒரு கணம் யோசித்தேன். கடைசியாகப் பார்க்கப் போனால், ஒரு தகப்பனுக்கும் மகளுக்கும் குறுக்கே நிற்ப தற்கு நான் யார்?

"சரி, அதற்கென்ன?" என்று புறப்பட்டேன். வழி யெல்லாம் கந்தர் மௌனமாகவே இருந்தார். நானும் ஒன் றும் பேசவில்லை. கோவில் வாசலில் சின்னத்தம்பி ஐயர் நின்றுகொண்டிருந்தார். கந்தரைக் கண்டதும் ஐயர் ஓர் ஏளனச் சிரிப்புச் சிரித்தார். "கிழவா, மகளைப் பார்க்கவா வருகிறாய்? அதோ அவள் வெளி மண்டபத்திலே கிடக் கிறாள். போய்ப் பார்" என்றார். கந்தர் அதைக் கவனியாத வர்போல் தட்டித் தடவிக்கொண்டு நடந்தார். நானும் ஒரு சூத்திரப்பாவைபோல் அவர்பின் சென்றேன்.

வெளி மண்டபத்திலே லச்சு குப்புறப் படுத்துக் கிடந் தாள். நாங்கள் வந்ததை அவள் அறிந்ததாகத் தெரிய வில்லை. அவள் படுத்திருந்த மாதிரி என் நெஞ்சைப் புண்படுத்தியது. நான் குனிந்து பார்த்தேன். என் பின் புறத்தில் ஐயரின் குரல் கேட்டது. "ஏன் தம்பி பார்க்கிறீர்? அவள் செத்துக் கால் மணிக்கு மேலாகிறது. மத்தியானம் ஏதோ விஷத்தைச் சாப்பிட்டுவிட்டாள்போல் தெரிகிறது. நானும் இப்பொழுதுதான் வந்தேன்."

கந்தர் பிரேதத்தின் முகத்தைக்கூடப் பார்க்க எத்த னிக்கவில்லை. கொஞ்சநேரம் பிரேதத்தின் முதுகைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றார். பிறகு தம் ஊன்று கோலைத் திருப்பிவைத்துக்கொண்டு வாசலை நோக்கி நடந்தார்.

என் கண்களில் கண்ணீர் பெருகியது; லச்சுவுக்காக அல்ல; அவளை உயிரோடு பார்க்கக் கொடுத்துவைக்காத அவள்

தந்தைக்காக. நானும் வாசலில் வந்து பார்த்தேன். கந்தா பனைமரங்களுக்கிடையில் தள்ளாடித் தள்ளாடி நடப்பது தெரிந்தது. ஐயர், "தீட்டு - பிராயச்சித்தம் -" என்று ஏதேதோ கூறிக்கொண்டிருந்தார். நான் வீட்டை நோக்கி அடி எடுத்துவைத்தேன்.

அதன்பிறகு இரவு வந்தது.




# கெட்டிக்காரி கல்யாணி

["ரூலி"]

**பா**ட்டி தன் மூன்று பேரக் குழந்தைகளுக்காக மயிலாப்பூரில் குடித்தனம் நடத்தினாள். அவள், 'ராமா ராமா' என்று காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பாள். பரிசாரகன் சமைப்பான். பேரக் குழந்தைகள் மூன்று பேரும் சாப்பிடுவார்கள். அவரவர்கள் காலேஜுக்குப் போவார்கள்; வருவார்கள். ஸினிமாவுக்குப் போவார்கள்; விளையாடப் போவார்கள்; அரட்டை அடிப்பார்கள்; பாட்டியின் வாயைச் சில சமயம் கிளறுவார்கள். பாட்டி 'ராமா ராமா' என்று காலம் கழித்தாள்.

பாட்டிக்கு மூத்த பிள்ளையோடிருக்க இஷ்டந்தான். அந்தப் பிள்ளை திடீரென்று மாற்றிப் போய்விட்டார். அவர் போகிற இடம் வடக்கே 'துலுக்க' ராஜ்யம். அங்கே போய் இருக்கவாவது என்று பாட்டி தயங்கினாள். பாட்டியின் இரண்டாம் பிள்ளை கிராமத்தில் வியவசாயத்தைக் கவனிக்கிறார். அவரோடு பாட்டிக்கு மனஸ்தாபம். பாட்டியின் மூத்த பிள்ளை, எல்லாவற்றையும் யோசனை செய்து பட்டணத்தில் ஒரு குடித்தனம் இருக்கட்டும் என்று தீர்மானம் செய்துவிட்டார். மூத்தபிள்ளையின் மூத்தபெண்

கல்யாணி காலேஜுக்குப் போகிறாள். ஜனகமும் (பாட்டியின் இரண்டாம் பிள்ளையின் பெண்) காலேஜுக்குப் போகிறாள். அவர்கள் இரண்டு பேருடன் பாட்டி பரிசாரகன் உதவியைக் கொண்டு வீட்டைக் கவனித்துக்கொள்ள மூத்த பிள்ளை ஏற்பாடு செய்துவிட்டுச் சிறிசுகளை அழைத்துக்கொண்டு சம்சார சகிதம் வடக்கே போய்விட்டார்.

மயிலாப்பூரில் பாட்டி ஆதரவில் 'கிளைக் குடும்பம்' ஏற்பாடாகும்போது சம்பத் ஹாஸ்டலில் இருந்தான். பாட்டியின் பெண் வயிற்றுப் பேரன் சம்பத். கொஞ்ச நாளைக்குத் தினம் அவன் சாயங்காலம் ஹாஸ்டலிலிருந்து பாட்டியைப் பார்க்க வருவான்.

அவள் ஒரு நாளைக்குச் சம்பத்தைப் பார்த்து, "ஏண்டா சம்பத்! ஹாஸ்டலில் அறுபது, எழுபது ஏன் செலவழிக்கிறாய்? கோட்டையாட்டமா இங்கே வீடு இருக்கிறது. இங்கேயே வந்து இருந்துவிடேன். மூன்று பேர் சாப்பாடு நாலாவது பேருக்குப் போட்டால் ஜாஸ்தி யாய்விடாது" என்றாள்.

பாட்டி இரண்டாம் தரம் சொல்லும்படி சம்பத் வைத்துக் கொள்ளவில்லை. ஆகவே, பாட்டியும், அவளுடைய இரண்டு பேத்திகளும், ஒரு பேரனும் மயிலாப்பூரில் வாசம் நடத்தினார்கள்.

கல்யாணி உத்தியோகஸ்தர் பெண் என்று முன்னால் சொன்னேன். அவள் அப்பா ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதிக்கிறபோது அவளுக்குத் துளி கர்வம் இருக்கவேண்டுமே, கிடையாது! அவளைப்போல அடக்கமாய், மரியாதையாய் இருக்கிறவர்கள் இந்தப் பிருதிவியில் இல்லை. மூக்கும் முழியுமாய்க் கம்பீரமான அழகு அவளுக்கிருந்தது. சுய அழகு ஒன்றுதான். தன்னைச் சிங்காரித்துக்கொள்வதென்பது அவளிடம் இல்லை. அவள் மகா வெகுளி. லொட லொட

வென்று எல்லாவற்றையும் எல்லாரிடமும் சொல்லுவாள். அவளை டாக்டருக்குப் படிக்கவைக்க வேண்டுமென்பது அப்பாவின் இஷ்டம்.

ஜனகம் கல்யாணியைவிட ஆறுமாதம் சின்னவள். ஆனால், கல்யாணிக்கு மேல் வகுப்பில் படித்துக்கொண்டிருந் தாள். ஜனகத்தின் அப்பா கிராமத்தில் மிராசு பார்த்தாலும், தம் தமையன் பெண்ணுக்குத் தம் பெண் தாழ்ந்து போய்விடக் கூடாது என்று அவளைப் படிக்க வைத்தார். ஜனகம் தன் பெரியப்பாவைக் குல்லா போட்டுவிட்டாள். பெரியப்பா இப்பொழுது மயிலாப்பூர்க் குடித்தனத்திற்குப் பணம் அனுப்புகிறாரல்லவா? அந்தப் பணம் ஜனகத்தின் பேருக்குத் தான் வரும்; ஜனகந்தான் வீட்டுப் பொக்கிஷதார்!

* * *

“அவளைப்போலக் கெட்டிக்காரி யார்?” என்று பாட்டி அடிக்கடி சொல்லுவாள். ஆமாம், ஜனகம் கெட்டிக்காரி தான். ஜனகம் கல்யாணி யவ்வளவு அழகாக இல்லாவிட்டா லும், அவளை யாரும் இரண்டுதரம் திரும்பிப் பார்க்காமல் போகமாட்டார்கள். மற்றவர்களை வசீகரிக்கவேணும், மற்ற வர்களிடம் தன் சாமர்த்தியத்தைக் காட்டவேணும், மற்றவர் கள் தன்னை யோசனை கேட்கவேணும், தான் தனி அரசு செலுத்தவேணும் - இவைதாம் ஜனகத்தின் லட்சியங்கள். அவளுடைய லட்சியங்கள் ஏறக்குறைய வெற்றியுடனேயே நடந்துவந்தன.

ஒரு நாள் கல்யாணங்களைப்பற்றிப் பேச்சு வந்தது.

“கெட்டிக்காரியாக இருக்கிற பெண்ணை நான் கல்யாணம் பண்ணிக்கொள்ள மாட்டேன்” என்றான் சம்பத்.

அவன் சொல்லி வாய்மூடுமுன் ஜனகம், “கெட்டிக் காரியாக இருக்கிற பெண் உன்னை ஏன் கல்யாணம் பண்ணிக்

கொள்கிறாள்?" என்றாள். சம்பத் முகம் சிவந்துவிட்டது. பாட்டி அவன் உதவிக்கு வந்தாள். ஜனகத்தைப் பார்த்து, "ஏன், நீ கல்யாணம் பண்ணிக்கொள்ளா விட்டால், கல்யாணி கல்யாணம் பண்ணிக்கொள்கிறாள்!" என்றாள்.

கல்யாணிக்குத் தன் பெயர் திடீரென்று இழுக்கப்பட்டவுடன் என்ன சொல்வதென்று தெரியவில்லை.

"கல்யாணப் பேச்சை அப்புறம் வைத்துக் கொள்வோம். இப்பொழுது காலேஜுக்கு நாழியாகிவிட்டது" என்றாள் அவள்.

ஜனகமும், கல்யாணியும் ரிக்ஷாவில் காலேஜுக்குப் போகும்போது ஜனகம் பழைய விஷயத்தை மறுபடி தொடர்ந்தாள்.

"நான் ஒன்று சொல்கிறேன் கல்யாணி; நீ ஒன்றும் நினைத்துக்கொள்ள மாட்டாயே?" என்றாள்.

"சொல்லேன்; நினைக்கிறது என்ன?" என்றாள் கல்யாணி.

"அந்தச் சம்பத் கிறுக்கன் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறான் போல் இருக்கிறது!" என்றாள் ஜனகம்.

கல்யாணிக்குத் தூக்கி வாரிப் போட்டது. "போடீ" என்றாள் வெடுக்கென்று அவள். ஜனகத்திற்குத் தன் புத்திசாலித்தனத்தை அந்தச் சமயத்தில் காட்டவேண்டும் என்று தோன்றிவிட்டது. அதனால் கல்யாணியின் குரலின் கடுமையைக் கவனிக்காதவள்போல் பாவித்து, "நான் நினைத்தேன், உனக்குப் புரிந்திருக்காது என்று. எனக்கு உடனே தெரிந்து போய்விட்டது. பாட்டி உன் பெயரைச் சொன்னாளே, அப்பொழுது அவன் முகம் எப்படி மாறினது பார்த்தாயா?" என்றாள்.

கல்யாணி சுள் கொட்டினாள். ஜனகத்தை மேலே பேச [illegible] என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனால்

எப்படி நிறுத்துவது என்று தெரியவில்லை. கல்யாணிக்கு எப்படி இருந்தபோதிலும் தன் புத்தி நுட்பத்தால் கண்டு பிடித்தவைகளைச் சொல்லித் தீர்த்துவிடுவது என்று ஜனகம் கங்கணம் கட்டிக்கொண்டு விட்டாள்.

"இன்றைக்குப் பார்த்ததிலிருந்துதான் நான் கண்டு பிடித்தேன் என்று நினைத்துக் கொள்ளாதே. நான் அதை முன்னாலேயே கண்டுபிடித்துவிட்டேன்" என்றாள் ஜனகம். கல்யாணிக்கு இந்த நெருக்கடியான நிலையில் மௌனமாயிருப்பதுதான் யுக்தம் என்று தோன்றிற்று. ஆனால், ஜனகத்தின் அதிகப்பிரசங்கம் அவளைப் பதில்சொல்ல வைத்து விட்டது.

"அன்றைக்கு நாம் ராக்ஷிக்குப் போகிறபோது அவன் என்ன சொன்னான்?"

"அதெல்லாம் யார் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்?"

"உனக்கு ஞாபகம் இல்லை. எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. 'படிக்கிற பொம்மனாட்டிகளெல்லாம் படித்து முடிந்து, கல்யாணம் பண்ணிக்கொள்ளவேண்டும் என்றால் அவர்களைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளக்கூடிய புருஷர்களுக்கெல்லாம் ஏற்கனவே ஓரிடத்தில் முடித்தாய்விடுகிறது என்றான்!"

"அப்படியா!"

"ஆமாம், அதற்கு நான்கூட, 'புருஷர்களுக்கு முப்பது வயதுக்கு மேலேதான் கல்யாணம் என்று ஒரு சாரத சட்டம் போட்டால் சரியாய்ப் போகிறது' என்றேன்."

"அதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?"

"என்ன சம்பந்தமா? அவனுக்கு இப்பொழுது கல்யாணம் பண்ணவேண்டுமென்று அவன் அப்பா, அம்மா சொல்கிறார்கள். நீ படித்து முடிந்த பிறகுதான் கல்யாண

பண்ணிக்கொள்ளவேணும் என்று பெரியப்பா வைத்திருக்கிறார். இதை அவன் எப்படிச்சொல்வான்?"

"சரி, சரி. ஜனகம், ஒன்றுமில்லாததை நீ கற்பனை பண்ணுகிறாய்."

"கற்பனையா........"

"சரி, சரி, இது போதும்."

ஜனகம் அத்துடன் நிறுத்திவிட்டாள்.

*   *   *   *

மேற்படி வியவகாரம் நடந்தபின், அரைவருஷப் பரீட்சைக்காலம் வந்தது. கல்யாணி முன்போல் இல்லை. அவள் கலகலப்பெல்லாம் போய்விட்டது. பரீட்சைக்குப் படிக்கிறதாகக் கூறிக்கொண்டு எப்பொழுதும் அவள் தன் அறையிலேயே காலத்தைக் கழித்தாள். ஜனகமும் பரீட்சைக்குப் படிப்பதில் மூழ்ந்திருந்தாள். கல்யாணியை இரண்டொருதரம் நிறுத்திப் பாட்டி சம்பாஷிக்க முயன்றாள்.

"ரொம்பப் படிக்க வேண்டியிருக்கிறது பாட்டி!" என்று கல்யாணி நழுவி விடுவாள். பரீட்சை ஆரம்பமாயிற்று. கல்யாணிக்கும், ஜனகத்திற்கும், சம்பத்திற்கும் பரீட்சைக் காலங்கள் மாறி மாறி வந்தன. ஜனகம் ஒரு நாள் காலையில் பரீட்சை எழுதப் போயிருந்தபோது கல்யாணிக்கும் சம்பத்துக்கும் பரீட்சை இல்லை. சம்பத் கல்யாணியுடன் யதார்த்தமாகப் பேச முயன்றான். அவள் அவனோடுகூடப் பதில் சொல்லவில்லை. பேசாமல் போய்விட்டாள்.

பரீட்சை முடிந்ததும் சம்பத் ஊருக்குப் போய்விட்டான். ஜனகம் கிறிஸ்துமஸ் சமயத்தில் பட்டணத்தை விட்டுப் பட்டிக்காட்டிற்குப் போக இஷ்டப்படவில்லை. சம்பத் நீங்கலாக மற்றவர்கள் மயிலாப்பூரில் இருந்து வந்தனர்.

கிறிஸ்துமஸ் விடுமுறை முடியும் சமயம் பாட்டியிடம் யாரோ சம்பத்துக்குக் கல்யாணம் ஏற்பாடாவதாக வந்து சொன்னதை ஜனகத்திடம் சொன்னாள். கல்யாணி தன் அறையில் அன்று இருந்தாள்.

சாயங்காலம் ஜனகம் எக்ஸிபிஷன் பார்க்கப்போகக் கல்யாணியை அழைத்தாள். கல்யாணி இருந்த மாதிரி அவளுக்கு ஆச்சர்யமாயிருந்தது. அவர்கள் போய்விட்டு வீட்டிற்கு எட்டரை மணிக்கு ரிக்ஷாவில் திரும்பிவந்தார்கள். வரும்போது கல்யாணி ஒரு மாதிரியாக ஜனகத்தைப் பார்த்தாள். "ஜனகம்" என்றாள் ஓர் ஈனக் குரலுடன்.

தன்னுடன் அவள் என்னவோ சொல்ல விரும்புகிறாள் என்பதை ஜனகம் உணர்ந்துதான் வந்தாள். அதனால், "ஜனகம்" என்று கல்யாணி வாய்க்குள் சொல்லியதுகூடக் கேட்டு அவள் கவனமாக உட்கார்ந்தாள். "உம்" என்றாள்.

"ஜனகம்! எனக்கு ஓர் உபகாரம் நீ செய்வாயா?" என்றாள் கல்யாணி மெதுவாக.

ஜனகத்தின் ஆவல் அதிகரித்துவிட்டது; "என்ன உபகாரம்?" என்றாள்.

கல்யாணி தன் ஜாக்கெட் பையிலிருந்து மிகச் சின்னதாக மடிக்கப்பட்டு நன்றாய் ஒட்டப்பட்டிருந்த ஒரு கடிதத்தை எடுத்தாள்; "நான் கேட்கிறபடி நீ வாக்குக்கொடுத்தால் இந்தக் கடிதத்தை உன்னிடம் தருகிறேன்" என்றாள்.

ஜனகத்தின் கைகள் அக்கடிதத்தைப் பெறச் சுயமாக முன்வந்தன. கல்யாணி அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "இந்தக் கடிதம் உனக்குத்தான் எழுதப்பட்டிருக்கிறது" என்றாள்.

ஜனகம் திடுக்கிட்டு, "யார் எழுதினது?" என்றாள்.

"நான்தான் எழுதியிருக்கிறேன். இந்தக் கடிதத்தை நான் உன்னிடம் கொடுக்கிறேன்; நீ நாளைக் காலையில்தான்

இதைப் பிரித்துப் படிக்கவேணும். நாளைக்குத்தான் பிரிப் பேன் என்று நீ சத்தியம் பண்ணி வாக்குக் கொடுத்தால் நான் தருகிறேன்" என்றாள் கல்யாணி.

"என்னடி அசடு?" என்றாள் ஜனகம்.

"இந்த உபகாரம் நீ செய்தால், நீயே பிறகு கல்யா ணிக்கு இதுவாவது செய்தோமே என்று சந்தோஷப்படு வாய்" என்றாள் கம்மிய குரலுடன் கல்யாணி.

ஜனகம் சற்றுப் பிரமித்துப்போனாள். பிறகு கல்யாணி கேட்ட மாதிரியே, "சத்தியமாக மறுநாள் காலையில்தான் கடிதத்தைப் பிரிப்பேன்" என்று வாக்குக் கொடுத்தாள். கல்யாணி அவளிடம் கடிதத்தைக் கொடுத்தாள். கடிதத்தின் மேல், "என் அன்புள்ள ஜனகத்திற்கு" என்று எழுதப்பட் டிருந்தது.

கடிதம் கை மாறினவுடன் இரண்டு பேரும் மௌன மாகப் போனார்கள்; வீடு வந்து சேர்ந்ததும் வாய் பேசா மல் சாப்பிட்டார்கள். படுத்துக்கொள்ளப் போகும் வரை அதே மௌனம் நீடித்திருந்தது.

கல்யாணி அவள் அறையில் போய்ப் படுத்துக்கொள் வதை ஜனகம் பார்த்துவிட்டுத் தன் அறைக்குள் போனாள். கதவைச் சாத்தினாள். கடிதத்தை இடுப்பிலிருந்து எடுத்தாள். திருப்பித் திருப்பிப் பார்த்தாள். மேலேயிருந்து உள்ளே எழுதப்பட்டிருப்பதை அறிய முடியவில்லை. ஓர் எழுத் துக்கூடத் தெரியவில்லை. மெள்ள விளக்கு வெளிச்சத்தில் பிடித்துப் பார்த்தாள்; ஒன்றும் தெரியவில்லை. மேலே ஒரு காகிதம் சுற்றப்பட்டிருந்தது.

அதைக் கிழித்துத் திறந்துவிட ஜனகத்தின் கைகள் துடித்தன. வெகு கஷ்டப்பட்டு மனத்தை அடக்கிக் கொண்டு அதை மேஜைக்குள் வைத்துவிட்டுப் படுக்கையில் படுத்தாள்; படுக்கை கொள்ளவில்லை. கண்ணை மூடிப் பார்த்

தாள்; தூக்கம் வரவில்லை. சற்றுப் பல்லைக் கடித்துக்கொண்டிருந்தாள். பிறகு சட்டென்று எழுந்து மேஜையை இழுத்துக் கடிதத்தை எடுத்துக் கிழித்துவிட்டாள்.

பரபரப்பாக அவள் கைகள் கடிதத்தைத் திறந்தன. விரித்தாள், பார்த்தாள். அவள் கண்கள் நிலைத்து நின்றன. கடிதம் பின்வருமாறு இருந்தது:—

" என் அன்புள்ள ஜனகம்,

இந்தக் கடிதத்தை நீ படிக்கும்போது நான் இவ்வுலக வாழ்வை நீத்திருப்பேன். பொழுது விடிந்த பிறகு நான் யாருக்கும் பதில் சொல்ல வேண்டாம். கேள்விகளுக்கெல்லாம் எட்டாத இடத்திற்கு நான் போய்விடுவேன். அதனால் வெட்கப்படாமல் எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறேன்.

நீ புத்திசாலி; கெட்டிக்காரி. சம்பத் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறான் என்று கண்டுபிடித்து விட்டாய். ஆனால், நீ கூட என் மனத்தில் இருந்ததைக் கண்டுபிடிக்கவில்லை. நானும் சம்பத்தைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினேன். பாட்டி அன்றைக்குச் சம்பத்துக்குக் கல்யாண ஏற்பாடு நடந்துவருவதாகச் சொன்னது உனக்கு ஞாபகம் இருக்கும். நான் கோழை. என் மனத்தைச் சொல்லமுடியாது. சம்பத்தும் தைரியசாலி என்று தோன்றவில்லை. அவன் தைரியமாக என்னைக் கல்யாணம் செய்துகொள்வதாகக் கேட்டாலும், அப்பா சம்மதிப்பாரோ தெரியாது. ஆகவே, எனக்கு இதற்குமேல் வாழ்க்கையில் இடமில்லை. கோழைகள் வழியை நான் பின்பற்றுகிறேன். போய் வருகிறேன். எனக்காக நீ வருத்தப் படாதே. அப்பா, அம்மா, பாட்டியிடம் வருத்தப்பட வேண்டாம் என்று சொல்.

இப்படிக்கு,
அபாக்கியவதி கல்யாணி."

கடிதத்தைப் படித்த ஜனகம் ஒரே ஒரு நிமிஷந்தான் பிரமிப்பில் நின்றாள். பிறகு வெகு வேகமாகக் கதவைத் திறந்து சண்டமாருதம்போல் வெளியே ஓடி, 'கூ' 'கூ' என்று கூக்குரல் போட்டு, பாட்டி,பரிசாரகன், வேலைக்காரன் எல்லோரையும் எழுப்பி விட்டாள். வேலைக்காரனை அழைத்துக் கல்யாணி அறைக்குப்போய்க் கதவை மோதித் திறந்துவிட்டாள்.

கல்யாணியின் அறையின் மேல் உத்தரத்தில் ஒரு கயிறு கட்டப்பட்டிருந்தது. கீழே ஒரு 'ஸ்டூல்' இருந்தது. கல்யாணி தன் காரியம் தெரிந்துவிட்டது என்று மருண்டு சுவரோடு சுவராய் ஒட்டிக்கொண்டு பதுங்கிக் கிடந்தாள்.

ஜனகத்தின் தந்தி கண்டு கல்யாணியின் அப்பா அலறிக் கொண்டு வந்துவிட்டார். அவர் வரும் வரையில் ஜனகமும், பாட்டியும், கண்ணிமை மாதிரி கல்யாணியைக் காத்தனர். அப்பா வந்ததும் கல்யாணியும், அவரும் ஓர் அறையில் அரைமணிநேரம் பேசினார்கள். முடிவு என்னவென்பதைச் சொல்லவேண்டாம்.

சம்பத் கிறிஸ்துமஸ் லீவிலிருந்து திரும்பிவந்தபோது தன் கனவு பலிப்பதைக் கண்டான். கல்யாணிக்கும் சம்பத்துக்கும் விவாகம் வெகு விமரிசையாக நடைபெற்றது. கல்யாணியின் அப்பா ஜனகத்தைப் புகழ்ந்தாரோ, புகழ்ந்தாரோ ஆகாயம்வரை புகழ்ந்துகொண்டே இருந்தார்.

கல்யாணி, ஜனகத்தை ஒரு நிமிஷம் தனியாகப் பிடிக்க வெகு பாடுபட்டாள். முடிவில் பிடித்ததும் ஒரே வார்த்தை, "அந்தக் கடிதம் ?" என்றாள்.

"எரித்து விட்டேன்" என்று கூறிக் கலகலவென்று சிரித்தாள் ஜனகம். ஆனால் அவள் போக்கிரி; அதையே சம்பத்தினிடம் ஒரு வெள்ளிப்பெட்டியில் வைத்து, "என் பரிசு" என அன்றுதான் கொடுத்தாள்.

* * * *

வெகு நாள் கழித்து, சம்பத் கல்யாணியிடம் பேசி கொண்டிருக்கும்போது வாய் தவறி, "அந்தக் கடிதத்தை உடனே ஜனகம் படித்திருக்காவிட்டால் நாம் இவ்வளவு சந்தோஷம் அனுபவிக்க முடியுமா?" என்றான்.

கல்யாணிக்கு ஜனகத்தின் செயல் அன்று புரிந்துவிட்டது. கடிதத்தை இவனிடம் கொடுத்துவிட்டிருக்கிறாள் என்பதை அறிந்தாள். ஆனாலும் அடக்கமாக, சம்பத் கூறியதற்குப் பதிலாக, "ஆமாம்; வாஸ்தவந்தான். அவள் முன்னாலேயே பார்ப்பாள் என்று நம்பித்தான் நான் அதை எழுதினேன்!" என்றாள்.

சம்பத் கண்கள் விரிந்தன. அவன் கைகளும் விரிந்தன. அதற்குமேல் நடந்ததைச் சொல்வதற்கு நமக்கு அதிகாரம் இல்லை!



## டாக்டரின் மனைவி

[ஸ்ரீ. ஸேதுராமன்]

சாம்பிராணிப் புகைபோல எங்கே பார்த்தாலும் பனி மூடம் போட்டிருந்தது. குளிர் தாங்க முடியவில்லை.

ராத்திரி பத்து மணியாகியும் அவர் திரும்பிவரக் காணவில்லை. வேலைக்காரக் குப்பனுடன் பேசிக்கொண்டே அத்தனை நேரம் காத்திருந்தாள். வீட்டுக்குள்ளேயே அவ்வளவு குளிர் என்றால் வெளியில் போயிருக்கும் தன் கணவருக்கு எப்படி நடுக்கித்தள்ளும் என்பதை நினைத்துப் பார்க்கக்கூட அவளுக்குப் பயமாக இருந்தது.

"ஐயோ, தலைவிதி! படவேண்டிய நரக துக்கங்க ளெல்லாவற்றையும் டாக்டர் பரீட்சை கொடுத்துவிட்டால் இங்கேயே பட்டுவிடலாம். சரியான வேளையில் சாப்பாடில்லை, தூக்கமில்லை......மனசு சந்தோஷமாக இருக்கவே கட்டோடு வழியில்லை......அப்பாடா என்று களைத்துப்போய்ச் சற்றுக் கண்ணயரும் சமயம் பார்த்து, 'டாக்டர் ஐயா'வைத் தேடிக் கொண்டு வந்து யமபடர்கள் மாதிரி யாராவது வாசல் கதவைத் தட்டுகிறார்கள். பாதி சாப்பாட்டில் எழுந்து ஓடவேண்டி யிருக்கிறது......பகவானே! டாக்டர் பிழைப்பு என்றால் நாயைப்போல உழைத்து யந்திரம்போலச் சுழன்று

கொண்டே இருக்க வேண்டியதுதானே?" என்றெல்லாம் மனத்தை மேலும் மேலும் அலட்டிக்கொண்டாள்.

டாக்டர் ஸர்வோத்தமன் திரும்பி வரும்போது பதினொரு மணி இருக்கும். மிகவும் களைத்துப்போயிருந்தமையால் உடுப்புகளைக்கூடக் கழற்றாமல் படுக்கையில் போய்ப் படுத்துக்கொண்டு விட்டார்.

ஸரஸாவின் கண்களில் வெறித்த பார்வைதான் சற்று நேரத்துக்கு இருந்தது. அவளை அறியாமல் கண்களில் நீர் பிரவஹித்துக் கன்னங்களின் வழியே வழிந்தது. அவள் அப்படியே சுருண்டு படுத்துவிட்டாள்.

குப்பன் விளக்குகளை எல்லாம் 'சிறிசு' பண்ணி, வாயிற் கதவுகளைத் தாழ்ப்பாள் போட்டுவிட்டு ரேழித் திண்ணையில் படுத்துக்கொண்டான்.

அன்று இரவு எல்லோரும் பட்டினி.

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட வாழைக்குறிச்சி ஆஸ்பத்திரிக்கு ஸர்வோத்தமனை மாற்றிக் கொஞ்ச நாட்களே ஆகியிருந்தன. சுற்று வட்டத்தில் பத்து மைல் தூரத்துக்குள் வேறு ஆஸ்பத்திரிகளே இல்லை. ஆகையால் ஜனங்கள் வெகு ஆவலுடனும், பயபக்தியுடனும் ஆஸ்பத்திரிக்கு வந்து மருந்து வாங்கிச் செல்வார்கள்.

அடிக்கடி பக்கத்துக் கிராமங்களிலுள்ள பெரிய மனுஷர்கள் திடீரென்று கூப்பிட்டனுப்புவார்கள். ஸர்வோத்தமன் அவசர அவசரமாகத் தம்முடைய மோட்டார்காரில் பறந்துபோவார். 'என்னவோ ஏதோ, நாம் தாமதிக்கக் கூடாது' என்று அவர் மனம் அடித்துக்கொள்ளும். ஆனால் அங்கே சென்றவுடன் பெருத்த ஏமாற்றமடைவார்.

"குழந்தைக்குக் கையில் சிராய்த்து விட்டது. இத்தனை நேரம் துடித்துக்கொண்டே இருந்தது குழந்தை" என்று [illegible] விஷயத்தை அவர்கள் தெரிவிப்பார்கள்.

இதே மாதிரி அனுபவங்கள் டாக்டர் ஸர்வோத்தம னுக்கு எவ்வளவோ தடவைகளில் உண்டாகி யிருக்கின்றன. இருந்தாலும் பின்னால் தம்மீது யாரும் குறைசொல்ல இடம் வைத்துக்கொள்ளக்கூடாது என்பது அவருடைய ஸித்தாந் தம். அதன்படியேதான் அத்தனை நாட்களையும் கழித்து வந்தார்.

ஸரஸூவின் பிஞ்சுமனம் எங்கெல்லாமோ சுற்றி அலைந் தது. 'டாக்டர் வேலைக்குத் தலைமுழுகிவிட்டு எங்காவது ஓடிப்போய் விடலாம்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள். இதற்கு முந்தி, அவரை அழைத்துப்போக வந்திருந்த இரண்டு மூன்று பேர்களின் முகங்கள், பனிப் படலத்தில் நக்ஷத்திரம் தோன்றுவதுபோல லேசாகத் தோற்றமளித்தன, அவளுடைய மனக் குகையில். "மூஞ்சி யைப் பாரு, மரநாய் மாதிரி! சீ...மனுஷ்யனுக்குச் சற்று நேரங்கூட ஓய்வு கொடுக்க மாட்டார்களா?" என்று பற்களைக் கடித்துக்கொண்டாள்.

வெகுநேரம்வரை இதே அவஸ்தைதான்; தூக்கமே வரவில்லை. அவள் கைவிரல்களைச் சொடுக்கிக் கொண்டதும், சில தடவைகள் பெருமூச்சு விட்டுக்கொண்டு, "ஈதாமரா!" என்று சொல்லிக்கொண்டதும் அவள் தூங்கவில்லை என் பதைக் காட்டின.

கடிகாரத்தில் மணி இரண்டு அடித்தது அவள் காதில் நன்றாக விழுந்தது. "கொசுப் பிடுங்குகிறது" என்று அரைத் தூக்கத்தில் ஸர்வோத்தமன் சொல்லிக்கொண்டார்.

"கொசுவாவது தேவலையே...இவர்கள் பிடுங்கல்களைக் காட்டிலும்!" என்று ஸரஸூவின் மனசு அநுவாதம் செய்தது.

சற்றுநேரம் கழித்துத் தூறல் போடுவது போன்ற சத்தம் கேட்டது. கதவைத் திறந்து, வெளிப்புறமாக

இருந்த ஜன்னல் கதவைச் சாத்திவிட்டு மறுபடி உள்ளே வந்து படுத்துக்கொண்டாள்.

'டட்...டட்...டட்' யாரோ வாயிற் கதவைத் தட்டினார்கள்.

"சனீசுவரன் வந்துவிட்டானு?"

குப்பன் கதவைத் திறப்பதற்குள் ஸரஸ மாடி அறையிலிருந்து கீழே இறங்கி வந்துவிட்டாள்.

"யாரது?"

"தேவனுசேரியுங்க... ஐயாவைக் கூட்டிக்கிட்டுப் போகணும்...ரொம்ப அவசரங்க...

"இருட்டிலே இரண்டுமைல் எப்படிடா வருவாரு, ஐயா?" என்றுன் குப்பன்.

"இல்லே...பின்னுலே வண்டி வருது. நான் பறந்துக்கிட்டு முன்னுடி ஓடியாறேன்."

"என்னடா அப்படி ஆபத்து வந்துட்டுது?"

"திடீரினு குழந்தை பேத்துது...நெருப்பைக் கூட மிரிச்சிடலாம்...அவ்வளவு கொதிக்குது உடம்பு...எந்திரிச்சு ஓடுது...மனசு பக்குப் பக்குன்னு அடிச்சுக்குது...மவராசா கிட்டே ஜல்தியாச் சொல்லுங்க..."

அவன் கால் கைகள் எல்லாம் நடுங்கின. பறவாய்ப் பறந்தது மனசு.

ஸரஸவுக்கு ஒன்றும் புரியவில்லை. "ஹும்! கிருஹசாரம்!" என்று சொல்லிக்கொண்டே ஸர்வோத்தமனிடம் தெரிவிக்க வந்தாள்.

அவர் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். அவரை எழுப்புவதற்காகக் கம்பளியைக் கொஞ்சம் விலக்கி அவருடைய முதுகுப்புறம் மிருதுவாகத் தொட்டு அசைத்தாள். அவளுக்குப் பகீரென்றது. அவர் உடம்பு

இரண்டு நிமிஷங்கள் வரை ஸ்தம்பித்து நின்றாள். பிறகு கீழே இறங்கிப் போனாள்.

"பயப்படாமல் இருக்கச் சொன்னாக. 'ஒண்ணும் பிரமாதம் ஆகிவிடாது; நான் விடியற் காலையில் வருகிறேன்' என்று சொல்லச் சொன்னாக ஐயா; இப்படியே குப்பனுக்கு அருகில் படுத்துக்கொள்; கருக்கல்லே அழைத்துக்கொண்டு போகலாம்" என்று சொன்னாள்.

"தாயி...ஒரே குழந்தையுங்க... பெஞ்சாதிகூட சீக்குக்காரி. அவள் மனசு இப்பவே இடிஞ்சுபோய் உட்கார்ந்திருக்கா... புண்யவதீ, நீங்க போய்ச் சொல்லுங்க..."

அதற்குள் இரட்டை மாட்டு வண்டி ஒன்று வாசலில் வந்து நின்றது. "அம்மணீ..." என்று கெஞ்சும் பாவனையில் வீட்டு யஜமானியைப் பார்த்தான் வந்த ஆஸாமி. அவன் கண்களில் ஒளியே இல்லை. முகம் சோர்ந்து வெளுத்துப் போயிருந்தது; பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

ஸரஸுவுக்கு யோசனைகளே ஓடவில்லை. கால்மணி நேரம் மௌனமாகவே நின்றுகொண்டிருந்தாள். "தாயே...!" என்று மறுபடியும் ஏங்கிய குரல் கேட்கவே அவள் வேண்டா வெறுப்பாக, "அப்படியானால் சிறிது நேரம் இரு" என்று சொல்லிவிட்டுத் தள்ளாடிக்கொண்டே படுக்கையறைக்குச் சென்றாள்.

ஸர்வோத்தமனை எழுப்ப அவள் கைகள் நடுங்கின. இருதலைக்கொள்ளி எறும்பு என்பார்களே, அது போல அவளுடைய மனசும் ஊசலாடியது. அரைமணி நேரம் வரையில் எழுப்ப மனம் வராமல் தயங்கித் தத்தளித்தாள்.

"அம்மா...!" என்ற பயத்தால் நடுங்கும் குரல் மறுபடி கேட்டது.

"இரு, இரு...வராக!" என்று மாடியில் இருந்தபடியே ஸரஸு பதிலளித்தாள்.

கடைசியில் எப்படியோ துணிந்து அவரை எழுப்பி விட்டாள். டாக்டருக்கு விஷயம் என்ன என்று தெரிவித்த வுடனே, அவர் அவசர அவசரமாக எழுந்தார்.

"வந்து எத்தனை நாழிகை இருக்கும்?" என்று பரபரப் புடன் கேட்டார்.

"இல்...லே... ரொம்ப நாழிகை இராது..." என்று மழுப்பினாள் ஸரஸு.

கம்பளியைப் போர்த்துக்கொண்டு தம்முடைய தோல் பையுடன் வேகமாகக் கிளம்பிவிட்டார். அவளிடம் சொல் லிக்கொள்ளக்கூட இல்லை. வண்டியில் ஏறி உட்காரும்போது மணி நான்கு அடித்தது. "ஐயா, ஏறும்போது மணியடிக் கிறது...கட்டாயம் குழந்தை பிழைச்சுடும்..." என்று சொன்னபொழுது தன்னை அறியாமல் வண்டிக்காரனுக்கு ஓர் ஆறுதல் உண்டாயிற்று.

மாடுகள் பறந்தன. வெகு சீக்கிரத்தில் மையிருட்டுப் பாதையில் பாய்ந்து கந்தப்ப மேஸ்திரி வீட்டு வாயிலில் வந்து நின்றன. வாசல் திண்ணையில், கவலையுடன் டாக்டர் வரவை எதிர்பார்த்து எதிர்பார்த்து அலுத்துப்போ யிருந்த முத்தாயிக்கு ஸர்வோத்தமனைக் கண்டதும் அழுகை வந்து விட்டது.

"குழந்தையை ஒங்க கையிலே கொடுத்துட்டேன்... நீங்கதான் சாமி உசிர் கொடுக்கணும்...!" என்று புலம்பினாள்.

டாக்டர் குடிசைக்குள் நுழைந்தார். மங்கலாக எரிந்து கொண்டிருந்த 'பெட்ரூம்' விளக்கடியில் ஐந்து வயதுக் குழந்தை படுத்துக் கிடந்தது. அருகில் செல்லும்போதே அனல்வீசியது. தர்மாமீடரை எடுத்துச் சுரத்தைப் பார்த்தார் டாக்டர். 105.5 டிகிரி இருந்தது.

திடீரென்று குழந்தையின் மூடிய கண்கள் ரத்தத்தைக் கொப்புளித்தன. முகத்திலுள்ள தசைநார்கள் முறுக்கிக்

கொண்டது பயங்கரமாக இருந்தது.........ஸர்வோத்தமன் குழந்தையின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டார்.

"வருகிறவன் இன்னும் அரைமணி முன்னாடி வந்திருந்தால் என்ன கேடு?...மூச்சுக் கட்டிப் போகிற சமயத்தில், வீட்டு வாசலில் வந்து கூப்பாடு போடுகிறது; சை!" என்று நொந்துகொண்டார்.

"சாமி! குழந்தை பிழைச்சுக்குங்களா?" என்று கவலை தோய்ந்த தொனியில் கேட்டாள் முத்தாயி.

சற்று நேரம் எல்லோரும் மௌனமாகவே இருந்தனர்.

"இப்போது மருந்து கொடுத்துவிட்டுப் போகிறேன். ஐயனாரை நினைத்துக்கொண்டு அதைக் கொடுத்துப்பார். பிறகு அதிர்ஷ்டம் எப்படியோ, அதன்படி நடந்துவிட்டுப் போகிறது. வேறு நான் என்ன சொல்லமுடியும்?" என்று அஸ்வாரஸ்யப்பட்ட தோரணையில் பதில் சொன்னார் ஸர்வோத்தமன்.

"எதற்கும், எப்படியிருக்கிறது என்று காலையில் என்னிடம் வந்து சொல்லு. அப்பொழுது மறுபடியும் இங்கே வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியே வந்தார்.

குழந்தை மண்டையைத் தலையணையில் உருட்டிக் கொண்டது. கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கையும் போய் விட்டது முத்தாயிக்கு.

ஸர்வோத்தமன் திரும்பி வரும்போது ஐந்தரை மணியிருக்கும். அப்படியே போய்ப் படுக்கையில் படுத்துக் கொண்டார். மனோலோகத்தில் சுற்றிக்கொண்டிருந்த ஸரஸா எழுந்து அவர்மேல் கம்பளியை நன்றாக இழுத்துப் போர்த்தினாள்.

விடியற்காலை ஒன்பது மணியாகியும் மேஸ்திரி வரவில்லை. டாக்டர் உண்மையாகவே வருத்தப்பட்டார். 'இப்படி

யெல்லாம் தங்களுடைய குயுக்திகளை வைத்திய விஷயத்தில் புகுத்திப் புகுத்தி வருவதால்தான் குழந்தைச் சாவு அதிகரிக்கிறது......' என்று எண்ணினார்.

மத்தியான்னம் சாப்பிடும்போது அவருக்கு ஆகாரமே இறங்கவில்லை. ஏதோ கவலைப்படுபவர்போல் தோற்றியது.

"என்னவாவது உடம்பா?...சரியானபடி சாப்பிடவே இல்லையே!" என்று ஸரஸு கேட்டாள்.

"நேற்று ராத்திரி நாலுமணிக்கு வந்து கூப்பாடு போட்டானே...இன்னும் ஒரு மணி நேரமாவது முந்தி வந்திருந்தால், ஓர் உயிர் பிழைத்திருக்கும்...நினைத்துப் பார்த்தால் பாவமாகத்தான் இருக்கிறது!" என்று ஸர்வோத்தமன் சொன்னார்.

ஸரஸுவுக்கு உடம்பை என்னவோ பண்ணிற்று. வயிற்றுப் புரட்டல் உண்டாகிவிட்டது. 'ஐயோ, அவன் இரண்டு மணிக்கே வந்தானே! அப்போதே பாவி, நான் எழுப்பாமல் போனேனே!' என்று வருந்தினாள்.

சாப்பாடு கசந்தது; பாதியில் அப்படியே எழுந்து விட்டாள்.

என்ன தோன்றியதோ அவளுக்கு! மொட்டை மாடியில் ஏறி, கிழக்கே கண்ணுக்கு எட்டியவரையில் பார்த்தாள். தேவணுசேரி ஆலமரத்தடியிலிருந்து ஆகாயத்தை நோக்கிப் புகை கிளம்பிக்கொண்டிருப்பது தெரிந்தது.

ஸரஸுவின் கண்களில் தாரைதாரையாகக் கண்ணீர் துளும்பிற்று.

"கொலைகாரி!" என்று நாக்குச் சொல்லிக்கொண்டது.




# ஜனகாவின் குதூகலம்

[ஆர். திருஞானசம்பந்தன்]

ஆற்றங் கரையில் அன்று சிறுவர்களும் சிறுமிகளும் சிரித்துக் குதித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். பெரியவர்கள் கூட்டத்திலும் ஒரு குதூகலம் சூழ்ந்திருந்தது. நீரைக் குடங்களில் நிறைத்துக்கொண்டு பெண்கள் ஒய்யாரமாக நடந்து சென்றனர். அவர்கள் கால்களில் அணிந்துள்ள சதங்கையின் ஒலியும், குடத்து ஜலம் துள்ளி விழும் ஓசையும் காற்றுடன் கலந்துவிட்டன. அவர்களும் மைனுக் குருவிகள்போலக் கலகலப்பாகப் பேசிக்கொண்டே போனார்கள். எங்கே பார்த்தாலும் ஆனந்தம் எதிரொலித்துக் கொண்டிருந்தது. அவர்கள் எல்லோரும் அடுத்த நாளைத் தீபாவளியை ஆவலுடன் எதிர்பார்க்கிறவர்கள் போலக் காணப்பட்டார்கள். எங்கும் தீபாவளியைப் பற்றிய பேச்சே அடிபட்டுக்கொண்டிருந்தது.

* * * *

நானும் என் நண்பன் கிருஷ்ணனும் நதிக்கரைக்குச் சற்றுத் தள்ளி வடபுறமாகக் கரைமேட்டிலுள்ள வசதியான ஒரு நல்ல இடத்தில் உட்கார்ந்திருந்தோம்.

என் தங்கையின் கல்யாணத்தின் போது, போன வருஷம் அங்கே வந்திருந்தேன். அப்போது காணப் பட்டது போலவேதான் இன்னும் இருக்கிறது கிராமம். எவ்வித மாறுதலும் இல்லை. அந்த ஆற்றோரத்து ஊஞ்சல் மரங்கள் மலர்களை இன்னும் ஜலப்பிரவாகத்தில் அள்ளி வீசிக்கொண்டே இருக்கின்றன. பக்கத்திலுள்ள இடிந்த கோவில், ஊர்க்கோடியிலிருந்த பாழடைந்த இரண்டு கூரை வீடுகள், தோட்டம், துரவு, எல்லாம் அப்படியேதான் இருந்தன. எங்களுக்கு எதிரில் சற்றுத் தூரத்தில் வெள்ளப் பெருக்கு மௌனமாக எதையோ தேடிக் கொண்டு போவதைப்போல ஓடிக்கொண்டிருந்தது. எதிர்க்கரையில் நின்ற பெரிய விருட்சங்களில் உச்சிக் கிளைகளைத் தங்க நிறமாக்கிக்கொண் டிருந்தான் மறையப் போகிற செங் கதிரவன். கொஞ்ச நேரத்தில் அந்திச்சாயை மறைந்து விட்டது. ஆனால், எழுந்து வீட்டிற்குப் போக ஏனோ மனம் வரவில்லை. இன்னும் சற்று அந்தக் குளிர்ந்த காற்றில், ஏகாந்தத்தில் உட்கார்ந்திருக்க வேண்டுமென இருவரும் விரும்பினோம்.

கொஞ்சம் கொஞ்சமாக அங்கு ஒலித்துக் கொண்டிருந்த சப்தங்கள் மாறி எங்கும் மௌனம் படிந்தது. என் நண்பன் அந்த நிசப்தத்தைக் கலைத்துக் கொண்டு மெதுவாகப் பாட ஆரம்பித்தான். அவனது சாரீரம் கேட்பதற்கு மிகவும் இனிமையாயிருந்தது. அந்த அமைதியான இடத்திலிருந்து குழைந்து சென்ற அவனது கண்டத்வனி எங்கோ இரவின் மங்கிய இருளைக் கிழித்துக் கொண்டு செல்வதைப் போல் இருந்தது. எதையோ எதுவோ வருந்தி அழைப்பதைப் போலிருந்தது அவன் குரல். அப்போதுதான் உள்ளிருந்து பொங்கும் ஆனந்தத் தால் வாய்விட்டுச் சிரிக்கும் ஒரு வாலிபனின் பலமான

சிரிப்புச் சப்தம் எழுந்தது. அது அடங்குவதற்கு முன்பே அதைத் தொடர்ந்து, மெல்லிய நகைப்பின் ஒலி எழுந்து அதனுடன் இரண்டறக் கலந்தது. திடீரென்று எழுந்து அடங்கிய அந்தச் சிரிப்பின் அலை என் கவனத்தைத் திருப்பியது. அந்த மங்கலான முன்னிரவின் வெளிச்சத்தில் சற்றுத் தூரத்தில் கரையோரமாக ஒரு வாலிபன் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குப் பக்கத்தில் நதிநீரில் இடுப்பிலிருந்த குடத்தை எடுத்து ஜலத்தை மொண்டுகொண்டிருந்தாள் பெண் ஒருத்தி. பின்பு குடத்து நீர் வழியாதிருக்க வேண்டி ஒரு கை நீரைக் குடத்திலிருந்து வாரி இறைத்துவிட்டு இடுப்பில் சரியாக வைத்துக்கொண்டாள். மறுபடி அவர்கள் இருவரும் வந்த வழியே கிராமத்தை நோக்கி நடந்தனர்.

'சாதாரணமாகக் கிராமாந்தரங்களில் தனியாகவே தண்ணீர் எடுத்துப்போக இந் நேரத்திலுங்கூடப் பெண்கள் வருவார்கள். அந்தப் பெண்ணுடன் நிற்பவன் துணைக்காக அவளுடன் வந்தவன்தானா?' என்று நினைத்தேன்.

அவளுடைய தோற்றத்திலிருந்து, அந்த நடைச் சாயலிலிருந்து, அவள் அப்படிப் பயந்துவிடக் கூடியவள் என்று தோன்றவில்லை. மற்றொரு சமயமாயிருந்தால், "அவர்கள் யார்?" என்று நான் கேட்டிருக்கவே மாட்டேன். ஆனால், அந்த ஜன சந்தடியும் இயற்கையின் சௌந்தர்யமும் என்னை அந்த மாதிரியெல்லாம் கேள்வி கேட்கத் தூண்டின. நான் கேட்டதிலும் ஒன்றும் மோசமில்லை. ஓர் அற்புதமான கதை கிடைத்தது. 'கதையா? நிஜமாக நடந்ததையல்லவா நண்பன் உம்மிடம் சொன்னான்? நீர் எப்படி ஐயா கதை என்று சொல்லுகிறீர்?' என்கிறீர்களோ? நீங்கள் எப்படி வைத்துக்கொண்டாலும் சரி; என் நண்பன் சொன்னது பின்வருமாறு:

* * * *

“அவளை எங்கள் ஊரில் எல்லோரும், ‘சீதா’ என்றே கூப்பிடுகிறார்கள். ஆனால் அவளுக்கு இட்டபட்ட பெயர் என்னவோ ஜனகநந்தினி என்பது. அவளை ‘ஜனகா’ என்று சொல்லிக் கூப்பிட வேண்டுமென்றிருக்கிறது எனக்கு. ஆகையால் நானும், அவளுடைய பள்ளித் தோழிகளைப் போல ஜனகா என்றே சொல்லிக்கொண்டு வருகிறேன்.

ஜனகாவிற்கு சிறு வயதிலேயே கல்யாணம் நடந்து விட்டது. எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. அப்போது அவளுக்கு எட்டு வயதுதான் இருக்கும். காதில் தோடு அணிந்து, குதிகால்வரை பாவாடை புரள, அவளுடைய அம்மாளிடம் வந்து, ‘யாருக்கு அம்மா கல்யாணம்? உனக்கா?’ என்று கேட்டாளாம். அதை இன்னும் சொல்லிக்கொண்டு ஊரிலுள்ள பெண்கள் சிரிக்கிறார்கள்.

கல்யாணம் நடந்த அடுத்த வாரத்திலேயே ஜனகாவையும் கூட்டிக்கொண்டு அவள் புருஷன் பட்டணத்திற்குப் போய்விட்டான். அங்கேதான் என்னவோ வேலையில் இருந்தானாம். ஆனால், அடுத்த மாதத்திலேயே ஜனகாவும் அவள் புருஷனும் திரும்பி இங்கே வந்துவிட்டார்கள். கேட்டதற்கு, அவன் வேலை செய்துகொண்டிருந்த கம்பெனி முறிந்து போனதாகவும், வேலையின்றி அங்கே இருப்பதற்கு இஷ்டமில்லாமல் வந்துவிட்டதாகவும் சொன்னார்கள்.

இங்கு ஜனகாவின் தகப்பனாருக்கு வியவசாயத் தொழில் தான். ஆகையால் அவராலும் மாப்பிள்ளையை வைத்துக் கொண்டு சம்ரட்சிக்க முடியவில்லை. பெரிய குடும்பம். ஒருவர் உழைப்பிலே எத்தனை நாளைக்குத் தாட்ட முடியும்? இவைகளை யெல்லாம் நேரிலேயே இருந்து பார்த்துத் தெரிந்துகொண்ட ராமநாதன் (ஜனகாவின் கணவன்) ஒரு நாள் தன் மாமனாரிடம் சொன்னான்: “இங்கேயே இருந்து

கொண்டிருப்பதும் முடியாத காரியம். நான் இப்போது மறுபடியும் முன்பிருந்த இடத்திற்குப் போகிறேன். ஆனால், வேலை கிடைத்த பிறகே வந்து ஜனகாவை அழைத்துக் கொண்டு போகமுடியும்."

அவனுடைய மாமனருக்கு அந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் கொஞ்சம் உற்சாகம் தட்டியது. ராமநாதனுக்கு வழிச் செலவுக்கு வேண்டிய பணமும் வாங்கிக் கொடுத்தார். அடுத்த நாள் அவர்கள் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு ராமநாதன் புறப்பட்டான்.

ராமநாதன் போனபிறகு மாதங்கள் வந்து போய்க் கொண்டே இருந்தன. ஒரு வருஷமும் முடிந்துவிட்டது. ஆனால், அவனிடமிருந்து மட்டும் எந்தவிதமான செய்தியும் வரவில்லை. வீட்டிலுள்ள யாவரும் துக்கப் பட்டார்கள். ஜனகா கண்ணீர் வடித்தவாறே தன் கணவனுடைய வருகைக்காகக் காத்துக்கொண்டிருந்தாள்.

'ராமநாதன் எங்கிருக்கிறான்? என்ன ஆனான்?' என்ற விஷயங்கள் தெரியாமல் போகவே, 'ஒருவேளை செத்துப் போய்விட்டானோ' என்றுகூடச் செய்தி மெதுவாகப் பரவ ஆரம்பித்தது. அப்போது அந்தக் குடும்பம் அடைந்த கலவரத்தைச் சொல்லிமுடியாது. நான்கூட வருத்தப்பட்டேன். அவனைப்பற்றித் தகவல் யாரிடமிருந்தாவது கிடைக்காதா வென்று பல பேரிடம் விசாரித்தேன். ஆனால் ஒன்றும் பயனில்லை.

ஒரு மாலை வேளை. இதே நதிக்கரையில் ஜனகாவின் தாயைச் சந்தித்தேன். பாவம்! அந்த அம்மாள் முகம் எப்படிக் களை கெட்டுப்போயிருந்தது தெரியுமா? "உங்களைப் பார்த்து அதிக நாள் இருக்கும். இப்போது வெளியில் கூட வருவதில்லையே" என்றேன். அந்த அம்மாள் 'ஹ' வென்று அழத் தொடங்கிவிட்டார்கள். நான் சமாதானப்படுத்தியபிறகு

அவர்கள் சொன்னதாவது: "உண்மையில் வார்த்தையில் விஷம் இருக்கிறதென்பதில் சந்தேகம் இல்லை. பக்கத்து வீட்டு லக்ஷ்மி இன்று என்னிடம், 'உங்கள் மருமகன் வேறு கல்யாணம் பண்ணிக்கொண்டானாமே' என்றாள். அவள் சொன்ன வார்த்தைகள் என் நெஞ்சைச் சுட்டுவிட்டன. சீக்கிரமாக அவள் சொன்னதை நான் அழிக்க முயன்றேனாயினும் அதற்குள்ளாக இரண்டொரு புண்கள் என் நெஞ்சில் ஏற்பட்டுவிட்டன."

"யார் என்ன சொன்னால் என்ன? நீங்கள் தைரியமாய் இருங்கள். வருவார்; வராமலா போய்விடுவார்?" என்று ஆறுதலாகச் சொல்லி அனுப்பினேன். இருந்தாலும் ஜனங்களின் வம்புப் பேச்சு ஓயவில்லை."

யாரோ ஒருவர் கட்டிவிட்டார், "ஜனகாவின் புருஷன் இறந்தே போய்விட்டான்" என்று. இந்தச் சங்கதியைக் கேட்டவுடன் அவர்கள் மனம் என்ன பாடு பட்டிருக்கும்!

ஆனால், இந்தத் துக்கத்திலிருந்து அவர்களை விடுபடச் செய்தது ஒரே ஒரு கடிதந்தான். ஏழு வருஷமாகத் துயரத்தில் மூழ்கியிருந்த அந்தக் குடும்பத்தை ஒரு நொடியில் சந்தோஷத்தில் திளைக்கச் செய்துவிட்டது அந்தக் கடிதம். "வருகிற தீபாவளிக்கு முந்தின நாளே புறப்பட்டு வருகிறேன்" என்று போன வாரத்தில் ராமநாதன் கடிதம் போட்டிருந்தான். அவன் எழுதினபடியே நேற்று வந்துவிட்டான். எட்டு வருஷ காலமாகத் தீபாவளி கொண்டாடாதிருந்த அந்த வீட்டிலே இன்று ஏக தடபுடல் படுகிறது. வெகு விமரிசையாகக் கொண்டாடுகிறார்கள். வெகுகாலமாக அவளை விட்டுப் பிரிந்து தனியாக வாழ்க்கை நடத்தியிருக்கிறான். ஆனால், இப்போது அவளைக் கண்டபின்பு, அவளைப் பிரிந்திருப்பதனால் யுக யுகாந்தரமாகக் காணாதிருந்ததுபோன்ற ஏக்கம் அவன் உள்ளத்தே ஏற்பட்டிருக்க வேண்டும். அதனால்

இருவருமாகப் பேசிக்கொண்டே வந்திருப்பார்கள். அவ்வளவு தான்.

* * * *

என் நண்பன் சொல்லி நிறுத்திய அதே சமயத்தில் நதிக்கரையிலிருந்து போய்க்கொண்டிருந்த அந்த இளம் தம்பதிகளிடமிருந்து குதூகலத்தால் கிளம்பித் தென்றலில் தவழ்ந்துவந்த பேச்சுச் சப்தம், எங்களையும் தாண்டி வெண்ணிலவை வாரி அணைத்துக்கொண்டு சென்ற நதிநீரில் தாக்கிப் பின்பு லேசாக மறைந்துவிட்டது.

# தமிழ் நாட்டுச் சிறு கதைகள்

I. மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள்: மகரிஷி வ. வே. ஸு. ஐயர் எழுதியவை.

---

II. ராஜாஜி குட்டிக் கதைகள்: மாஜி அரசாங்க முதல் மந்திரி சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் எழுதியவை.

---

III. கன்யாகுமாரி முதலிய கதைகள்: த. நா. குமாரஸ்வாமி, பி. ஏ., எழுதியவை.

---

IV. சந்தனக் காவடி முதலிய கதைகள்: தி. ஜ. ர. எழுதியவை.

---

V. சக்ரவாகம் முதலிய கதைகள்: ந. சிதம்பர சுப்பிரமண்யம் எழுதியவை.

---

VI. கனகாம்பரம் முதலிய கதைகள்: கு. ப. ராஜகோபாலன், பி. ஏ., எழுதியவை.

---

VII. தோட்டியை மணந்த அரசகுமாரி முதலிய கதைகள்: தி. நா. சுப்பிரமணியம் எழுதியவை (அச்சில்)

குறிப்பு:—மற்றும் பல பிரபலஸ்தர்களின் கதைகள், (பெண்பாலார் உள்பட) இதே வரிசையில் வெளிவரும். அவை சுறுசுறுப்பாய் வெளிவருவது அன்பர்களின் ஆதரவைப் பொறுத்திருக்கிறது. ஒவ்வொன்றுக்கும் இரண்டு பதிப்புகள் உண்டு. ஒவ்வொரு தொகுதியின், சாதாரணப் பதிப்பு விலை: 0-12-0 :: கலிக்கோ பைண்ட் விலை: ரூ. 1-0-0. (தபால், ரிஜிஸ்டர் செலவு தனி.)

---

# மாதவீ கங்கணம்

[சரித்திர சம்பந்தமான நவீனம் : அக்பர் காலம்]

ஸ்ரீயுத ரமேச சந்திர தத்தர் இயற்றிய

"ஆக்ரா நகரத்து அடிமைப் பெண்"

என்னும் நவீனத்தின் தமிழ் வழி நூல்

வழிநூல் ஆசிரியர் : ஸ்ரீ வே. கா. ராமநாதன் பி.ஏ.,பி.எல்

**1, 2**-ஆம் பாகங்கள் :: தொகுதி I :: ரூ. **2—0—0**

**3, 4**-ஆம் பாகங்கள் :: தொகுதி II :: ரூ. **1—4—0**

## பொருளடக்கம்



---

# ஸேவாஸதனம்

கவி சக்ரவர்த்தி பிரேம் சந்த் ஹிந்தியில் எழுதிய
ஸ்ரீமதி அம்புஜம்மாள் சிறப்பாய் மொழிபெயர்த்தது.

பிரேம் சந்தின் நவீனங்கள் பல உள்ளன. அவற்றுள் "ஸேவாஸதனம் மிகவும் சிறப்புற்றது என்பது [illegible] களின் கருத்து."

——— விலை ரூ. 1—4—0 ———

பொருளடக்கம்

(1) சர்மாவின் சங்கடம், (2) லஞ்சத்தின் [illegible], (3) யாணமும் குடித்தனமும், (4) தாசிவீட்டில் [illegible] ஆசார அனுஷ்டானம், (6) பூந்தோட்டம் - புதிய [illegible], தீபாவளி இரவு, (8) அபவாத வம்பு, (9) தாசி வீட்டில் [illegible] கலம், (10) மோஹன் வரவு, (11) டால்மண்டி வீதி, [illegible] மோகன் படிப்பு, (13) நவரத்தின மாலை. (14) [illegible] போதனை, (15) சுமதியின் நிபந்தனை, (16) [illegible] (17) மீட்கப்பட்டாள், (18) சாஸ்திரியும் சந்நியாசியும், [illegible] மோஹன் திரும்பினான், (20) இன்ஸ்பெக்டர் விடுதலை, [illegible] சாந்தை கல்யாணம், (22) சர்மாவின் சங்கல்பம், (23) [illegible] இறந்தார், (24) அக்காளும் தங்கையும், (25) [illegible] வேண்டாம், (26) கரையேற வழி, (27) [illegible] (28) வெளியேறிய காரணம், (29) [illegible], [illegible] உமாபதியின் உபதேசம், (31) பிரிந்தவர் கூடினர், (32) [illegible] ஜன ஸேவை.

சில முக்கிய அபிப்பிராயங்கள்

நவசக்தி :—இப் புத்தகம் நல்ல [illegible] டிருக்கிறது. மொழிபெயர்ப்பும் தெளிவாய் இருக்கிறது. பிரேம் சந்தின் நவீனங்களிலே மிகச் சிறந்தது "ஸேவாஸதனம்" இது அழகாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

கலைமகள் :—*மூலத்தின் சுவை குன்றாமல் [illegible] டிருக்கிறது. மொழி பெயர்த்தவர் ஹிந்தியில் [illegible] பெற்ற ஸ்ரீமதி அம்புஜம்மாள் என்பது எல்லோரும் அறிந்த விஷயமாகும்; இந்த மொழிபெயர்ப்பிலும் அவரது திறமை [illegible] வெளியாகின்றது.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை